கலைவாணன்

# மாணவர் மொழியாக்க அகராதி

தமிழ் - தமிழ் - ஆங்கிலம்

## KALAIVANAN

[Students' Translation Dictionary]

Tamil - Tamil - English

தொகுப்பாசிரியர் :

அகராதிக்கலை அறிஞர்

பேராசிரியர் **அ.கி. மூர்த்தி**, எம்.ஏ., பி.டி.,

நெறியாளர் :

முனைவர் **ச.ச. குமார்**, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,

(கவிஞர் வான்முகில்)

பதிப்பாசிரியர் :

முத்தமிழ்க் கவிஞர்

முனைவர் ஆலந்தூர் **கோ. மோகனரங்கன்**,

எம்.ஏ., பிஎச்.டி.,

வசந்தா பதிப்பகம்,

மனை எண்-9, கதவு எண்-26,

ஜோசப் காலனி, ஆதம்பாக்கம்,

சென்னை - 600 088.

தொலைபேசி : 044 - 2253 0954.

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **கலைவாணன்**<br>**மாணவர் மொழியாக்க அகராதி** |
| தொகுப்பாசிரியர் | : | பேராசிரியர் அ.கி. மூர்த்தி |
| நெறியாளர் | : | முனைவர் ச.ச. குமார்<br>(கவிஞர் வான்முகில்) |
| பதிப்பாசிரியர் | : | முத்தமிழ்க் கவிஞர், முனைவர்<br>ஆலந்தூர் கோ. மோகனரங்கன் |
| முகப்பு அட்டை | : | பூவரசு |
| மொழி | : | தமிழ் - ஆங்கிலம் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| பதிப்புரிமை | : | மோ. கலைவாணன் |
| வெளியீட்டு ஆண்டு | : | 2002 |
| தாள் | : | வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | கிரவுன் 12.5 **X** 18 செ.மீ. |
| அச்சு | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 432 |
| படிகள் | : | 1200 |
| விலை | : | ரூ. 120 |
| ஒளிஅச்சு | : | திருவள்ளுவர் வரைகலையகம்,<br>சென்னை - 600 094. |
| அச்சிட்டோர் | : | குமார் அசோசியேட்ஸ்,<br>சென்னை - 600 014. |
| பொருள் | : | மொழி அகராதி<br>தமிழ் - தமிழ் - ஆங்கிலம்<br>**Dictionary**<br>**Tamil - Tamil - English** |

# வணக்கத்திற்குரிய ஐயா

அகராதிக்கலை அறிஞர்

பேராசிரியர் **அ.கி. மூர்த்தி**, எம்.ஏ., பி.டி.,

தோற்றம்



மறைவு

10-10-1932

13-12-2002

எழுபதாண்டு இளைஞர். அகராதிக்கலை அறிஞர். இன்று நம்மிடையே இல்லை. வணக்கத்திற்குரிய நிலைபேறு பெற்றார் பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் நெஞ்சிலும் நினைவிலும் இடம் பெற்றார் அகராதிகள் வரிசையிலே பல அகராதிகளை உருவாக்கி, அகராதிக்கலை அறிஞராகவும் பெரும்புகழ் பெற்ற அவர் பணிகள் ஈடு இணை யற்றவை. இந்நூலுக்காக அவர்தம் இறுதிக்காலத்தில் ஆர்வத்துடன் உழைத்ததனை நன்றியுடன் போற்றி வணங்குகின்றேன்.

**பேராசிரியர் அ.கி. மூர்த்தி** அவர்கள் எதிர்பாராமல் மறைந்ததனால் ஏற்பட்ட திகைப்பும் துயரமும் அளவற்றவை. என்ன செய்வது என்று தெரியாமல் தேம்பிக் கொண்டிருந்தபோது ஒளிவிளக்காகத் தோன்றி உதவியவர் அறிஞர் **முனைவர் ச.ச. குமார்** அவர்கள் ஆவார். இந்நூலுக்கு நெறியாளராக விளங்கி நூல் செம்மையுடன் வெளிவரப் பெரிதும் உழைத்தவர். அவருடைய ஆற்றல் வாய்ந்த நற்பணிக்கு நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலை மாணவர் உலகம் நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்,

ஆலந்தூர் கோ. மோகனரங்கன்

பதிப்பாசிரியர்.

---

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அ | - | அல்லது |
| இலக் | - | இலக்கணம் |
| (எ.டு) | - | எடுத்துக்காட்டு |
| ஒ | - | ஒப்பிடுக |
| சோதி | - | சோதிடம் |
| பா | - | பார்க்க |
| Astro | - | Astrology |
| (e.g.) | - | (Latin - *exempli gratia) for the sake of example* |
| gra | - | grammar |
| T | - | Thirukkural |

# நெறியாளர் உரை

எதிர்காலச் சமுதாயத்திற்கு எப்பொழுதும் பயன்படும் குறிப்பு நூல்களில் முதலிடம் பெறுவது அகராதியே. இன்றைய மாணவர்கள் எதிர்காலத்தில் குடிமக்கள் ஆன பிறகும் அவர்களுக்குத் துணைநிற்கும் நூலாகப் பயன்படும் வண்ணம் இந்த அகராதி அமைக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டுக்கு வெளியே இந்தியாவின் பிற மாநிலங்களிலும், அயல் நாடுகளிலும் உள்ள பல்கலைக்கழகங்கள் பலவற்றிலும் தமிழ்த்துறைகள் உள்ளன. தமிழ்நாட்டில் வசிக்கும் பிறமொழியினர் பலர் தங்கள் குழந்தைகளுக்குத் தமிழ் கற்றுக் கொடுக்கின்றனர். தமிழ், ஆங்கில வழிகளில் கல்வி பயிலும் மாணவர்கள் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்குச் சில வாக்கியங்களை மொழி பெயர்க்கும் பயிற்சிகளைச் செய்ய வேண்டியுள்ளது. இவர்கள் அனைவருக்கும் இந்த அகராதி பயன்படும்.

சொற்களின் பொருளை ஆங்கிலத்திலும், தமிழிலும் தருவது மட்டும் இந்த அகராதியின் நோக்கமன்று. தமிழ்ப் பண்பு, மரபு முதலானவற்றின் அடிப்படைக் கூறுகளை ஆங்கிலம் அறிந்தோர் உதவும் வகையில் **திருக்குறளிலிருந்து** ஏராளமான எடுத்துக்காட்டுகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு இந்நூலில் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. அவை காட்டும் வழி நடப்போர் நல்வாழ்வு பெறுவர் என்பது உறுதி.

சொற்களின் பொருள்களை மட்டும் அகரவரிசைப் படுத்தித்தரும் தொகுப்பாக இந்நூல் அமைக்கப்படவில்லை. பொது அறிவு போட்டித் தேர்வுகளுக்கும் பயன்படும் சில அரிய செய்திகள் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளன. எப்பொழுதோ ஒருமுறை எடுத்துப் பார்க்கும் நூல் அகராதி என்ற எண்ணத்தை மாற்றி எப்பொழுதும் எவரும் படிக்கக்கூடிய ஒரு சுவையான பல்சுவைக் களஞ்சியம் இது என்ற எண்ணத்தைப் பிற்சேர்க்கை உருவாக்கும். 21ஆம் நூற்றாண்டில் இந்நூல் வெளியாவதால் கணினிச் சொற்கள் பட்டியல் ஒன்றும் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளது.

தமிழில் வெளியாகும் பல அகராதிகள் தொகுப்பாசிரியரின் பணியாகவே நிறைவுறும் ஆனால் ஆங்கிலத்தில் ஆக்ஸ்போர்டு அகராதியைத் தயாரிக்கப் பல அறிஞர் குழுக்கள் அமைக்கப்பட்டு, அவை பல நூற்றாண்டுகளாகச் செயல்பட்டு வருகின்றன. அதே போன்று இந்த அகராதிக்கும் நெறியாளர் என்ற புதிய பொறுப்பினை உருவாக்கி, அதனை எனக்களித்தவரும், என் நூல்கள் சிலவற்றை அழகிய முறையில் வெளியிட்டு வருபவருமாகிய பதிப்பாசிரியர் முத்தமிழ்க் கவிஞர், முனைவர் ஆலந்தூர் **கோ. மோகனரங்கன்** எம். ஏ., பிஎச்.டி., அவர்களுக்கு நன்றி.

திருத்தங்களையும் மாற்றங்களையும் பலமுறை செய்ய மனநிறைவுடன் உதவி செய்த திருவள்ளுவர் வரைகலையக உரிமையாளர் திரு. **கி. செம்மல்** அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியினையும், நல்வாழ்த்தினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**அகராதி ஒரு கை காட்டி மரமே,**

**கைகாட்டி மரமே ஊர் ஆகாது,**

**அதுகாட்டும் வழியில் நடப்போம்,**

**நடப்போர்க்கே நல்லுலகம் சொந்தம்.**

**வாழ்க தமிழ்! வளர்க மொழிபெயர்ப்புக் கலை!**

வான்முகில்

**முனைவர் ச. ச. குமார்,** எம். ஏ., எம். ஃபில்., பிஎச்.டி.,

ஆய்வாளர் நூலகம் :
9, பாகீரதி தெரு,
மணவாள நகர்,
திருவள்ளூர் - 602002.
பேசி : 95 - 4116 - 240947.

# கருவி நூற்பட்டியல்

ஆங்கிலம் - தமிழ்ச் சொற்களஞ்சியம்.
சென்னை: சென்னைப் பல்கலைக் கழகம், 1965.

கழகத் தமிழ் அகராதி
சென்னை - திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். 1974

A Dictionary of Tamil Literary and Critical Terms. Chennai:
Institute of Asian Studies, 1999.

Glossary of Technical Terms
Information Technology. English - Tamil. Colombo:
Official Languages Commission, 2000.

Longman Essential Activator. Harlow:
Longman, 2000.

Macmillan English Dictionary [For Advanced Learners] Oxford
Macmillan, 2002.

Oxford Advanced Learner's Dictionary
Oxford University Press, 1997.

Tamil Lexicon. Chennai: University of Madras, 1982.

# பொருளடக்கம்

# மாணவர் மொழியாக்க அகராதி

## தமிழ் - தமிழ் - ஆங்கிலம்

### அ

**அஃறிணை** - பகுத்தறிவு இல்லாத உயிரினங்களும், உயிரில்லாப் பொருள்களும். (எ.டு) பசு, கல். Inferior class of animals and lifeless objects. ஒ. உயர்திணை.

**அக்கப் போர்** - வம்புப் பேச்சு, squabble. அக்கப் போரில் ஈடுபடாதே. Don't engage in squabble.

**அக்கம் பக்கம்** - சுற்றுமுற்றும், around. சுற்று முற்றும் பார்த்துப் பேசு. Look around before you speak.

**அக்கரைச் சீமை** - அயல்நாடு, foreign land. இங்கிலாந்து ஓர் அக்கரைச் சீமை. England is a foreign land.

**அக்கறை** - ஈடுபாடு, Interest, concern. அவருக்கு இசையில் அக்கறை உண்டு. He evinces keen interest in music.

**அக்காள்** - தமக்கை, elder sister. அவள் என் தமக்கை. She is my elder sister. பா. தங்கை.

**அக்காக் குருவி** - ஒரு வகைக் குருவி, Hawk cuckoo. Hawk cuckoo is a bird.

**அக்காரக் கிழங்கு** - இனிப்புக் கிழங்கு, beet root. இக்கிழங்கு ஒரு காய். Beet root is a vegetable.

**அக்கி** - ஒரு தோல் நோய். Herpes, a skin disease.

**அக்கினி** - நெருப்பு, fire. 1. நிலம். 2. நீர். 3. காற்று. 4. நெருப்பு. 5. ஆகாயம். ஆகிய பஞ்ச பூதங்களில் ஒன்று. Fire is an element.

**அக்கினி சாட்சி** - நெருப்புச் சான்று, fire as evidence. இந்து திருமணங்கள் அக்கினி சாட்சியாக நடத்தப்படுகின்றன. Hindu marriages are conducted with fire as evidnece.

**அக்கினித் திராவகம்** - பொன்னைக் கரைக்கும் அமிலக் கலவை. Aqua regia. This acid mixture dis solves gold.

**அக்கினி நட்சத்திரம்** - கடுங்கோடை Dog days, hot summer. Now it is hot summer.

**அக்கினிப் பிரவேசம்** - கடுந்தேர்வு, ordeal. அது எனக்கு ஓர் அக்கினிப் பிரவேசம். It is an ordeal to me.

**அக்கினி மூலை** - தென் கிழக்கு, south east. நாம் இப்பொழுது அக்கினி மூலையில் உள்ளோம். Now we are facing southeast.

**அக்குவேறு ஆணிவேறாக** - துண்டு துண்டாக. In bits and pieces. We have to do that work in bits and pieces.

**அக்குள்** - கக்கம், armpit. ஒ. **கவட்டி**.

**அக்ரகாரம்** - பார்ப்பனச் சேரி, abode of Brahmins. Now the abode of Brahmins is not exclusive.

**அக இதய அழற்சி** - இதய உள்ளுறை வீக்கம், endocartis. இது ஒரு இதய நோய். This is a heart disease.

**அக ஊடுபரவல்** - நீர்மம் உள்ளே செல்லுதல், endosmosis. ஓர் உயிரியல் செயல்முறை. Endosmosis, a bio logical process. ஒ. புற ஊடு பரவல்.

**அக ஒட்டுண்ணி** - நாக்குப் பூச்சி. endo parasite. உடலில் வாழும் உயிரி. Ascaris is an endoparasite.

**அகக்கட்டமைப்பு** - ஒரு நாட்டின் அல்லது நிறுவனத்தின் அடிப்படை

வசதிகள். Infrastructure. (எ.டு) கட்டிடங்கள், நீர், மின்சாரம். அந் நிறுவனத்திற்கு நேர்த்தியான கட்டமைப்பு உள்ளது. The organisation has a fine infrastructure.

**அகக்கணியம்** - உயிரணுவின் உட்பொருள். endoplasm. ஒ. புறக்கணியம். This is the inner part of the cell.

**அகக்கரு வளர்ச்சி** - உயிர் கருப்பையில் வளர்தல், viviparity. This is the growth of a young one inside the womb.

**அகக்கலப்பு** - ஓர் இனத்திற்குள்ளே நடைபெறும் திருமணம், Endogamy. Marriage within one's own group; pollination between two flowers of the same plant; the union of female gametes.

**அகக்காழ்** - வயிரமுள்ள மரம், heart of the wood. This wood is present in old trees.

**அகக் கொழுநீர்** - உட்செவியிலுள்ள நிணநீர், endolymph. This is found in the inner ear.

**அகச்சட்டகம்** - உள்ளெலும்புக் கூடு, endoskeleton. This is the framework of human body.

**அகச்சிதல்** - பூக்காத் தாவரவித்து. விதை முன்னோடி, endospore of plant. This is the fore runner of seed.

**அகச்சிவப்புக் கதிர்கள்** - கண்ணிற்குப் புலப்படா ஒளிக்கதிர்கள், infrared rays. வானிலை ஆராய்ச்சியிலும், வானவெளி ஆராய்ச்சியிலும் பயன்படுவது. They are used in weather forecast and space research.

**அகச்சீரமைப்பு** - நிறுவனத்தின் உள்ளே நடைபெறுவது. internal construction. தற்பொழுது அகச் சீரமைப்பு நடைபெறுகிறது. Now internal construction is going on.

**அகச்சுரப்பி இயல்** - தொண்டைச் சுரப்பி முதலிய உட்சுரப்பிகளை ஆராய்வது. பா. புறச்சுரப்பி. endocrinology. This is the study of endocrine glands like thyroid.

**அகச்சுரப்பிகள்** - தம் சுரப்புகளை நேரிடையாகக் குருதியில் சேர்க்கும். (எ.டு) தொண்டைச் சுரப்பி, மூளையடிச் சுரப்பிகள் முதலியவை. ஒ. புறச் சுரப்பிகள்.
Endocrine glands like thyroid and pituitary which pour their secretions directly into blood.

**அகட விகடம்** - கோமாளிச் செயல், antics. The term denotes the humorous acts of a clown.

**அகடு** - வயிறு, abdomen. எல்லாப் பாலூட்டிகளுக்கும் வயிறு உண்டு. All mammals have abdomen.

**அகத்தி** - கொடிக்காலில் வெற்றிலைக்கு அணைகாலாக வளர்க்கப்படும் மரம். West-Indian pea-tree grown as support to betelnut wine.

**அகத்திக் கீரை** - உண்பதற்குரிய அகத்தி மரக்கீரை. West-Indian pea trees' leaves fit for cooking and eating.

**அகத்திணை** - அக ஒழுக்கமாகிய காதல் பற்றிக் கூறுவது. Love, as a mental experience of lovers. ஒ. புறத்திணை.

**அகத்துறுப்பு** - உடலின் உள் உறுப்புகள். (எ.டு) இரைப்பை, குடல் முதலியவை.
internal organs like stomach and colon.

**அகத்தோல்** - உட்தோல், endodermis. தாவரத் திசுக்களிலுள்ள ஓரடுக்கு. This is a layer in plant tissues. ஒ. புறத்தோல்.

**அகதி** - ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டில் அடைக்கலம் புகுபவர். refugee. Sri Lankan refugees.

**அகதி முகாம்** - அகதிகளுக்காக அமைக்கப்பட்டுள்ள தனி இடம். refugee's camp. (e.g) Mandapam

**அகந்தை** - செருக்கு, அகம்பாவம், ego. This is a negative quality.

**அகநகர்** - கோட்டையின் உள் இருக்கும் நகரப்பகுதி. Inner city surrounded by a fort.

**அகநகை** - ஏளனச் சிரிப்பு, derisive laughter. ஏன் இந்த அக நகை? Why this derisive laughter?

**அகநிலை, அகவயம்** - உள்நோக்குத் தன்மையுள்ளது; உணர்ச்சிக்குட்படுவது. subjective feeling. This is biased in nature.

**அகநோக்கர்** - தன் நலத்தைப் பற்றியே நினைப்பவர். Introvert. A self-interested person. ஒ. புற நோக்கர்.

**அகநோக்கு** - தன்னைப் பற்றிய எண்ணம். Introspection. This is the process of seeing oneself. ஒ. புறநோக்கு.

**அகப்பகை** - உட்பகை, enmity within. hatred among relatives.

**அகப்பற்று** - 'நான்' என்னும் மனப் பற்று, attachment to self, self-love. This is a sort of ego.

**அகப்பாட்டு** - அகப்பொருள் பற்றிய பாட்டு. (எ.டு) அகநானூறு. L o v e poem in Tamil Literature. (e.g.) Akananuru. ஒ. புறப்பாட்டு.

**அகப்பை** - உண்ணும் நீர்மப் பொருளை எடுக்கும் கரண்டி. ladle. This is useful for serving liquid food.

**அகப்பொருள்** - அக ஒழுக்கமாகிய காதல், love. This is the sum and substance of Tamil Literature.

**அகம்** - உள்ளம், மனம், நெஞ்சம். mind. This is a vital function of the brain.

**அகம்** - உள்ளே, He is inside.

**அகம்** - வீடு, இல்லம், house. It is a country house.

**அகம்** - அகப்பாட்டு, love poem.

**அகம்** - இடம், place. அறிவகம், abode of knowledge. அன்பகம், abode of love.

**அகம்பாவம்** - செருக்கு, arrogance, ego. தான் என்னும் முனைப்பு. Arrogance is a negative quality.

**அகமகிழ்ச்சி** - மனமகிழ்ச்சி, glee, ecstasy. I am thrown into ecstasy.

**அகமுடையாள்** - மனைவி, wife. குடும்பத்திற்கு இன்றியமையாதவள். Vital for family life.

**அகமுடையான்** - கணவன், husband. குடும்பத்திற்கு இன்றியமையாதவன். Essential for family life.

**அகரம்** - 'அ' என்னும் முதல் எழுத்து. The first letter in Tamil. அனைத்து மொழிகளிலும் அகர ஒலி உண்டு. All languages have letters to represent the sound 'A'.

**அகரமுதலி** - அகராதி, dictionary. சொற்களை அகர வரிசையில் விளக்கும் நூல். A reference work explaining the words of a language in an alphabetical order.

**அகர வரிசை** - சொற்களை அ - வில் தொடங்கி வரிசையாக அமைத்தல்.

Alphabetical order. We prepare index at the end of the book in the alphabetical order.

**அகரவரிசைக் கோப்பு** - *கோப்புகளை அகரவரிசையில் அமைத்தல்.* alphabet filing. This is used in office.

**அகராதி இயல்** - *அகராதி அமைப்பு பற்றிக் கூறுவது.* Lexicography is the art of compiling dictionaries.

**அகராதி இயலார்** - *அகராதித் தொகுப்பாசிரியர்.* Lexicographer, dictionary-maker.

**அகராதி படித்தவன்** - *நன்கு படித்தவன்,* learned man, scholar.

**அகராதி பிடித்தவன்** - *செருக்குள்ளவன், திமிர் பிடித்தவன்,* an arrogant man. He is an arrogant man.

**அகல்** - *குழிவான விளக்கு,* shallow lamp. *சுட்ட மண் அல்லது உலோகத்தாலானது.* Shallow lamp is either made of burnt mud or metal.

**அகல் அலை வரிசை** - *ஒலி, ஒளி பரப்பில் பயன்படுவது,* broad band. This is used in telecast.

**அகல் அரங்கம்** - *வணிக வளாகத்திற்கு முன்னுள்ள விரிந்த இடம்,* esplanade. This is an area of open ground in front of a business complex. (e.g.) Esplanade, Chennai.

**அகல இருப்பு வழி** - *இரு தண்டவாளங்களுக்கிடையே இடைவெளி அதிகமுள்ள இருப்பு பாதை. ஒ. குறுகிய இருப்பு வழி.* broadgauge. This is the size of railway track wider than the metre gauge.

**அகலக் கவி** - *ஒருவகைக் கவி, இக்கவி பாடுபவர்.*
elaborate poetry, the poet one who writes this.

**அகலம்** - *முப்பரிமாணங்களில் ஒன்று,* breadth or width. Breadth is one of three dimensions.

**அகவர், அகவலர்** - *பாடும் பாணர்.* bard, one who recites verses about kings and their deeds Shakespeare is called the Bard of Avon.

**அகவல்** - *ஆசிரியப்பா,* A kind of Tamil metre.

**அகவிதழ்** - *நிறமுள்ள பூவின் உள்வரிசை இதழ்கள்.* coloured petal. This is the inner leaf like structure. *ஒ. புல்லி.*

**அகழாய்வு** - *மண்ணைத் தோண்டிச் செய்யும் ஆராய்ச்சி.*
Archaelogical excavation to find out old things.

**அகழி** - *நீர் சூழ் அரண், அரண்மனை.* moat, ditch, a sort of protection around a fort.

**அகழெலி** - *வயல் எலி,* field rat.

**அகற்று** - *நீக்கு, போக்கு.* remove. *கோயிலுக்குள் போகுமுன் உன் மிதியடிகளை அகற்று.* Remove your slippers before entering a temple.

**அகன்ற** - *விரிந்த, பரவலான,* broad, wide. Broad band satellite, broad river.

**அகன்ற அறிவு** - *விரிந்த அறிவு,* vast knowledge. *அவர் அகன்ற அறிவுள்ளவர்.* He is a man of vast knowledge.

**அகவிதழ் வட்டம்** - *மலரில் அல்லிகள் கொண்ட சுருள்,* corolla. *ஒ. புல்லி மலரில் வட்டம்.* This is the ring of petals covering a flower.

**அகவிலைப்படி** - *விலைவாசி உயர்வை ஈடுகட்ட ஊழியர்களுக்கு*

அளிக்கப்படும் செலவுத் தொகை. Dearness Allowance. (D.A) அகவிலைப்படி மாறுதலுக்குட் பட்டது. Dearness allowance is subject to changes.

**அகவு** - கரை, கூவு, crow, caw. காகம் கரையும். The crow crows. மயில் அகவும். The peacock caws.

**அகவுயிர்** - ஆன்மா, soul. உள்ளொளி, the inner light.

**அகவுரை** - கனியின் உள்ளுறை. endocarp. This is the inner layer of fruit.

**அகவை** - வயது, age. அவன் வயது பத்து. He is ten years of age.

**அகழ்** - தோண்டு, dig out, excavate. மண்ணைத் தோண்டு. Dig the soil deep. குழி தோண்டு. Excavate a trench.

**அகழ்பொறி** - தோண்டும் எந்திரம், excavator. A machine used for digging.

**அகழ்வார்** - தோண்டுவார், digger, One who digs is a digger.

**அகனைந்திணை** - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களுக்குரிய காதல் ஒழுக்கம்.
five aspects of love: union (hilly region), forbearance (forest-track), separation (waste land), sulking (fields), lamenting the lover's absence (sea and sea-shore).

**அகாரணமாக** - காரணமின்றி, without reason. அகாரணமாக அவன் மேல் ஐயம் கொள்ளாதே. Don't suspect him without reason.

**அகாலம்** - காலமல்லாக்காலம், being untimely, impropertime. அகாலத்தில் வந்திருக்கின்றாய். Your coming is rather untimely.

**அகால மரணம்** - இளம்வயதில் இறத்தல், untimely death. அவர் அகாலமரணம் இலக்கிய உலகில் வெற்றிடத்தை உண்டாக்கியுள்ளது. His untimely death has created a void in the world of literature.

**அகிம்சை** - வன்முறையில்லாமை, non-violence. நியாயமான கோரிக்கைகளைப் பெறக் காந்தியடிகள் அரசியலில் முதன்முதலில் பயன் படுத்திய முறை. The method adopted by Mahatma Gandhi for the first time in politics to achieve just demands.

**அகில்** - ஒரு வகை மரம், eagle wood. பா. தேக்கு.

**அகிலம்** - உலகம், world. பிரபஞ்சம். universe. All the world. What does all the world say?

**அகைப்பு வண்ணம்** - தமிழில் உள்ள சந்தங்களில் ஒன்று. One of the rhythms in Tamil.

**அங்கணம்** - முற்றம், courtyard. இப்பொழுது நாம் முற்றத்தில் உட்கார்ந்திருக்கிறோம். We are now sitting in the courtyard.

**அங்கணன்** - சிவன், சிவபிரான். Lord Siva, the all knowing God.

**அங்கண்** - அங்கு, there. அங்குத் துளையில் ஒரு பாம்பு உள்ளது. There is a snake in the hole.

**அங்கதம்** - எள்ளி நகையாடல், satire. மடமை, நடத்தை, குருட்டுப் பழக்கம் ஆகியவற்றைக் கேலி செய்யும் இலக்கியம். This is the art of mocking people's foolish behaviour.

**அங்கத்தினர்** - உறுப்பினர், member. அவர் எங்கள் கழக உறுப்பினர். He is a member of our association.

**அங்கப் பிரதட்சணம்** - வேண்டுதல் நிறைவேறக் கோயிலில் உடல் முழுதும் தரையில் படுமாறு பக்தர் உருளல். Total rolling of body by a devotee in temple to fulfil a vow.

**அங்கமணி** - பெண்வழிச்சீர், சீதனம், dowry. நியாயமற்ற பெண் வழிச்சீர் ஒரு குற்றமாகும். Unjust dowry is now considered a crime.

**அங்கமாலை** - சிவன் அணியும் எலும்பு மாலை. Bone necklace worn by Lord Siva.

**அங்கமாலை** - உடல் உறுப்புகளை விளக்கும் செய்யுள். This is a poem describing limbs.

**அங்கம்** - உறுப்பு, limb. நம் கை, கால்கள் உறுப்புகளாகும். Our hands and legs are limbs.

**அங்கலாய்** - வருத்தப்படு, புலம்பு, lament. தன் அன்பு நண்பன் இறப்புக்காக அவன் அங்கலாய்த்தான். He lamented the death of his dear friend.

**அங்கலாய்த்தல்** - வருந்துதல், grief, lament. It is a funeral lament.

**அங்கவடிவெலும்பு** - செவிச் சிற்றெலும்புகளில் ஒன்று, stirrup. One of the three small bones in the inner ear.

**அங்க வஸ்த்திரம்** - பெரியவர்கள் குறிப்பாகக் கலைஞர்கள் அணியும் நீண்ட மேலங்கி. A long strip of ornamental upper cloth worn by elderly people, particularly, artistes.

**அங்கவீனன்** - உறுப்பு பழுது பட்டவன், the disabled. அங்கவீனர் நம் பரிவுக்குரியவர். The disabled deserve our sympathy.

**அங்காடி** - சந்தை, Mart, market. பொருள்கள் விற்குமிடம், A place where goods are sold.

**அங்காடிப் பொருளியல்** - விற்பனை பற்றிக் கூறும் துறை, market economy. This is the study of selling goods.

**அங்காடி மதிப்பீடு** - விற்பனைக் கணிப்பு, market assessment.

**அங்காடி முதலாக்கம்** - விற்பன்ன முதலீடு, market capitalization.

**அங்காடி வளாகம்** - விற்பனைக் கூட இடம், market complex.

**அங்காடி விலை** - விற்பனை விலை, market price, selling price.

**அங்காடி விற்பனை** - சந்தை விற்பனை, marketing.

**அங்கி** - உடை, ஆடை, robe. பட்டமளிப்பு விழா அங்கி. Convocation robe.

**அங்கி** - தீ, fire. Fireplace.

**அங்கித் தம்பனை** - தீச்சூட்டைத் தாங்கும் யோக சக்தி. The mystic act of enduring heat.

**அங்கு** - அவ்விடம், there, yonder. Please stop there. Do you see yonder tall trees? ஒ. இங்கு.

**அங்குட்டம்** - கட்டைவிரல், thumb. பொருள்களைப் பிடிப்பதற்கு இன்றியமையாத விரல். Essential finger for holding things.

**அங்குசம்** - யானைத் தோட்டி, Goad, hook used to control an elephant.

**அங்குமிங்குமாக** - பல இடங்களில், Here and there. புத்தகக் கடையில் அங்குமிங்குமாக நூல்கள் இருக்கும். In a bookshop, the books will be found here and there.

**அங்குரம்** - முளை, முளைக்குருத்து. Sprout, the bud of a plant.

**அங்குரார்ப்பணம்** - தொடக்கம், beginning. அது நல்ல தொடக்கம். It is a good beginning.

**அங்குஸ்தான்** - விரல் உறை, thimble. தைக்கும் போது பாதுகாப்பிற்காக விரலில் அணிவது. Worn at the tip of a finger for protection while stitching.

**அங்கே** - அங்கு, there. அங்கே அவனைப் பார்க்கலாம். You can find him there.

**அங்கை எலும்பு** - உள்ளங்கை எலும்பு, Palm bones.

**அங்கைக் கூட்டிலை** - உள்ளங்கை வடிவக் கூட்டிலை. Palmately compound leaf.

**அங்ஙனம்** - அவ்வாறாக, in that way. அங்ஙனமே செய்க. Do it in that way.

**அச்சகத் தொழிலாளி** - அச்சுக் கூடத்தில் வேலை செய்பவர். Printing press worker.

**அச்சகம்** - அச்சுக்கூடம், Printing press. அச்சு வேலை நடைபெறும் இடம். The place where printing work is done.

**அச்சடிச் சேலை** - அச்சடித்த புடவை. Printed saree in various designs.

**அச்சம்** - பயம், fear. அச்சம் தவிர். Have no fear.

**அச்சயன்** - அச்சம் நீங்கியவனான கடவுள். God, the Fearless.

**அச்சன்** - தந்தை, father. அவர் என் அச்சன். He is my father.

**அச்சாணி** - மைய ஆணி, linch pin, axle. விலைகளைக் கட்டுப்படுத்துவது அரசுக் கொள்கையின் அச்சாணியாகும். Controlling prices is the linch pin of a Government's policies.

**அச்சாரம்** - முன்பணம், advance, earnest money. கொஞ்சம் முன் பணம் கொடு. Pay some advance.

**அச்சிடல்** - அச்சுப் பதிவு செய்தல், printing. Printing is fine.

**அச்சிடுவோர்** - நூல்களை அச்சிடுபவர், printer. One who prints books. ஒ. வெளியீட்டாளர்.

**அச்சியற்றி** - அச்சைப் பதிவு செய்யுங் கருவி, ஆள். printer. One who or that which prints. He is a printer. A printing device attached to a computer.

**அச்சு** - நேர்க்கோடு, axis. புவியச்சு. வட்ட அச்சு, செங்குத்து கிடையச்சுகள். the axis of the earth, the axis of a circle, the horizontal and vertical axes.

**அச்சு** - அச்செழுத்து, printing type. அழகான அச்செழுத்துகள். Fancy printing types.

**அச்சு** - பதிவு, Impression. அச்சுப் பதிவு நன்று. The impression is good.

**அச்சு** - கடவுள், இறைவன். God, the Almighty.

**அச்சு** - நெசவாளர் கருவி, weaver's reed.

**அச்சு இயந்திரம்** - அச்சடிக்கும் கருவி, printing machine.

**அச்சு உருளை** - அச்சடிக்கப் பயன் படும் உருளை. printing barrel or cylinder.

**அச்சுக்கூடம்** - அச்சடிக்கும் இடம், printing press, house.

**அச்சுக்கோப்பாளர்**- அச்சு எழுத்து களைக் கோப்பவர். compositor, one who composes.

**அச்சுக்கோப்பு** - அச்சு எழுத்துக் களை வரிசையாக அடுக்கல்,

composing. Setting printing types in order. கையால் அச்சுக்கோத்தல் இப்பொழுது அரிதான ஒன்று. Hand composing has now become rare.

**அச்சுப்பாடு** - அச்சிட்ட செய்தி. printout. Take a printout in a computer.

**அச்சுச் சுற்று** - கடத்தும் மின் சுற்று, printed circuit. இதன் பகுதிகள் கடத்தும் பொருளினால் இணைக்கப் பட்டுள்ளன. An electronic circuit in which the components are connec ted by a conducting material.

**அச்சுச் சூலமைவு** - தாவரச் சூல் பையில் சூல்கள் அமைந்திருக்கும் வகையில் ஒன்று. Axial placentation in which the ovules are arranged along the central axis of the ovary.

**அச்செழுத்து** - அச்சடிக்கப் பயன்படும் எழுத்து, printing type. ஒளியச்சுக் காரணமாக இது இப்பொழுது இல்லையென்றே சொல்லலாம். Now it is rarelly used because of laser printing.

**அச்சுத்தலை** - வார்ப்புப் பொறியின் தலைப் பகுதி, die head.

**அச்சுத் தொழில்** - அச்சடிக்கும் பணி., printing industry. அச்சுத் தொழில் வளர்ந்து வரும் தொழில்; Printing industry is a flourishing industry.

**அச்சுத் தொழில்நுட்பவியல்** - தொழில் நுணுக்க அச்சுக்கலை. Printing technology, the study of technical aspects of printing.

**அச்சு நரம்பிழை** - நரம்பிழை வகை, axon. உயிரணுவிலிருந்து துடிப்பு களை வெளியே கடத்துவது. Axon, the long nerve fibre conducting impulses away from the cell body.

**அச்சுநாடுகள்** - இரண்டாம் உலகப் போரில் ஈடுபட்ட ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய நாடுகள். The Axis. Germany, Italy and Japan had alliance in World War II.

**அச்சுப்படி** - பிழைகள் திருத்த வேண்டிய அச்சு நகல், proof. The printed matter with errors to be cor- rected.

**அச்சுப்படித் திருத்துபவர்** - அச்சுப் பிழைத்திருத்துபவர், proof reader one who corrects errors in proof. அச்சுப்படி திருத்தல். Proof reading.

**அச்சுப் படிவம்** - அச்சடித்த படிவம், printed form. விண்ணப்பம் ஒரு அச்சடித்த படிவம். An application is a printed form.

**அச்சு மை** - அச்சடிக்கும் மை. இது கருப்பு மையாகவும் வண்ண மையாகவும் கிடைப்பது. Printing ink is available both in black and colour.

**அச்சு வார்ப்பவர்** - அச்சு செய்பவர். Die caster, one who casts die.

**அச்சு வார்ப்பு** - அச்சு செய்தல், Die cast or casting die.

**அச்சு வெல்லம்** - வார்ப்பாக அமைந்த வெல்லம், mould jaggary, rectangular in shape.

**அச்சுதன்** - நிலைபேறுள்ள கடவுள். God, the Imperishable.

**அச்சுத் திரட்டு** - அச்சுத் தண்டின் இரு முனைகளையும் சீர் செய்தல் . Axis rounding for uniform thickness.

**அச்சுறுத்தல்** - அச்சம் ஏற்படுமாறு செய்தல். பயங்கரவாதம் நாட்டின் ஒற்றுமைக்கு ஓர் அச்சுறுத்தலாகும். Threat, intimidation. Terrorism is a threat to the unity of a country.

**அச்சுறுத்திப் பணம் பெறுதல்** - *மிரட்டிப் பணத்தைப் பறித்தல்*, black-mailing. *அச்சுறுத்திப் பணம் பெறுபவர்.* Black mailer.

**அச்சுறுத்து** - *பயமுறுத்து,* threaten. The robber threatened to kill me.

**அசகாய சூரன்** - *அரிய செயல் செய்பவன்,* a man of rare deeds.

**அசட்டுச் சிரிப்பு** - *முட்டாள் தன்மையுள்ள சிரிப்பு;* stupid laughter.

**அசட்டை** - *புறக்கணிப்பு,* neglect, discard. *கடமை அசட்டை,* neglect of duty.

**அசட்டை செய்** - *புறக்கணி,* neglect. *உன் படிப்பை அசட்டை செய்யாதே.* Don't neglect your studies.

**அசடன்** - *முட்டாள்,* stupid fellow.

**அசடு** - *முட்டாள்தன்மை, முட்டாள்,* stupid fellow.

**அசத்து** - *அசரச் செய்,* astonish. *அச்செய்தி என்னை அசத்தியது.* The news astonished me.

**அசதி** - *சோம்பல்,* tiredness, fatigue. *அதிகவேலை அசதியை உண்டாக்கும்.* Too much work causes fatigue.

**அசந்தர்ப்பம்** - *வாய்ப்பிலா நேரம்,* inconvenient time. *நீ கூட்டத்தை கூட்டியிருப்பது அசந்தர்ப்பமானது.* You have selected an inconvenient time for the meeting.

**அசம்பாவிதம்** - *விரும்பத்தகாத நிகழ்ச்சி,* untoward incident, happening. *அக்கார் விபத்து ஓர் அசம்பாவிதம்.* That car accident is an untoward incident.

**அசமந்தம்** - *சோம்பல்,* laziness. *உன் அசமந்தத்தைக் கண்டிக்கிறேன்.* I condemn your laziness.

**அசரீரி** - *வானிலிருந்து கேட்கும் ஒலி,* voice from heaven. *நான் அசரீரி ஒன்று கேட்டேன்.* I heard a voice from heaven.

**அசரை மீன்** - *ஆற்று மீன்,* river fish.

**அசல்** - *மூலம்,* original. *அசல் எங்கே?* Where is the original?

**அசல்** - *முதல்,* principal. *முதல் ரூபாய் 10,000.* The principal is Rs. 10,000/-

**அசாத்தியம்** - *இயலாதது, அரியது,* impossible, rare. *அரிய காரியங்கள் செய்வது அசாத்தியம்.* It is impossible to do rare things.

**அசாதாரணம்** - *இயல்புக்கு அப்பாற்பட்டது,* extraordinary, great. *கழகத்தின் அசாதாரணக் கூட்டம் நாளை நடைபெறும்.* An extraordinary meeting of the association will be held tomorrow.

**அசிங்கம்** - *அருவருப்பு,* filth, ugliness. *இந்த அசிங்கத்தை எப்படி எழுதுகிறாய்?* How do you write such filth?

**அசிரத்தை** - *அக்கறையின்மை,* lack of interest. *கழகம் கலைய அசிரத்தையே காரணம்.* Lack of interest led to the dissolution of the association.

**அசுத்த ஆவி** - *தீய ஆற்றல்,* evil spirit, satan. *சாத்தான் ஓர் அசுத்த ஆவி.* Satan is considered the Devil.

**அசுத்தம்** - *அழுக்கு,* dirt, impurity. *உன் ஆடைகள் அழுக்காக உள்ளன.* Your clothes are dirty.

**அசூயை** - *பொறாமை,* envy, jealousy. *அசூயை ஒரு கெட்ட குணம்.* Envy is a bad quality.

**அசுர** - *அளவுக்கு மீறிய,* tremendous. *அசுர வெடிப்பு.* The explosion is tremendous.

**அசுரன்** - *மிகுந்த ஆற்றல் உள்ளவன்,* giant. *அவன் ஓர் அசுரன்.* He is a man of indefatigable energy.

**அசுவமேத யாகம்** - *குதிரையைப் பலியிடும் வேள்வி,* horse sacrifice. *பழங்காலத்தில் அசுவமேதயாகம் செய்யப்பட்டது.* Horse sacrifice was done in olden days.

**அசுவராசியம்** - *ஊக்கம் இல்லாதது,* lack of zeal, eagerness. *அசுவராசியம் படிப்பைக் கெடுக்கும்.* Lack of zeal spoils studies.

**அசுவினி** - *தாவரப்பேன்,* aphid.

**அசேதனம்** - *தாது உப்புப் பொருள்,* inorganic substance. ஒ. *சேதனம்.*

**அசை** - *தமிழ் யாப்பிலக்கணத்தில் எழுத்துக்களைச் சேர்த்துக் கணக்கிடப்படும் அடிப்படை அலகு.* syllable. *இது நேரிசை நிரையசை என இரு வகைப்படும்.*
Arithmetic is a word of four syllables.

**அசை** - *நகர்த்து,* move, shake. Move the table a little.

**அசைச்சீர்** - *சீரில் ஒரு வகை,* foot, one metre syllable.

**அசைச் சொல்** - *அசையாக வரும் சொல்,* expletive. Down is an expletive.

**அசை போடு** - *மீண்டும் உணவை மெல்லு,* chew the food, ruminate. I am simply vegetating at home.

**அசை போடுவன** - *அசை போடும் பசு முதலியவை,* ruminants like cow. *பசு ஓர் அசைபோடும் பிராணி.* The cow ia a ruminant.

**அசையும் சொத்து** - *வண்டி முதலியவை,* movable property. Car is a movable property.

**அசையாச் சொத்து** - *வீடு முதலியவை,* immovable property. House is an immovable property.

**அசைவு** - *இயக்கம்,* motion, movement. *அப்பொருள் இயக்கத்தில் உள்ளது.* The object is in motion. *தாவர இயக்கம்,* plant movement.

**அசௌக்கியம்** - *நலமின்மை,* indisposition. *அசௌக்கியம் காரணமாக நான் கூட்டத்திற்கு வர இயலவில்லை.* I cannot attend the meeting because of indisposition.

**அசௌகரியம்** - *இடையூறு,* inconvenience, disadvantage. *அசௌகரியத்திற்கு மன்னிக்கவும்.* Sorry for the inconvenience.

**அஞ்சல்** - *கடிதம்,* letter. *இதோ உங்களுக்கு ஒரு கடிதம்.* Here is a letter to you.

**அஞ்சல்** - *மீண்டும் ஒலிபரப்பு செய்தல்,* relay. *அது ஒரு சென்னை நிலைய அஞ்சல்.* It is relay from Chennai station. *அது ஓர் அஞ்சல் ஓட்டம்.* It is a relay race.

**அஞ்சல் அட்டை** - *கடிதம் எழுத பயன்படும் அட்டை,* post card.

**அஞ்சல் அலுவலகம்** - *தபால் நிலையம்,* post office.

**அஞ்சல் அலுவலர்** - *தபால் நிலையத்தில் வேலை செய்பவர்,* post office worker.

**அஞ்சல் ஆணை** - *பண உரிமை ஆணை,* postal order.

**அஞ்சல் உறை** - *கடிதம் வைத்து அனுப்பும் உறை,* postal cover.

**அஞ்சல் ஊழியர்** - *அஞ்சலகத்தில் வேலை செய்பவர்,* postal worker.

**அஞ்சல் எழுத்தர்** - *அஞ்சலகத்தில் எழுத்து வேலை செய்பவர்,* postal clerk.

**அஞ்சல் ஓட்டம்** - *தொடர் ஓட்டம்,* relay race.

**அஞ்சல் கட்டணங்கள்** - அஞ்சல் அனுப்பு வதற்குரிய தொகை. postal charges. தற்பொழுது அஞ்சல் கட்டணங்கள் உயர்ந் துள்ளன. The postal charges have increased now.

**அஞ்சல் குறியீட்டெண்** - அஞ்சல் நிலையத்தைக் குறிக்கும் ஆறு இலக்க எண், pincode. Postal Index Number = PIN

**அஞ்சல் சான்று** - கடிதம் அனுப்பிய தற்குச் சான்று, certificate of posting.

**அஞ்சல் செய்** - ஒளிபரப்பு, broad cast, relay.

**அஞ்சல் செலவு** - அஞ்சல் தலைச் செலவு, postage.

**அஞ்சல் தலை** - கடிதம் அனுப்புவதற் குரிய அஞ்சல் வில்லை, postal stamp.

**அஞ்சல்தலை திரட்டல்** - பொழுது போக்காக அஞ்சல் வில்லைகளைச் சேர்த்தல், philately.

**அஞ்சல்துறை**- கடிதப் போக்கு வரத்துத் துறை, postal department.

**அஞ்சல்துறைத் தலைவர்** - அஞ்சல் துறைத் தலைமை அலுவலர், Postmaster General, the head of postal department.

**அஞ்சல் பெட்டி** - கடிதங்கள் போடும் பெட்டி, post-box.

**அஞ்சல்பை** - கடிதங்கள் அடங்கிய பை, Post-bag.

**அஞ்சல் நிலையம்** - post-office, relay station.

**அஞ்சல் மையம்** - அஞ்சல் செய்யும் மையமான இடம், relay centre.

**அஞ்சலகம்** - post office.

**அஞ்சலகத் தலைவர்** - அஞ்சல் நிலையப் பொறுப்பாளர், post-master.

**அஞ்சலகத் தலைவி** - அஞ்சல் நிலையப் பெண் பொறுப்பாளர், post-mistress.

**அஞ்சல் வழிக் கல்வி** - கல்லூரியில் சேர்ந்து படிக்காமல், தபால்மூலம் பாடங்களைப் பெற்றுப் படிக்கும் கல்விமுறை, correspondence course, distance education through correspondence.

**அஞ்சலர்** - பகைவர், enemies. உன் அஞ்சலரை நண்பராக மாற்று. Convert your enemies into friends.

**அஞ்சலளித்தல்** - அடைக்கலம் தருதல், granting refuge, asylum. அயல்நாட்டு அறிவியலாருக்கு அஞ்சல் அளிக்கப்பட்டது. The foreign scientist has been granted asylum.

**அஞ்சலி** - வணங்குதல், worship, Worship God.

**அஞ்சலி** - மரியாதை செய்தல், homage. இறந்த தலைவருக்கு அஞ்சலி செலுத்து. Pay homage to the departed leader.

**அஞ்சறைப் பெட்டி** - பல வகைச் சமையல் பொருள்கள் வைக்கப் படும் சிறு சிறு அறைகள் உள்ள பெட்டி, multi-compartment box. This wooden box contains many compartments to hold grocery articles like pepper and other spices.

**அஞ்சனக் கோல்** - கண்ணுக்கு மை தீட்டும் குச்சி. Eye painting stick. This is used to paint eyes to add more beauty.

**அஞ்சனம்** - மை, eye cosmetic.

**அஞ்சன வண்ணன்** - கருநிறமுள்ள கடவுள் திருமால். Thirumal, the dark coloured god.

**அஞ்சாமை** - பயம் கொள்ளாமை, fearlessness. அஞ்சாமை ஒரு

வீரனின் நல்ல பண்பு. Fearlessness is the virtue of a soldier.

**அஞ்சு** - அச்சங்கொள், fear. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை. Not to fear what ought to be feared is a folly. (T. 428)

**அஞ்சுகம்** - கிளி, parrot. அஞ்சுகம் செல்லமாக வளர்க்கப்படும் பறவை. Parrot is a pet bird.

**அஞ்ஞாத வாசம்** - பிறர் அறியாத வண்ணம் மறைந்து வாழ்தல், living in exile. பாண்டவர்கள் ஆறு மாதங்கள் அஞ்ஞாதவாசம் இருந்தனர். The Pandavas lived in exile for six months.

**அஞ்ஞானம்** - ஆன்ம அறிவின்மை, spiritual ignorance. மக்களில் பெரும்பாலோர் அஞ்ஞானம் உள்ளவர்களே. Most people have spiritual ignorance. ஒ. மெய்ஞ் ஞானம், மெய்யறிவு.

**அஞ்ஞானி** - ஆன்ம அறிவு இல்லாதவன், spiritually ignorant person. அவன் ஓர் அஞ்ஞானி. He is a spiritually ignorant man.

**அட்சக் கோடு** - நீள் கோடு, latitude. நிலநடுக்கோட்டிற்குத் தெற்கே அல்லது வடக்காக ஓரிடத்தி லிருந்து பாகையில் அளக்கப் படுவது. This is the distance of a place north or south of the equator measured in degrees. ஒ. தீர்க்கக் கோடு.

**அட்சதை** - மஞ்சள் கலந்த மங்கல அரிசி, auspicious rice mixed with yellow turmeric paste. மணமக்கள் மீது பெரியோர்கள் அட்சதை தூவினர். The elders sprinkled auspi cious rice on the wedded couple.

**அட்சயப் பாத்திரம்** - எடுக்க எடுக்க அமுது வற்றாத கலம். The perennial food bowl giving food in plenty. இன்று நம் நாட்டின் வறுமையை ஒழிக்க ஓர் அட்சயப் பாத்திரம் தேவை. Today we need a perennial food bowl to abolish poverty. பிச்சைக் கலம், begging bowl.

**அட்சரம்** - எழுத்து, letter.

**அட்சர அப்பியாசம்** - பாலபாடங் கற்றல், alphabet learning. குழந்தை அட்சர அப்பியாசம் பழகிக் கொண்டிருக்கிறது. The child is learning alphabets.

**அட்டக்கரி** - கறுப்பு, முழுக் கருமை நிறம், utter black. மாப்பிள்ளை அட்டக்கரி. The bride is utter black.

**அட்டகாசம்** - 1. அடாத செயல், atrocity. அட்டகாசம் என்பது வன்முறையின் ஒரு வடிவம். Atrocity is a form of violence. 2. கூச்சல், uproar. கூட்டத்தில் ஒரே அட்டகாசம். There was a great uproar in the meeting. 3. நேர்த்தி, excellence. அவளுக்குப் பல நேர்த்திகள் உண்டு. She has many excellences to her credit.

**அட்ட சித்தி** - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிரா காமியம், ஈசத்துவம், வசித்துவம் முதலான எட்டு மகா யோக சக்திகள். இவை சித்தர்களுக் குண்டு. Eight-fold mystical powers possessed by the Siddhas.

**அட்டணைக் கால்** - கால் மேல் கால் போட்டு உட்கார்தல். sitting cross legged. நான் அட்ட ணைக்கால் போட்டுத் தரையில் உட்கார்ந்திருந் தேன். I was sitting cross legged on the floor.

**அட்டமச் சனி** - எட்டாம் நிலைச் சனி. (சோதி), Saturn in the eighth house (Astro). இப்பொழுது எனக்கு அட்டமச் சனி. Now I have Saturn in the eighth house.

**அட்டமி** - 1. எட்டாம் திதி (சோதி) eighth phase of the moon (Astro) 2. தீயநாள், inauspicious day. பா. நவமி.

**அட்டவணை** - 1. செய்திகளை நிரல் படக்காட்டல், table. இந்நூலில் பயனுள்ள அட்டவணைகள் உள்ளன. This book contains useful tables. 2. பொருளடைவு, Index. இது நூலின் முக்கிய பகுதி. The index is an important part of the book.

**அட்டவணை இனம்** - கல்விச் சலுகைகளுக்காக இந்திய அரசியலமைப்புப் பட்டியலில் இடம் பெற்றுள்ள பல இனங்கள். The castes in the list of the Indian Constitution.

**அட்டவணைப் பழங்குடியினர்** - அரசு ஆணையிலிலுள்ள தொல்குடிகள். Scheduled tribes listed in Government orders.

**அட்டாவதானம்** - ஒரே சமயம் எட்டுச் செயல்களை கவனத்தில் வைத்துச் செய்தல். Art of attending to eight tasks at a time.

**அட்டாவதானி** - அட்டாவதானம் செய்யும் கலைஞன், Artist who performs attavadanam.

**அட்டி** - மறுப்பு, objection. நீ கூட்டத்திற்குச் செல்வதில் எனக்கு அட்டி இல்லை. I have no objection to your attending the meeting.

**அட்டிகை, அட்டியல்** - கழுத்தணி, necklace. இந்த அட்டிகை அழகாக உள்ளது. This necklace is beautiful.

**அட்டில் சாலை** - அடுப்பங்கரை, kitchen.

**அட்டுப்பு** - ஆவியாக்கிப் பெறப் படும் உப்பு. The salt obtained by evaporation.

**அட்டூழியம்** - அட்டகாசம், atrocity. கொள்ளையர் அட்டகாசம் தாங்க முடியவில்லை. The atrocities of the robbers are unbearable.

**அட்டை** - 1. இரத்தம் குடிக்கும் புழுவினம். Leech. This is a blood sucker. 2. மேலுறை, wrapper. இந்த நூலுக்கு நேர்த்தியான மேலுறை உள்ளது, This book has a fine wrapper. 3. புதைமிதியின் அடி, sole of a shoe.

**அட்டைத் தாள்** - கெட்டியான அட்டை, cardboard. இந்த புத்தகத்தின் கட்டு கெட்டியான அட்டையாலானது, The binding of this book is done with card board.

**அட்டைப் படம்** - நூல் அல்லது இதழின் முகப்புப் படம், cover page picture. மாத இதழ்கள் தவறாது முகப்புப் படம் கொண்டிருக்கும். The monthlies have cover page pictures invariably.

**அடக்கம்** - பணிவு, humility. அடக்கம் அமரருள் உய்க்கும். Humility places a person among gods. (T.121) 2. திணிவு, compactness. The ice has compactness. 3. உற்பத்திச் செலவு, cost of production. இக்காலத்தில் உற்பத்திச் செலவு அதிகமே. Nowadays the cost of production is high. 4. கடிதஇணைப்பு, enclosure in the letter.

**அடக்கவிலை** - ஒரு பொருளை உற்பத்தி செய்வதற்குரிய செலவு, cost price. இது உற்பத்திச் செலவு

அடிப்படையில் உறுதி செய்யப் படுவது. Cost price is fixed on production expenses.

**அடக்கிவாசி** - *திறமையை வெளிக் காட்டாமல் செய்.* conceal one's ability.

**அடக்கு** - *1. கட்டுப்படுத்து,* control. *உன் உணர்ச்சிகளைக் கட்டுப் படுத்து.* Control your feelings. *2. சுருக்கு,* condense. *இந்த அறிக்கையைச் சுருக்கி எழுதுக.* Condense this report into a brief summary.

**அடக்கு முறை** - *அடக்கி ஒடுக்கல்,* repressive measures. *அடக்கு முறைகள் எல்லாம் விளையாட்டுக் கருவிகளே.* They are mere playthings.

**அடகு** - *பணம் கடன் வாங்கியதற்கு ஈடாக வைக்கப்படும் பொருள்,* pawn. *என் மோதிரம் அடகு வைக்கப்பட்டு உள்ளது.* My ring has been pawned.

**அடகுக்கடை** - *அடகு பிடிக்கும் கடை.* pawn shop. The place where articles are pawned.

**அடகுக் கடைக்காரர்** - *அடகுக் கடை வைத்திருப்பவர்,* pawn broker.

**அடகுச் சீட்டு** - *அடகு வைத்த பொருளுக்குப் பெறும் ரசீது.* pawn ticket. This is the receipt given by a pawnbroker for the articles pawned to him.

**அடகுப் பொருள்** - *அடகு வைக்கும் பொருள்,* pawn article.

**அடங்கல்** - *ஊர்க் கணக்குப் பதிவேடு,* the village account register. *இதில் நிலத் தொடர்பான எல்லாத் தகவல்களும் பதிவு செய்யப்படும்.* This register contains all details regarding the land cultivated for each and every year.

**அடங்கலாக** - *உட்பட,* Including. *கட்டுச் செலவு, அஞ்சல் செலவு. அடங்கலாக இக்கடிகாரத்தின் விலை ரூ. 1000.* The price of this watch is Rs. 1000 including postage and packing.

**அடங்கன்முறை** - *முதல் ஏழு திருமுறைகளின் தொகுப்பு.* The first seven compiled Devaram works.

**அடங்காப் பிடாரி** - *அடங்காத பெண்,* the shrew, *அடங்காப் பிடாரியை அடக்குதல்.* taming the shrew.

**அடங்கு** - *1. பணி, அடங்கி நட.* Be submissive in your behaviour. *2. ஒடுங்கு, மூச்சு அடங்கியது.* He breathed his last. *3. ஓய்தல், ஊர் அடங்கியது.* The village was still. *4. உட்படு, மாநாட்டுப் பேராளர்கள் என்றால் அதில் வெளி மாவட்டப் பேராளர்களும் அடங்குவர்.* The conference delegates included representatives from other districts also.

**அடம்** - *ஒன்றில் பிடிவாதமாக இருத்தல்,* obstinacy. *அடம் பிடித்தல் குழந்தைகளின் இயல்பு.* Obistinacy is an inherent quality of children.

**அடமானம்** - *ஒன்றை ஈடாக வைத்துப் பணம் பெறுதல்,* pledge. *என் வீட்டை அடமானமாக வைத்து ரூ. 50000 பெற்றேன்.*

I pledged my house to get a loan of Rs. 50,000.

**அடர்ப்பித்தல்** - *செறிவு அதிகமாகு மாறு செய்தல்,* concentration. *உலோகத்தை அதன் தாதுக்களில் இருந்து பிரிக்கும் முறைகளில் ஒன்று.* This is one of the methods to extract a metal from its ores.

**அடர்** - 1. செறிந்திருத்தல், be luxuriant. புல் அடர்ந்துள்ளது. The grass is luxuriant in its growth. 2. வீறுள்ள, concentrated. அடர் கந்தக அமிலம். Concentrated sulphuric acid. ஒ. நீர்த்த. 3. மிக கனமுள்ள. அடர்பாறை. Dense rock. 4. பார்க்க இயலாத அடர் புகை. Dense smoke. 5. நெருக்க மான. அடர்த்தியான மக்கள் கூட்டம். Dense crowd.

**அடர்த்தி** - 1. அடர்வாக இருத்தல், dense. அடர்த்தியான காடு. Dense forest. 2. செறிவு, Density. கன பரிமாணத்திற்கும் எடைக்குமுள்ள விகிதம். ஒரு கன சென்டிமீட்டர் பாதரசத்தின் எடை 13.6 கிராம். ஆகவே பாதரசத்தின் அடர்த்தி 13.6/க. செ.மீ. Density, the relation of weight to volume. A cubic centimetre of mercury weighs 13.6 gm. Therefore the density of mercury is 13.6 gms/cc

**அடல்** - 1. வெற்றி கொள், conquer. அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை. Let the five senses be conquered. (T.343) 2. தாக்கு, attack. அடல் வேண்டும் போரில். Attack is a must in a battlefield. 3. வலிமை. அடல் வேண்டும் எதிரியை வீழ்த்த. Might is a must to defeat the foes. 4. கொல். Kill.

**அடவு** - நாட்டியத்தில் சந்த உடல் அசைவு. Rhythmic body movement in dance.

**அடாத** - தகாத, atrocious. அடாத செயல். It is an atrocious act.

**அடாணா** - ஒரு இராகம், a raga.

**அடாப்பழி** - நியாயமில்லாத பழி, unjust blame. ஏன் இந்த அபாண்ட பழி? Why this unjust blame?

**அடாவடி** - பண்பற்ற, unrefined. அடாவடிப் பேச்சு. Unrefined talk.

**அடி** - 1. காலடி, foot. 2. இரைப்பை அடி, fundus. 3. செய்யுளடி, metre. 4. அடிப்பகுதி, bottom. 5. தாவர ஆண் உறுப்பு அடி, venter. 6. தாக்குதல், hit, blow.

**அடிஉலோகம்** - இரும்பு முதலிய மட்ட உலோகம். Base metals like iron.

**அடிக்கட்டை** - வரவுச் சீட்டின் ஒரு பகுதி. Counterfoil of a receipt book.

**அடிக்கடி** - பல தடவைகள், frequently. நகரத்தில் பேருந்துகள் அடிக்கடி ஓடுகின்றன. Buses run frequently in a city.

**அடிக்கல்** - அஸ்திவாரம், foundation stone. நேற்று ஒரு புதிய கல்லூரியின் அடிக்கல் நாட்டப்பட்டது. The foundation stone of a new college was laid yesterday.

**அடிக்குங் கருவி** - முட்டையை உடைக்கும் கருவி, egg beater.

**அடிக்குரல்** - கட்டைக் குரல், base voice. பாடகர் அடிக்குரலில் பாடினார். The musician sung in a base voice.

**அடிக்குறிப்பு** - ஒரு சொல்லைப் பற்றிய அடிப்பக்கக் குறிப்பு, footnote. அடிக்குறிப்பு கூடுதல் செய்தி தருவது. Footnote gives additional information.

**அடிக்கோடு** - 1. எல்லைக்கோடு, boundary. 2. கீழ்க்கோடு, underline. ஒரு சொல் அல்லது வரிக்குக் கீழ் வரையும் கோடு. The line marked beneath a word or line.

**அடிக்கோணம்** - அடிப்பக்கக் கோணம். Base angle.

**அடிக்கோளம்** - கருக்கோள் என்னும் பகுதியின் உள்ளடுக்கு. Hypoblast, the inner layer (endoderm) of an embryo.

**அடிகள்** - வணக்கத்திற்குரிய துறவி குன்றக்குடி அடிகள். His Holiness Kundrakudi Adigal.

**அடிகோலு** - வழிவகு. வெற்றிக்கு அடிகோலு. Pave way for victory.

**அடிக்கால்** - முதல் கால், first furrow. முதல் கால் உழப்பட்டது. First furrow was ploughed.

**அடிச்சுவடு** - 1. மனிதக் காலடிச் சுவடு. impression of a human foot. 2. வகுத்துக் காட்டிய வழி, foot print. சான்றோரின் அடிச்சுவட்டைப் பின்பற்றுவோம். Let us follow the foot prints of great people.

**அடிச்சுமை** - 1. கப்பல் நிலைப்புக்காக வைக்கப்படும் எடை. Heavy material placed in a ship for its stability.

**அடித்தல் திருத்தல்** - பிழை திருத்தங்கள், corrections. அடித்தல் திருத்தல் இல்லாமல் எழுது. Write without corrections.

**அடித்தளம்** - அடிப்பகுதி, bottom. கப்பலின் அடித்தளம். The bottom of a ship.

**அடித்திசைச்சாரி** - திசை இன்றியமை யாததாக உள்ள அளவு. Base vector in which the direction is important.

**அடித்து உருமாற்று** - உலோகத்தை உலையில் பழுக்கக் காய்ச்சி சம்மட்டியால் அடித்து வடிவத்தை மாற்று, forge. Shape metal by heating in an open furnace and then hammering it.

**அடித்துச் சொல்** - வற்புறுத்திச் சொல், emphatically. எனக்கு உதவுவதாக அவன் அடித்துச் சொன்னான். He said emphatically, that he would help me.

**அடிசில்** - சோறு, உணவு, food. அடியார்க்கு அடிசில் படை. Serve food to the devotees.

**அடித்தடி, அடிக்கோல்** - கோடு போடுங் கருவி, footrule. The cylindrical rod used to draw lines.

**அடித்தல் ஆய்வு** - உளவியலில் குறுக்கே கோடு கிழித்து நீக்கும் சோதனை. Crossed out test used in psychology.

**அடித்தோல்** - கீழ்த்தோல். Dermis, inner layer of skin.

**அடித்துக் கொள்** - சண்டையிடு. அவர்கள் இருவரும் அடித்துக் கொண்டனர். Both quarreled with each other.

**அடித்துச்செல்** - நீரில் இழுத்துக் கொண்டு செல்லுதல், carry away. வெள்ளத்தில் அவன் இழுத்துச் செல்லப்பட்டான். He was carried away by the floods.

**அடிதடி** - சண்டை போட்டுக் கொள்ளுதல். அவர்கள் இருவருக்கு மிடையே பலத்த அடிதடி. There was a heavy exchange of blows between them.

**அடித்தறி** - 1. அடிமரம், stump, part of the tree left in the ground after the rest has been cut down. 2. முதன்மைப் பகுதி இழந்த பாகம். Anything similar remaining after the main part has been cut off in stump of a pencil, cigar or tooth.

**அடிநா** - நாவின் அடிப்பகுதி. Posterior part of the tongue.

**அடிநாதம்** - *ஆதாரமாக அமைவது,* undertone. *அவர் கதையின் அடி நாதம் வறுமை.* The undertone of his story is poverty.

**அடிப்படம்** - *அடிநிலைவரைபடம்.* Base map.

**அடிப்படை** - *ஆதாரம்,* fundamental, rudiment. *இயற்பியலின் அடிப் படைகள்.* fundamentals of physics.

**அடிப்படை அலகுகள்** - *நீளம், எடை, காலம் ஆகியவற்றைக் குறிக்கும் அலகுகள். பா. வழியலகுகள். எஸ்.ஐ. அலகுகள்.* Fundamental units denoting length, mass and time.

**அடிப்படைச் சம்பளம்** - *படிகள் சேர்க்கப்படாமல் பெறப்படும் சம்பளம்.* Basic pay received without including allowances.

**அடிப்படைத் திசு** - *நிலைத் திசு,* permanent tissue. *இதில் பஞ்சுத்திசு, உரத்திசு, கடினத்திசு ஆகியவை அடங்கும்.* This tissue contains parenchyma, collenchyma and sclerenchyma.

**அடிப்படைத் துகள்கள்** - *மூலமாக உள்ள துகள்கள்,* fundamental particles. *இவை பிரிக்க இயலாதது. இவற்றிலிருந்து எல்லாப் பருப் பொருளும் தோன்றியது.* Indivisible particles from which all matter is evolved.

**அடிப்படைத் தொழில்** - *இன்றியமை யாத் தொழில்,* key industry.

**அடிபட்டுப் போ** - *தள்ளப்படுதல்,* be rejected. *உன் கோரிக்கை அடி பட்டுப் போய்விட்டது.* Your demand has been rejected.

**அடிப்படை மாறிலிகள்** - *அனைத்து மாறிலிகள்,* Fundamental constants. *அறியப்பட்ட சூழ்நிலைகளில் மாறா அளவுகள். (எ-டு) : வெற்றி டத்தில் ஒளியின் வேகம், மின் னணுவின் மின்னேற்றம்.* Fundamental constants, Universal constants. Qualities that do not change under any known circumstances. Examples are the speed of light in a vacuum and the electric charge on an electron.

**அடிப்புக்கூலி** - *கதிர் அடிக்கும் கூலி.* thrashing wage.

**அடிப்படை வயது** - *தரப்படுத்தப்பட்ட உளவியல் ஆய்வுகளில் தேர்ச்சி பெறும் வயது.* In standardised psychological test, the age level at which all items are passed.

**அடிப்படை வளர்சிதை மாற்றம்** - *ஓய்வின் பொழுது உண்டாகும் தாழ் அளவு வெப்பம். இது தாழ் அளவு ஆற்றலை உடலுக்கு அளிப்பது.* Basal metabolism, the minimum production during rest. This represents minimum energy expenditure necessary for vital functions.

**அடிப்படை விதிகள்** - *ஆதார விதிகள்.* Fundamental rules.

**அடிப்படை வினைகள்** - *புவி ஈர்ப்பு, நலிவினை, மின்காந்தவினை, வலி வினை அகிய நான்கு.* Fundamental reactions like gravitational force, weak interaction, electromagnetic force and strong interaction.

**அடிபடு** - *1. காயம் படுதல்.* Be wounded. *2. பட்டறிவு பெறு.* Be experienced. *3. பேசப்படுதல்.* Be talked of.

**அடிபணி** - *கீழ்ப்படி,* obey. *விதி களுக்கு அடிபணி.* Obey the rules.

**அடிபந்து** - இரு அணியினரால் நான்குதள ஆடுகளத்தில் அடித்து விளையாடும் பந்து. Baseball. A game played with a bat and a ball by two teams each on a field with four bases.

**அடிப்பலகை** - ஊர்தியின் ஏறு பலகை, foot board. அடிப்பலகைப் பயணத்தைத் தவிர்க்க. Avoid foot board travel.

**அடிபோடு** - ஒன்றைச் செய்ய முயற்சி செய், Itch for. எதற்கு அடி போடுகிறாய்? For what do you itch?

**அடிமட்டத் தொண்டர்கள்** - கீழ் நிலையிலுள்ள தொண்டர்கள். ground level workers.

**அடிமட்டம்** - கீழ்நிலை, Grassroot level. அடிமட்டத்திலுள்ளவர் சிக்கல்களை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். We must take into consideration the problems of people at grassroot level or lower stratum.

**அடிமடையன்** - அடி முட்டாள், absolute fool. அவன் ஓர் அடி மடையன். He is an absolute fool.

**அடிமதிப்பு** - அடிநிலைப் பெறு மானம். base value.

**அடிமறி மாற்று** - பொருளுக்கு ஏற்றவாறு செய்யுள் அடிகளை மாற்றுதல். change of construction of verse lines according to meaning.

**அடிமனம்** - நனவிலா உள்ளம், unconscious mind. நம்மை ஆட்டிப் படைப்பது அடி மனம். The unconsicous mind dominates us.

**அடிமாட்டு விலை** - மிகக் குறைந்த விலை. The cheapest price against the bargain.

**அடிமாடு** - இறைச்சிக்காகக் கொல்லப் படும் மாடு. Cattle for slaughter.

**அடிமை** - 1. தன்னுரிமை இழந்த பணியாள், slave. 2. ஒன்றில் அதிக ஈடுபாடுள்ளவர். an ardent slave. அன்புக்கு நான் அடிமை. I am an ardent slave to love.

**அடியவர்** - தொண்டர், volunteer. அடியவர் கூட்டம். a group of volunteers.

**அடியாக** - மூலமாக, through. கவிதையைப் படித்து அதனடியாக நான் பெற்ற பட்டறிவு அதிகம். The experience I get through reading poetry is much.

**அடியாள்** - அடித்து மிரட்டும் ஆள், hatchet man. கூப்பிட்டதும் ஓடி வர அவனுக்குப் பல அடியாட்கள் உண்டு. He has many hatchet men at his beck and call.

**அடியாள் அரசியல்** - அரசியல் வாதிகள் அடியாள் அரசியலைக் கைவிட வேண்டும். Politicians should give up hatchet men politics.

**அடியுரம்** - நிலத்தில் விதைப்பதற்கும் நடுவதற்கும் முன்பு போடப்படும் உரம். Basal dressing. Manure used to improve the growth of crops before sowing and planting.

**அடியெடுத்துவை** - நுழை, ஈடுபடு, step in. நான் அறிவியல் துறையில் இப்பொழுதுதான் அடியெடுத்து வைத்துள்ளேன். I have just stepped into the field of science.

**அடியேன்** - நான் என்பதற்கு பதிலாகப் பயன்படும் சொல். பணிவுச் சொல். I, the most humble.

**அடியொற்றி** - பின்பற்றி, follow சான்றோர்களை அடியொற்றி நட. Follow the footsteps of the great.

**அடியோடு** - *அறவே,* completely. *புகை பிடிப்பதை அடியோடு விடு.* Give up smoking completely.

**அடுக்கு** - *பொருள்களை ஒன்றன் மீது மற்றொன்றாக வை.* Put things in an order, one above the other.

**அடுக்கு** - *புத்தக அடுக்கு,* row of books. *பாறை அடுக்கு,* layer of rocks.

**அடுக்குச் சட்டி** - *செங்குத்தாக ஒன்றன் மீது மற்றொன்று அமைந்துள்ள சட்டி,* vertical set of vessels.

**அடுக்குத் திசு** - *தாவரப்பக்க வளர்ச்சித் திசு.* Cambium. This is a lateral meristem formed in vascular plants responsible for secondary growth.

**அடுக்குத் தொடர்** - *சொல் அடுக்கி வருதல்,* emphatic repetition of words.

**அடுக்குநுரை** - *பொங்கு நுரை,* scam.

**அடுக்குப் பாறை** - *படிவங்களாக அமைந்துள்ள பாறை,* stratified rock.

**அடுக்குப் பானை** - *பானைகள் ஒன்றன் மீது மற்றொன்று செங்குத்தாக அமைந்திருத்தல்,* vertical row of pots.

**அடுக்குமரை** - *அடுத்து அடுத்துள்ள மரை,* multiple thread.

**அடுக்குமாடி** - *பல அடுக்குள்ள மாடி வீடு,* multistoreyed building.

**அடுக்குமொழி** - *எதுகை மோனை நிறைந்த அணித் தொடர். (எ.டு) கோடி கோடி, நாடி நாடி* Speech full of alliteration and rhyme. (e.g) Sing a song for six pence.

**அடுக்குவீடு** - *தொகுப்பு வீடு.* apartment, flat. *பா. குடியிருப்பு.*

**அடுக்குவெளி** - *காற்று வெளி அடுக்குகளில் ஒன்று.* Stratosphere, a layer of the earth's atmosphere. *ஒ. அயனவெளி.*

**அடுத்த** - *அடுத்துள்ள,* next. *அடுத்த பக்கம்,* next page.

**அடுத்த கோணம்** - *அடுத்துள்ள கோணம்,* adjacent angle.

**அடுத்தவன்** - *பக்கத்தில் உள்ளவன்,* neighbour.

**அடுத்தடுத்த** - *தொடர்ந்த,* consecutive.

**அடுத்து** - *அடுத்தது யார்?* Who is next?

**அடுப்பங்கரை** - *சமையல் அறை.* Kitchen.

**அடுப்பு** - *எரிக்கும் கருவியமைப்பு.* hearth, fire place, oven, stove.

**அடுப்புக்கட்டை** - *விறகு தாங்கி.* andiron.

**அடுப்புக்கரி** - *விறகு எரிந்த பின் எஞ்சியுள்ள கரி. எரிபொருள். ஒ. நிலக்கரி.* Charcoal. Black substance used as a fuel got by burning wood slowly in an oven.

**அடுமனை** - *ரொட்டி சுட்டு விற்கும் இடம்.* Bakery, a place where bread is baked for sale.

**அடுமனையர்** - *ரொட்டி சுட்டு விற்பவர்.* Baker, one who makes bread for sale.

**அடை** - *1. பெறு,* get. *நாம் சுதந்திரம் 1947இல் அடைந்தோம்.* We got independence in 1947. *2. சேர்,* reach. *நாளை நாம் சென்னை அடைவோம்.* We shall reach Chennai tomorrow. *3. தீர்,* clear. *கடன் இன்னும் அடையவில்லை.* The debts are not yet cleared.

4. அடைத்து வை, Imprison. போராட்ட வீரர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். The agitators were imprisoned. 5. நிரப்பு, fill up. தொட்டியில் நீர் நிரப்பு. Fill up the tank with water. 6. தடு, block மராமத்துக் காரணமாகச் சாலை அடைக்கப்பட்டுள்ளது. The road is blocked for repair work.

**அடை** - 1. குஞ்சு பொரிப்பதற்குரிய முட்டைத் தொகுதி. Collection of eggs kept for incubation. 2. ஒரு துணை உணவு, crumpet. 3. தழுவும் சொல். (எ-டு) அழகுள்ள பூ. இதில் அழகுள்ள என்பது பெயரடை. adjective or adverb (e.g) Beautiful flower. In this phrase the word 'beautiful' is an adjective.

**அடைகல்** - பட்டடை, anvil. கொல்லர் வேலை செய்யும் இரும்புத் தொகுதி. Iron block on which a smith shapes heated metal.

**அடைகா** - அடைகாத்தல், incubate.

**அடைக்கலக் குருவி** - வீட்டில் காணப்படும் சிட்டு. house sparrow.

**அடைக்கலப் பொருள்** - பாதுகாப்பாக வைத்திட ஒப்புவிக்கப்பட்ட பொருள். Deposit, that which is entrusted for safe keeping.

**அடைக்கலம்** - தஞ்சம், asylum. அடைக்கலம் அளி. Grant asylum.

**அடைகாய்** - பாக்கு, arecanut, betelnut.

**அடைகோட்டை** - முற்றுகையிடப் பட்ட கோட்டை, besieged fort.

**அடைகோழி** - அடைகாக்கும் பெட்டை, brooding hen.

**அடைசல்** - நெரிசல், crowded condition, jam.

**அடைபடு** - தடைப்படு, get blocked.

**அடைப்பம்** - 1. வெற்றிலைப் பாக்குப் பை, betelnet pouch. 2. உறை, பெட்டி, barber's case.

**அடைப்பான்** - தக்கை, stopper.

**அடைப்பு** - 1. தடை, obstruction, obstracle. 2. தடுப்பு, partition.

**அடைப்புக்குறி** - நகவளைவுக்குறி, bracket.

**அடைப்புப்பலகை** - தடுப்புப் பலகை, partition plank.

**அடைப்பைக்காரன்** - வெற்றிலைப் பெட்டி தூக்கி வருபவன், betal pouch carrier.

**அடைப்போட்டம்** - செருகி ஓட்டம், plung flow.

**அடைமழை** - கனத்த மழை, heavy rain.

**அடைமாங்காய்** - மாங்காய் ஊறுகாய், mango pickle.

**அடைமானக் கடிதம்** - அடைமானம் வைப்பதற்குரிய கடிதம், letter of hypothecation.

**அடைமானம்** - பொருளை ஈடு வைத்தல். hypothecation, pledging a property as security for a debt.

**அடைமானர்** - அடைமான சொத்தின் பேரில் கடன் வாங்குபவர். Mortgagor, one who mortgages.

**அடைமானி** - சொத்தின் பேரில் கடன் கொடுப்பவர். Mortgagee, one who has a hold in mortgages.

**அடைவு** - 1. அருஞ்செயல், achieve ment. 2. அட்டவணை, table, index.

**அடைவுத்தேர்வு** - அருஞ்செயல் தேர்வு, achievement test.

**அடைமொழி** - சிறப்புச்சொல், title or epithet. சொல்லின் செல்வர். Orator, the great.

**அடையாள அட்டை** - *பெயர், பணி, முகவரி முதலானவை அச்சடிக்கப் பட்ட அட்டை,* Identity card.

**அடையாள அணிவகுப்பு** - *குற்றவாளி களை அடையாளங் காட்டச் சந்தேகத்துக்கு உரியவர்களை வரிசையாக நிற்க வைத்தல்,* Identification parade, the parade in which the suspected culprits are identified.

**அடையாளக்குறி** - *அடையாளம் அறிய உதவும் சின்னம்,* mark of identification.

**அடையாளம்** - *குறி,* sign, mark, token.

**அடையாளம் காண்** - *இனங்காண்,* identify, find out.

**அடையாளப் பணம்** - *அறிகுறியாகக் கொடுக்கும் பணம்,* token money.

**அடையாள வேலைநிறுத்தம்** - *ஆதர வாகச் செய்யப்படும் வேலை நிறுத்தம்,* token strike.

**அண்ட ஆராய்ச்சி** - *விண்வெளி ஆராய்ச்சி,* cosmic research.

**அண்டங் காக்கை** - *கரிய நிறமுள்ள பெரிய காக்கை. கரகரப்பான குரல் உள்ளது.* Raven, a large bird like crow with glossy black feathers and a hoarse cry.

**அண்ட சராசரம்** - *விண்ணகம்,* cosmos, universe.

**அண்டப்படைப்பு** - *விண்ணகப் படைப்பு,* cosmic creation.

**அண்டப்புளுகன்** - *பெரும்புளுகன்.* utter lier.

**அண்டம்** - *1. முட்டை,* egg. *2. விரை,* testicle.

**அண்டரண்டப்பறவை** - *கடல் பறவை,* albatross.

**அண்டவாதம்** - *விரை வாதம்.* hydrocele, swelling of testis.

**அண்டா** - *பெரிய உலோக பாத்திரம்,* big metal barrel.

**அண்டு** - *அணுகு,* approach. *1. உதவிக்கு அவரை அண்டு.* Please approach him for help. *2. சார்ந்திரு,* depend on. *பெண்கள் ஆண்களை அண்டி வாழ வேண்டியதில்லை.* Women need not depend on men for their living. *3. ஒண்டு,* seek shelter. *மழைக்கு அண்டு.* Seek shelter for rain.

**அண்டை** - *அண்மை,* neighbourhood.

**அண்டை** - *முட்டு,* prop, support.

**அண்டை** - *வரப்பு,* bund.

**அண்டை அயல்** - *அருகில் இருப்பது,* neighbourhood.

**அண்டை அயலார்** - *அருகிலிருப்பவர்,* neighbours.

**அண்டை வெட்டு** - *வரப்பைக் கழி.* Cut the bund. *அண்டை வெட்டல்,* bund-cutting.

**அண்ண அழற்சி** - *அண்ண வீக்கம்,* Palatitis. Swelling of the palate.

**அண்ணம்** - *உள்வாயின் குழிந்த மேற்பகுதி,* palate. Roof of the mouth.

**அண்ணல்** - *1. அண்ணன்,* elder brother. *2. அரசன்,* king. *3. கடவுள்.* God. *4. வணக்கத்திற்குரியவர்.* Venerable gentleman.

**அண்ணன், அண்ணா** - *மூத்த சகோதரன்,* elder brother. *ஒ. தம்பி.*

**அண்ணாந்தாள்** - *ஒரு வகைக் கயிற்றுப் பிணைப்புத் தண்டனை,* a kind of torture by rope-binding.

**அண்ணி** - *1. அண்ணன் மனைவி,* elder brother's wife. *2. தொண்டை மண்டல முதலியார் சமூகத்தில் திருமணமான பெண்களைக் குறிக்கும் மரியாதைச் சொல்,*

(எ.டு) ஜானகி அண்ணி, a respectable term to denote married women in Thondaimandala Mudaliar community, Janaki anni. ஒ. ஆச்சி.

**அண்ணாவி-** ஆசான், teacher, instructor.

**அண்மைக் காலம்-** தற்காலத்துக்கு சற்று முந்தைய காலம், recent times, recent past, recent period.

**அண்மைக்கால வரலாறு -** தற்காலத்துக்குச் சற்று முந்தைய கால வரலாறு. recent history. ஒ. பண்டைய வரலாறு, இடைக் கால வரலாறு, இக்கால வரலாறு.

**அண்மை நிலை-** அருகிலுள்ள நிலை. கோள், வானவெளிக்கலம். ஒ. சேய்மை நிலை. Perigee, the nearest point in the orbit of a planet or a spacecraft.

**அணங்கு-** அழகி. nymph, damsel, beauty.

**அணி-** தரி. ஆடையணி. Wear a garment.

**அணி-** 1. கவிதையைச் சொல்லாலோ, பொருளாலோ அழகு பெறச் செய்யும் உறுப்பு. (எ-டு). உவமையணி. figure of speech. 2. குழு. team, wing. 3. கூட்டம், throng. 4. வரிசை. row, line.

**அணிகல வணிகம்-** நகை வியாபாரம், jewellery.

**அணிவணிகர்-** நகை வியாபாரி, jeweller.

**அணிகலன்-** நகை, jewel, ornament.

**அணிசெய்-** அழகு செய். வீட்டை அணி செய். Decorate the house.

**அணிசெய்பவர்-** அழகு செய்பவர். decorator.

**அணிசேர்-** ஒன்றாகச் சேர், polarize. கட்சிகள் அணி சேர்ந்தன. Parties have polarized.

**அணிசேர்தல்-** கட்சிகள் அணி சேர்தல். Polarization of parties.

**அணிசேராநாடு-** ஓர் அணியில் சேரா நாடு. non-aligned country.

**அணிசேராக் கொள்கை -** ஓரணியில் சேரா நிலை, policy of non-alignment. இந்தியா அணி சேராக் கொள்கை உடையது. India has adopted the policy of non-alignment.

**அணிசேரா நாடு -** non - aligned country, (e.g) India.

**அணிந்துரை-** ஒருவர் எழுதிய நூலுக்கு இன்னொருவர் வழங்கும் பாராட்டு உரை. foreword. Short introduction to a printed book at the beginning given by another person. ஒ. முன்னுரை, முகவுரை.

**அணிமணி-** நகை நட்டு, jewellery.

**அணிமா-** ஒருவர் கண்ணுக்குப் புலப்படாமல் அவர் முன் மாயமாக இருக்கும் வித்தை. A mystic feat in which one stands invisible in front of others.

**அணியம்-** 1. ஆயத்தம். ஆயத்த ஆடை. Ready-made dress. 2. கப்பல் முன்பக்கம், front side of ship. 3. பட்டாளம், batallion.

**அணியரங்கம்-** ஒப்பனையறை. makeup room.

**அணியியல்-** அணிகள் குறித்த ஆய்வு. study of figures of speech.

**அணியொப்பனை செய் -** ஒப்பனை செய்து கொள். Do makeup.

**அணில்-** அணிற்பிள்ளை, மரம் வாழ் விலங்கு. squirrel, living on trees.

**அணிவகு-** அணிவகுத்து நில், parade. படைத் தலைவர் தம் துருப்புகளை

அணி வகுக்கச் செய்தல். The Colonel paraded his troops.

**அணிவகுப்பு-** வரிசையாகச் செல்லும் ஊர்வலம், படை, parade. Republic Day Parade.

**அணிவகுப்புத் திடல்-** parade ground.

**அணிவகுப்பு மரியாதை-** படைப் பிரிவு அளிக்கும் மரியாதை, guard of honour.

**அணிவிரல்-** மோதிரவிரல், ring finger.

**அணு-** துகள், atom, particle, iota.

**அணுஆயுதம்-** அணுப் போர்க் கருவி (அணுக்குண்டு), nuclear weapon (atom bomb).

**அணு ஆரம்-** அணுவின் ஆரம், atomic radius.

**அணு ஆற்றல்-** அணு இணைப்பு அல்லது பிளவினால் பெறும் ஆற்றல். Atomic energy, energy got either by fusion or fission.

**அணு ஆற்றல் நிலையம்-** Atomic Power Station.

**அணு இயற்பியல்-** அணுவின் இயல்புகளை ஆராயும் துறை. atomic physics, the study of physical properties of atom, nuclear physics.

**அணு உலை-** அணு தகர்க்கப்படும் உலை. Atomic reactor in which the atoms are smashed.

**அணு எடை-** அணு நிறை. atomic weight.

**அணு எண்-** அணுவிலுள்ள நேர் மின்னணுக்களின் எண்ணிக்கை. Atomic number, the number of protons in an atom.

**அணு ஊழி-** அணுக்காலம். atomic age.

**அணுக்கடிகாரம்-** அணு ஆற்றலால் இயங்கும் நேரங் காட்டி. Atomic clock, an accurate clock functioning with atomic energy.

**அணுக்கத் தொண்டன்-** அருகிலிருந்து தொண்டு செய்பவன். Close attendant.

**அணுக்க நேரம்-** ஒரு கணிப் பொறியின் நினைவகக் கருவி யமைப்பில் சேமிப்பதற்காகச் செய்தி அனுப்பப்படுவதற்கும் உடன் அது சேமிக்கப்படுவதற்கும் இடையிலுள்ள நேரம். The time interval between presenting information for storage in a computer memory device and the instance this information is stored.

**அணுக்கம்-** 1. நெருக்கம், close association, intimacy. 2. கணிப்பொறியின் தகவல் சேமிப்புத் திறன். The ability either to get data or store it in a computer.

**அணுகுண்டு-** அணுக்களைப் பிளப்பதாலோ சேர்ப்பதாலோ வெடித்து ஆற்றலை வெளிப்படுத்தும் குண்டு. Atom bomb. In this bomb energy is released in explosion either by fission or fusion.

**அணுகு-** அணுக்கங்கொள், approach. உதவிக்கு எங்களை அணுகுக. Approach us for help.

**அணுகொட்டு-** தாவர நெருக் கொட்டு, approach graft in plants.

**அணுகுகோணம்-** நெருக்க கோணம், approach angle.

**அணுகுமுறை-** அணுகும்பாங்கு, method of approach. என் அணுகு முறை வேறுபட்டது. My method of approach is different.

**அணுக் கொள்கை-** அணுக்கள் அமைப்பு பற்றிய கருத்து. Atomic

theory, a set of ideas explaining the structure of atom.

**அணுமின் நிலையம்**- *பா. அணு ஆற்றல் நிலையம்.*

**அணு வெப்பம்**- *ஒரு தனிமத்தின் வெப்ப எண், அணு எடை ஆகிய இரண்டின் பெருக்குத் தொகை.* Atomic heat. It is the product of atomic weight and specific heat of an element.

**அணை**- *1. எரிவதை நிறுத்து,* put out the light. *2. தழுவு,* embrace. I embraced the child. *3. வலுப்படுத்து.* Strengthen the bond.

**அணைக்கட்டு**- *நீர்த்தேக்கம்.* Water reservoir made by a barrier.

**அணைப்பு**- *1. தழுவல்,* embrace. *2. தாங்குதல்,* support.

**அணைப்புக் கட்டை**- *தாங்கும் கட்டை* block of wood for support.

**அணைப்புச் சட்டம்**- *தாங்கும் சட்டம்,* brace.

**அணைப்புத் தகடு**- *தாங்குந்தகடு.* backplate.

**அணைப்பு மணல்**- *தாங்கும் மணல்,* backing sand.

**அத்தர்**- *நறுமணநீர்,* rose essence.

**அத்தன்**- *1. கடவுள்,* god. *2. தந்தை,* father. *3. மூத்தோர்,* elder.

**அத்தனை**- *அந்த அளவு,* all that, that much. *அத்தனையும் உனக்கு வேண்டுமா?* Do you need all that? *ஒ. எத்தனை.*

**அத்தாட்சி**- *சான்று,* evidence, Proof. *அத்தாட்சி எங்கே?* Where is the evidence?

**அத்தாணி மண்டபம்**- *அரசவை,* royal court-hall.

**அத்தான்**- *அக்காள் அல்லது தங்கை கணவன்.* Sister's husband, aunt or uncle's son.

**அத்தி**- *அத்திமரம்,* fig tree.

**அத்தியாயம்**- *இயல்,* chapter. *இந்நூல் பத்து அத்தியாயங்களைக் கொண்டது.* This book contains ten chapters.

**அத்தியாவசியம்**- *தேவையானது,* essential. *அரிசி ஓர் அத்தியாவசியப் பொருள்.* Rice is an essential commodity.

**அத்திரம்**- *1. கணை,* missile, dart. *உன் அத்திரத்தை ஏவு,* Launch your missile. *2. குதிரை,* horse.

**அத்துப்படி**- *முழுதும் அறிந்த நிலை,* Be thorough with. *கணக்கு அவனுக்கு அத்துப்படி.* He is thorough with mathematics.

**அத்துமீறு**- *எல்லை மீறு,* tresspass.

**அத்துமீறுபவர்**- *எல்லையை மீறுபவர். அத்துமீறுபவர் தண்டிக்கப் படுவர்.* Tresspassers will be prosecuted.

**அத்துவைதம்**- *இருமையில் ஒருமை.* Monism, the doctrine stressing that mind and matter are not separate entities.

**அத்துவைதி**- *இருமையில் ஒருமைக் கொள்கை உடையவர்.* Monist.

**அத்தை**- *தந்தையின் உடன் பிறந்தாள்,* aunt.

**அத்தை மகன், மகள்** - cousin.

**அதக்கு**- *குதப்பு,* chew. Chew your food well.

**அதட்டல்**- *மிரட்டல்,* rebuking.

**அத்தைப் பாட்டி**- *தாத்தாவின் சகோதரி,* grandfather's sister.

**அதம்**- *அழிவு,* ruin.

**அதர்**- *காட்டுவழி,* forest path.

**அதர்மம்-** *தர்மம் அல்லாதது,* unrighteousness. *அதர்மம் என்றும் தோற்கும்.* Unrighteousness will always fail. *ஒ. தர்மம்.*

**அதரம்-** *உதடு,* lip.

**அதலகுதலம்-** *குழப்பம்,* confusion and chaos.

**அதலபாதாளம்-** *படுபாதாளம்,* abyss, chasm.

**அதாவது-** *சொல்லப்போனால் ஒரு மாணவன் மட்டும் பள்ளிக்கு வரவில்லை; அதாவது மணிவண்ணன் மட்டுமே.* Only one boy was absent, namely, Manivannan.

**அதன் பயனாய்-** *அதன் விளைவாய்,* as a result. *போராட்டம் நடந்தது. அதன் பயனாய் இரண்டு நாள் சம்பளம் பிடிக்கப்பட்டது.* There was strike for two days. As a result two days wages were deducted.

**அதன் பிறகு-** *பின்னால்,* afterwards. *அதன் பிறகு நடந்தது என்ன?* What happened afterwards?

**அதிகபட்சம்-** *உயர்ந்த அளவு,* maximum. *அதிகபட்ச வெப்பநிலை.* Maximum temperature.

**அதிகப்படி-** *மிகுதி,* surplus. *அதிகப்படி நெல்.* surplus paddy.

**அதிகப்படுத்து -** *மிகுதியாக்கு,* Increase. *வண்டியின் விரைவை அதிகப்படுத்து.* Increase the speed of the car.

**அதிகப்பிரசங்கி-** *உளறுபவன். அவன் ஓர் அதிகப் பிரசங்கி.* He is an impertinent fellow.

**அதிகம்-** *மிகுதி,* plenty. *இவ்வாண்டு விளைவு அதிகம்.* This year the yield is plenty.

**அதிகாரபூர்வமான-** *அதிகாரமுள்ள,* official, authoritative.

**அதிகாரபூர்வமான வேட்பாளர்-** He is the official candidate of the party.

**அதிகாரம்-** *1. உரிமை,* power. *அதிகாரத்தால் சிலவற்றை மட்டுமே சாதிக்கலாம்.* A few things only can be achieved by power. *2. இயல்,* chapter. *திருக்குறள் 133 அதிகாரங்களைக் கொண்டது.* Thirukkural consists of 133 chapters.

**அதிகாரி-** *அலுவலக நடைமுறைகளைச் செயற்படுத்துபவர்.* Officer, Official - one who carries out legitimate duties. *மாவட்டக் கல்வி அதிகாரி.* District Educational Officer.

**அதிகாலை-** *விடிவதற்கு முன்னுள்ள நேரம்,* early morning. *நாங்கள் அதிகாலையில் எழுந்தோம்.* We got up early in the morning.

**அதிசயம் -** *1. வியப்பு,* Wonder. *பைசா நகரச் சாய்ந்த கோபுரம் உலக அதிசயங்களில் ஒன்று.* The leaning tower of Pisa is one of the wonders of the World. *2. திருவிளையாடல்,* miracle. *இறைவனின் அதிசயங்கள் பல.* The miracles of God are many.

**அதிசயி-** *வியப்படை,* wonder. *அவன் கழைக்கூத்தைக் கண்டு அதிசயித்தோம்.* We wondered at his acrobatics.

**அதிபதி-** *ஆட்சியாளர்,* ruler. *ஒரு நாட்டுக்கு அரசன் அதிபதி.* The king is the ruler of his country.

**அதிபர்-** *1. உரிமையாளர், தொழில் அதிபர்.* Industrial magnate. *2. குடியரசுத் தலைவர் - இந்திய அதிபர்.* President of the Indian Republic. *3. தலைமை ஆசிரியர், பாடசாலை அதிபர்.* Headmaster, head of an educational institution.

**அதிபரவளைவு-** *ஒரு தளத்தைக் கூம்பு வெட்டும்பொழுது உண்டாகும் வளைவு.* Hyberbola. Curve produced when a curve is cut by a plane that makes a larger angle with the base than the side of the cone makes.

**அதிபர வளைவுக் கோணம்-** hyperbola.

**அதிமதுரப் பட்டை-** bark of liquorice.

**அதிமதுரம்-** liquorice.

**அதிர்-** *1. அதிர்வு உண்டாதல்,* vibrate. *விரைவாகச் சென்ற புகை வண்டியால் பாலம் அதிர்ந்தது.* The bridge vibrated when the express train passed through it. *2. அதிர்ச்சியடை,* shocked. *என் நண்பன் இறப்புச் செய்தி கேட்டு அதிர்ந்து போனேன்.* I was shocked to hear the news of my friend's demise. *3. முரசு அதிர்தல்.* When you strike a drum, it will vibrate.

**அதிர்ச்சி-** *கலக்கம்,* shock. *மனஅதிர்ச்சி.* Mental shock.

**அதிர்ச்சி உட்கவர்கருவி-** Shock absorber.

**அதிர்ச்சித்தாங்கி-** *அதிர்ச்சியைத் தாங்கும் கருவி.* bumper. A bar fixed to the front and back of a motor vehicle to lessen the effect of a collision.

**அதிர்ச்சி வைத்தியம்-** *அதிர்ச்சி மூலம் மருத்துவம்.* Shocktreatment.

**அதிர்வு-** *அதிர்தல்,* Vibration, tremor.

**அதிர்வெண்-** *குறிப்பிட்ட நேரத்தில் ஓரலைவு உண்டாக்கும் சுற்றுகளின் எண்ணிக்கை.* Frequency, the rate at which a sound wave or radio wave vibrates.

**அதிர்வேட்டு-** *ஒருவகை உரத்த வெடி.* Explosive firework.

**அதிர்ஷ்டக் கட்டை-** *அதிர்ஷ்டமில்லாதவர்.* an unlucky person.

**அதிர்ஷ்டம்-** *நற்பேறு,* luck, fortune.

**அதிரசம்-** *அரிசிமாவிலிருந்து செய்யப்படும் இனிப்பு.* Sweet-rice cake.

**அதிரடி நடவடிக்கை-** *திடீர் எனச் செய்யப்படும் கடும் நடவடிக்கை.* Severe measure, Quick action. *அதிரடி நடவடிக்கை எடுக்கப்படும்.* Severe measure will be taken.

**அதிரடிப்படை-** *அதிரடித்தாக்குதல் நடத்தும் படை.* Commando force, the force trained to carry out surprise raids.

**அதிருப்தி-** *மனநிறைவின்மை,* dissatisfaction.

**அதிருப்தியாளர்-** *உட்பூசல் குழுவைச் சார்ந்தவர்,* Dissident. *இன்று அரசியலில் அதிருப்தியாளர்களே அதிகம்.* In today's politics, the dissidents are more in number.

**அதிவேகம்-** *மிகவிரைவு,* Great speed.

**அதீதக் கற்பனை-** *அளவுக்கு மீறிய கற்பனை.* Excessive imagination.

**அதீதம்-** *அதிக அளவு,* Excessive.

**அது-** It, that. *அது ஒரு மரம்.* It is a tree.

**அதுகாறும்-** *அதுவரை,* until then. *அது காறும் நீ என்ன செய்து கொண்டிருந் தாய்?* What were you doing until then?

**அதைப்பு-** *1. உப்பல்* - swelling. *2. உப்பியுள்ள பகுதி. இலைக்காம்பிற்குக் கீழான மெத்தை போன்ற பருத்த பகுதி.* pulvinus, a cushion-like swelling at the base of a leaf.

**அதைரியம்-** *தைரியமின்மை.* cowardrice, lack of courge. ஒ. *தைரியம்.*

**அதோகதி-** *உதவியற்ற நிலை,* utter helplessness. *என் கதி அதோகதி!* I am ulterly helpless!

**அதேபோல்-** *அதேபோன்று,* likewise. *அதேபோல் செய்.* Do it likewise.

**அந்த-** that, those. that man, that box; those men, those boxes.

**அந்தகன்-** *குருடன்,* blind man.

**அந்தகாரம்-** *காரிருள்,* utter darkness

**அந்தணர்-** *அந்தணர்.* The gracious. *அந்தணர் என்பர் அறவோர்.* The gracious are called the virtuous. (T. 30)

**அந்தந்த-** *ஒவ்வொரு,* Each and every. *இந்த இனிப்புகளை அந்தந்த மாணவருக்குக் கொடுக்கவும்.* Distribute these sweets to each and every student.

**அந்தப்புரம்-** *அரசி வாழுமிடம்.* harem.

**அந்தம்-** *முடிவு,* end, omega. *ஒ. ஆதி. அந்தமும் ஆதியும் இல்லாதவர் கடவுள்.* God, the Almighty, is without beginning or end.

**அந்தரங்கச் செயலாளர்-** *தனிச்செயலாளர்.* Private secretary.

**அந்தரங்கம்-** *1. தனிப்பட்ட விஷயம்.* Personal matter. *2. மறைவு,* Privacy.

**அந்தரங்க வாழ்க்கை-** private life.

**அந்தரம்-** *1. நடு,* midair. *2. தொங்கு நிலை,* Hanging state. *3. தடை,* Hindrance.

**அந்தராத்துமா-** *மனசசான்று,* Conscience. *உன் அந்தராத்துமா என்ன சொல்கிறது?* What does your conscience say?

**அந்தஸ்து-** *நிலை. சமூக அந்தஸ்து.* status, position. Social status.

**அந்தாதி-** *ஒரு செய்யுளின் இறுதியும் அடுத்த செய்யுளின் முதலும் ஒன்றாக அமையுமாறு எழுதப் படும் பாடல் தொகுதி. (எ-டு) அபிராமி அந்தாதி.* A sequence of verses in which one stanza begins with the last line, word or letter of the previous verse.

**அந்தி-** *பகலும் இரவும் கூடும் நேரம்,* dusk.

**அந்திமக் கிரியை-** *இறுதிச் சடங்கு.* Funeral ceremony or rites.

**அந்திமந்தாரை-** *மாலையில் பூக்கும் செடி.* Four O' clock plant.

**அந்திமம்-** *இறுதி,* last. *அந்திம வாழ்வு.* One's last day?

**அந்திமல்லி-** *இரவில் பூக்கும் செடி.* Night Jasmine.

**அந்து-** *அந்துப்பூச்சி,* moth, weevil.

**அந்துருண்டை-** *அந்துப்பூச்சியைக் கொல்லும் வேதிப்பொருள்.* moth ball, napthalene ball.

**அந்தோ-** *துயர விளிப்புச் சொல்,* Alas!

**அந்நியச் செலாவணி-** *அயல்நாட்டு வியாபாரத்தின் மூலம் ஒரு நாட்டிற்குக் கிடைக்கும் பணம்.* Foreign money got by foreign trade.

**அந்நியம்-** *அயல்,* Foreign, alien.

**அந்நியன்-** *அயலான்,* Foreigner.

**அநந்தம்-** *முடிவற்றது,* infinity.

**அநாகரிகம்-** *நாகரிகமின்மை,* uncivilised. *அநாகரிகச் செயல்.* uncivilised act.

**அநாதை-** *தாய் தந்தை இழந்தவர்,* orphan.

**அநாதை இல்லம்-** *அநாதைகள் காப்பிடம்,* orphanage.

**அநாமேதயம்-** *1. இனங்கண்டறிய முடியாத நிலை,* anonimity. *2. பெரும்*

புகழும் இல்லாதவர், Non-entity. நான் ஓர் அநாமதேயம். I am a non-entity.

**அநாவசியம்-** தேவையற்றது, not necessary.

**அநித்தியம்-** நிலையற்றது, ephemeral. மனித வாழ்வு அநித்தியம். Human life is ephemeral.

**அநியாயம்-** *1.* நியாயமற்றது, unjust. என்ன அநியாயம்! What an injustice! *2.* அட்டூழியம், atrocity.

**அநீதி-** நீதியற்றது, injustice. நீ அநீதி இழைத்துள்ளாய். You have done an injustice.

**அநேகம்-** பல. அநேகர் கூட்டத்திற்கு வந்திருந்தனர். Many people came to the meeting.

**அநேகமாக-** பெரும்பாலும், pro bably. அநேகமாக அவர் வரலாம். Most probably he may come.

**அப்சரஸ்-** வானுலக அழகி. அவள் ஓர் அப்சரஸ். She is a celestial beauty.

**அப்பட்டமான-** வெளிப்படையான, open. அப்பட்டமான பொய். A blatant lie.

**அப்படி-** அவ்வாறு, like that. கணக்கை அப்படிப் போட்டால் தான் விடை வரும். Do the sum like that to get the answer.

**அப்படியானால்-** அப்படி என்றால். அப்படியானால் நானும் வருகிறேன். If it be so, I shall accompany you.

**அப்படியே-** *1.* அவ்வாறே, As it is. அதை அப்படியே விடு. Let it be as it is. *2.* மேலும், besides. நீ வேண்டியதை வாங்கிக்கொண்டு அப்படியே எனக்கு ஒரு குயர் கோடுபோட்ட தாள் வாங்கி வா. Buy your requirements. Besides buy one quire of ruled paper for me.

**அப்பப்பா-** அப்பாவுக்கு அப்பா. grandfather. ஒ. அம்மம்மா.

**அப்பம்-** ரொட்டி, bread.

**அப்பழுக்கற்ற-** குற்றமற்ற, without blemish. அப்பழுக்கற்ற ஆட்சி. Rule without blemish.

**அப்பழுக்கு-** குற்றம், blemish.

**அப்பளம்-** பப்படம், blackgram wafer round in shape.

**அப்பன்-** *1.* தந்தை, father. *2.* கடவுள், God.

**அப்பா-** தந்தை, father.

**அப்பால்-** தொலைவில். அப்பால் செல், Go away. *2.* அதன்பின். அப்பால் என்ன நடந்தது. What happened afterwards? *3.* தள்ளி. அப்பால் தெரிவது என்ன? What do you see beyond?

**அப்பாவி-** ஏதுமறியாதவன், Inno cent. அவன் ஓர் அப்பாவி. He is an innocent fellow.

**அப்பாற்படு-** எல்லை கடந்து செல், transcend. ஆன்மிக அறிவு மனித அறிவுக்கு அப்பாற்படுவது. Spiritual knowledge transcends human knowledge.

**அப்பியாசப் புத்தகம்-** பயிற்சி ஏடு, exercise book.

**அப்பியாசம்-** பயிற்சி, exercise. தேக அப்பியாசம். Physical exercise.

**அப்பிரகம்-** காக்கைப்பொன், mica. ஒளி புகக்கூடிய கனிமம். மின் காப்புப் பொருள். a transparent mineral used as an electrical insulator.

**அப்பிராணி-** *பா. அப்பாவி.*

**அப்பு-** *1. தடவு,* apply. *சந்தனத்தை அப்பு.* Apply the sandal paste. *2. நீர்,* water. *ஐம்பூதங்களில் ஒன்று.* One of the five elements. *அப்பு லிங்கம்.* God in water form at Thiruvanaika.

**அப்புறப்படுத்து-** *1. நீக்கு,* remove. *குப்பையை நீக்கு,* Remove the rubbish. *2. அகற்று, அத்துமீறி வைக்கப்பட்ட கடைகள் அகற்றப் பட்டன.* Unauthorized shops were removed.

**அப்புறம்-** *அதன்பின்,* afterwards. *அப்புறம் என்ன நடந்தது?* What happened afterwards?

**அப்பேர்ப்பட்ட-** *அப்படிப்பட்ட,* such. *அப்பேர்ப்பட்ட அயோக் கியன் அவன்!* Such a kind of scoundral he is!

**அப்போதைக்கு அப்போது-** *உடனுக் குடன்,* then and there. *கல்வி யமைச்சர் அப்போதைக்கு அப் போது கோப்புகளில் கையெழுத் திட்டு விடுவார்.* The Education Minister will sign the files then and there.

**அபகரி-** *ஒரு பொருளை நேர்மை யற்ற முறையில் பறி,* covet. *பிறர் பொருள்களை அபகரிக்காதே.* Don't covet other's possessions.

**அபகாரம்-** *தீங்கு,* harm. *ஒருவருக்கும் அபகாரம் செய்யாதே.* Don't do any harm to others.

**அபகீர்த்தி-** *புகழின்மை,* discredit. *தீய செயல்கள் அபகீர்த்தி தரும்.* Bad deeds will bring you discredit.

**அபசகுனம்-** *தீச்சகுனம்,* ill-omen. *பூனை குறுக்கே போவது ஓர் அபசகுனமாகக் கருதப்படுவது,* The crossing of a cat on our way is considered an ill-omen.

**அபசாரம்-** *தெய்வத்திற்குச் செய்யும் இழுக்கு,* sacrilege. *கோயிலில் சிலையைத் திருடுவது ஓர் அபசார மாகும்.* It is a sacrilege to steal an idol from a temple.

**அபத்தம்-** *மடமை,* absurdity. *அபத்தமான கேள்வி.* It is an absurd question.

**அபயம்-** *அடைக்கலம்,* refuge. *அபயம் அளி.* Grant refuge.

**அபரஞானம்-** *உலகியலறிவு,* worldly knowledge. *அபரஞானம் பரஞானத் திற்குக் கீழானது.* Worldly know ledge is inferior to spiritual knowledge.

**அபராதம்-** *தண்டம்,* penalty. *அபாயச் சங்கிலியைக் காரண மில்லாமல் இழுத்தால், அபராதம் ரூ. 500.* If you pull the alarm chain without proper reason, the penalty is Rs. 500.

**அபரிமிதம்-** *மிக அதிகம்.* excess. *அபரிமிதப் புகழ்.* excess fame.

**அபலை-** *கைவிடப்பட்ட பெண்,* deserted girl. *பெரும்பாலான ஏழைப் பெண்கள் அபலைகள்.* Most poor women are deserted girls.

**அபஸ்வரம்-** *குரல் பிசிர் அடிப்ப தால் இசை இனிமை கெடல்.* Discordant note in music.

**அபாக்கியம்-** *நல்வாய்ப்பு இன்மை,* misfortune. *அவள் அபாக்கியத்தை நெஞ்சுரத்துடன் தாங்கிக் கொண் டாள்.* She bore her mis fortunes bravely. *ஒ. பாக்கியம்.*

**அபாண்டம்-** *அவதூறு,* slander. *அது ஓர் அபாண்டமான பழி.* It is slanderous blame.

**அபாயச் சங்கிலி-** *புகைவண்டியிலுள்ள எச்சரிக்கைச் சங்கிலி.* alarm chain.

**அபாயச் சங்கு-** *எச்சரிக்கைச் சங்கு.* alarm siren.

**அபாயம்-** *ஆபத்து,* Danger.

**அபாரம்-** *நேர்த்தி. கச்சேரி அபாரம்.* The music concert is fine.

**அபான வாயு-** *ஆசன வாயின் வழியாக வெளியேறும் வாயு.* flatus.

**அபிநயம்-** *நாட்டியத்தில் கைகால் அசைவுகளாலும் முக உணர்ச்சிகளாலும் கருத்தை வெளிப்படுத்தல்.* Expression of a concept through bodily gestures and facial feelings in dance.

**அபிநயி-** *அபிநயம் செய்,* Express a concept through bodily gestures and facial movements.

**அபிப்பிராய பேதம்-** *கருத்துவேறுபாடு. அபிப்பிராய பேதம் மக்களாட்சியின் ஓர் இயல்பு.* Difference of opinion is a feature of democracy.

**அபிப்பிராயம்-** *கருத்து,* opinion. *உங்கள் அபிப்பிராயம் என்ன?* What is your opinion?

**அபிமானம்-** *1. உயர்வான கருத்து,* idea. *2. ஆர்வம்,* Enthusiasm.

**அபிமானி-** *ஆர்வமுள்ளவர்,* Enthusiast, zealot.

**அபிலாஷை-** *விருப்பம்,* desire. *என் அபிலாஷை இதுவே,* This is my desire.

**அபிவிருத்தி-** *1. வளர்ச்சி,* development. *அபிவிருத்திப் பணி.* Development work. *2. மேம்பாடு.* Improvement.

**அபின்-** *போதைப்பொருள்,* opium.

**அபிஷேகம்-** *திருமுழுக்கு,* holy bathing. *ஒ. கும்பாபிஷேகம்.*

**அபூர்வம்-** *அருமை,* being rare. *அபூர்வ வாய்ப்பு.* A rare chance.

**அபூரிதக் கரைசல்-** *ஒரு கரைப்பானில் கரைபொருள் மேலும் கரையக்கூடிய கரைசல்.* Unsaturated solution. *ஒ. பூரிதக் கரைசல்.*

**அபேட்சகர்-** *வேட்பாளர்,* Candidate.

**அபேட்சை மனு-** *வேட்புமனு* Nomination paper.

**அம்சம்-** *1. ஒரு பகுதி,* aspect. *இந்தச் சிக்கல் பல அம்சங்களைக் கொண்டது.* This question has several aspects. *2. இயல்பு,* feature.

**அம்பர் சர்க்கா-** *கை இராட்டை* Hand-spinning wheel.

**அம்பலக்காரன்-** *ஊர்த்தலைவன்,* village headman.

**அம்பலம்-** *1. ஊரம்பலம்,* common meeting place. *ஒ. பொன்னம்பலம். 2. ஊர் அறிந்தது,* Known publicly.

**அம்பலவாணன்-** *கூத்தன்.* Lord Nataraja of Chidambaram.

**அம்பறாத்தூணி-** *அம்புக்கூடு,* quiver.

**அம்பாரம்-** *குவியல்,* heap. *நெல் குவியல்,* Paddy heap.

**அம்பாரி-** *யானை மேலுள்ள இருக்கை.* Howdah, a box like seat for riders on the back of an elephant.

**அம்பாள்-** *அம்பிகை. பார்வதி.* Goddess Parvathi.

**அம்பி-** *படகு,* boat.

**அம்பு-** *முனை கூர்மையாகவும் அடிநீண்டுமுள்ள ஒரு போர்க் கருவி,* arrow.

**அம்புக்குறி-** arrow mark.

**அம்புமுனை-** arrow head.

**அம்பு எறி-** அம்புவிடு. Throw an arrow.

**அம்புலி-** திங்கள், சந்திரன். Moon.

**அம்மட்டில்-** அந்த அளவில், to that extent. நீ செய்தது அம்மட்டில் சரியே. What you did is right to that extent.

**அம்மணம்-** ஆடையில்லாதநிலை, naked. ஒ. நிர்வாணம்.

**அம்மணச் சாமியார்-** ஆடையில்லாத துறவி. Naked mendicant.

**அம்மம்மா-** அம்மாவுக்கு அமமா, maternal grandmother. ஒ. அப்பப்பா.

**அம்மன்-** பார்வதி. Goddess Parvathi.

**அம்மா-** 1. தாய், mother. 2. மரியாதைச் சொல். a respectable term referring to a married woman. 3. துயர் விளிப்புச் சொல். ஐயோ, அம்மா வலிக்குதே! An expression of pain.

**அம்மாஞ்சி-** 1. தாய்மாமன். maternal uncle. 2. அம்மான் சேய். தாய் மாமனின் மகன். Son of one's maternal uncle.

**அம்மாமி-** தாய்மாமன் மனைவி, maternal uncle's wife.

**அம்மாள்;-** ஒரு மூத்த பெண்மணியை மரியாதையுடன் கூப்பிடும் சொல். Respectable term referring to an elderly woman.

**அம்மான்-** தாய்மாமன், maternal uncle.

**அம்மான் பச்சரிசி-** ஒரு செடி, Australian asthma weed.

**அம்மி-** சமையல் பொருள்களை அரைக்கப் பயன்படும் நீள்சதுரக் கல். Rectangular flat grinding stone.

**அம்மை-** 1. அம்மையீர், Madam. 2. தாய், mother. 3. பெரியம்மை, pox.

**அம்மைக்குத்து-** நோயைத்தடுக்க அம்மைப்பாலைத் தோலில் ஊசி மூலம் செலுத்து. vaccinate. Protect one against a disease by injecting a vaccine.

**அம்மைத்தழும்பு-** அம்மை நோயினால் ஏற்படும் வடு, pox-mark.

**அம்மையார்-** வணக்கத்திற்குரிய மூதாட்டியார். Venerable grand old lady.

**அம்மை வார்-** அம்மைபோடு, contract smallpox.

**அமங்கலம்-** புனிதம் இல்லாதது, Inauspicious.

**அமங்கலி-** விதவை, Widow. *

**அமஞ்சிவேலை-** பேருக்குச் செய்யும் வேலை. Work for namesake.

**அமர்-** 1. உட்கார், sit. நாற்காலியில் அமர். Sit on a chair. 2. வேலையில் சேர். Assume office. 3. ஆட்சியைப் பிடி. Assume power.

**அமர்க்களம்-** 1. பகட்டு, Pomp and show. 2. வாய்ச்சண்டை, Noisy quarrel. 3. கைகொட்டி ஆரவாரித்தல். Cheer and applause. 4. போர்க்களம், battle-field.

**அமர்த்து-** 1. வாடகைக்குப் பெறு. வண்டியை அமர்த்து. Hire a vehicle. 2. வேலைகொடு. Post a person. 3. பெயரிடு, Nominate.

**அமர்வாணை-** வேலையில் சேர்வதற்குரிய ஆணை. Posting order, appointment order.

**அமர்வு-** 1. கூடுகை, Session. 2. முயற்சி. attempt, sitting. காலை அமர்வு - ஒரு கருத்தரங்கில் காலையில் நடக்கும் கூட்டம், Morning session. மாலை அமர்வு-ஒரு கருத்தரங்கில் மாலை யில் நடக்கும் கூட்டம், Evening session.

**அமர்வு செய்பவர்-** நியமனம் செய்பவர். Nominator, one who nominates.

**அமர்வுத்தாள்-** *நியமனத்தாள்.* Nomination paper.

**அமர்வு பெறுபவர்-** ஒரு பதவிக்குப் *பெயரிடப்படுபவர்.* Nominee, one who is nominated for an office.

**அமர்வுமட்டம்-** *அமர்வுநிலை.* Session level.

**அமரகம்-** போர்க்களம், Battle-field.

**அமரத்துவம்-** இறவாமை, Immortality. இறைவனுக்கு அமரத்துவம் உண்டு. God possesses immortality.

**அமரர்-** *1.* தேவர், celestial. *2.* நினைவில் நிற்கும், late. *3.* இறந்தவர், late Ponnusamy.

**அமரர் ஊர்தி-** பிணவண்டி, corpse vehicle.

**அமல்-** நடைமுறைக்கு வருதல். come into force, இச்சட்டம் நாளை முதல் அமலுக்கு வரும். The law will be in force from tomorrow.

**அமளி-** கூச்சலும் குழப்பமும், uproar. இந்நாளில் பல கூட்டங் களில் அமளி ஏற்படுகிறது. Nowadays not a day passes without uproar in several meetings.

**அமாவாசை-** இருள்நிலா, New Moon. இன்று அமாவாசை. Today is newmoon. ஒ. பௌர்ணமி.

**அமானுஷ்யம்-** மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டது, superhuman. அவள் நுண்ணறிவு அமானுஷ்ய மானது. Her intelligence is superhuman.

**அமிர்தம்-** *அமிழ்தம், அமுதம்.* ambrosia.

**அமிலம்-** புளிப்புத்தன்மையும் அரிப் பும் கொண்ட காடி. Acid. It is sour in taste and corrodes metals. *(எடு)* கந்தக அமிலம், Sulphuric Acid.

**அமிழ்தம்-** பா. அமிர்தம்.

**அமீனா-**வழக்குமன்ற நடவடிக்கை களை நிறைவேற்ற உதவுபவர். A civil court subordinate who serves legal notices.

**அமுக்கு-** *அழுத்து.* Press.

**அமுக்கரா கிழங்கு-** ஒருவகைச் செடி. Winter cherry.

**அமுதசுரபி-** வற்றாது உணவு வழங்கும் கலம். A perenniel food-giving bowl. ஒ. அட்சயப் பாத்திரம்.

**அமுது-** *1.* அமிழ்தம், ambrosia. *2.* அரிசி, rice.

**அமுதுபடி-** அரிசி, rice.

**அமுதுபடையல்-** உணவு பரிமாறு தல். Serving food.

**அமை-** *1.* உருவாக்கு. குழு அமை. Form a committee. *2.* ஏற்பாடு செய். கூட்டம் அமை. Arrange a meeting. *3.* நிறுவு. கழகத்தை அமை. Establish an academy.

**அமைச்சகம்-** அமைச்சர் பொறுப்பு வகிக்கும் அரசுத்துறை. பாதுகாப்பு அமைச்சகம். Ministry, the Govern ment department under the control of a minister; the Ministry of Defence.

**அமைச்சர்-** ஓர் அரசுத்துறையைத் தலைமைப் பொறுப்பேற்று நடத்துபவர், Minister. முதலமைச்ச ராலோ தலைமை யமைச்சராலோ அமர்த்தப்படுபவர். (எ.டு) கல்வி யமைச்சர். அமெரிக்காவில் செயலர் என அழைக்கப்படுபவர். One who heads a Goverment department. He is appointed either by the Chief Minister or by the Prime Minister. (e.g) Minister for Education. He is called Secretary in America.

**அமைச்சர் அமர்வு-** *அமைச்சர் அமர்த்தப்படுதல்.* Appointment of Minister.

**அமைச்சரவை-** *அரசுத் துறையை ஆளும் அமைச்சர் குழு.* Cabinet, the group of Ministers responsible for Government administration.

**அமைச்சரவைக் கலைப்பு-** *அமைச்சரவை நீக்கப்படுதல்.* Dissolution of Ministry.

**அமைச்சரவை முடிவு-** *அமைச்சரவை கலந்துரையாடி ஒரு பொருள் பற்றி எடுக்கும் முடிவு.* Cabinet decision on a subject after discussion.

**அமைதி-** *1. நிசப்தம்,* Silence. *2. அமைதி நிலை,* peace. *போரும் அமைதியும்,* war and Peace. *3. சாந்தம்,* tranquility. *4. இசைவு,* harmony.

**அமைதி ஊர்வலம்-** *முழக்கமில்லாமல் நடைபெறும் அணி வகுப்பு.* Peace procession.

**அமைதி ஒப்பந்தம்-** *அமைதி ஏற்பட இரு நாடுகளுக்கிடையே ஏற்படும் உடன்பாடு.* Peace pact.

**அமைதிச் செயல்முறை-** *அமைதியை நிலைநாட்டுவதற்குரிய முறை.* Peace process.

**அமைதிப்படுத்து-** *அமைதி உண்டாக்கு.* Pacify.

**அமைதிப் படை-** *அமைதியை நிலை நாட்டும் படை.* Peace-keeping force.

**அமைதியற்ற-** *அமைதி நீங்கிய.* restless.

**அமைப்பாக்கம்-** *ஒரு மூலக்கூறின் குறிப்பிட்ட வடிவம்.* conformation. particular shape of a molecule.

**அமைப்பாக்கி-** *இவ்வடிவத்தை உண்டாக்குவது.* Conformer.

**அமைப்பாளர்-** *ஓர் அமைப்பின் பொறுப்பாளர்.* Convener, organiser.

**அமைப்பியல்-** *அமைப்பு அணுகு முறை.* Structuralism.

**அமைப்பு-** *1. கட்டமைப்பு.* structure. *2. தொகுதி,* system. *வேர்த் தொகுதி,* root system. *3. நிறுவனம்,* body or organization. *4. உருவாக்கல்,* creation.

**அமைப்பு உளவியல்-** *அமைப்பு நிலையினைக் கூறும் உளவியல்.* Structural Psychology.

**அமைப்புப் பகுப்பாளர்-** *அமைப்பைப் பகுத்துப் பார்ப்பவர்.* Systems analyst. *2. அமைப்புப் பகுப்பு.* Systems analysis. *3 அமைப்பு மென்பொருள்.* Systems software.

**அமைப்பு மொழியியல்-** *மொழி அமைப்புப் பற்றிக் கூறுவது.* Structural linguistics.

**அமைப்பு வடிவமைப்பாளர்-** *அமைப்பை வடிவமைப்பு செய்பவர்.* Systems designer.

**அமைப்பு வடிவமைப்பு-** Systems design.

**அமைப்பு வாய்பாடு-** *மூலக்கூறின் அமைப்பு பற்றிய வேதியியல் வாய்பாடு.* structural formula.

**அமைவிடம்-** *அமைந்துள்ள பகுதி.* Location.

**அமைவு-** *அமைந்திருக்கும் முறை,* arrangement. *இலையமைவு.* Leaf arrangement or Phyllotaxi.

**அமோகம்-** *நிரம்ப உள்ளது,* abundance. *அமோக விளைச்சல்.* Abundant yield.

**அய்யர்-** *குரு,* Priest.

**அய்யன்-** *வணக்கத்திற்குரியவர்,* venerable. *வணக்கத்திற்குரியவர்*

*அய்யன் திருவள்ளுவர்.* Thiruvalluvar, the most venerable.

**அய்யா-** *மதிப்பிற்குரிய சொல்,* Sir.

**அயச்சத்து-** *அய ஊட்டம்.* Iron nutrient.

**அயர்-** *களைப்பு கொள்,* get tired.

**அயர்ச்சி, அயர்வு-** *தளர்ச்சி,* fatigue, strain.

**அயர்ந்து-** *தன்னை மறந்து,* forget oneself. *அயர்ந்து தூங்கினேன்.* I slept soundly.

**அயல்-** *1. உறவில்லாத,* Unrelated. *2. பக்கம்,* Side. *3. வேறுபட்ட,* Different.

**அயல் ஒட்டு-** வேற்றுஒட்டு, Xenograft.

**அயல் கருவுறுதல்-** வேறுபட்ட இரு இனங்களுக்கிடையே ஏற்படும் ஆண் அணு பெண் அணுச் சேர்க்கை. Cross-fertilization.

**அயல்நாட்டு உண்டியல்-** *வேற்று நாட்டிலிருந்து வரவேண்டிய பட்டியல்.* Foreign bill.

**அயல்நாட்டுச் செலாவணி-** *வேற்று நாட்டுப் பணவரவு.* Foreign exchange.

**அயல்நாட்டுத் துறை-** வெளிநாட்டுத் துறை. Department of Foreign Affairs.

**அயல்நாட்டு முதலீடு-** வெளிநாட்டு மூலதனம். Foreign investment.

**அயல்பண்டுவம்-** ஆங்கில மருத்துவம். Allopathy. ஒ. தற்பண்டுவம்.

**அயல்பூந்துச் சேர்க்கை-** *அயல் மகரந்தச் சேர்க்கை.* Cross fertilization.

**அயல்நாடு-** வேற்றுநாடு, Foreign Land.

**அயலவர்-** *அண்டைவீட்டார்,* Neighbour.

**அயலான்-** *உறவு இல்லாதவன்,* Stranger.

**அயலுறவு-** *அயல்நாட்டுத் தொடர்பு,* Foreign affairs.

**அயலூர்-** *வெளியூர்,* from other place.

**அயன்-** நேர்த்தி, excellence.

**அயன்சரக்கு-** நேர்த்தியான பொருள், quality goods.

**அயிராவதம்-** இந்திரன் யானை. Lord Indira's elephant.

**அயிரை மீன்-** *ஆற்றுமீன்,* river fish. loach.

**அயனமண்டலம்-** நிலநடுக்கோடுகளுக்கு வடக்கும் தெற்குமுள்ள, கதிரவன் செல்லும் பாதை, ecliptic.

**அயனி-** *மின்னேற்றத் துகள்.* ion. An electrically charged particle.

**அயனி ஆரம்-** *அயனித்துகளின் ஆரம்,* ionic radius.

**அயனிச் சேர்மம்-** *அயனிக் கூட்டுப் பொருள்,* ionic compound.

**அயனிப் பரிமாற்றம்-** *அயனிகளுக் கிடையே உள்ள பரிமாறல்,* ionic exchange.

**அயனி மண்டலம்-** புவிக்காற்று மேல் வெளியிலுள்ள பகுதி; அயனிகளையும் கட்டவிழ் மின்னணுக் களையும் கொண்டது. Ionosphere, a region in the earth's upper atmosphere having ions and free electrons.

**அயனி முடமாதல்-** *அயனி நொண்டியாதல்.* sequestration. The formation of a complex with an ion in solution in such a way that ion does not have its normal activity.

**அயனியாக்கல்-** *அணுவிலிருந்து மின்னணுக்களை உண்டாக்கும் முறை.* ionization. The process of producing ions.

**அயனியாக்கும் ஆற்றல்-** Ionization energy.

**அயனி விளைபொருள்-** Ionic product.

**அயோக்கியன்-** *யோக்கியப் பொறுப்பு அற்றவன்.* Mean man.

**அர்ச்சகர்-** *அர்ச்சனை செய்பவர்,* priest. *கோயில் அர்ச்சகர்,* temple priest.

**அர்ச்சனை-** *1. அர்ச்சித்தல்.* Doing worship. *2. வசைமாரி,* tirade.

**அர்த்தசந்திரன்-** *பிறைவடிவ நிலா,* crescent moon.

**அர்த்தச்சந்திரத் தடுக்கிதழ்-** *பிறை வடிவத் தடுப்பி,* semilunar valve.

**அர்த்தசாம பூசை-** *நள்ளிரவில் நடைபெறும் கடைசிப் பூசை.* Last worship at midnight.

**அர்த்தப்படுத்து-** *பொருள்கூறு,* make different meaning.

**அர்த்தபுஷ்டி-** *பொருள் உள்ள,* meaningful.

**அர்த்தம்-** *பொருள்,* meaning.

**அர்த்தராத்திரி-** *நள்ளிரவு,* midnight.

**அர்ப்பணம்-** *காணிக்கை,* dedication.

**அர்ப்பணி-** *காணிக்கையாக்கு,* dedicate.

**அரக்கப் பரக்க-** *அவசரம் அவசரமாக. ஏன் அரக்கப்பரக்க ஓடி வருகிறாய்?* Why do you rush in such a hurry?

**அரக்கமை-** *அரக்கத்தன்மை,* gigantism.

**அரக்கன்-** *கொடியவன்,* demon, giant.

**அரக்கி-** *கொடியவள்,* demoness.

**அரக்கு-** *மூடி முத்திரையிடப் பயன்படும் சிவப்பு மெழுகு.* Sealing wax, lac, shellac, a forest product.

**அரக்கு வளையல்-** *அரக்கினால் செய்யப்படும் வளையல்.* lac bangle.

**அரக்கு-** *1. தேய்,* rub. *நன்கு அரக்கு.* Rub well. *2. மெல்லு,* munch. *நீ வாயில் மெல்லுவது என்ன?* What are you munching in your mouth.

**அரங்கம்-** *1. விளையாட்டிடம்,* stadium. *2. மேடை,* stage. *3. கருத்து கூறுமிடம்,* symposium.

**அரங்கு-** *1. திரையரங்கு,* theatre. *2. கோள் நோக்குமிடம்,* plana torium. *3. துறை,* arena. *4. கடை,* Stall. *5. வட்டம்,* Forum, circle.

**அரங்கேற்றம்-** *ஒரு நிகழ்ச்சி முதன் முதலில் மேடையேறுதல்.* debut. Presentation for the first time on stage. *நாட்டிய அரங்கேற்றம்.* Dance debut. *அரங்கேற்று.* Make debut.

**அரச கருமமொழி-** *ஆட்சிமொழி,* official language.

**அரச குடியேற்ற நாடு-** *பிரிட்டிஷ் அரசரால் நேரடியாக ஆளப்பட்டது.* Crown colony, colony ruled directly by the British Government.

**அரச அணிகலன்கள்-** *முறைசார் நிகழ்ச்சிகளில் அரசனும் அரசியும் அணிந்து வருபவை.* Crown Jewels.

**அரச இளவரசன்-** *அடுத்து அரசனாக வரும் இளவரசன்.* Crown prince. *அரச இளவரசி. அரச இளவரசின் மனைவி.* Crown Princess.

**அரச துரோகம்-** *அரசு பகை,* treason. *அரசனுக்கு அல்லது நாட்டுக்கு எதிராக மாற்றானுக்கு உதவுதல் மற்றும் அரசனைக் கொல்லுதல்.* Treachery to one's country or its ruler by helping its enemies or by killing the king.

**அரச நண்டு-** *பெரிய நண்டு,* king crab.

**அரச நாகம்-** *பெரிய நல்ல பாம்பு,* king cobra.

**அரச நீர்மம்-** *இராஜதிராவகம்,* aqua regia. *அடர் நைட்டிரிக் அமிலமும் அடர் ஹைடிரோ குளோரிக் அமிலமும் சேர்ந்த கலவை. பொன்னைக் கரைப்பது.* An acid mixture containing concen trated nitric acid and concentrated sulphuric acid. It is used to dissolve gold.

**அரச பிளவை-** ஒரு கடும் புற்று *நோய்,* carbuncle.

**அரச மரபு-** *அரச குலம்,* dynasty.

**அரசமரம்-** *புனிதமாகக் கருதப்படும் மரம்.* The holy pipal tree.

**அரசர்க்குரிய-** *அரசர்சார்,* royal.

**அரசர் கழகம்-** Royal Society.

**அரசன்-** *மன்னன்,* King, Monarch.

**அரசாங்கம்-** *அரசு,* Government.

**அரசாட்சி-** *ஆளுகை,* rule, regime.

**அரசாணிக்காய்-** *பூசணைக்காய்,* white Pumpkin.

**அரசாணிக் கால்-** *அரசமரப் போத்து. திருமண மேடைக்கு முன் நடப் படும் அரச மரக்கிளை.* Pipal tree branch planted during marriage before the bridal dais.

**அரசாணிப் பானை-** *அரசாணிக் காலோடு சேர்த்து வைக்கப் பட்டிருக்கும் பானை.*
Vertical row of painted pots placed near the pipal tree cutting.

**அரசாணி மேடை-** *மணவறை,* bridal dais.

**அரசாள்-** *ஆட்சிசெய்,* rule, govern.

**அரசவை-** *அரசனது அவைக்களம்,* royal court.

**அரசவைக் கவிஞர்-** *சிறப்பு செய்யும் பொருட்டு அரச சபையின் தலைமைக் கவிஞராக அமர்த்தப் படுபவர்,* poet laureate. Poet officially appointed by government as a mark of honour. *அரசவைக் கவிஞர் கண்ணதாசன்.* Poet Laureate Kannadasan.

**அரசி-** *அரசன் மனைவி,* queen. Wife of a king. *தற்பொழுது இங்கிலாந்தில் ஆளுந்தலைவி.* The ruler in England now.

**அரசிதழ்-** *அரசு குறிப்புகள் ஆணைகள் முதலியவை வரும் அரசுசார் இதழ்.* Gazette: Official journal with public notices, Government orders and other useful information.

**அரசு பதிவுபெற்ற அலுவலர்-** *அரசு அலுவலகங்களில் முதல்நிலை அலுவலர்,* Gazetted Officer.

**அரசு பதிவு பெறா அலுவலர்-** *அரசு அலுவலகங்களில் துணை நிலை அலுவலர்,* Non-Gazetted officer, NGO.

**அரசியல்-** *1. அரசியல் செயல்கள்,* political affairs. *கட்சி அரசியல்,* party politics, *உள்ளூர் அரசியல்,* local politics. *2. அரசியல் கருத்துகள்,* political views. *உங்கள் அரசியல் கருத்தென்ன?* What is your political opinion? *3. காழ்ப்பு,* rivalry between political parties. *எல்லாம் அரசியல்.* It is all politics. *4. ஆளுங் கலை,* art of ruling. *அரசியல் அறிவியல்,* political science.

**அரசியல் அமைப்பு-** *யாப்பு, சட்டம், சாசனம். சட்டங்கள் மற்றும் நெறி முறைகளின்படி ஒரு நாட்டை ஆளுவதற்குரிய முறை,* constitution. It is a system of laws and principles according to which a state is ruled. *இந்திய அரசியல் அமைப்பு.* Indian Constitution.

**அரசியல் அமைப்பு அவை-** *அரசியல் சட்டத்தை உருவாக்கும் சபை.*

Constituent Assembly the mighty body making the Constitution.

**அரசியல் அமைப்புத் திருத்தம்-** *அரசியல் சட்டத் திருத்தம்.* Constitutional amendment.

**அரசியல் அறிஞர்-** *அரசியல் பற்றித் தொலைநோக்குள்ளவர்,* statesman, one who is a farsighted political leader. *(எ.டு) மூதறிஞர் இராஜாஜி.* Elder Statesman Rajaji. *ஒ. அரசியல்வாதி.*

**அரசியல் உரிமை-** *அரசியல் தன்னுரிமை,* political liberty.

**அரசியல் உள்நோக்கம்-** *குறுகிய நோக்கம்,* political motive.

**அரசியல் கட்சி-** *ஒரு நாட்டின் ஆட்சியில் பங்குபெறுவதற்குரிய கட்சி. இது மக்களாட்சியில் அனுமதிக்கப்பட்ட ஒன்று.* Political party, the party deemed to take part in the governance of a country. It is allowed in a democracy.

**அரசியல் கண்ணியம்-** *அரசியல் பெருந்தன்மை,* political decency. *இன்று நமக்கு அரசியல் கண்ணியம் தேவைப்படுகிறது.* Today we need political decency.

**அரசியல் கருத்து-** *அரசியல் சார்ந்த எண்ணம், சிந்தனை,* political opinion.

**அரசியல் காழ்ப்பு-** *அரசியல் வெறுப்பு,* political animosity.

**அரசியல் குழப்பம்-** *ஆட்சிக் குளறுபடி,* political chaos.

**அரசியல் குற்றம்-** *அரசுக்கு எதிரான குற்றச்செயல். (எ.டு) சட்டத்தைக் கொளுத்துதல் முதலியவை.* (e.g) Political offence like burning the copy of a law.

**அரசியல் கொள்கை பரப்பல்-** *அரசியல் பிரச்சாரம்,* political propaganda.

**அரசியல் கொள்கை பரப்புபவர்-** *அரசியல் கொள்கைப் பிரச்சாரகர்,* political propagandist.

**அரசியல் கைதி-** *ஓர் அரசின் கொள்கையை எதிர்த்துப் போரிடும் பொழுது கைது செய்யப்படுபவர்.* Political prisoner.

**அரசியல் சமூகவியல்-** Political sociology.

**அரசியல் சூழ்ச்சி-** Political intrigue.

**அரசியல் சூழ்ச்சித் திறம்-** *இராஜதந்திரம்,* diplomacy.

**அரசியல் நெருக்கடி-** *அரசியல் குழப்பம்,* political crisis.

**அரசியல் பார்வை-** *அரசியல் நோக்கு,* political outlook.

**அரசியல் புகலிடம்-** *அரசியல் தஞ்சம்,* political asylum.

**அரசியல் புதினம்-** *அரசியல் சார்ந்த புனைகதை,* political fiction.

**அரசியல் புவியியல்-** *நாடுகளுக்கிடையே செய்தித் தொடர்பு, எல்லைகள் முதலியவை பற்றி ஆராயும் புவியியல் பிரிவு.* Political geography.

**அரசியல் பொருளியல்-** *உற்பத்தி, வழங்கல், செல்வநுகர்வு முதலியவை பற்றி ஆராயும் துறை.* Political economy.

**அரசியல் மரபு-** *அரசியலில் வழிவழி வருவது,* political convention.

**அரசியல் முறை-** *அரசியல் ஒழுங்கு,* political system.

**அரசியல் வரலாறு-** *அரசியல் அமைப்பு வரலாறு,* political history.

**அரசியல் வாதம்-** *அரசியல் விவாதம்,* political debate.

**அரசியல்வாதி-** *அரசியலைத் தொழி லாக நடத்துபவர்,* politician. one who is professionally concerned with politics.

**அரசியல் விலங்கு-** *சமூக விலங்கு. மனிதன் ஓர் அரசியல் விலங்கு.* Man is a political animal.

**அரசியலளவை-** polimetrics.

**அரசிலாநிலை-** *அரசியல் குழப்பம்.* Anarchy, absence of government or control; lawlessness.

**அரசிலா நிலைக்கொள்கை-** *அரசே வேண்டாம் என்னும் கொள்கை.* Anarchism. Political theory that laws and government should be abolished.

**அரசிலை-** *அரைமூடி,* pipal leaf shaped plate worn on the waist cord of the female child in front.

**அரசு-** *ஆட்சிமுறை,* Government. Method of governing. *(எ.டு) மக்களரசு,* democratic government.

**அரசு ஆடவர் கல்லூரி-** Government Arts College for men.

**அரசு இருக்கை-** royal seat.

**அரசு உயர்நிலைப் பள்ளி-** Government High School.

**அரசு மேல்நிலைப் பள்ளி-** Government Higher Secondary School.

**அரசுகட்டில்-** *அரியணை,* throne.

**அரசு கலைக்கல்லூரி-** Government Arts College.

**அரசு தலைமை வழக்குரைஞர்-** Advocate General (State), Attorney General (Centre).

**அரசு மகளிர் கல்லூரி-** Government Arts College for Women.

**அரசுமானியம்-** *அரசு அளிக்கும் நிதி,* Government grant.

**அரசுமுறைப் பயணம்-** *அரசுச் சார்பாக மேற்கொள்ளும் பிரயாணம்,* Official visit.

**அரசு வழக்குரைஞர்-** Public prose cutor.

**அரசு வேண்டாக் கொள்கை-** anar chism.

**அரசோச்சு-** *ஆட்சி செய்,* Rule, govern.

**அரட்டை-** *1. வம்பளப்பு,* gossip. *2. கருத்துப் பரிமாற்றம்,* gossip.

**அரட்டை அரங்கம்-** gossip (Public) forum.

**அரண்-** *கோட்டை,* Fortress, castle.

**அரண்மனை-** *அரசர் வாழுமிடம்,* palace.

**அரண்மனைக் கிளை-** palace annexe.

**அரண்மனை வளாகம்-** palace complex.

**அரணை-** *தீங்கற்ற ஒருவகைப் பல்லி.* Sun lizard, a harmless animal.

**அரந்தை-** *துன்பம்,* suffering.

**அரப்பு-** *அரப்புத்தூள்,* illuppai cake powder. *ஒ. சிகைக்காய்த்தூள்.*

**அரம்-** *இராவும் கருவி,* file.

**அரம்பையர்-** *வானுலக அழகிகள்,* celestial beauties.

**அரமகள்-** *வான தேவதை,* angel.

**அரவணை-** *1. ஆதரி,* support. *2. கட்டித் தழுவு,* embrace, hug.

**அரவணைப்பு-** Support, protection.

**அரவம்-** *1. பாம்பு,* snake. *2. இரைச்சல்,* noise.

**அரள்-** *மிரள்,* get frightened? *ஏன் மிரள்கின்றாய்?* Why do you get frightened.

**அரளி-** *அரளிச்செடி,* oleander.

**அரற்று-** *புலம்பு, நீ அரற்றி என்ன பயன்?* lament. What is the use of your lamenting?

**அராவிய தூள்-** *இரும்பை அறுக்கும் பொழுது கிடைக்கும் தூள்.* filing.

**அராவு நாக்கு-** *சிறிய பற்கள் அமைந்த நத்தையின் நாக்கு.* snail's tongue with small teeth.

**அராஜகம்-** *வன்முறை. அராஜகம் தலைவிரித்தாடுகிறது.* violence. Violence raises its head. *பா. அரசிலா நிலை, அரசு வேண்டாக் கொள்கை.*

**அரி-** *1. அரித்தல். நீர் பாறையை அரிக்கும்.* corrode. Water will corrode rocks. *2. நீக்கு. அரிசியிலிருந்து கல்லை அரி.* Remove stones from rice. *3. சேகரி. வைக்கோலை அரி.* Workers gather hay stalks. *4. திருமால்.* Lord Thirumal.

**அரிக்கட்டு-** *நெற்கதிர் கட்டு,* paddy sheaf.

**அரிக்கன் விளக்கு-** *புயலிலும் அணையா ஒருவகை மண்ணெண் ணெய் விளக்கு,* hurricane lamp.

**அரிகால்-** *அரிதாள்,* cut-off paddy stalks.

**அரிகிடை-** *அரிதாள்களைச் சிறு சிறு குவியலாக வயலில் போடுதல்.* Random laying of the cut-off paddy stalks in the field.

**அரிச்சந்திரன்-** *உண்மையே பேசிய புராண கால அரசன். வாக்கு தவறாதவன்.* An upright man.

**அரிச்சுவடி-** *பாலபாடம்,* Primer, alphabet learning. *அரசியல் அரிச்சுவடி,* political primer.

**அரிசனம்-** *1. ஆதிதிராவிடர்,* harijan. *2. மஞ்சள்,* turmeric.

**அரிசி-** *உமிநீக்கிய நெல்,* rice.

**அரிசி ஆலை-** *அரிசி அறைக்கும் எந்திரம்,* rice mill.

**அரிசிப் பல்-** *குழந்தையின் சிறிய பல்,* first teeth, rice like teeth.

**அரிதாரம்-** *ஒப்பனைத் தூள்.* Make-up powder.

**அரிதில் கடத்தி-** *வெப்பத்தையும் மின்சாரத்தையும் கடத்தாப் பொருள்.* Bad conductor, that which does not conduct heat or electricity. *ஒ. எளி தில் கடத்தி, கடத்தாப் பொருள்.*

**அரிது-** *அருமை,* rare. *இக்காலத்தில் நல்லவர்களைப் பார்ப்பதே அரிது.* Now a days it is rare to see good people.

**அரிபள்ளங்கள்-** *அரிப்பினால் ஏற் படும் பள்ளங்கள்.* Gullies.

**அரிப்பு-** *1. நமைச்சல்,* itch. *2. கரைதல்,* erosion. *மண் அரிப்பு,* soil erosion. *3. நச்சரிப்பு,* pestering.

**அரிமா-** *சிங்கம்.* Lion.

**அரிமா நோக்கு-** *சிங்கநோக்கு,* majestic look of a lion.

**அரிமா சங்கம்-** *ஒரு தொண்டு நிறுவனம்.* Lions Club, a service organization. *ஒ. சுழற்கழகம்.*

**அரிமேடை-** Abrasion platform.

**அரிய-** *அரிதான,* rare, valuable.

**அரிய கருத்துகள்-** Valuable ideas.

**அரிப்புமுறை வேலை-** *உலோகக் கரைப்பு வேலை.* Etching work.

**அரியணை-** *அரசன் அமரும் இருக்கை,* throne.

**அரியணை ஏறல்-** *1. அரசனாதல்,* Ascending throne. *2. ஆட்சியைப் பிடித்தல்,* Assuming power.

**அரிவரி-** *முன் பள்ளி நிலை,* pre school, kindergarten.

**அரிவாள்-** *அரிகின்ற கருவி,* sickle.

**அரிவாள்மனை-** *அடுப்பங்கரை அரிகருவி.* Kitchen gadget with a

slighly curved iron blade fixed on a rectangular block of wood.

**அரிவை-** *இளமங்கை,* blossoming girl.

**அருகதை-** *தகுதி,* merit, capability.

**அரு(று)கம்புல்-** *மருத்துவச் சிறப்புள்ள குட்டையான புல்.* Cynodon dactylon, a grass of medicinal importance.

**அருகன்-** *சமணர்களின் கடவுள்.* God of the Jains.

**அருகால்-** *கதவுச் சட்டகம்,* door frame.

**அருகால்படி-** doorstep.

**அருகில்-** *பக்கத்தில்,* nearby. *மருத்துவமனை அருகில் உள்ளது.* A hospital is nearby.

**அருகு-** *அரிதாகு சில விலங்கினங்கள் அருகி வருகின்றன.* Become rare. A few animal species tend to become rare.

**அருகுத்திரள்-** *தாவரக்குழாய்த் திரளில் ஒருவகை.* Collateral bundle, a kind of vascular bundle.

**அருகுமொட்டு-** collateral bud.

**அருங்காட்சியகம்-** *காட்சிப் பொருள்களின் அரிய சேமிப்புப் பொருள்கள் உள்ள இடம். அரசு அருங்காட்சியகம்.* Museum. Government museum.

**அருங்காட்சியகவியல்-** *அருங்காட்சியகம். அதிலுள்ள பொருள்கள், அவற்றைப் பாதுகாத்தல் ஆகியவற்றை ஆராயுந் துறை.* Museology, the study of museum, its objects and their maintenance.

**அருஞ்செயல்-** *சாதனை,* achievement. *மனிதன் திங்களில் இறங்கியது போற்றத்தக்க ஓர் அருஞ்செயல்.* Man's landing on the moon is a laudable achievement.

**அருட்பா-** *இறையருள் பெற்றோர் பாடிய பாடல்களின் தொகுப்பு,* Songs of Holy Grace, a compilation of songs sung by holy men. *திருவருட்பா,* Thiruvarutpa, Holy songs or verses.

**அருணோதயம்-** *கதிரவன் தோற்றம்,* sunrise.

**அருந்தகம்-** *உணவு உண்ணுமிடம்.* cafe, restaurant.

**அருந்ததி-** *ஒரு விண்மீன்,* alcor, a star.

**அருந்திறலாளி-** *அருந்திறம் உடையவர். கணிதமேதை இராமனுஜம் ஓர் அருந்திறலாளி.* Prodigy, a person with unusual talents. (e.g) Mathematical genius, Ramanujam was a prodigy.

**அருந்து-** *1. பருகு, பாலருந்து,* drink. Drink milk. *2. உண்.* Eat.

**அருநெல்லி-** *சிறிய நெல்லிக்காய்.* Indian gooseberry. *ஒ. பெருநெல்லி.*

**அரும்-** *அரிய. அது ஓர் அரும் பொருள்.* rare. It is a rare object.

**அரும்பதவுரை-** *அரிய சொற்களுக்குப் பொருள்தரும் உரை.* Explanation of rare words.

**அரும்பாடுபடு-** *கடினமாக உழை,* workhard. *அரும்பாடுபட்டால் தான் வாழ்வில் முன்னேற முடியும்.* If you work hard, you can come up in life.

**அரும்பு-** *1. மொட்டு,* bud. *2. தளிர். புல் அரும்புகிறது.* The grass begins to sprout. *3. தோன்று. மீசை அரும்பத் தொடங்கியுள்ளது.* The tender moustache begins to appear.

**அரும்புதல்-** *அரும்பு விடுதல்,* budding.

**அரும்பு மீசை-** *மெல்லிய மீசை,* line-like moustache. *ஒ. தொங்குமீசை.*

**அரும்பணம்-** *அதிக வட்டி தரும் பணம்.* Dear money fetching high interest. ஒ. *எளிய பணம்.*

**அருமண்கள்-** *அரிய வேதிமண்கள்.* rare earths.

**அரும்பொருள்-** rare thing, phenomenon.

**அருமந்த-** *அன்பிற்குரிய,* dear. *அருமந்த மகன்,* dear son.

**அருமருந்து-** *1. அனைத்து நோய் போக்கும் மருந்து,* panacea. *பெனிசிலின் ஓர் அருமருந்து.* Penicillin is called a panacea. *2. அமிழ்தம்,* elixir.

**அருமை-** *1. அரிது,* rare. *அருமையான வாய்ப்பு.* Rare chance. *2. தகுதி,* worth. *அவர் அருமையை அனைவரும் அறிவர்.* All know his worth. *3. அன்பு,* love. *அருமை நண்பன்.* Loving friend.

**அருவம்-** *உருவமற்றது,* the formless. *பேய் அருவமுள்ளது.* A ghost has no form.

**அருவரு-** *வெறு,* abhor, hate. *நான் தீய பழக்கங்களை அருவருக்கிறேன்.* I abhor bad habits.

**அருவருப்பு-** hatred.

**அருவருப்புத் தோற்றம்-** ugly appearance.

**அருவளிகள்-** *அரிய வாயுக்கள்,* are gases.

**அருவி-** *நீர்வீழ்ச்சி,* waterfall.

**அருவுடம்பு-** *நுண்ணுடம்பு,* subtle body.

**அருள்-** *1. இரக்கம்,* grace. *கடவுள் அருள் வடிவத்தில் உள்ளார்.* God is in the form of grace. *2. இரக்கங் காட்டு.* Show mercy. *3. இயற்று.* Compose with a divine gift. *4. வாழ்த்துத் தெரிவி.* Offer blessings.

**அருள்மிகு-** *தெய்வத்தன்மையுள்ள,* holy. *அருள்மிகு மாரியம்மன்.* The Holy Mariamman.

**அருளாசி-** *1. ஆசியுரை,* benediction. *2. நல்லாசி,* blessings.

**அருளாட்சி-** *அருள்மிகு ஆளுகை.* Gracious rule.

**அருளிச்செய்-** *பா. அருள்.*

**அரூபம்-** *பா. அருவம்.*

**அரூபி-** *உருவம் இல்லாதவன்,* a person without form. *இறைவன் ஓர் அரூபி.* God has no form.

**அரை-** *1. நையச்செய். அரிசி அரை,* grind rice. *2. பொடியாக்கு. மிளகாயை அரை.* Pulverise dry chilly. *3. அரிசி ஆக்கு. நெல்அரை.* hull paddy. *4. பாதி,* half, $^1/_2$. *5. இடுப்பு,* waist.

**அரைஉயிர்-** Semi - vowel.

**அரைக்கச்சை-** *இடுப்புக் கச்சை,* waistband.

**அரைக்கண்-** *பாதி மூடிய கண்கள்,* half-closed eyes.

**அரைக்கால்-** *எட்டில் ஒரு பகுதி,* one eighth, $^1/_8$.

**அரைக்கால் சட்டை-** *முழங்கால் வரை தொங்கும் சட்டை,* shorts.

**அரைக்கிணறு தாண்டல்-** *அரைகுறை வேலை செய்தல்.* crossing half well, doing imperfect work.

**அரைக்கீரை-** *ஒருவகைக் கீரை,* garden spinach.

**அரைக்கும் உருளை-** Crushing roller.

**அரைக்கைச் சட்டை-** *முழங்கை வரை கையமைந்த மேற்சட்டை.* Half sleeves shirt.

**அரைக்குருடு-** Half blind.

**அரைகுறை-** *முழுமையற்றது.* Incomplete. *அரைகுறை வேலை.* Incomplete work.

**அரைகுறைக்கடத்தி-** *ஒருவழிக் கடத்தி,* Semiconductor.

**அரைகுறை நஞ்சுக்கொடி-** Semi placenta.

**அரைநாண்-** *இடுப்பில் அணியும் கயிறு.* waist chord, chain.

**அரைத் தூக்கம்-** *பாதித்தூக்கம்,* half sleep.

**அரைப் புள்ளி-** *நிறுத்தற்குறி,* semi colon.

**அரை மண்டி-** *பரத நாட்டியத்தில் கால் வளைந்து நிற்றல்.* Half standing position in Indian dance.

**அரைமனது-** *நிறைவிலா நிலை* - half hearted.

**அரையச்சு-** *பாதியச்சு,* Semi-axis.

**அரையச்சுக் கோணம்-** Semi-axis angle.

**அரையாப்பு-** *பாலியல் நோய்,* veneral disease.

**அரையிருள்-** *பாதி இருட்டு,* semi dark.

**அரையிறுதியாட்டம்-** *இறுதி யாட்டத்திற்கு முந்தியது,* semi-final.

**அரைவட்டம்-** *பாதிவட்டம்,* semi-circle.

**அரைவேக்காடு-** *1. பாதி வெந்தது,* half-boiled. *2. அரைகுறையறிவு,* half-baked.

**அரைவை-** *அரைத்தல்,* grinding.

**அரைவைப் பை-** *பறவை இரைப் பையின் முன்சுரப்புப் பகுதி,* proventriculus.

**அல்குல் காம்பு-** *பெண் உறுப்பின் முளைப் பகுதி,* clitoris.

**அல்குல் அழற்சி-** *பெண் உறுப்பு வீக்கம்,* vaginitis.

**அல்குல்வாய்-** *உடல் உறவு வழி,* vagina.

**அல்லங்காடி-** *மாலைக்கடை,* Evening bazaar. *ஒ. நாளங்காடி*

**அல்ல-** *அவை அல்ல,* they are not.

**அல்லது-** *இது அல்லது அது,* either... or. *தமிழ் அல்லது ஆங்கிலம்.* Either Tamil or English.

**அல்லர்-** *அவர்கள் அல்லர்.* They are not.

**அல்லல்-** *துன்பம்,* suffering. *நான் மிக அல்லல் படுகிறேன்.* I suffer a lot.

**அல்லவா-** *நீங்கள் கூட்டத்திற்கு வரவில்லை அல்லவா?* don't you come to the meeting?

**அல்லன்-** *அவன் அல்லன்.* He is not.

**அல்லா-** *முகமதியரின் கடவுள்.* Allah.

**அல்லாகு அக்பர்-** *கடவுள் மிகப் பெரியவர்.* God is great.

**அல்லாடு-** *மல்லாடு,* struggle. *ஏன் இவ்வாறு அல்லாடுகின்றாய்.* Why do you struggle like this?

**அல்லாத-** *நீங்கலாக, தவிர,* Other than. *நாங்கள் தாய்மொழி அல்லாத பிறமொழியிலும் பாடங்கள் கற்பிக்கிறோம்.* We teach lessons in languages other than the mother tongue.

**அல்லாமல்-** *இது மட்டுமல்லாமல் அதுவும்,* Not only... but also. *அவர் அறிஞர் மட்டுமல்லாமல் சிறந்த நடிகருமாவார்.* He is not only a scholar but also a talented actor.

**அல்லி-** *பூவின் அக இதழ்.* Petal. *ஒ. புல்லி.*

**அல்லி-** *அல்லிப்பூ,* lily.

**அல்லிசைப் புள்-** *இரவில் பாடும் பறவை,* nightingale.

**அல்லி வட்டம்-** *பூவின் அல்லிகள் கொண்ட தொகுப்பு,* Corolla, the ring of petals.

**அல்லும் பகலும்-** *எப்பொழுதும்,* always. *நான் அல்லும் பகலும் உழைக்கிறேன்.* I work always.

**அல்லோல கல்லோலப்படுதல்-** *பெருங்குழப்பம்.* All in chaos and confusion.

**அல்வழி-** *தவறான வழி,* wrong path. *உன் வழி அல்வழி.* Your path is wrong.

**அலாக்காக-** எளிதாக, easily. *அவன் அந்த அரிசி மூட்டையை அலாக் காகத் தூக்கினான்.* He lifted that bag of rice easily.

**அலக்கு-** *துறட்டி,* hooked pole.

**அலகிடல்-** *1. வரிவரைவு செய்தல் (தொலைக்காட்சி),* Scanning, TV. *2. சீர்பிரித்தல்,* Syllabification. *3. பெருக்கித் 'துப்புரவு செய்தல். (கோயில்).* Cleaning a temple.

**அலகிடுங் கருவி-** scanner.

**அலகு-** *1. மூக்கு,* beak. *2. அளவு,* unit. *3. துளைப்புக் கருவி,* bit. *4. கூரிய கம்பி,* hook. *5. தொகுதி,* unit.

**அலகு குத்தல்-** வேண்டுதல் நிறை வேறக் கூரிய கம்பியைத் தோலில் செருகல்.
Piercing sharp straight and stiff wires into the skin to fulfil a divine vow.

**அலகுச் செலவு-** ஒரு தொகுதிக்கு ஆகும் செலவு, unit cost.

**அலகுத் தொகுதி-** *மூலக்கூறுகள் முதலியவற்றில் அடங்கிய மிகச் சிறிய தொகுதி.* Unit cell.

**அலகுப் பண்பு-** *மரபுவழிப் பண்பு,* unit character.

**அலகுப் படலம்-** *உயிரி படலத்தை விளக்கப் பயன்படுவது.* Unit membrane.

**அலகுப் பிடிப்பி-** *கத்திப்பிடி.* Blade holder.

**அலகை-** *பேய்,* ghost.

**அலங்கரி-** *அழகுசெய்,* decorate. *உற்சவமூர்த்தி நன்கு அலங்கரிக்கப் பட்டிருந்தது.* The procession deity was well decorated.

**அலங்காரம்-** *அழகு செய்தல்.* adorning, decoration.

**அலங்காரி-** *அழகு செய்து கொண்ட பெண்.* adorned damsel. *ஒ. ஒய்யாரி.*

**அலங்கோலம்-** *ஒழுங்கின்மை,* all in disorder.

**அலசல்-** *1. பகுப்பு,* analysis. *தேர்தல் முடிவுகள் ஓர் அலசல்.* Poll results an analysis. *2. நெருக்கமின்மை,* being sparse.

**அலசு-** *1. கழுவு,* wash. *வேட்டியை அலசு.* Wash the dhoti. *2. அலசிப் பார்.* Analyse.

**அலட்சியம்-** *புறக்கணிப்பு,* negligence. *உன் கடமையை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதே.* Never neglect your duty.

**அலட்டு-** *கவலைகொள்,* bother. ஏன் *வீணாக அலட்டிக் கொள்கிறாய்?* Why do you bother yourself unecessarily.

**அலம்பு-** *கழுவு,* wash. குவளையை *அலம்பு.* Wash the tumbler.

**அலமாரி-** *நிலைப்பேழை.* Almirah.

**அலவாங்கு-** *கடப்பாரை.* Crow-bar.

**அலறல்-** *கத்துதல்,* loud cry.

**அலறியடித்துக் கொண்டு-** *பெரும் பதற்றத்துடன்.* rush with panic.

**அலறி-** *அலறல் அழைப்பி,* buzzer.

**அலறு கடிகாரம்-** *தூக்கத்திலிருந்து கண் விழிக்க வைக்கும் கடிகாரம்.* Alarm Clock.

**அலாதி-** *தனி,* unique. *அவர் அணுகு முறையே அலாதி.* His approach is unique.

**அலாரிப்பு-** *நாட்டியச் சொற்கட்டு.* Invocatory dance item.

**அலி-** *ஆண் என்றோ பெண் என்றோ சொல்ல இயலாத நபர்.* Eunuch, a person who is neither male nor female.

**அலுங்கு-** *அசை,* move slightly.

**அலுப்பு-** *ஆர்வமின்மை,* boredom.

**அலுவல்-** *1. பணி,* work. *2. வேலை, காரியம்,* affair.

*அலுவல் காலம் - பதவிக்காலம்.* Term of office.

*அலுவல்சாரா உடை-* Muffti dress.

*அலுவலகப் பட்டியல்-* Official list.

*அலுவலகப் படி-* Office copy.

*அலுவலகப் பணித்துறை-* Ministerial service.

**அலுவலகம்-** *பணி அல்லது தொழில் செய்யும் இடம்.* Office. *மாவட்ட ஆட்சியர் அலுவலகம்.* Collector's office.

*அலுவலக மறையம்-* Office secret.

*அலுவலகமுறை ஓய்வு-* Off-duty.

*அலுவலக வண்டி-* Staff car.

*அலுவலக வீதம்-* Official rate.

**அலுவலர்-** *அலுவலகப் பணியாளர்,* Employee. *வங்கி அலுவலர்கள்.* Bank employees.

**அலை-** *திரி,* wander. *ஏன் இப்படி அலைகிறாய்?* Why are you wandering like this?

**அலைக்கழி-** *அலையவிடு,* tease. *ஏன் இப்படி அலைக்கழிக்கிறாய்?* Why are you teasing me like this?

**அலைச்சல்-** *அலைதல்,* wandering.

**அலைதாங்கி-** *அலையைத் தடுக்கும் செய்கரை,* breakwater.

**அலைவாய் இறங்குதுறை-** *கடல் இறங்குதுறை,* pier.

**அலைநீளம்-** *ஓர் அலையின் ஒரு முழுச்சுற்றின் முனைகளுக்கிடையே உள்ள தொலைவு.* wavelength. The distance between the ends of one complete cycle of a wave.

**அலைபாய்-** *அலைமோது,* surge. *மக்கள் கூட்டம் அலைபாய்ந்தது.* The crowd surged like anything.

**அலையுங்கோள்-** *திரியுங்கோள்.* Wandering planet.

**அலைவரிசை-** *அலைவழி,* Channel, band. *முதல் அலைவரிசை ஒலி பரப்பு.* First Channel broadcast.

**அலைவரைவி-** *மின்அலையை வரையும் கருவி.* Oscillograph, an instrument for recording electrical oscillations.

**அலைவாங்கி-** *வானொலி அலைகளைப் பெறுவதும் செலுத்துவது மாகிய கம்பி.* Aerial.

**அலைவு-** *ஒரு புள்ளியில் இங்குமங்கும் மீண்டும் மீண்டும் ஒழுங்காக ஏற்படும் இயக்கம்.* oscillation.

**அலைவுநேரம்-** *ஓர் அலைவிற்கு எடுத்துக்கொள்ளப்படும் நேரம்.* period of oscillation.

**அலைவெண்-** *பா. அதிர்வெண்.*

**அலோகம்-** *கரி, கந்தகம் முதலியவை.* Nonmetals like carbon and sulphur.

**அவ்வண்ணம்-** *அவ்வாறு,* Inthe same way. *அவ்வண்ணமே செய்.* Do it in the same way.

**அவ்வப்போது-** இயன்ற போதெல்லாம், now and then. உனக்கு அவ்வப் போது உதவியுள்ளேன். I have helped you now and then.

**அவ்வளவாக-** அதிக அளவுக்கு, much. அவ்வளவாக அவருக்கு ஆங்கிலம் தெரியாது. He does not know English much.

**அவ்வளவு-** அந்த அளவு, so much. அவ்வளவு வேலையும் நானே செய்ய வேண்டியுள்ளது. I have to do so much work.

**அவ்வளவுதான்-** 1. அவ்வளவுதான்! நீ போகலாம். That is all, you may go. 2. அவ்வளவுதான் நீ தொலைந்தாய். It is all serious. You will be taken to task.

**அவ்வாறு-** அப்படி, like that. அவர் அவ்வாறு சொல்லியிருக்க மாட்டார். He would not have said like that.

**அவ்விடம்-** 1. எல்லாம் அவ்விடத்து அருளால்தான். All by your grace. 2. அங்கு. அவ்விடம் யாவரும் நலமுடன் இருப்பார்கள். There, all will be quite well.

**அவ்வியம்-** பொறாமை, envy. அவ்வியம் தவிர். Avoid envy.

**அவ்வை-** 1. மூதாட்டி தமிழ்ப்பெண். venerable old lady. 2. ஒரு தமிழ்ப் பெண் கவிஞர். Avvai, a Tamil poetess.

**அவகாசம்-** நேரம், time. சற்று அவகாசம் வேண்டும். I want some time.

**அவச்சொல்-** கெட்டபெயர், bad name. உனக்கு அவச்சொல். Bad name to you.

**அவசரக் குடுக்கை-** நிதானமில்லாமல் ஒரு காரியத்தைச் செய்பவர். அவன் ஓர் அவசரக்குடுக்கை. He is a hasty fellow.

**அவசரக் கோலம்-** அதிக அவசரம். எல்லாம் அவசரக் கோலத்தில் செய்யப்படுகின்றன. All done in a hurried manner.

**அவசரச் சட்டம்-** அவசரம் கருதி ஆளுநராலோ குடியரசுத் தலைவ ராலோ பிறப்பிக்கப்படும் இடைக் காலச் சட்டம். Ordinance promulgated either by the President or the Governor in view of dire necessity.

**அவசரச் சிகிச்சைப் பிரிவு-** ஆபத்தான நிலையில் ஒருவருக்கு மருத்துவ மனையில் உடனடியாக மருத்துவம் வழங்கும் பிரிவு. Emergency ward or intensive care unit in a hospital.

**அவசரப்படு-** அவசரங்காட்டு. ஏன் அவசரப்படுகிறாய்? Why are you in a hurry?

**அவசரப்படுத்து-** விரைந்து முடிக்கு மாறு செய். Expedite one to do a thing quickly.

**அவசரம்-** பரபரப்பு, haste, hurry.

**அவசியம்-** கட்டாயமாக, compul sorily. எனக்கு ரூ. 100 அவசியம் வேண்டும். I need Rs.100 compul sorily.

**அவதரி-** கடவுள், புகழ்பெற்றோர் ஆகியோர் பிறத்தல். Be born gloriously like God or great people.

**அவதாரபுருஷன்-** தெய்வப்பிறவி. A man of divine birth or incarnation of God.

**அவதி-** துன்பம், suffering. நாங்கள் அதிகம் அவதிப்படுகிறோம். We suffer greatly.

**அவதூறு-** பழி, களங்கம், அவதூறு வழக்கு. defamation suit. அவதூறு பேச்சு. A slanderous talk.

**அவநம்பிக்கை-** *நம்பிக்கையின்மை,* disbelief. *உன் அவநம்பிக்கையை விடு.* Give up your disbelief.

**அவப்பெயர்-** *பா. அவச்சொல்.*

**அவமதி-** *இழிவுபடுத்து,* insult. *அவன் எல்லோரையும் அவமதிப்பவன்.* He insults/disgraces all.

**அவமதிப்பு-** disgrace, insult.

**அவமரியாதை-** disgrace.

**அவமானம்-** *மானக்குறைவு,* shame. *அது எனக்கு பெருத்த அவமானம்.* It is a great shame to me.

**அவயம்-** *உறுப்பு,* organ. *கைகால்கள் புறத்துறுப்புகள் ஆகும்.* Hands and legs are external organs.

**அவர்-** *ஆணையோ, பெண்ணையோ குறிக்கும் மரியாதைச் சுட்டுப் பெயர்.* Third person singular hono rofic pronoun - he or she. *அவர் ஒரு பட்டதாரி.* He/she is a graduate.

**அவர்கள்-** *ஆண், பெண் ஆகிய இரு பாலுக்குரிய படர்க்கைப் பன்மைப் பெயர்.* third person plural (honorific) pronoun, they. *அவர்கள் மாணவர்கள்.* They are students. *அவர் வந்தார்.* He/she came.

**அவரை-** him, her. I met him/her.

**அவரோகணம்-** *இறங்கு நிரல். இசைச் சுரங்களை இசையொலியில் குறைத்துக் கொண்டே பாடும் முறை.* Singing the musical notes in the descending order. *ஒ. ஆரோகணம்.*

**அவல்-** *ஊறவைத்த நெல்லை இலேசாகக் காயவைத்து வறுத்து இடித்துப் பெறும் செதில் போன்ற பொருள்.* Rice flakes prepared by soaking paddy, parching it and pounding it.

**அவலட்சணம்-** *அழகின்மை,* ugliness. *அவலட்சண மாப்பிள்ளை,* an ugly bride groom. *ஒ. இலட்சணம்.*

**அவலம்-** *இரக்கச்சுவை,* pathos. *இக்கதை அவலச்சுவை நிரம்பியது.* The story is full of pathos.

**அவள்-** *உயர்திணைப் படர்க்கை பெண்பால்.* Third person feminine singular pronoun, she. *அவள் ஒரு பேராசிரியை.* She is a professor.

**அவன்-** *உயர்திணைப் படர்க்கை. ஆணைக்குறிக்கும் சுட்டுப்பெயர்.* Third person masculine singular pronoun 'he'. *அவர் ஒரு பேராசிரியர்.* He is a professor.

**அவஸ்தை-** *துன்பம், வேதனை,* suffering. *அவர் புற்றுநோயால் அவஸ்தைப்படுகிறார்.* He suffers from cancer.

**அவா-** *ஆவல்,* ambition. *நீ ஒரு விஞ்ஞானியாக வரவேண்டும் என்பது என் அவா.* My ambition in life is to become a scientist.

**அவா அறுத்தல்-** *அவாவை நீக்குதல்.* Get rid of desire. *புத்தர் தன் அவா அறுத்தார்.* Buddha got rid of his desire.

**அவி-** *1. வேகவை,* boil. *முட்டையை அவி.* Boil the egg. *2. புழுங்குதல். அவிகிறது.* It is sultry. *3. நிறுத்து. விளக்கை அணை.* Put off the light. *4. நீராவியில் வேக வை. சர்க்கரை வள்ளிக்கிழங்கை அவி.* Steam the sweet potato.

**அவிசுவாசி-** *கடவுள் நம்பிக்கை இல்லாதவன்.* atheist. *அவன் ஓர் அவிசுவாசி.* He is an atheist.

**அவிட்டம்-** *27 விண்மீன்களில் மூன்றாவது.* The 23rd of the 27 stars.

**அவிநயக்கூத்து-** ஒரு வகைக் கூத்து. A kind of dance.

**அவியல்-** 1. சுவையுள்ள காய்கறிக் கூட்டு. A tasty vegetable mix. 2. கலவை, random mixture.

**அவியுணவு-** வேள்வி உணவு, holy offering.

**அவிழ்-** 1. பிரி, untie. முடிச்சை அவிழ். Untie the knot. 2. நெகிழ், slip. வேட்டி அவிழ்ந்தது. The dhoti slipped down.

**அவுரி-** கருநீலம், Indigo. வானவில்லின் ஏழு நிறங்களில் ஒன்று. one of the seven colours of a rainbow.

**அவை-** 1. அரசனுடைய சபை, royal court. 2. கூட்டம், gathering, assembly. நான் கற்றோர் அவையில் பேசிக் கொண்டிருக்கிறேன். I am speaking in a learned assembly. 3. கீழவை. lower house. The legis lative assembly or the Loksabha is the lower house. 4. மேலவை. Upper House. The Legislative Council or the Rajya Sabha is the upper house. 5. அவை, those. Those books. 6. அவை, they. They are trees.

**அவைத் தலைவர்-** 1. கூட்டத்தலைவர். President. Respected president of the meeting. 2. பேரவைத்தலைவர். Speaker.

**அவைமுன்னவர்-** ஆளுங்கட்சித் தலைவர். Leader of the ruling party either in legislature or parliament.

**அவையடக்கம்-** அவையோருக்கு வணக்கங் கூறுதல். courteous expression before the assembly.

**அழகன்-** அழகு நிரம்பியவன், a man of graceful appearance. ஆணழகன், a man of graceful physique.

**அழகி-** அழகுள்ளவள், a beauty. திரையழகி. cine beauty. தேவலோக அழகி, celestial beauty. பேரழகி. great beauty. உலக அழகிப் போட்டி. World beauty contest.

**அழகின்மை-** அழகு இல்லாமை, ugliness.

**அழகிய-** அழகான, beautiful மாமல்லபுரம் அழகிய விடுமுறை மகிழ்வுலா இடம். Mamallapuram is a beautiful holiday resort.

**அழகியல்-** அழகு பற்றிக் கூறுந் துறை. Aesthetics, the study of beauty and artistic taste.

**அழகு-** உணர்வின்பமும் உளவின்ப மும் தருவது. beauty. A thing of beauty is a joy for ever.

**அழகு-** பொருந்திய இயல்பு. characteristic conduct. It is proper on our part to help the poor and the needy.

**அழகுசாதனம்-** ஒப்பனைப் பொருள். cosmetic. Talcum is a cosmetic.

**அழகுநிலையம்-** ஆடவர்/பெண்டிர் அழகு செய்து கொள்ளும் இடம். beauty parlour for gents/ladies.

**அழகுப்பாட்டு வேலை-** கலையழகு பொருந்திய வேலை. An artistic work. Painting is an artistic work.

**அழற்சி-** வீக்கம். இதய வெளியுறை அழற்சி. Inflammation. The inflamma-tion of pericardium is pericaditis.

**அழி-** 1. ஒழி, destroy. அதிக அளவுக்கு மக்களை அழிக்க வல்லது அணுக் குண்டு. The atom bomb can destroy people in large numbers. 2. நீக்கு, erase. அழிப்பான் பென்சில் குறிகளை அழிக்கிறது. The eraser erases pencil marks. அழிதல், அழித்தல். destruction, erasure.

**அழிச்சாட்டியம்-** பிடிவாதம், obstinacy. அழிச்சாட்டியம் குழந்தைகளின் பிறவி இயல்பு. Obstinacy is an inherent quality of children.

**அழிப்பான்-** அழிக்கும் ரப்பர் துண்டு. eraser. அழிப்பான் நன்றாக உள்ளது. The eraser is good.

**அழிப்பு-** அழிவு, destruction. அணு ஆயுதங்கள் அழிப்புக்குக் கோரிக்கை எழுந்துள்ளது. There is a demand for the destruction of atomic weapons.

**அழிபாடு-** சிதைவு, ruin. சோழர் கால அரண்கள் இன்று அழிவுக் குவியல் களாக உள்ளன. The fortresses of the Chola period are now a mess of ruins.

**அழியாமை-** இறவாத்தன்மை, Immortality. ஆன்மா அழியாமை உடையது. The soul has immortality.

**அழிவின்மை-** அழியாத்தன்மை, conservation. ஆற்றல் அழிவின்மை. conservation of energy.

**அழிவுறு சொத்து-** அழியக் கூடிய உடைமை, wasting asset. எந்திரம் ஓர் அழிவுறும் சொத்து. The machine is a wasting asset.

**அழிவுதேய்வு-** அழிதலும் தேய்தலும், wear and tear. நம் உடல் அழிவு தேய்வுக்கு உட்பட்டது. Our body is subject to wear and tear.

**அழு-** கண்ணீர்விடு, weep. என் நண்பன் இறப்பு என்னை அழுமாறு செய்தது. My friend's death made me weep.

**அழுக்காறு-** பொறாமை, envy. அழுக்காறு ஒரு தீய குணம். Envy is a bad quality.

**அழுக்கு-** தூசி, மாசு, dust, dirt. அறை தூசு நிரம்பியுள்ளது. The room is full of dust.

**அழுகல்-** சிதைதல், decay, rot. காய் கறிகள் அழுகுகின்றன. The vegetables are perishing. முட்டை அழுகுகிறது. The egg is rotting.

**அழுகுணி-** அழுமூஞ்சி, cry baby. அடுத்த வீட்டில் ஓர் அழுகுணி உள்ளது. There is a cry baby in the next house.

**அழுத்தம்-** *1.* இறுக்கம், pressure. Water exerts pressure. *2.* சொற்களை அழுத்திக்கூறுதல். Stress, intonation. An Englishman speaks Tamil with English intonation. *3.* வற்புறுத்தல், stress. The stress is on punctuality. *4.* பிடிவாதம், obstinacy. உன் பிடிவாதம் பொறுத்துக் கொள்ள இயலாது. Your obstinacy is intolerable.

**அழுதுவடி-** சோர்வுடன் இரு. look dull. ஏன் அழுதுவடிகிறாய்? Why do you look dull?

**அழை-** *1.* கூப்பிடு, call. என் நண்பர் என்னை அழைத்தார். My friend called me. *2.* வருமாறு வேண்டு, invite. நான் உங்கள் எல்லோரையும் விழாவுக்கு அழைக்கிறேன். I invite you all to the function. *3.* கூறு, call. காந்தியடிகளைத் தேசத்தந்தை என்று அழைக்கிறோம். We call Gandhiji the father of our nation.

**அழைத்துவா-** கூட்டிக் கொண்டு வா, bring. அருள்கூர்ந்து எத்தனை நண்பர்களை அழைத்துவர முடியுமோ அத்தனை நண்பர்களைக் கூட்டத்துக்கு அழைத்து வா. Please bring as many friends as possible to the meeting.

**அழைப்பாளர்-** பிரதிநிதி, delegate. நான் மாநாட்டிற்கு ஓர் அழைப்

பாளர். I am a delegate to the conference.

**அழைப்பிதழ்-** ஒரு நிகழ்ச்சிக்கு வருமாறு அழைக்கும் தாள். invitation.

**அழைப்பு-** *1. அறிவிப்பு,* intimation. *எல்லா வேட்பாளர்களும் அழைப்பு பெற்றுள்ளனர்.* All the candidates have received intimation. *2. தொலைபேசி அழைப்பு.* phone call. I receive a large number of phone calls daily. *3. அறைகூவல்,* Challege

**அழைப்புமணி-** ஒருவர் வரவைத் தெரிவிக்கப் பயன்படும் மணி. call bell.

**அள்ளு-** *1. முகந்துஎடு, நீரை அள்ளு,* scoop water. *2. ஒருங்குசேர்,* gather. *கூந்தலை அள்ளிமுடி* Gather your hair in a bun.

**அள-** *1. அளவுசெய்,* measure. *உயரத்தை அள.* Measure the height. *2. ஆற்றலை அறி.* Measure his ability by his work. *3. அளந்துபேசு.* Measure your words before you speak. *4. மிகையாகக் கூறு.* You exaggerate things.

**அளப்பரிய-** *அளவிட முடியாத.* lofty. *அளப்பரிய சாதனைகள்.* Lofty achievements. *அளப்பரிய ஆற்றல்.* inexhaustible energy.

**அளப்பு-** *1. அளத்தல்,* measurement. *2. கட்டுக்கதை,* fabrication. It is all your fabrication.

**அளவளாவு-** *உரையாடு,* converse. *நாங்கள் நீண்டநேரம் உரையாடினோம்.* We conversed with each other for a long time.

**அளவளாவுதல்-** conversation.

**அளவிடு-** *1. அளவுகளைப் பொறி.* Graduate the scale. *2. மதிப்பிடு.* Assess the worth of the asset.

**அளவில்-** *1. மட்டத்தில்.* The issue was solved at a higher level. *2. தோராயமாக.* The meeting will start at about 9 a.m.

**அளவு-** *1. பருமன்.* What is the measurement? *2. வரம்பு.* Act within your limit. *3. மாதிரி. அளவுச்சட்டை* Model shirt. *5. படி பட்டணம் படி* Madras measure.

**அளவுக்கு-** *நிலைக்கு,* to that extent. Matter has not worsened to that extent.

**அளவுகோல்-** *அளவிடுங் கருவி.* *1. தராசு,* scales, a pair of scales. *2. மீட்டர் அளவுகோல்,* metre scale. *3. மதிப்பிடுங் கருவி.* What is the scale of judgement?

**அளவுச் சாப்பாடு-** *உணவு விடுதிகளில் வழங்கப்படும் குறிப்பிட்ட அளவுள்ள உணவு.* limited meal. *ஒ. முழுச்சாப்பாடு.*

**அளவெடு-** take measurements.

**அளவை-** *1.* Measure of dimensions. Weighing and thinking. *2. அறிவு வாயில்கள்.* Gateways of know ledge.

**அளவையியல்-** *தர்க்கநூல்,* logic, the science of reasoning.

**அளி-** *1. வழங்கு,* give, award. *அதிக மதிப்பெண் அளி.* Give more marks. He was awarded a prize of Rs. 10,000.

**அற்ப சொற்பம்-** *மிகக்குறைவு,* negligible amount.

**அற்பம்-** *1. மட்டம்,* being mean. *2. சாதாரணம்,* trifle. It is a trifle matter.

**அற்ப ஆயுள்**- short lived. *அவர் ஓர் அற்ப ஆயுளில் மறைந்த கணித அறிஞர்.* He was a short-lived maths genius.

**அற்புதம்**- *அரிய செயல்,* miracle. *சித்தர்கள் அற்புதங்கள் நிகழ்த்துவர்.* The Siddhas will perform miracles.

**அற்ற, அற்று**- *இல்லாத,* without. *நீரற்ற குளம்,* a tank without water.

**அறக்கட்டளை**- ஒரு நல்ல செயல் செய்வதற்குரிய நிதி ஏற்பாடு. Endowment. *திருக்குறள் அறக் கட்டளை.* Thirukkural endowment.

**அறக்கட்டளைச் சொற்பொழிவு** - endowment lecture.

**அறங்காவலர்**- *அறக்கட்டளைப் பொறுப்பாளர்,* trustee of a trust.

**அறநிலையத்துறை**- *இந்துசமயக் கோயில்களின் ஆட்சியைக் கவனிக்கும் அரசுத்துறை.* Hindu Religious Endowment Board.

**அறநூல்**- *செம்மையாக வாழ்வதற்குரிய நெறிகளைக் கூறும் நூல்,* ethical work. *திருக்குறள் ஒரு சிறந்த அறநூல்.* Thirukkural is a great ethical work.

**அறம்**- *தருமம்,* moral or righteous duty, virtue. *மனத்துக்கண் மாசில் லாமல் இருத்தலே அறமாகும்.* Whatever is done with a spotless mind is virtue. ஒ. *மறம்.*

**அறவுரை**- *சமய போதனை.* Moral instruction. ஒ. *அறிவுரை.*

**அறவே**- *முற்றிலும்,* completely. *குளம் அறவே வற்றிவிட்டது.* The tank is completely dry.

**அறி**- *தெரிந்துகொள்,* know. *உன்னை நீ அறிவாய்.* Know thyself.

**அறிக்கை**- *1. தகவல் தொகுப்பு,* report. *ஆண்டறிக்கை.* Annual report. *2. கருத்துத் தெரிவித்தல்,* statement. *தலைவர்கள் அறிக்கை வெளியிட்டுள்ளனர்.* The leaders have issued a statement.

**அறிகுறி**- *1. முன்னறி குறிப்பு,* symptom, indication. *நோயின் அறிகுறிகள்,* symptoms of disease. *கோபம் பலவீனத்தின் அறிகுறி.* Anger is an indication of one's weakness or frustration.

**அறிஞர்**- *1. படித்தவர்,* scholar. *தமிழ் அறிஞர்,* tamil scholar. *2. வல்லுநர்,* expert. *அறிவிய லறிஞர்,* science expert.

**அறிமுகப்படுத்து, அறிமுகம் செய்** - *1. ஒருவரைப் பற்றி மற்றொருவருக்கு தெரிவித்தல்,* introduce. Now I shall introduce the speaker to you. *2. ஒரு பொருளை அறிமுகம் செய்,* introduce the subject. I shall introduce this book to you.

**அறியாத**- *விவரம் தெரியாத,* immature. He is an immature boy.

**அறியாமல்**- *விருப்பத்திற்கு அப்பாற் பட்டு,* unknowingly. *அறியாமலேயே சில காரியங்களை நாம் செய்கிறோம்.* We do certain things unknowingly. ஒ. *அறிந்து.*

**அறிமுகம்**- *1. ஒருவரை மற்றொருவர் தெரிந்து கொள்ளும் நிலை,* acquaintance. *அவர் எனக்கு நன்கு அறிமுகம் உள்ளவர்.* He is an old acquaintance. *2. ஒரு பொருளை அறிதல். எனக்கு ஆங்கிலத்தில் நல்ல அறிமுகம் உண்டு.* I have good acquaintance with English.

**அறியாமை**- *மடமை,* ignorance. *உன் அறியாமை உன் பதிலில் தெரிகிறது.* Your ignorance is revealed in your reply.

**அறிவாளி-** *அறிஞர்,* scholar, intellectual. *அவர் ஒரு அறிஞர்.* He is an intellectual.

**அறிவி-** *1. அறியச் செய்,* announce, declare. *தாமதமாக வருபவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்று தலைமையாசிரியர் அறிவித்தார்.* The Headmaster announced that latecomers would be punished. *இன்று விடுமுறை என்று அரசு அறிவித்தது.* The government declared a holiday today. *2. தெரிவி,* inform. *நீங்கள் வாழுமிடத்தில் திருட்டு நடந்தால் உடனே காவலருக்குத் தெரிவிக்கவும்.* Please inform the police if any theft is committed in your locality.

**அறிவிப்பு-** announcement. *பள்ளியவையில் பல அறிவிப்புகளைத் தலைமையாசிரியர் செய்தார்.* The Headmaster made many announcements in the Assembly. *வெறும் அறிவிப்பு அருஞ்செயல் ஆகாது.* Mere announcement is not achievement.

**அறிவிப்புப்பலகை-** *செய்திப்பலகை,* noticeboard. *பா. சங்கப்பலகை.*

**அறிவியல்-** *விஞ்ஞானம்,* science. *அறிவியல் என்பது அறிவுத் துறைகள் பலவற்றை ஓர் நெறி முறைப்படி படிக்கும் துறை.* Science is the systematic study of different fields of knowledge.

**அறிவியல் ஆர்வம்-** scientific curiosity.

**அறிவியல் கூடம்-** *அறிவியல் ஆய்வுகள் செய்யப்படும் இடம்.* science laboratory.

**அறிவியல் பார்வை-** *அறிவியல் மனப்பான்மை,* scientific outlook.

**அறிவியல் மனப்பான்மை-** *விருப்பு வெறுப்பற்ற உளப்பாங்கு.* Scientific attitude.

**அறிவியல் முறை-** *சிக்கல் தீர்க்கும் முறை. எல்லாத் துறைகளிலும் பயன் படுவது.* Scientific method used in all fields to solve problems. *பா. உய்மானம், உற்றுநோக்கல், ஆய்வு, கருதுகோள்.*

**அறிவிலி-** *முட்டாள்,* fool, imbecile.

**அறிவீனம்-** *முட்டாள்தனம்,* stupidity.

**அறிவு-** *உண்மைப் பொருள். மெய்ப் பொருள் காண்பது அறிவு.* To find out the truth in everything is knowledge.

**அறிவுத்துறை-** *அறிவின் பல பிரிவுகள்,* branches of knowledge. *இயற்பியல் ஓர் அறிவுத்துறை.* Physics is a branch of knowledge.

**அறிவுரை-** *1. புத்திமதி,* advice, counsel. *அறிவுரைகூறு.* Please advise him on the matter. *2. போதனை. புத்தரின் அறிவுரைகள்,* teachings of Buddha.

**அறிவுரையாளர்-** *ஆலோசகர்,* adviser. *கல்வி அறிவுரையாளர்,* educational adviser.

**அறிவுரை வழங்கல்-** counselling. *தொழில் படிப்புகளுக்குரிய அறிவுரை வழங்கல் நாளை முதல் தொடங்குகிறது.* Counselling for technical courses begins tomorrow.

**அறிவுறுத்து-** *புத்திமதி கூறு,* advise. *கூறியவாறு வேலைசெய்யுமாறு தொழிலாளர்களை அறிவுறுத்து.* Instruct the workers to do the work as instructed. *அறிவுறுத்தல்,* instruction.

**அறிவுஜீவி-** *அறிவாளி,* intellectual.

**அறு-** 1. துண்டாக்கு, Cut. பலாப் பழத்தை அறு. Cut the jack fruit. 2. கீறு. வயிற்றை அறு. Cut open the stomach. 3. அலுப்படையச் செய், bore. என்னை அறுக்காதே. Don't bore me.

**அறுகோணம்-** ஆறுகோண வடிவமுள்ள, hexagon.

**அறுசுவை-** இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, உறைப்பு, கசப்பு என ஆறுவகை சுவைகள், six kinds of tastes such as sweet, sour, salty, astingent, pungent and bitter.

**அறுசுவை உணவு-** food of six tastes.

**அறுதி-** இறுதி, final. அறுதித்தீர்ப்பு, final judgement.

**அறுதிப் பெரும்பான்மை-** சட்டமன்றத்திலும் நாடாளுமன்றத்திலும் ஆளுங்கட்சிக்கு இருக்க வேண்டிய பாதிக்கு மேற்பட்ட பெரும்பான்மை. Absloute majority for the rulling party is essential either in Assembly or Parliament.

**அறுதியிடு-** வரையறு. செய்தியை அறுதியிட்டுக் கூறு. Confirm the news.

**அறுப்பு-** அறுவடை, harvest. நல்ல அறுப்பு, good harvest.

**அறுப்புக் கூலி-** அறுப்பு வேலைக்கு அளிக்கப்படும் சம்பளம். Wages given to the work such as harvesting, sawing wood and brick-making.

**அறுபதாம் கல்யாணம்-** ஒருவருக்கு அறுபதாண்டு நிறையும்பொழுது மீண்டும் ஒரு திருமணம்போல நடைபெறும் நிகழ்ச்சி. Sixtieth birthday.

**அறுபது-** ஆறு பத்துகள், sixty.

**அறுவடை-** 1. அறுப்பு, harvest. 2. விளை பலன், produce, yield, fruit. இந்த ஆண்டு நல்ல விளைவு. The yield is good this year.

**அறுவை-** 1. அறுவை மருத்துவம், surgery. 2. சலிப்பு, boredom.

**அறை-** 1. கன்னத்தில் அறை. Slap on the cheek. 2. ஆணி அடி. Drive the nail. 3. காரையைச் சுவரில் அறை. Throw the mortar on the wall. 4. முதுகில் அறை. Strike on the back. 5. தங்கும் சிறிய இடம், room. 6. சிறுபகுதி, compartment.

**அறைகூவல்-** 1. பொது அழைப்பு, call. 2. சவால், challenge. என்னுடைய நேர்மைக்கு அது ஓர் அறைகூவல். It is a challenge to my integrity.

**அறைகூவு-** call, invite, challenge.

**அறைவாய்-** கணவாய், pass.

**அன்பர்-** 1. அன்பிற்குரியவர். well-wisher. 2. ஆர்வலர், enthusiast. திரைப்பட அன்பர்கள், the cine enthusiast.

**அன்பளிப்பு-** பரிசு, gift, present.

**அன்பு-** 1. பாசம், affection. அன்பு காட்டு. Show affection. 2. காதல், love. காதல் மலர்ந்தது. Love blossomed.

**அன்றாடம்-** தினசரி, daily. அன்றாட வாழ்க்கை, daily life, everyday life.

**அன்றாடங் காய்ச்சி-** நாள்தோறும் சம்பாதித்து வாழ்க்கை நடத்துபவர். One who makes one's living through one's daily earnings.

**அன்றி-** தவிர, without. அவனன்றி ஓரணுவும் அசையாது. Nothing moves in this world without Him, the Lord.

**அன்றியும்-** மேலும், moreover. அவர் ஓர் அறிவாளி. அன்றியும் அவர் ஒரு பண்பாளருமாவார். He is a scholar. Moreover he is a cultured man.

**அன்று-** *அந்த நாள்,* that day. *அவன் அன்று வந்தான்.* He came that day.

**அன்று-** *இல்லை,* not. *அது மரமன்று.* It is not a tree. *தெய்வம் என்பது ஆணுமன்று பெண்ணுமன்று.* A deity is neither a male nor a female.

**அன்றைய-** *1. அந்த நாளில் நடைபெற்ற,* of that day. *அன்றைய விழா,* the function of that day. *2. அந்தக் காலத்தினுடைய,* of those days. *அன்றைய மாணவர்கள் இன்றைய தலைவர்கள்.* The students of those days are the leaders of these days or today.

**அன்னக்கரண்டி-** *அன்னவெட்டி,* a flat spoon to serve cooked rice.

**அன்னக் காவடி-** *1. மிக ஏழை.* Very poor. *அவன் ஓர் அன்னக் காவடி.* He is a very poor man. *2. சோற்றை மட்டும் பிச்சையாக ஏற்பவர்,* one who receives rice only as alms. *3. ஒரு கோலின் இருமுனைகளிலும் சம நிலையில் பிச்சை எடுக்கத் தொங்க விடப்பட்ட கூடைகள்,* A basket balanced on the pole of a beggar or mendicant.

**அன்ன தானம்-** *ஓர் அறப்பணி கருதி ஏழைகளுக்கு இலவச உணவு அளித்தல்,* poor feeding. *அன்ன தானம் சிறந்த தானம்.* Poor feeding is the best gift.

**அன்னம்-** *1. சோறு,* food. *அன்னம் படை,* Serve rice. *வெண்ணிறப் பறவை,* swan. *அன்ன நடையாள்,* the damsel walking like a swan.

**அன்னாசி-** *அன்னாசிப்பழம்,* pineapple.

**அன்னியில்-** *அல்லாமல்; தவிர,* besides. *அவன் போட்டியில் கலந்து கொண்டான். அது அன்னியில் பல பரிசுகளும் வென்றான்.* He took part in sports. Besides, he won many prizes.

**அன்னியோன்யம்-** *நெருக்கமான உறவு,* intimacy. *அவர்கள் இருவரின் அன்னியோன்யம் குறிப்பிடத் தக்கது.* The intimacy between them is remarkable.

**அன்னை-** *1. தாய்,* mother. *2. வணக்கத்திற்குரிய சொல்,* a term of reverence. *அன்னை தெரசா.* Mother Teresa.

**அனந்தம்-** *முடிவற்றது,* infinite. *ஆண்டவன் காட்டும் வழி அனந்தம்.* The path showed by God is infinite.

**அனர்த்தம்-** *வேறுபட்ட பொருள்,* wrong sense. *எதையும் அனர்த்தம் பண்ணாதே.* Don't take anything in the wrong sense.

**அனல்-** *1. வெப்பம்,* heat. *அவர் பேச்சில் அனல் தெறித்தது.* His speech radiated heat. *2. நெருப்பு.* fire. *அனலில் விழுந்த மெழுகு,* like wax melted in fire.

**அனல்மின்நிலையம்-** *கரிவெப்ப ஆற்றலை மின்சாரமாக மாற்றும் நிலையம்,* thermal power station.

**அனாதரவு-** *ஆதரவற்ற நிலை,* without any help. *தற்பொழுது நான் அனாதரவாக உள்ளேன்.* Now I am without any help.

**அனாதி-** *ஆதி இல்லாதது,* that which has no beginning.

**அனாதிகாலம்-** time immemorial. *உலகம் அனாதிகாலந்தொட்டு இருந்து வருகிறது.* The world exists from time immemorial.

**அனாமத்து-** *1. கணக்கில் காட்ட முடியாத கணக்கு,* suspense account. *2. யாருக்கும் சொந்தமில்லாதது,*

anonymous. அனாமத்து நிலம், anonymous land, unclaimed land.

**அனிச்சம்-** முகர்ந்தாலே வாடும் நுண் உணர்வுள்ள பூ. Anicha, a sensitive flower.

**அனிச்சை-** தானாக நடக்கும் உடலசைவு, அனிச்சைச் செயல், reflex action. கண்ணிமைப்பது ஓர் அனிச்சைச் செயல். Winking of eyelids is a reflex action. ஒ. இச்சை.

**அனுக்கிரகம்-** 1. அருள், grace. நமக்கு கடவுள் அனுக்கிரகம் வேண்டும். We need God's grace. 2. ஆசி. blessing. தங்கள் ஆசி வேண்டும். I seek your blessings.

**அனுகூலம்-** 1. நன்மை, advantage. இப்பற்பசை பல அனுகூலங்கள் கொண்டது. This toothpaste has many advantages. 2. சாதகம், favour. காற்று நமக்கு அனுகூலமாக உள்ளது. The wind is favourable to us. ஒ. பிரதிகூலம்.

**அனுசரணை-** உதவி, help. இத் தள்ளாத வயதில் என் மகன் எனக்கு அனுசரணையாக உள்ளான். At this old age, my son is offering a lot of help to me.

**அனுசரி-** கடைப்பிடி, observe. மௌனம் அனுசரி. Observe silence.

**அனுதாப அலை-** பொதுவாகத் தேர்தலில் ஒரு கட்சிக்கு மக்கள் காட்டும் பரிவு, sympathy wave. இந்தத் தேர்தலில் அனுதாப அலை எக்கட்சிக்கும் இல்லை. In this general election, there was no sympathy wave for any party.

**அனுதாபம்-** 1. இரக்கம், sympathy. என் அனுதாபம் என்றும் உனக்குண்டு. You deserve my sympathy for ever. 2. இரங்கல், condolence. என் ஆழ்ந்த அனுதாபங்கள். My heart-felt condolences.

**அனுதாபி-** இரக்கம் காட்டுபவர், sympathizer.

**அனுதினமும்-** நாள்தோறும், every day. அனுதினமும் இறைவனை வணங்கு. Pray God everyday.

**அனுப்பு-** 1. அனுப்புதல், send. இப்புத்தகத்தை அனுப்பு. Send this book. 2. செலுத்து, transmit. செயற்கைக்கோள் தான் ஆராயுங் கோள்களைப் பற்றிய செய்திகளை அனுப்புகிறது.
The artificial satellite sends information about the planets it investigates.

**அனுப்புநர்-** விடுநர், sender. ஒ. பெறுநர். 2. வெளியே அனுப்பு, send out. பள்ளிக்கட்டணம் கட்டாத மாணவர்கள் வகுப்பிலிருந்து வெளியே அனுப்பப் பட்டனர். The boys who had not yet paid the school fees were sent out of the class.

**அனுபந்தம்-** 1. பிற்சேர்க்கை, appendix. இப்புத்தகத்தில் பயனுள்ள அனுபந்தங்கள் உள்ளன. This book contains useful appendices. 2. பின் இணைப்பு. supplement. ஒரு பயனுள்ள அனுபந்தம் வெளியிடப்பட்டுள்ளது. A useful supplement to the book has been published.

**அனுபல்லவி-** கீர்த்தனையின் இரண்டாம் பகுதி, the second part or unit of a musical composition.

**அனுபவசாலி-** பட்டறிவு உள்ளவர், an experienced person. அவர்

நிறைந்த அனுபவம் உள்ளவர். He is a man of rich experience.

**அனுபவம்-** பட்டறிவு, experience. மருத்துவத் தொழிலில் அவருக்குப் பழுத்த அனுபவம் உண்டு. He has rich experience in medical practice.

**அனுபவி-** 1. நுகர், enjoy. இனிய இசையை அனுபவி. Enjoy sweet music. 2. துன்பம் உணர். ஒருவர் வாழ்க்கையில் துன்பமும் அனுபவிக்க வேண்டியதே. One has to experi ence sufferings also in life.

**அனுபூதி-** அனுபவ ஞானம், wisdom by experience. தவசிலர்கள் அனுபூதி பெற்றவர்கள். Saints get wisdom by experience.

**அனுபோகம்-** நுகர் உரிமை, posses sion. நிலங்கள் அத்தனையும் என் அனுபோகத்தில் உள்ளன. All the lands are in my possession.

**அனுபோக உரிமை-** possession right.

**அனுமதி-** 1. சேர், admit. என் தந்தை மருத்துவமனையில் அனுமதிக்கப் பட்டார். My father was admited to hospital. 2. இசைவளி, permit. இருவரை மட்டும் அனுமதி. Permit two only.

**அனுமதி-** 1. இசைவு, permission, consent. அனுமதி அளிக்கப்பட்டது. Permission granted. ஒப்புரிமைச் சீட்டு, permit. அனைத்து மாநில ஒப்புரிமைச் சீட்டு. All states permit.

**அனுமானம்-** உய்த்தறிவு, inference. அறிவியல் முறையின் ஒருபடி அனுமானம். Inference is a step in scientific method. பா. அறிவியல் முறை, முன்மானம், கருதுமானம்.

**அனுமானி-** உய்த்தறி, infer. இந் நிகழ்ச்சியிலிருந்து நீ என்ன அனுமானிக்கிறாய்? What do you infer from this incident?

**அனுஷ்டானம்-** கடைப்பிடித்தல், observation.

**அனுஷ்டி-** கடைப்பிடி, observe. விரதம் அனுஷ்டி. Observe fasting.

**அனைத்து-** 1. அகில, all. அனைத்துலக அறிவியலார். World scientists. 2. அனைத்துக் கட்சிக் கூட்டம். All - party meeting. அனைத்துக் கரைப்பான், universal solvent.

**அனைத்தும்-** எல்லாம், all. ஊர்திகள் அனைத்தும் திருப்பிவிடப்பட்டன. All the vehicles were diverted.

**அனைவரும்-** எல்லாரும், all persons. அவருடைய பிள்ளைகள் அனைவரும் நல்லவர்கள். All his sons are good.

## ஆ

**ஆக்கபூர்வம்-** பயனுள்ள, cons tructive. ஆக்கபூர்வமான திறனாய்வு, constructive criticism.

**ஆக்கம்-** பயன், benefit. இதனால் நீ பெறும் ஆக்கம் என்ன? What is the benefit that you get from it? 2. முன்னேற்றம், progress. உன்னுடைய ஆக்கம் நன்கு அமைந்துள்ளது. Your progress is good. 3. படைப்பாற்றல், creative talent. உன் ஆக்கச் செயல் வியப்பிற்குரியது. Your creative talent is really amazing.

**ஆக்கியோன்-** ஆசிரியர், author. இந்நூலை ஆக்கியோன் யார்? Who is the author of this book?

**ஆக்கிரமி-** கைப்பற்று, (இடம், நிலம்) occupy, encroach. காஷ்மீரின்

ஒரு பகுதியைப் பாகிஸ்தான் ஆக்கிரமித்துள்ளது. Pakistan has occupied a part of Kashmir. சில அரசியல்வாதிகள் புறம்போக்கு நிலங்களை ஆக்கிரத்துக் கொள் கிறார்கள். Some politicians encroach porom boke lands.

**ஆக்கிரமிப்பு-** வலுத்தாக்கல், aggres sion. நேரு காலத்தில் சீனா இந்தியாவில் ஆக்கிரமிப்பு செய்தது. During the period of Nehru, China committed aggression in India. ஆக்கிரமிப்பு என்பது வலியத் தாக்கும் விலங்கு நடத்தை யுமாகும். Aggression is also a type of animal behaviour. ஆக்கிர மிப்பாளர், Aggressor. ஓரிடத்தில் சட்டத்திற்குப் புறம்பான முறையில் வீடு முதலியவை கட்டுதல். encroachment. சாலையோர ஆக்கிரமிப்புகள் அரசால் அகற்றப் பட்டன. The roadside encroach ments were removed by the Government.

**ஆக்கு-** 1. தோற்றுவி, create. கடவுள் உலகத்தை ஆக்கினார். God created the world. 2. நூல் எழுது. Write books. அவர் பல நூல்களை ஆக்கியுள்ளார். He has written many books. 3. சமை, cook. சோறு ஆக்கு, Cook food. 4. உருவாக்கு, produce. ஒரு பள்ளியின் கடமை நல்ல மாணவர்களை ஆக்குவது ஆகும். The duty of a school is to produce good students.

**ஆக்கை-** 1. உடல், body. மனித ஆக்கை அழிவது. Human body is mortal. 2. வைக்கோல்புரி கயிறு. Rope made from straw.

**ஆக்ஞை-** கட்டளை, order, command. குருவின் ஆக்ஞை, the command of the Guru.

**ஆக்ரோஷம்-** வெறி, fury. ஆக்ரோ ஷப் பேச்சு, a furious speech.

**ஆக-** மொத்தத்தில், altogether. ஆக நீ சொல்வதெல்லாம் உண்மை. What you say is altogether true. 2. ஆகவே, therefore. ஆகவே வருவதற்கு முயலுக. Therefore try to come. 3. (இலக்) வியங்கோள் வினை. (எ.டு) நன்மையே செய்வா யாக. Do good only.

**ஆகட்டும்-** சரி. ஆகட்டும் பார்ப்போம். Let me try.

**ஆகமம்-** புனிதநூல், sacred work. விவிலிய நூல் ஓர் ஆகமம். The Bible is a sacred work.

**ஆகாசவாணி-** 1. விண்ணிலிருந்து கேட்கும் குரல், a voice from heaven. 2. வானொலி, radio.

**ஆகாயம்-** வானம், sky.

**ஆகாய விமானம்-** வானூர்தி, aero plane.

**ஆகாரம்-** உணவு, food. சத்தான ஆகாரம், nutritious food.

**ஆகிருதி-** உடற்கட்டு, physique. அவருக்கு வலுவான ஆகிருதி உண்டு. He has a strong physique.

**ஆகு-** ஒரு நிலையை அடை, become. அறிஞராகு. Become a scholar. 2. செய்யப்பட்டது, be made. இம் மேசை மரத்தால் ஆக்கப்பட்டது. This table is made of wood. 3. காலம் கழிதல். Passage of time. இரண்டு மணி ஆயிற்று. Two hours have passed.

**ஆகுதி-** ஹோமத்தீயில் இடப்படும் பொருள். Oblation offered into the Sacrificial fire.

**ஆங்காங்கு-** அங்கங்கே, scattered. ஆங்காங்கு நின்று கொண்டிருப்பவர்கள் அரங்கத்திற்குள் வரவும். கூட்டம் தொடங்கவுள்ளது. People who stand scattered are requested to come to the hall. The meeting is about to begin.

**ஆங்காரம்-** அகங்காரம், arrogance, ego. அவர் அகங்காரம் பிடித்தவர். He is an arrogant man.

**ஆங்கிலம்-** இங்கிலிஷ் இங்கிலாந்தில் பேசப்படும் மொழி. English, is the languge spoken in England. ஆங்கிலம் ஓர் அனைத்துலக மொழி. English is an international language.

**ஆச்சரியக்குறி-** நிறுத்தல் குறிகளில் ஒன்றான வியப்புக்குறி, exclamation mark. ரோஜாப்பூ எவ்வளவு அழகாக உள்ளது! How beautiful is the rose!

**ஆச்சரியம்-** வியப்பு, surprise. என்ன ஆச்சரியம்! What a surprise!

**ஆசனம்-** 1. இருக்கை, seat. 2. யோகாசனம் கூறும் இருக்கை நிலை, Yogasana.

**ஆசனவாய்-** குதம், மலவாய், anus.

**ஆசாபாசம்-** உலகப்பற்று, attachment. ஆசாபாசம் ஓர் இயற்கை குணம் ஆகும். Attachment is a natural quality.

**ஆசாமி-** ஆள், person, individual. அவர் ஒரு கிராமத்து ஆசாமி. He is a villager.

**ஆசாரம்-** ஒழுக்கம், behaviour, conduct. அச்சமே கீழ்களது ஆசாரம். Fear is the behaviour of the base people.

**ஆசாரி-** தச்சர், carpenter. ஆசாரி ஒரு பெட்டி செய்து கொண்டிருக்கிறார். The carpenter is making a box.

**ஆசாரியார்-** 1. ஆன்மீக குரு, spiritual guru. சமயச் சான்றோர்களுக்குக் கடவுள் ஆன்மீக குரு. God is the spiritual guru of savants. 2. வைணவரில் ஒரு பிரிவினர், a sect of Vaishnavaites. மூதறிஞர் இராஜ கோபாலாசாரியார். Elder statesman Rajagopalachariar.

**ஆசி-** ஆசீர்வாதம், blessings. 1. கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக. May God bless you. 2. என் நல்லாசிகள். My good wishes!

**ஆசீர்வதி-** நல்வாழ்த்துக் கூறு, bless. பெரியோர்கள் மணமக்களை ஆசீர்வதித்தனர். The elders blessed the wedded couple.

**ஆசிரமம்-** 1. தவசீலர் வாழுமிடம், abode of saints. 2. ஆதரவற்றோர் வாழுமிடம், orphanage.

**ஆசிரியர்-** 1. பயிற்றுபவர், teacher. அவர் ஓர் அறிவியல் ஆசிரியர். He is a science teacher. 2. இதழாசிரியர், editor. மாதஇதழ் ஆசிரியர், monthly editor. 3. நூலாசிரியர், author, writer. இந்நூலாசிரியர் அவரே. He is the author of this book. 4. நல்லாசிரியர், best teacher. நல்லாசிரியர் விருது, best teacher award.

**ஆசிரியை-** பெண் ஆசிரியர், woman teacher.

**ஆசுவாசம்-** ஆறுதல், solace. என் அறிவுரை அவனுக்கு ஓர் ஆசுவாசமாகும். My advice is a solace to him.

**ஆசை-** ஆவல், desire. வானவெளிக்குச் செல்ல எனக்கு ஆசை. I have a desire to go to space.

**ஆசைக்கிழத்தி-** ஆசைநாயகி, concubine.

**ஆசைகாட்டு-** தூண்டு, tempt. தீய செயல்கள் செய்யுமாறு அவன் எனக்கு ஆசைகாட்டினான். He tempted me to do evil deeds.

**ஆசைவார்த்தை-** தூண்டும்சொல், tempting words. உன் ஆசை வார்த்தைகளில் நான் மயங்க மாட்டேன். I shall not be carried away by your tempting words.

**ஆட்குறைப்பு-** ஒரு நிறுவனத்தில் சிக்கனம் கருதி வேலை செய்பவரைக் குறைத்தல், retrenchment. ஆட்குறைப்பு ஒரு சிக்கன நடவடிக்கையாகும். Retrenchment is an austerity measure.

**ஆட்கொள்-** 1. அடியாராக ஏற்றுக் கொள். Take as a slave. இறைவன் தம் அடியார்களை ஆட்கொள்வார். God will take His savants as slaves. 2. பிடி. சோகம் அவரை ஆட்கொண்டது. Sorrow seized him.

**ஆட்சி-** 1. ஆளுகை, rule. சோழர் ஆட்சி. Chola rule. 2. சொல்லாட்சி, usage. தமிழ் இலக்கணமும் சொல்லாட்சியும். Tamil grammar and usage. நல்லாட்சி, Good Rule

**ஆட்சிமொழி-** அரசு நிர்வாக மொழி, Official language. தமிழ் நாட்டில் தமிழ் ஆட்சி மொழியாகும். Tamil is the official language in Tamil Nadu.

**ஆட்சிமொழிச் சட்டம்-** official language act.

**ஆட்சேபனை-** மறுப்பு, objection. ஆட்சேபனை இல்லாததால், கூட்டத்தில் தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியது. The resolution was passed at the meeting unanimously since no objection was raised

**ஆட்சேபி-** மறு, object. நான் இந்தத் தீர்மானத்தை ஆட்சேபிக்கிறேன். I object to this resolution.

**ஆட்டக்காரர்-** விளையாடுபவர். sportsman, sportswoman. அவர் ஒரு சிறந்த ஆட்டக்காரர். He is a good sportsman.

**ஆட்டபாட்டம்-** கேளிக்கை, entertainment. திருமண வீட்டில் ஒரே ஆட்ட பாட்டம். There were variety entertainments in the wedding house.

**ஆட்டம்-** 1. அசைவு, jerk. வண்டி ஆட்டத்துடன் நின்றது. The bus stopped with a jerk. 2. நடனம், dance. கதக்களியாட்டம். Kadhakali dance. 3. காட்சி, show முதல் ஆட்டத்திற்குச் செல்வோம். Let us go to the first show.

**ஆட்டம் காண்-** நிலைப்பு குலைதல், be in a shaky position. புவி ஆட்டங் கண்டது. The earth shook under us. ஊழல் குற்றச்சாட்டு அரசை ஆட்டங்காண வைத்தது. The corruption scandal shook the government.

**ஆட்டிவை-** ஆட்டிப்படை, dominate. தமக்கு அதிகாரம் இருப்பதால் அவர் அனைவரையும் ஆட்டி வைக்கிறார். He dominates all by his authority. ஆட்டிவைத்தல், domination.

**ஆட்டு-** அசை, wag, nod. நாய் வாலை ஆட்டுகிறது. The dog wags its tail. தம் இசையைக் காட்ட

*அவர் தலையை ஆட்டினார்.* He nodded his head in agreement.

**ஆட்டு-** *1. கலங்கச் செய்,* shake. *நாங்கள் அச்சத்தால் ஆடினோம்.* We shook with fear. *2. ஆடுமாறு செய், ஊஞ்சலை ஆட்டு.* Rock the swing. *3. அரை. தோசைக்கு மாவாட்டு.* Grind the wet rice for dosai.

**ஆட்டுக்கல்-** *குடகல்,* the wet grinder.

**ஆட்டுத்தொட்டி-** *ஆடு வெட்டுமிடம்,* slaughter house.

**ஆட்படு-** *1. உட்படு,* subject to. *வழியில் நான் காவலரின் ஐயத்திற்கு ஆட் பட்டேன்.* On my way, I was subjected to the suspicion of the police. *பா. ஆட்கொள்.*

**ஆடம்பரம்-** *பகட்டு மிகுந்தது,* luxury. *நட்சத்திர உணவுவிடுதி ஆடம்பரம் நிறைந்தது.* The star hotel offers all luxuries.

**ஆடம்பரவாழ்வு-** luxurious life.

**ஆடல்-** *நடனம்,* dance. *ஆடல் ஒரு கலையாகும்.* Dance is an art.

**ஆடவன்-** *ஆண்,* man, male person. *ஆடவருக்கு மட்டும்.* For men only.

**ஆடி-** *ஒளியைப் பிரதிபலிக்கும் பரப்பு,* mirror. *குழிஆடி,* concave mirror. *குவியாடி,* convex mirror. *சமதள ஆடி,* plane mirror. *நிலைக் கண்ணாடி,* standing mirror.

**ஆடு-** *1. அசை. இலைகள் ஆடின.* Leaves moved. *2. நடுங்கு. அச்சத் தால் நான் ஆடிப் போனேன்.* I shook with fear. *3. அதிர்தல்,* vibrate. *புகைவண்டி சென்ற விரைவில் சுவர் ஆடியது.* The wall vibrated due to the fast running of the train.

**ஆடு-** *கால்நடை வகுப்பைச் சார்ந்த ஒரு விலங்கு,* goat or sheep.

**ஆடுகளம்-** *விளையாடுமிடம்,* court. *கைப்பந்து ஆடுகளம்,* volleyball court.

**ஆடுசதை-** *கண்டைக் கால் தசை,* calf muscle.

**ஆடை-** *1. உடை,* garment. *ஆடையணி.* Put on your clothes. *2. பாலாடை,* cream of milk.

**ஆண்-** *ஆண் இனம்,* male.

**ஆண்குறி-** *ஆண் இனப்பெருக்க உறுப்பு,* penis.

**ஆண்டவன்-** *இறைவன்,* God, deity.

**ஆண்டான்-** *அதிபதி, தலைவர்,* Lord,master.

**ஆண்டான், அடிமை-** Master and slave.

**ஆண்டி-** *பரதேசி,* beggar.

**ஆண்டு-** *1. வருடம்,* year. *2. திருவள்ளுவர் ஆண்டு.* Thiruvalluvar era.

**ஆண்பால்-** *ஐம்பால்களில் ஆணைக் குறிப்பது,* masculine gender. *'அவன்' ஆண்பால்.* 'He' denotes masculine gender. *ஒ. பெண்பால்.*

**ஆண்பிள்ளை-** *1. ஆண்குழந்தை,* male child. *2. வயது வந்த ஆண்,* adult male.

**ஆண்மை-** *ஆணுக்குரிய தன்மை,* manliness.

**ஆணவம்-** *இறுமாப்பு,* arrogance. *ஆணவம் பிடித்த அதிகாரி,* arrogant officer.

**ஆணழகன்-** *1. அழகான ஆண்,* handsome man. *நல்ல உடற்கட்டு உள்ளவன்,* a man of fine physique.

**ஆணி-** *1. கூரான சிறிய இரும்புத் துண்டு,* nail. *ஆணி அடி.* Drive a Nail. *2. கடையாணி,* linch pin. *3. காலாணி,* corn.

**ஆணித்தரம்-** *அழுத்தம் திருத்தமாக,* fitting. *ஆணித்தரமான பதில்,* a fitting reply.

**ஆணி வேர்-** முதன்மை வேர், tap root. ஆணிவேர் இருவிதையிலைத் தாவரங்களுக்கு உண்டு. The dicots possess taproot.

**ஆணை-** 1. உத்தரவு, order, command. அரசு ஆணை. Government Order. 2. உறுதிமொழி, swearing. இறைவன் மேல் ஆணையாகக் கூறுகிறேன். I swear in the name of God.

**ஆணையம்-** ஆணைக்குழு,commission. ஆணையம் அமைக்க அரசுக்கே உரிமையுண்டு. The Government only has the power to appoint a commission. தேர்தல் ஆணையம். Election Commission.

**ஆணையர்-** அரசுத்துறையில் உயர் பதவியிலுள்ளவர், commissioner. Police Commissioner. காவல்துறை ஆணையர்.

**ஆத்தாள்-** 1. தாய், mother. 2. காளி ஆத்தாள், Kali, a ferocious female deity.

**ஆத்திகம்-** கடவுள் நம்பிக்கை, theism. ஆத்திகம் என்பது ஒரு பழைமையான கடவுள் கொள்கை யாகும். Theism is a good old theory about God. ஆத்திகர், theist. ஒ. நாத்திகம்.

**ஆத்திரம்-** கோபம், anger. ஆத்திரக் காரனுக்குப் புத்தி மட்டு. An angry man loses his sense easily.

**ஆத்ம சுத்தி-** உளத்தூய்மை, purity of heart. என் ஆத்மசுத்தியையே நான் நம்புகிறேன். I believe in the purity of my heart.

**ஆத்ம ஞானம்-** ஆன்ம அறிவு, self-realization. முனிவர்கள் ஆன்ம ஞானமுள்ளவர்கள். Saints are men of self-realization

**ஆத்ம ஞானி-** person of self-realization.

**ஆத்ம திருப்தி-** மனநிறைவு, hearts content. இதை நான் என் ஆத்ம திருப்திக்குச் செய்கிறேன். I do this job for my heart's content.

**ஆத்ம நண்பன்-** ஆருயிர் நண்பன், bosom friend.

**ஆத்மா-** ஆன்மா. உள்ளொளி, soul. ஆத்மா அழியாதது. Soul is immortal.

**ஆத்மார்த்தம்-** மனம் விட்டுப் பேசுதல், openness of mind, frankness.

**ஆதங்கம்-** கவலை, anxiety. எல்லாம் ஆதங்கம் தான். It is all due to anxiety.

**ஆதரவாளர்-** ஆதரவு தருபவர், supporter. தமிழியக்கத்திற்குப் பல ஆதரவாளர்கள் உண்டு. The Tamil Movement has many supporters. ஒ. செயல்வீரர்.

**ஆதரவு-** 1. உதவி, support. உங்கள் ஆதரவு வேண்டும். We request your support. 2. ஒப்புதல், approval. கூட்டம் கைதட்டி ஆதரவு தெரிவித்தது. The meeting extended its support by clapping hands. 3. முட்டு, prop. செடிக்கு முட்டு தேவை. The plant needs prop.

**ஆதரி-** ஆதரவு தெரிவி, support நான் உன்னை ஆதரிக்கிறேன். I support you.

**ஆதலால்-** ஆகையால், therefore.

**ஆதாம்-** விவிலியப்படி கடவுள் படைத்த முதல் மனிதன். Adam, the first man created by God according to ***The Bible.***

**ஆதாயம்-** பயன், gain. இந்த ஆண்டு எங்களுக்கு நல்ல ஆதாயம். We earned a good gain this year.

**ஆதார பூர்வமாக-** தக்க சான்று களுடன் கூடிய, with proof,

evidence. உன் கூற்றை ஆதார பூர்வமாக மெய்ப்பி. Prove your statement with evidence.

**ஆதாரம்-** *1. மூலம்,* source. *உங்கள் செய்திக்கு ஆதாரம் என்ன?* What is the source of your news? *2. அடிப்படை,* basis. *இந்தக் கதைக்கு ஆதாரம் என்ன?* What is the basis of this story. *3. முட்டு,* prop. *முட்டு உத்திரத்தைத் தாங்கி நிற்கிறது.* The prop supports the beam.

**ஆதி-** *1. முதல்,* first. *ஆதிபகவன் முதற்றே உலகு.* God, the Almighty is the first in this world. *2. பழமை, ஆதிகுடி,* aborigin. *3. ஆதி முதல் அந்தம் வரை,* from beginning to end.

**ஆதிதிராவிடர்-** *அரிசனம்,* Harijan, Adidravidas.

**ஆதீனம்-** *1. சைவ மடம்.* Saivaite Monastry. *தருமபுர ஆதீனம்.* Dharumapura Monastry. *2. ஆதீனத் தலைவர்.* Abbot.

**ஆந்தை-** *இரவில் இரை தேடும் பறவை,* owl, a nocturnal bird.

**ஆப்பம்-** *அரிசி மாவினால் செய்யப் படும் தோசை போன்ற ஒருவகைத் தென்னிந்தியச் சிற்றுண்டி வகை,* rice cake either sweet or salty.

**ஆப்பு-** *புழக்கம் உண்டாக்கும் மரத்துண்டு,* wedge. *ஆப்பு ஒரு சாய்தள அடிப்படையில் அமைந்த கருவி.* Wedge is a device based on inclined plane.

**ஆபத்து-** *தீங்கு,* danger. *ஆபத்தான வளைவு,* dangerous curve.

**ஆபரணம்-** *அணிகலன்,* ornament.

**ஆபாசம்-** *கீழ்த்தரமான பால் உணர்ச்சிகளைத் தூண்டுவது,* obscene. *ஆபாசப் படம்,* obscene picture.

**ஆம்-** *உடன்பாட்டுச் சொல்,* yes. *நீ வருகிறாயா? ஆம் வருகிறேன்.* Do you come? Yes 'I do.

**ஆமணக்கு-** *விளக்கெண்ணெய் தரும் வித்து,* castor seed.

**ஆமை-** *பாதுகாப்பு ஓடுள்ள ஊர்வன வகுப்பைச் சார்ந்த ஒரு விலங்கு,* tortoise. *ஆமை நீரில் வாழ்வது.* The tortoise lives in water. *ஆமை வேகம்,* tortoise's pace. *ஆமையும் முயலும்,* The Tortoise and the Hare.

**ஆமோதி-** *வழிமொழி,* second. *நான் தீர்மானத்தை ஆமோதிக்கிறேன்.* I second the resolution. *2. ஏற்றுக் கொள்,* approve. *தலைவர் கூறியதை அனைவரும் ஆமோதித்தனர்.* All approved the President's words.

**ஆய்-** *1. நீக்கு,* remove. *கீரையை ஆய்.* Remove twigs from the greens. *2.ஆராய்,* examine,investigate. *உண்மையை ஆய்.* Examine the truth.

**ஆய்வாளர்-** *ஆராய்பவர்,* investigator. *இச்சிக்கலின் ஆய்வாளர் யார்?* Who is the investigator of this problem? *2. தணிக்கை செய்பவர்,* inspector. *பள்ளி ஆய்வாளர்.* School Inspector. *காவல்துறை ஆய்வாளர்.* Police Inspector.

**ஆய்வு-** *ஆராய்ச்சி,* investigation, research. *எண்ணெய் ஆய்வு,* oil investigation. *ஆய்வுக் கட்டுரை,* research article. *2. பரிசீலனை,* examination. *அப்பொருள் ஆய்வில் உள்ளது.* The subject is under investigation.

**ஆய்வுக்கூடம்-** *ஆய்வகம்,* laboratory. *அறிவியல் ஆய்வுக்கூடம்,* science laboratory.

**ஆய்வுரை-** ஆய்ந்து கூறும் உரை, analytical talk.

**ஆய்வேடு-** உயர்நிலைத் துறை ஆராய்ச்சிக் கட்டுரை, thesis. சங்க இலக்கியத்தில் மகளிர் என்னும் பொருள் பற்றிய ஆய்வேடு. Thesis on Women in Sangam Literature.

**ஆயத்த ஆடை-** அணிந்து கொள்ளத் தயார் நிலையில் உள்ள உடை, ready-made dress.

**ஆயத்தம்-** முன்னேற்பாடு, preparation. நான் தேர்வுக்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறேன். I am making preparations for the examination.

**ஆயத்தீர்வை-** தொழிற்சாலைப் பொருள்களுக்கு விதிக்கப்படும் தீர்வை, excise duty. புகையிலைக்கு ஆயத்தீர்வை உண்டு. Excise duty is levied on tobacco.

**ஆயம்-** கிறிஸ்தவ ஆயரின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதி, diocese. தஞ்சாவூர்-திருச்சி ஆயம், Thanjavur-Trichy Diocese.

**ஆயர்-** 1. இடையர், shepherd. 2. ஆயத்தை ஆட்சி செய்பவர், Bishop. தஞ்சாவூர் - திருச்சி ஆயர். Thanjavur-Trichy Bishop.

**ஆயா-** 1. குழந்தையைப் பேணும் பெண், housemaid, nanny. 2. மருத்துவமனை கடைநிலைப் பெண் ஊழியர், woman orderly in hospital.

**ஆயாசம்-** சோர்வு, fatigue.

**ஆயினும்-** ஆனாலும், though. அவர் முதியவர் ஆயினும் விரைவாக நடக்கின்றார். Though he is old, he walks fast.

**ஆயுதபூஜை-** கருவிகளுக்குச் செய்யும் பூசை. Worshipping instruments.

**ஆயுதம்-** 1. போர்க்கருவி, weapons of war, arms. 2. தாக்கும் கருவி, weapon.

**ஆயுள்-** 1. வாழ்நாள், life time,span of life. 2. உயிர், life ஆயுள் காப்பீடு, Life Insurance.

**ஆயுள்கைதி-** வாழ்நாள் தண்டனை பெற்ற கைதி, prisoner undergoing life imprisonment, lifer.

**ஆயுள் ரேகை-** line of life.

**ஆர்ந்த-** நிறைந்த, full of. அறிவார்ந்த, wise. அறிவார்ந்த பேச்சு. a wise talk.

**ஆர்ப்பரி-** 1. ஆர்ப்பரித்தல்; roar. கடல் ஆர்ப்பரிக்கிறது. The sea roars. 2. பாராட்டு முழக்கம் எழுப்புதல், raise slogans. ஊர்வலத்தார் தங்கள் தலைவரைப் புகழ்ந்து ஆர்ப்பரித்தனர். The processionists raised slogans in praise of their leader.

**ஆர்ப்பாட்டம்-** கிளர்ச்சி, demonstration. பஞ்சாலைத் தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தி ஆர்ப்பாட்டம் நடத்தினர். The textilemill workers staged a demonstration to stress their demands. ஒ. போராட்டம், கதவடைப்பு, சாலைமறியல்; மறியல்.

**ஆர்வம்-** ஆவல், enthusiasm, interest. ஆர்வம் இருந்தால் எல்லாம் கிடைக்கும். You will get everything if you have enthusiasm or interest. ஆர்வலர், enthusiast.

**ஆர்ஜிதம்-** நிலத்தை தகுந்த ஈடு கொடுத்து அரசு எடுத்துக் கொள்ளுதல். acquisition of land.

**ஆரக்கால்-** சக்கரக்குறுக்குக் கால் அல்லது கம்பி, spoke. மிதிவண்டிச்

*சக்கரத்திற்குப் பல ஆரக்கால்கள் உண்டு.* The cycle wheel has many spokes.

**ஆரத்தி-** *மங்கலப் பொருள் உள்ள தட்டு,* auspicious plate. *ஆரத்தி எடு.* Welcome with an auspicious plate.

**ஆரம்-** *1. மாலை,* garland. *2. வளையம்,* ring. *3. விட்டத்தில் பாதி,* radius.

**ஆரம்பச் சுகாதார நிலையம்-** *தொடக்க உடல்நல மையம்* Primary Health Centre.

**ஆரம்பப்பள்ளி-** *தொடக்கப் பள்ளி,* elementary school. *தொடக்கப் பள்ளியில் ஐந்து வகுப்புகளே இருக்கும்.* There will be only five classes or standards in an elementary school.

**ஆரம்பம்-** *தொடக்கம்,* beginning. *ஆரம்பம் நன்றாக இருந்தால் முடிவும் நன்றாக இருக்கும்.* If the beginning is good, the end also will be good.

**ஆரம்பி-** *தொடங்கு,* begin. *கூட்டம் கடவுள் வாழ்த்துடன் ஆரம்பித்தது.* The meeting began with prayer.

**ஆரவாரம்-** *பேரொலி,* roaring ovation. *தலைவர் பெரும் ஆரவாரத்துடன் வரவேற்கப்பட்டார்.* The leader was received with a roaring ovation. *ஆரவாரி,* roar.

**ஆராதனை-** *வழிபாடு,* worship. *திருவையாறு தியாகராஜ ஆராதனை.* Thiruvaiyaru Thiyagaraja Worship.

**ஆராதி-** worship.

**ஆராய்-** *பா. ஆய்.*

**ஆராய்ச்சி-** *ஆராய்வு,* research. *ஆராய்ச்சி மையம்,* Research Centre.

**ஆராய்ச்சி மணி-** *மக்கள் குறையைத் தெரிவிக்கும் மணி,* Bell of Justice.

**ஆரியம்-** *சமஸ்கிருதம்,* Sanskrit. *தமிழைப் போல் ஆரியம் ஓர் உயர்தனிச் செம்மொழி.* Sanskrit is a classical language like Tamil.

**ஆருடம்-** *ஒருவகைச் சோதிடம்.* Foretelling by divination or intelligent guess.

**ஆருயிர்-** *உயிருக்கு உயிரானவர்,* darling.

**ஆரோக்கியம்-** *உடல்நலம்,* health.

**ஆரோகணம்-** *ஏறுநிரல், இசைச் சுரங்களை இசையொலியில் அதிகரித்துக் கொண்டே பாடும் முறை.* Singing the musical notes in the ascending order. *பா. அவரோகணம்.*

**ஆல்-** *ஆலமரம்,* banyan tree. *ஆல் போல் தழைக்க.* Flourish like the banyan tree.

**ஆலக்கரண்டி-** *நீண்ட கைப்பிடியுள்ள இரும்புக் கரண்டி* Iron ladle with a long handle.

**ஆலங்கட்டி மழை-** *உறைந்து பனிக்கட்டியாகி விழும் மழைநீர்,* hail stone. *ஆலங்கட்டி மழை பெய்கிறது.* It is hailing

**ஆலயம்-** *கோயில்,* temple *ஆலயம் தொழுவது சாலவும் நன்று.* It is well and good to ofter worship in a temple.

**ஆலவட்டம்-** *பெரிய விசிறி,* large circular fan. *அரசர் ஊர்வலத்தில் ஆலவட்டம் எடுத்துச் செல்லப் படும்.* Large circular fan will be taken in a royal procession.

**ஆலாய்ப்பற-** *ஒன்றைப் பெறத்துடி.* be mad. *இப்படி ஏன் ஆலாய்ப்*

பறக்கிறாய்? Why are you quite mad like this?

**ஆலிங்கனம்-** தழுவு, embrace. அடியார்கள் இருவரும் ஆலிங்கனம் செய்து கொண்டனர். The two savants embraced each other.

**ஆலை-** தொழிற்சாலை, factory. நெசவாலை, textile mills.

**ஆலோசகர்-** அறிவுரையாளர், adviser. கல்வி அறிவுரையாளர், educational adviser.

**ஆலோசனை-** 1. அறிவுரை, advice. இச்சிக்கலைத் தீர்க்க உங்கள் ஆலோசனையைத் தரலாம். Please offer your advice to solve this problem. 2. சிந்தனை, thinking. ஆழ்ந்த ஆலோசனை, deep thinking.

**ஆலோசி-** கலந்துபேசு, consider. இச்சிக்கலை ஆலோசிப்போம். Let us consider this problem.

**ஆவக்காய் ஊறுகாய்-** மாங்காய் ஊறுகாய், mango pickles.

**ஆவணக் காப்பகம்-** வரலாற்றுச் சிறப்புமிக்க நூல்கள், பத்திரங்கள் முதலானவை பாதுகாக்கப்படும் இடம். archives, a place where historical documents are preserved. ஆவணக்காப்பகம் அரசுக்குரியது. The archives belong to govenment.

**ஆவணம்-** பத்திரம், document, record. அரசு ஆவணங்கள்- Government documents. சட்ட ஆவணங்கள், Legal documents. ஆவணமாக்கல், documentation.

**ஆவது-** எண்ணிக்கை வரிசையை குறிக்கும் உருபு, (எ.டு) மே ஆறாவது நாள், May, the 6th. மே இரண்டாம் நாள், May, the 2nd.

**ஆவல்-** அவா, desire. என் ஆவல் மருத்துவராக வேண்டும் என்பது. My desire is to become a doctor.

**ஆவனசெய்-** தேவையானவற்றைச் செய். Please do what is needed.

**ஆவி-** 1. நீராவி, steam. வளி, vapour. 2. உயிர், breath. 3. பேய், spirit.

**ஆவி பிடி-** Inhale medicinal vapour.

**ஆவேசம்-** 1. உணர்ச்சி வயப்படல், fury. ஆவேசப்பேச்சு, furious speech. 2. தெய்வம் ஏறல், being possessed by spirit. தீமிதியின் பொழுது அவனுக்கு ஆவேசம் வந்தது. During fire walking, he was possessed by spirit.

**ஆழ்-** மெய்ம்மறந்திரு, be absorbed in. அவர் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். He was absorbed in deep thinking.

**ஆழ்குழாய்க் கிணறு-** borewell. ஆழ்குழாய்க் கிணறு எல்லாவற்றிற்கும் பயன்படுவது. The borewell is useful for all purposes.

**ஆழ்ந்த-** 1. நல்ல, deep. ஆழ்ந்த தூக்கம், deep sleep. 2. கெட்டியான. ஆழ்ந்த சிவப்பு, deep red. 3. நிறைந்த. ஆழ்ந்த சிந்தனை, deep thinking. 4. உளமார்ந்த, heart-felt. ஆழ்ந்த அனுதாபம். Heart-felt condolences.

**ஆழ்ந்து-** கூர்ந்து, deep. ஆழ்ந்துபார். Observe deeply.

**ஆழ்வார்-** வைணவ அடியார், Vainava savants. ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். The Vainava savants are twelve in number. பா. நாயன்மார்.

**ஆழம்-** மேல்மட்டத்திலிருந்து கீழ்மட்டம் வரையுள்ள அளவு.

depth. இக்கிணறு மிக ஆழமானது. This well is very deep.

**ஆழம்பார்-** மதிப்பிடு, gauge. பொதுமக்கள் கருத்தை ஆழம் பார்ப்பது கடினமானது. It is difficult to gauge public opinion.

**ஆள்-** 1. ஆட்சி செய், rule. 2. சொற்களைப் பொருத்தமான இடங்களில் பயன்படுத்து. Use words in proper context. 3. நுகர், Enjoy all pleasures of life.

**ஆள்-** 1. வயது வந்த ஆண், adult male. 2. ஆண்/பெண், person. வேலை செய்யும் ஆட்கள். persons engaged in work. 3. ஆளுக்குப் பத்து, per head ten.

**ஆள்காட்டி விரல்-** சுட்டுவிரல், index finger.

**ஆள்சேர்-** ஆட்களைத் தேர்ந்தெடு, recruit. இராணுவத்திற்கு ஆள் சேர்க்கிறார்கள். They recruit people for army.

**ஆள்மாறாட்டம்-** ஆள்மாறுபட்டு வருதல். Impersonation. வாக்குச் சாவடியில் ஆள்மாறாட்டம் பொதுவாக உண்டு. Impersonation is common in polling booths.

**ஆளர்-** ஒன்றைச் செய்பவர். செயலாளர். Secretary.

**ஆளாக்கு-** 1. உட்படுத்து, drive. என்னை நெருக்கடிக்கு ஆளாக்காதே. Don't drive me to a state of tension. 2. உருவாக்கு, bring up. நல்ல பிள்ளைகளை ஆளாக்குவது தந்தையின் கடன். The duty of a father is to bring up good childen.

**ஆளாகு-** 1. உள்ளாகு, subject to. துன்பத்திற்கு ஏன் ஆளாகின்றாய்? Why do you subject yourself to suffering? 2. உருவாகு, come up. நீ ஆளாகிக் குடும்பத்திற்கு உதவி செய். Come up in life and help your family. 3. பூப்படை. அவள் பூப்படைந்துள்ளாள். She has attained puberty.

**ஆளுநர்-** மாநில ஆட்சித்தலைவர். Governor. ஆளுநர் பதவி என்பது ஓர் உயர்பதவி. The office of governor is a high office.

**ஆளுமை-** ஆளுகின்ற தன்மை, personality. அவருக்குக் குறிப்பிடத்தக்க ஆளுமை உண்டு. He has a remarkable personality.

**ஆற்றல்-** 1. சக்தி, திறன், capability. உனக்கு அதைச் செய்ய ஆற்றல் உண்டா? Do you have the capability to do this thing? 2. வேலை செய்வதற்குரிய திறன், energy. ஆற்றல் பல வடிவங்களில் உள்ளது. Energy exists in different forms.

**ஆற்றாமை-** இயலாமை, inability. கணக்குப் போட இயலாமை, inability to do mathematics.

**ஆற்று-** 1. சூட்டைத் தணி, cool. காப்பியை ஆற்றிக்கொடு. Cool the coffee and then serve. 2. குறை, பசியாற்று. Lessen your hunger. 3. குணப்படுத்து, புண்ணையாற்று. Heal the wound. 4. செய், do. உன் கடமையைச் செய். Do your duty. 5. உரையாற்று. Deliver a lecture

**ஆற்றுப்படுத்து-** வழிகாட்டு, மடைமாற்று. Channelise. இளைஞர்கள் நல்வழியில் ஆற்றுப்படுத்தப்பட வேண்டும். The youth should be channelised properly.

**ஆறஅமர-** *அமைதியாக,* calmly. *ஆறஅமர உட்கார்ந்து பேசுவோம்.* Let us sit and talk calmly.

**ஆறப்போடு-** *தள்ளிப்போடு,* post pone. *காரியங்களை ஆறப் போடாதே.* Don't postpone things

**ஆறறிவு-** *புலன் உணர்வோடு கூடிய பகுத்தறிவு,* the sixth sense. *மனிதனுக்கு மட்டுமே ஆறாவது அறிவு உண்டு.* Only man has the sixth sense.

**ஆறு-** *1. சூட்டைக் குறை,* Lessen the heat. *2. தணி. கோபத்தைத் தணி. 3.* Subdue your anger. *4. ஓடும் நீர். காவிரி ஓர் ஆறு.* The Cauvery is a river.

**ஆறுதல்-** *தேறுதல்,* solace, consolation. *அவனுக்கு ஆறுதல் கூறு.* Console him. *ஆறுதல் பரிசு,* consolation prize.

**ஆனந்தம்-** *1. மகிழ்ச்சி,* joy. *ஆனந்தக் கண்ணீர்,* tears of joy. *2. பேரின்பம்.* Bliss.

**ஆனால்-** but. *எனக்கு நீ ரூ.200 கொடுத்தாய். ஆனால் நான் உனக்குக் கொடுத்தது ரூ. 500.* You gave me Rs 200. but I gave you Rs 500.

**ஆனாலும்-** *ஆயினும்,* yet.

**ஆனானப்பட்ட-** *ஆற்றல் வாய்ந்த,* the most powerful. *ஆனானப்பட்ட அமைச்சரே ஒன்றும் செய்ய முடிய வில்லை.* Even the most powerful Minister can do nothing in the matter.

**ஆஜானுபாகு-** *எடுப்பான தோற்றமும் உயரமுமுள்ளவர்,* A gigantic figure.

## இ

**இக்கட்டு-** *நெருக்கடி,* crisis. *நான் இப்பொழுது ஓர் இக்கட்டில் உள்ளேன்.* I am in a crisis now.

**இகபர வாழ்க்கை-** *இவ்வுலக வாழ்வும், மறுஉலக வாழ்வும்,* life in this world and in the next.

**இகம்-** *இவ்வுலக வாழ்வு,* life in this world. *ஒ. பரம்.*

**இகழ்-** *இகழ்ந்துபேசு,* despise. *இல்லாரை எல்லாரும் இகழ்வர்* All despise the poor. *இகழ்ச்சி,* ridicule, contempt.

**இங்கிதம்-** *இணக்கம்,* prudence. *அவர் இங்கிதம் தெரியாதவர்.* He is a man lacking prudence.

**இங்கே-** *இவ்விடத்தில்,* here. *துப்பு இங்கே.* Spit here. *ஒ. அங்கே.*

**இங்ஙனம்-** *இப்படி, இவ்வாறு.* In this way. *இங்ஙனம் செய்க.* Do in this way. *ஒ. அங்ஙனம்.*

**இச்சகம்-** *முகஸ்துதி,* flattery. *இச்சகம் ஒருவரை வீழ்த்தும் வலுவான ஆயுதம்.* Flattery is a strong weapon to bring one's downfall.

**இச்சி-** *விரும்பு,* covet. *பிறர் பொருள்களை இச்சிக்காதே.* Don't covet other's things.

**இச்சை-** *விருப்பம்,* strong desire. *இச்சைச்செயல்.* Act desired strongly. *ஒ. அனிச்சை.*

**இசிவு-** *இசிவுநோய்,* tetanus. *இசிவு ஒரு கொடிய நோய்.* Tetanus is a fatal disease.

**இசை-** *1. உடன்படு,* consent. *அவன் வர இசைந்தான்.* He consented to come. *2. ஏற்றதாக இருத்தல்.* Be agreeable. *எனக்கு இசைந்த*

வாழ்க்கை. It is a life agreeable to me. 3. பாடு, பாட்டிசை. Sing a song 4. மீட்டு. வீணையை இசை. Play the Veena. 5. சங்கீதம், music. அருமையான இசை. Fine music.

**இசைக்கருவி-** இசைக்கும் கருவி. musical instrument. புல்லாங்குழல் ஓர் இசைக்கருவி. The flute is a musical instrument.

**இசைத்தட்டு-** இசை பதிவு செய்யப் படும் தட்டு. Gramophone record. பா. இசைப்பேழை.

**இசையமை-** பாட்டுக்குப் பண் ணமை. இப்படத்திற்கு இசையமை. Compose music for this film.

**இசையமைப்பாளர்-** பாட்டுக்குப் பண்ணமைப்பவர், music director. பாபநாசம் சிவன் ஒரு புகழ்வாய்ந்த இசையமைப்பாளர். Papanasam Sivam was a famous music director.

**இசைவாணர்-** பாடகர், musician மதுரை சோதமசுந்தரம் ஒரு சிறந்த இசைவாணர். Madurai Somasundaram was an excellent musician.

**இசைவு-** ஒப்புதல், consent. இக் கோப்புக்கு நடவடிக்கை எடுக்க இசைவு தேவை. I request your consent to take action on this file.

**இஞ்சி-** ஒரு மருந்துச்சரக்கு, ginger. இஞ்சிமுரப்பா, ginger cake.

**இட்டுக்கட்டு-** கற்பித்துக்கூறு, fabricate. உன் குற்றச்சாட்டுகள் இட்டுக் கட்டப்பட்டவை. Your charges are fabricated.

**இட்டுச்செல்-** அழைத்துச் செல், take one with. உன்னுடன் அவரை அழைத்துச்செல். Take him with you.

**இட்டு நிரப்பு-** ஈடுசெய், compensate. மறைந்த மாபெருந் தலைவரின் இடத்தை யாராலும் இட்டு நிரப்ப இயலாது. None can compensate the loss of the great deceased leader.

**இட்லி-** அரிசியும், உளுந்தும் கலந்து அரைக்கப்பட்ட மாவினை ஆவி யினில் வேக வைத்து செய்யப்படும் ஒரு வகை தென்னிந்திய உணவு. Rice cake. இட்லிக் கடை, Idli shop இட்லித் தட்டு, idli plate to prepare idli.

**இடக்கரடக்கல்-** அவையில் பேசத் தகாதவை, euphemism. (எ-டு) "மலங் கழுவி வந்தேன்" என்பதைக் "கால் கழுவி வந்தேன்" என்று கூறுதல். "Pass away" is a euphe mism for "die"

**இடக்கு-** குதிரை இடக்கு. Rearing of horse.

**இடது-** இடக்கைப்பக்கம், left.

**இடதுசாரி-** முற்போக்குக் கருத்து உள்ளவர், leftist. பொதுவுடைமை யாளர்கள் இடதுசாரிகள் ஆவர். Communists are leftists. ஒ. வலதுசாரி.

**இடம்-** 1. பகுதி. காயம்பட்ட இடம், the place of injury. 2. கட்டம், context. இடம் சுட்டிப் பொருள் தருக. Explain with reference to the context. 3. வெளி, space. பந்தலில் இடமில்லை. There is no space in the pandal. 4. இருக்கை, seat. முன்பதிவு செய்யாததால் பேருந்தில் எங்களுக்கு இடம் கிடைக்க வில்லை. We cannot get seats in the bus due to non-reservation. 5. சேர்க்கை, admission. எங்களுக்கு அப்பள்ளியில் இடம் கிடைக்க வில்லை We are unable to get admission in the school. 6. பதவி, post. அலுவலர் வேலைக்கு இரண்டு இடங்கள் உள்ளன. There are two

posts for clerical job. *7. வாய்ப்பு.* *ஐயத்திற்கு இடமில்லை.* There is no room for suspicion. *8. தகுதி,* place. *அவன் 100 மீட்டர் ஓட்டத்தில் முதலிடம் பெற்றான்.* He secured first place in 100 metres dash. *9. (இலக்) மூவிடம்,* person. *(எ.டு) தன்மை: நான் நாங்கள். முன்னிலை: நீ நீர், நீங்கள் படர்க்கை: அவன், அவள், அது, அவை.* (gram) (e.g) First person: I,we. Second person: you, Third person: He,she, it, they *10. இடப் பக்கம்,* left.

**இடம் கொடு-** *இரக்கங் காட்டு,* show lenience. *கொஞ்சம் இடங்கொடுத் தால் போதும் அவன் மடத்தைப் பிடுங்குவான்.* If you show some lenience, he will take undue advantage.

**இடம்பெறு-** *பட்டியலில் பெயர் சேர்க்கப்படுதல்,* find a place. *உன் பெயர் பட்டியலில் இடம்பெறு கிறது.* Your name finds a place in the list.

**இடம் போடு-** *இடம்பிடி.* Catch a seat.

**இடமாற்றம்-** *பதவி இடம் மாறுதல்,* transfer. *இடமாற்றம் அரிதாகவே நடைபெறும்.* Transfer takes place rarely.

**இடர், இடர்ப்பாடு-** *இடையூறு,* suffering. *பொதுவாழ்வில் ஈடுபட் டவருக்கு இடர் அதிகம்.* There will be a lot of sufferings for people in public life.

**இடறு-** *தடுமாறு,* stumble. *வேர் தடுக்கியதால் கால் இடறிக் கீழே விழப் பார்த்தேன்.* I stumbled over a root.

**இடாப்பு-** *1. பதிவேடு,* register. *2. பட்டியல்,* bills, invoice. *இடாப்பு விலை,* Invoice price.

**இடி-** *1. தகர்த்தல்,* collapse. *கடும் மழையில் சுவர் இடிந்தது.* The wall collapsed due to heavy rain. *2. மனம் முறிதல்,* break one's heart. *உன்னை இந்நிலையில் பார்க்கும் பொழுது என் மனம் இடிகிறது.* It breaks my heart to see you in this condition. *3. தகர்,* demolish. *போக்கு வரத்துக்கு இடையூறாக இருந்த கடை இடிக்கப்பட்டது.* The shop was demolished since it was a hindrance to traffic. *4. மாவு இடி,* pound flour. *5. முழங்கையால் இடி.* *என் முழங்கையால் இடித்து விலகிச் சென்றேன்.* I elbowed him out of the way. *6. இரவு முழுதும் இடிஇடித்தது.* It thundered all night.

**இடி-** *1. முழங்கை இடி,* elbow stroke or hit. *2. பேரொலி,* thunder.

**இடித்துரை-** *கண்டி,* rebuke. *தவறு செய்தபொழுது, என் நண்பனை இடித்துரைத்தேன்.* I rebuked my friend when he did wrong.

**இடித்துரை-** rebuke.

**இடிதாங்கி-** *இடியைக் கடத்தும் கருவி,* lightning conductor. *உயர மான கட்டிடங்களில் இடிதாங்கி இருக்கும்.* There will be a lightning conductor on tall buildings.

**இடிபாடு-** *சிதைவு,* ruins. *பழைய கட்டிடங்களின் இடிபாடுகள்.* The ruins of old buildings.

**இடியாப்பம்-** *அரிசி மாவினைத் திரிகளாக்கி ஆவியில் வேகவைத்துச் செய்யப்படும் ஒரு வகைத் தென் னிந்திய உணவு,* steamed rice noodles.

**இடு-** 1. போடு, put into. குவளையில் இடு. Put it into the vessel. 2. முட்டை இடு, lay eggs. பெட்டை முட்டையிட்டுள்ளது. The hen has laid eggs. 3. பூசு, apply. திருநீற்றை நெற்றியில் இடு. Apply the holy ashes to your forehead. 4. அமை, put up. பந்தல்போடு. Put up a pandel. 5. பெயரிடு, christen, name. குழந்தைக்குச் செல்வி எனப் பெயரிடப்பட்டது. The child was christened Selvi. 6. உரமிடு, manure பயிருக்கு உரமிடு. Manure the crops

**இடுக்கண்-** துன்பம், trouble. இடுக்கண் வருங்கால் நகுக. When trouble comes, laugh it away simply.

**இடுக்கி-** குறடு, tongs. பொருள்களைப் பிடித்து எடுக்கக் குறடு பயன் படுவது. The tongs are used for picking up and holding things.

**இடுக்கு-** இண்டு இடுக்கு, crevice. இடுக்குகளில் பூச்சிகள் ஒளிந்து கொண்டு இருக்கும். Insects hide inside crevices.

**இடுகாடு-** பிணம் புதைக்குமிடம், burial ground, cemetery.

**இடுகுறிப்பெயர்-** காரணமில்லாமல், பழங்கால முதல் ஒரு பொருளுக்கு வழங்கப்பட்டு வரும் பெயர். (எ.டு) மரம். arbitrary name.

**இடுப்பு-** இடை, waist. இடுப்புவலி, labour pains.

**இடுபொருள்-** உரம், விதை முதலியவை, agricultural input.

**இடை-** 1. இடுப்பு, waist. 2. நடு, middle period. 3. இடையே, between, among. நம்மிடையே ஒற்றுமை இல்லை. There is no unity among us.

**இடைக்காலத்தடை-** தற்காலிகத் தடை, interim injunction. நான் நீதிமன்றத்தில் இடைக்காலத் தடை வாங்கியுள்ளேன். I have obtained interim injuction from the court.

**இடைக்காலம்-** 1. தற்காலிகம். இடைக்கால உதவி. Interim relief. 2. இடைப்பட்ட காலம், medieval period. இடைப்பட்ட காலம் இருண்ட காலம். The medieval period was a dark period.

**இடைச்செருகல்-** ஒருவர் படைப்பில் அது சாரா வேறு பகுதி சேர்க்கப் படுதல், interpolation. இராமாயணத்தில் இடைச்செருகல்கள் அதிகம். Interpolations are plenty in the ***Ramayana.***

**இடைஞ்சல்-** இடையூறு, hindrance. நல்ல செயல்களுக்குப் பல இடைஞ்சல்கள் இருக்கும். There will be many hindrances for good deeds.

**இடைத்தரகர்-** இருவருக்கிடையே பேரம் முடிப்பவர், middleman, inter mediator. இடைத்தரகர் இல்லாத வாணிபமே இல்லை. There's no trade without middleman.

**இடைத்தேர்தல்-** ஒரு தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர், தன் பதவிக் காலத்தில் இறந்து விட்டாலோ, பதவியை விட்டு விட்டாலோ நடத்தப்படும் தேர்தல். by election. இடைத் தேர்தல்கள் அடிக்கடி நடைபெறுபவை. By elections take place frequently.

**இடைநிலை-** இடைப்பட்ட நிலை, intermediate stage. இடைநிலை வகுப்பு, Intermediate.

**இடைநிலைப்பள்ளி-** நடுநிலைப் பள்ளி, Middle School. இடைநிலைப்பள்ளியில் ஒன்றுமுதல் எட்டு வகுப்புகள் வரை இருக்கும். There will be eight classes or standards from one to eight in a middle school. ஒ. தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, மேல்நிலைப் பள்ளி.

**இடைநீக்கம்-** பணியிலிருந்து சிறிது காலம் நீக்கிவைத்தல், suspension. கையாடலுக்காக எழுத்தர் இடைநீக்கம் செய்யப்பட்டுள்ளார். The clerk has been placed under suspension for misappropriation.

**இடைப்பட்ட நேரம்-** in the mean time. இடைப்பட்ட நேரத்தில் நாம் பயனுள்ள வேலைகளைச் செய்யலாம். In the mean time, let us do useful things.

**இடைமறி-** 1. குறுக்கிடு, intervene. ஏன் வீணாக இடைமறிக்கிறாய்? Why do you unnecessarily intervene? 2. வழிமறி, waylay. கொள்ளையர் வழிமறித்துப் பணத்தை எடுத்துச் சென்றனர். The robbers waylaid me and took away the money.

**இடையறாத-** இடைவிடாத, Incessant. இடையறாத மழை. Incessant rain.

**இடையன்-** ஆயன், shepherd.

**இடையிடையே-** நடுநடுவே, every now and then. இடையிடையே மருத்துவர் நோயாளியை வந்து பார்த்துச் செல்வார். The doctor will visit the patient now and then.

**இடையில்-** 1. இடைப்பட்ட நேரத்தில், in between. முற்பகல் பத்து மணிக்கும் பன்னிரண்டு மணிக்கும் இடையில் அஞ்சல்காரர் வருவார். The postman will usually come in between 10 a.m and 12 noon. 2. நடுவில். இடையில் குறுக்கிடாதே Don't intervene in the middle. 3. இரு தரப்புக்கு நடுவில். அந்த இருநாடுகளுக்கிடையில் வணிக ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது. A trade pact has been signed between those two countries.

**இடையீடு-** 1. குறுக்கீடு, interruption. அவர் பேசும்பொழுது குறுக்கீடுகள் அதிகம் இருந்தன. There were many interruptions during his speech.

**இடையூறு-** பா. இடைஞ்சல்

**இடையே-** பா. இடையில்.

**இடைவிடாத-** தொடர்ச்சியான, continuous.

**இடைவிடாத மழை-** continuous rain.

**இடைவிடாமல்-** பா. இடையறாமல்.

**இடைவெளி-** 1. இடைப்பட்ட காலம், interval. பத்தாண்டு இடைவெளி, an interval of ten years. 2. இடைநேரம், intervening time. பாடகர் அடுத்த பாட்டைப் பாடுவதற்கு முன் கிடைத்த இடைவெளியில் வெந்நீர் அருந்தினார். The singer drank hot water in the intervening period before he began to sing another song. 3. நடுவிலுள்ள இடம், gap. எங்கள் இருவருக்கிடையே பதினைந்தடி இடைவெளி இருந்தது. There was a gap of fifteen feet between us. 4. தலைமுறை இடைவெளி, generation gap.

**இடைவேளை-** ஓய்வுநேரம், interval. பள்ளி இடைவேளையின் பொழுது நாங்கள் தேநீர் அருந்தச் சென்றோம். During the school interval we went out for tea.

**இணக்கம்-** இசைவு, harmony.

**இணக்கமான உறவு-** harmonious relationship.

**இணங்கு-** இசைதல், comply with.. நான் உன் வேண்டுகோளுக்கு இணங்குகிறேன். I comply with your request.

**இணுக்கு-** சிறுபகுதி, இணுக்குப் புகையிலை. a bit of tobacco.

**இணை-** 1. ஒன்றுசேர், join. எதிர்க் கட்சிகள் இணைந்து ஓர் அணியை உருவாக்கின. The opposition parties joined together to form a front. 2. தொடர்புபடுத்து, connect. புற வழிச்சாலை முதன்மைச்சாலை யோடு இணைக்கப்பட்டுள்ளது. The bypass road is connected with the main road. 3. ஆட்சி வசதிக்காக நான்கு தாலுக்காக்கள் இணைக் கப்பட்டுள்ளன. Four taluks are merged with one another for administrative convenience. 4. சேர், enclose. கடிதத்தோடு பட்டியல் இணைக்கப்பட்டுள்ளது. The bill is enclosed with the letter.

**இணை-** 1. நிகர், equal. 2. இரண்டு, pair. 3. ஒருபோக்கு, parallel. இணைகோடுகள், parallel lines.

**இணை-** நிகர், associate. இணைப் பேராசிரியர், Associate Professor.

**இணைகரம்-** இணையான எதிர்ப் பக்கங்களைக் கொண்ட நாற்பக்க வடிவம், parallelogram. இணை கரம் வரை. Draw a parallelogram.

**இணைசேர்-** 1. துணை சேர், mate பறவைகள் இணைசேர்பவை. Male and female birds mate. 2. ஒன்றை மற்றொன்றுடன் பொருந்துமாறு சேர்த்தல், match. பின்வரும் இனங்களை இணைசேர். Match the following items.

**இணைப்பு-** 1. மின் இணைப்பு, electric conection. 2. இணைப்பு அறுந்துள்ளது. The link is broken. 3. கட்சிகள் இணைப்பு, merger of parties. 4. பிற்சேர்க்கை, இலவச இணைப்பு, free supplement.

**இணைபிரியாத-** பிரிந்திருக்க இயலாத, inseparable. அவர்கள் இணை பிரியாத நண்பர்கள். They are inseparable friends.

**இணையம்-** 1. ஒன்றியம், union. 2. கூட்டமைப்பு, federation. இணையம் நாளை கூடுகிறது. The federation meets tomorrow.

**இணையமைச்சர்-** அவைத் தகுதி யுள்ள அமைச்சருக்கு அடுத்துள்ள வர், Minister of State.

**இணைவிழைச்சு-** புணர்ச்சி, copu lation. இணை விழைச்சு விலங்கு களுக்குரியது. Copulation is the sexual behaviour of animals.

**இத்தகைய-** இவ்விதமான, such. இத்தகைய மனிதரும் உலகில் உண்டு. There are such men in the world.

**இத்தனைக்கும்-** இருந்த போதிலும், though. நன்றாகப் பாடுகின்றார். இத்தனைக்கும் அவர் இசை கற்றவரில்லை. Though he has not learnt music, he sings well.

**இத்துணை-** இத்தனை, so many. இத்துணைப் பேருக்கும் நான் சமைக்க வேண்டுமா? Should I cook for so many people?

**இதம்-** இன்பம், joy. கடற்காற்று இதம் அளிப்பது. The sea breeze gives joy.

**இதயத்துடிப்பு-** heart beat. *என் இதயத்துடிப்பு இயல்பாக உள்ளது.* My heart beat is normal.

**இதயம்-** *1. சுருங்கி விரிந்து இரத்த ஓட்டத்தை உருவாக்கும் தசை உறுப்பு,* heart. *2. உனக்கு இதயமில்லையா?* Don't you have a heart? *இதயக்கனி,* apple of one's eye.

**இதர-** *பிற,* other. *இந்தியாவிலும் இதர சில நாடுகளிலும் வேலையில்லாத் திண்டாட்டம் உள்ளது.* India and other countries face unemployment.

**இதழ்-** *1. மலரின் வண்ணத் தாளாகிய அல்லி,* petal. *அல்லி எப்பொழுதும் நிறத்துடன் இருக்கும்.* The petal is always colourful. *2. பனை ஓலை,* palm leaf. *3. புல் இதழ்,* blade of grass. *4. இமை,* lid. *5. உதடு,* lip. *6. செய்தித் தாள்,* journal. *நான் நாள்தோறும் நாளிதழ் படிக்கிறேன்.* I read the daily every day. *7. தனிப்படி,* issue. *8. மலர்,* magazine.

**இதழியல்-** *செய்திகளைத் தொகுத்தல், இதழ் நடத்துதல் முதலியவை பற்றிக் கூறும் பாடப்பிரிவு.* Journalism.

**இதழியலார்-** journalist. *இதழறம்,* journalistic ethics. *இதழ்த் தரம்,* journalistic standard.

**இதிகாசம்-** *காப்பியம்,* epic. *சிலப்பதிகாரம் முதல் தமிழ் இதிகாசம்.* Silappathikaram is the first Tamil epic.

**இது-** *இது என்ன?* What is this?

**இதுகாறும்-** *இது வரை,* so far. *இதுகாறும் நீங்கள் கற்றது என்ன?* What have you learnt so far?

**இதோ-** *இங்கே,* here. *இதோ பார்.* Look here.

**இதோபதேசம்-** *அறிவுரை,* preaching. *எல்லோருக்கும் இதோபதேசம் ஒத்து வராது.* Preaching is impossible for all.

**இந்த-** this. *இந்தப் பை யாருடையது?* Whose bag is this?

**இந்திர நீலம்-** *நீலக்கல்,* sapphire.

**இந்திர போகம்-** *இன்ப வாழ்க்கை,* luxury. *அவர் இந்திரபோகத்தில் புரள்கிறார்.* He rolls in luxury.

**இந்திர லோகம்-** *தேவர் தலைவன் இந்திரன் ஆளும் மேல் உலகம்.* Celestial world ruled by Indra, the chief of devas.

**இந்திரஜாலம்-** *மாய வித்தை,* the art of celestial magic.

**இந்திரியம்-** *1. விந்து,* semen. *2. ஐம்பொறிகள்,* five sense organs. *ஐம்பொறிகளை அடக்கு.* Control your five sense organs.

**இந்து-** *இந்து மதத்தினர்,* Hindu. *நாம் எல்லாம் இந்துக்கள்.* We are all Hindus. *இந்து மதம்,* Hindu religion.

**இந்நேரம்-** *இப்போது,* by this time *இந்நேரம் வகுப்பு தொடங்கி இருக்கும்.* By this time, the class will have begun.

**இப்படி-** *இவ்வாறு,* like this. *இப்படி நீ செய்யலாமா?* Can you do like this?

**இப்படிப்பட்ட-** *இவ்வகையான,* of such. *இப்படிப்பட்ட பேர்வழிகள்,* people of such nature.

**இப்பொழுது-** *இப்போது,* now. *இப்பொழுது நீங்கள் என்ன பார்க்கிறீர்கள்?* What do you see now? *ஒ. அப்பொழுது.*

**இம்சை-** *1. துன்பம்,* harm, violence. *ஒருவருக்கும் இம்சை தராதே.* Don't

harm others. *2. தொல்லை,* trouble. *நாய்கள் எங்களுக்கு மிகுந்த தொல்லை தருகின்றன.* Dogs give us a lot of trouble. *ஒ. அகிம்சை.*

**இம்மி-** *மிகச் சிறிதளவு,* iota. *நீ கூறுவதில் இம்மியளவு கூட உண்மை இல்லை.* Your statement lacks even an iota of truth.

**இம்மை-** *இவ்வுலக வாழ்வு,* life in this world. *மக்கள் இம்மை பற்றியே அதிகம் நினைக்கின்றனர்.* People think of life in this world more than any thing else. *ஒ. மறுமை.*

**இமயம்-** *இந்தியாவின் வட எல்லையாக உள்ள உயர்ந்த மலைத் தொடர்,* the Himalayas. *இமாலய வெற்றி,* great victory.

**இமை-** *கண்ணை மூடும் உறுப்பு,* eye lid.

**இமை-** *கண்ணை மூடித்திற,* bat. Bat your eyes, *கண்களை இமை.*

**இமைப்பொழுது-** *ஒரு நொடி,* in a second. *அதை இமைப்பொழுதில் செய்.* Do it in a second.

**இயக்ககம்-** *ஒரு துறை அலுவலகங்கள் ஒருசேர இயங்குமிடம்,* directorate. *தமிழ் வளர்ச்சி இயக்ககம்.* Directo rate of Tamil Development.

**இயக்கம்-** *1. நகர்ந்து செல்லுதல்,* motion. *கோள்களின் இயக்கம்,* the motion of planets. *2. அரசியல் இயக்கம்,* political movement. *3. திரைப்பட இயக்கம்,* direction.

**இயக்கு-** *1. இயங்கச் செய்,* operate. *இந்த இயந்திரத்தை எவ்வாறு இயக்குவது?* How to operate this machine? *2. நெறிப்படுத்து,* direct. *இப்படத்தை இயக்குவது யார்?* Who directs this picture?

**இயக்குநர்-** *1. பட இயக்குநர்,* film director. *2. நிறுவன இயக்குநர்,* firm director.

**இயங்கியல்-** வாத நெறி இயல், Dialecties a method used in Philosophy to try to 'discover truth by considering ideas together with opposite ideas.

**இயங்கு-** *1. செயற்படு,* function, work. *இதயம் இயங்குவது எவ்வாறு?* How does the heart function? *2. வேலை செய்,* operate. *இந்த எந்திரம் எவ்வாறு இயங்குகிறது?* How does this machine operate ? *3. ஓடு,* ply. *சிறப்புப் பேருந்துகள் இன்று இயங்கும்.* Special buses will ply today.

**இயந்திரத் துப்பாக்கி-** *விசையை அழுத்தினால் தொடர்ந்து தானாக இயங்கும் துப்பாக்கி,* machine gun.

**இயந்திரம்-** *1. எந்திரம், கருவி,* machine. *2. நிர்வாக எந்திரம்,* administrative machinery.

**இயல்-** *ஒன்றைச் செய்தல்,* be possible. *இதை நீ செய்ய இயலுமா?* Is it possible for you to do this? *இயன்றதைச் செய்.* Do what is possible.

**இயல்-** *1. இலக்கியம்,* Literature. *2. அத்தியாயம்.* Chapter. *இந்நூல் பத்து இயல்களைக் கொண்டது.* This book contains ten chapters.

**இயல்-** *அறிவுத்துறை. இயற்பியல்,* physics.

**இயல்பியல்-** *இயற்பியல்,* physics.

**இயல்பு-** *1. தன்மை,* trait, quality. *இனிய இயல்பு,* sweet qualities. *2. இயற்கை. பொறாமை ஓர் இயல்புப் பண்பு.* Jealousy is a natural trait.

**இயலாமை-** *முடியாமை,* inability. *அதைச் செய்ய இயலாமை,* inability to do it.

**இயற்கணிதம்-** குறிக்கணிதம். குறிகள் மூலம் கருத்துப் பொருளை விளக்குவது. Algebra, the branch of mathematics using letters and symbols to represent quantities.

**இயற்கை-** தானாகவே உண்டான பொருள். மரம் ஓர் இயற்கைப் பொருள். The tree is a natural object. ஒ. செயற்கை.

**இயற்கை உபாதை-** சிறுநீர் அல்லது மலங்கழிப்பதற்குரிய உணர்வு, calls of nature.

**இயற்கை எய்துதல்-** இறத்தல், breathe one's last. அவர் இயற்கை எய்தினார். He breathed his last.

**இயற்பியல்-** பொருள் மற்றும் ஆற்றல் குறித்த பண்புகளை ஆராயும் அறிவுத்துறை. Physics, the study of the properties of matter and energy.

**இயற்பெயர்-** பெற்றோர் இட்ட பெயர், real name. என் இயற்பெயர் மணிவண்ணன். My real name is Manivannan. ஒ. புனைபெயர்.

**இயற்று-** *1.* புனை. கவிதை இயற்று. Compose poems. *2.* செய். சட்டம் இயற்று. Enact laws. *3.* தவம் இயற்று. Do penance. மின்சாரம் இயற்று. Genenate electricity.

**இயற்றி-** மின்சாரத்தை உற்பத்தி செய்யும் கருவி. Generator, the machine producing electricity.

**இயற்றுபவர்-** ஆசிரியர், writer.

**இயேசு-** இயேசுநாதர், Jesus, the saviour.

**இயைபு-** உள் அமைப்பு, composition. ஒ. இயற்பியல்.

**இர-** கெஞ்சிப் பெறு, beg. உணவு இரந்து வேண்டு. Beg food.

**இரக்கம்-** பரிவு, mercy, pity. இரக்கம் காட்டு. Show mercy.

**இரகசியம்-** கமுக்கம், secret. இரகசியம் என்ன? What is the sectret?

**இரங்கல்-** அனுதாபம், condolence. ஆழ்ந்த இரங்கல். Heart-felt condolences. இரங்கல் தீர்மானம்- condolence resolution.

**இரங்கற்பா-** ஒருவரது மரணத்துக்கு இரங்கல் தெரிவித்துப் பாடும் பாடல். Elegy, the poem expressing sorrow for a dead person. பா. கையறுநிலைப் பாடல்.

**இரங்கு-** இரக்கம் காட்டு. Show mercy.

**இரசவாதம்-** செம்பு (அ) இரும்பைப் பொன்னாக்கல். Alchemy, the art of turning base metals like copper or iron into gold.

**இரசாயனம்-** பா. வேதி இயல்.

**இரட்சகர்-** காப்பவர், இயேசுநாதர். Jesus, the saviour.

**இரட்சகன்-** இரட்சிப்பவன், saviour, protector. கடவுள் நம் இரட்சகன். God is our saviour. இரட்சி, save.

**இரட்டி-** இருமடங்காக்கு, double. பொருள்கள் விலை இரட்டிப்பு ஆகியுள்ளது. The prices of commodities have doubled. இரட்டிப்பு, double, duplication.

**இரட்டை-** *1.* இரண்டு ஒன்றாய் இருப்பது, double, pair. இரட்டைக் குழல் துப்பாக்கி, double barrelled gun. *2.* இரட்டை வேடம், double role. *3.* இரட்டைக் குழந்தை, twins. *4.* இருமடிப்பு, two fold. *5.* வெப்ப இரட்டை, thermo couple.

**இரட்டைக் கிளவி-** (இலக்) ஒலிக் குறிப்புச் சொல். (எ.டு) அவன் 'கலகல' எனச் சிரித்தான். a sort of doublet or homonym.

**இரட்டைநாடி-** *1. இருபிரிவாக இருப்பதுபோல் தெரியும் அகன்ற முகவாய்,* cleft chin. *2. பருமன்,* being bulky. *இரட்டைநாடி உடல்.* bulky body. *ஒ. ஒற்றைநாடி.*

**இரட்டைப்படை எண்-** *இரண்டால் மீதியில்லாமல் வகுபடும் எண், 2, 4,* even number. *ஒ. ஒற்றைப்படை எண்.*

**இரட்டைப்பிள்ளை-** ஒரு தாய்க்கு ஒரே நேரத்தில் பிறந்த இரண்டு குழந்தைகள். twins, *இரட்டையர்.*

**இரட்டையர்-** doubles. *இரட்டையர் ஆட்டம்,* doubles game. *ஒ. ஒற்றையர்.*

**இரண்டகம்-** *வஞ்சகம்,* deceit. *இரண்டகம் ஒரு கெட்ட குணம்.* Deceit is a bad quality.

**இரண்டாம் பட்சம்-** *இரண்டாம் நிலை,* secondary. *வயது இரண்டாம் பட்சமே.* Age is of secondary interest. *ஒ. முதல்நிலை.*

**இரண்டறக் கலட-** ஒன்றாகு, mingle. *அடியார்கள் இறைவனோடு இரண்டறக் கலப்பவர்கள்.* The savants will mingle with God.

**இரண்டு-** *இரண்டு ஒன்றுகள்,* two. *இரண்டுங்கெட்டான், நல்லது கெட்டது அறியாதவன்,* callow youth. *இரண்டுங்கெட்டான் நேரம்,* inconvenient time.

**இரண்டுபடு-** *இரண்டாகப் பிரிதல்,* be divided. *ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கு நல்லது.* If the village is divided, it is good for the acrobat.

**இரணம்-** *புண்,* wound.

**இரத்த அழுத்தம்-** *இரத்தக் குழாயில் ஏற்படும் அழுத்தம்,* blood pressurre. *இரத்த அழுத்தம் ஒருவர் உடல் நலத்தின் அளவுகோல்.* Blood pressure is a measure of one's health.

**இரத்த ஓட்டம்-** *இரத்தச் சுழற்சி,* blood circulation.

**இரத்தக் களரி-** *குருதி சிந்தும் கொடிய நிலை,* bloodshed, killing or wounding people. *மேலும் இரத்தப் களரியைத் தடுக்க, இரு படைகளும் போர் நிறுத்தத்தை வேண்டின.* The two armies called for a truce to avoid further bloodshed.

**இரத்தக் குழாய்-** *குருதிக் குழல்,* blood vessel. *தமனியும் சிரையும் இரு வகை இரத்தக் குழாய்கள்.* The artery and the vein are the two kinds of blood vessels.

**இரத்தக் கொதிப்பு-** *இயல்பு மீறிய குருதியழுத்தம்,* high blood pressure, hyper tension.

**இரத்தச் சோகை-** *இரும்புச் சத்துக் குறைவால் ஏற்படும் நோய்க்கூறு,* anaemia.

**இரத்தப் போக்கு-** *இரத்தக் கசிவு,* bleeding. *காயம் ஆழமாக இருந்ததால், இரத்தப்போக்கு அதிகமிருந்தது.* Because of deep wound, there was excess bleeding.

**இரத்தம்-** *குருதி,* blood. *இரத்தம் உயிர் காக்கும் பொருள்.* Blood is a life saver. *இரத்ததானம்,* blood donation.

**இரத்த வங்கி-** blood bank. *இரத்தப் பிரிவு,* blood group. *இரத்த ஆய்வு,* blood test.

**இரத்தவெறி-** *கொல்லும் வெறி,* being blood thirsty. *இரத்த வெறியர்,* a blood thirsty kilter.

**இரத்தினம்-** *ஒரு விலை உயர்ந்த கல்* gem.

**இரவல்-** கடன்வாங்கல், borrow. இரவல் புத்தகம், borrowed book. இரவல் பணி, deputation duty. இரவல் குரல், dubbing voice.

**இரவலர்-** ஒரு பொருளைத் தானமாகப் பெறுபவர், receiver. ஒ. புரவலர்.

**இரவு-** சூரியன் மறைந்த பின் இருள் நிறைந்த காலம், night. நள்ளிரவு, midnight.

**இரவோடு இரவாக-** ஒரே இரவில், by night. யாரோ ஒருவர் இரவோடு இரவாக வயலில் உள்ள மரத்தை வெட்டியுள்ளார். Some one has cut the tree in the field by night.

**இரு-** 1. வீட்டில் இரு. Be in the house. 2. நீர் கலங்கலாக இருக்கிறது. The water is muddy. 3. சிறிதுநேரம் காத்திரு. Wait for some time. 4. நீ இப்பொழுது எங்கிருக்கிறாய்? Where are you put up now? 5. கோடைக்கானலுக்குச் சுற்றுலா செல்ல இருக்கிறோம். We have proposed to go on a trip to Kodaikanal.

**இரு-** இரண்டு, two. இரு குருவிகள், two birds.

**இருக்கை-** அமரும் நாற்காலி முதலியவை, seat. விரைவுப் பேருந்தில் நாற்பது இருக்கைகள் இருக்கும். There will be forty seats in an express bus.

**இருசு-** அச்சு, axle. வண்டி இருசு முறிந்துவிட்டது. The axle of the cart has broken. இருசுக் கட்டை, axle supporting wood.

**இருட்டடிப்பு-** செய்தியைப் போடாமல் இருத்தல், blackout. செய்தித்தாள் செய்தியை இருட்டடிப்பு செய்தது. The news paper imposed a blackout.

**இருட்டு-** இருள், darkness. அது முழு இருட்டு. It is utter dark. இருண்ட வீடு, dark house.

**இருந்தபோதிலும்-** இருந்தாலும், though. மழைபெய்தது, இருந்த போதிலும் நாங்கள் கிளம்பினோம். Though it rained, we started.

**இருந்து-** from. கரும்பிலிருந்து சர்க்கரை செய்யப்படுகிறது. Sugar is made from sugarcane.

**இருப்பிடம்-** வீடு, house, abode, residence. உங்கள் வீடு எங்குள்ளது? Where is your house?

**இருப்பு-** 1. சேமிப்பு, stock. இருப்பு எவ்வளவு உள்ளது? How much is the stock? 2. தங்க இருப்பு, gold reserve.

**இருப்புச் சட்டி-** 1. பொறிப்பதற்கும் வறுப்பதற்கும் பயன்படும் பாத்திரம், frying pan. 2. கலவைச் சட்டி, font.

**இருப்புப்பாதை-** புகைவண்டி செல்வதற்குக் குறிப்பிட்ட அகலத்தில் இரும்புத் தண்டவாளங்களைக் கொண்டு அமைக்கப்பட்ட வழி. Railway track.

**இருபாலர்-** ஆண், பெண், male and female. இருபாலினர் பள்ளி, coed school.

**இரும்பு-** ஒருவகை உலோகம், iron. இரும்பு மிகப் பயனுள்ள உலோகம். Iron is the most useful metal.

**இரும்புத்திரை-** Iron curtain. இரும்புத் திரை நாடு, Iron curtain country. உருசியா ஓர் இரும்புத்திரை நாடாக இருந்தது. Russia was an iron curtain country.

**இருமல்-** cough. நான் இருமலால் துன்பப்படுகிறேன். I am suffering from cough. இருமு, cough. ஏன் இருமுகிறாய்? Why do you cough?

**இருமுனைவரி-** *இரு இடங்களில் விதிக்கப்படும் வரி,* double pronged tax. *ஒ. ஒருமுனை வரி.*

**இருவழி-** *1. போவதற்கும் வருவதற்கும் உரிய பாதை,* double track. *2. இரு பக்கம், இரு வழி ஒப்பந்தம்,* bilateral agreement.

**இருள்-** *பா. இருட்டு.*

**இருவாட்சி-** *ஒரு சிறுமலர்.* Tuscon jasmine.

**இரை-** *1. திட்டு,* rebuke. *தந்தை என்னை இரைந்தார்.* Father rebuked me. *2. பொருமல், என் வயிறு பொருமுகிறது.* My stomach rumbles. *3. கத்து,* shout. *ஏன் இவ்வாறு இரைகிறாய்?* Why do you shout like this? *4. மூச்சுவாங்கு,* gasp for breath, wheeze. *5. உணவு,* prey. *தவளை பாம்புக்கு இரையாகும்.* Frog is a prey to snake.

**இரைச்சல்-** *1. பெருங்கூச்சல்,* shout and cry. *2. பொருமல்,* rumbling.

**இரைப்பை-** *உணவுப்பை,* stomach. *நம் உணவில் ஒரு பகுதி இரைப்பையில் செரிக்கிறது.* Part of our food is digested in the stomach.

**இரைமீட்டு-** *அசைபோடு.* Chew the cud. *பசு இரை மீட்டுக் கொண்டுள்ளது.* The cow is chewing the cud.

**இரையாகு-** *பலியாகு,* fall a prey. *அத்தவளை ஒரு பாம்புக்கு இரையானது.* That frog fell a prey to snake.

**இல்லத்தரசி-** *மனைவி,* house wife.

**இல்லம்-** *1. வீடு,* house, home, abode. *2. அனாதை இல்லம்,* orphanage. *3. மாணவர் இல்லம்,* home for students.

**இல்லவே இல்லை-** *அறவே இல்லை,* certainly not. *நீ ஒரு முரடனா? இல்லவே இல்லை.* Are you a rude fellow? Certainly not.

**இல்லறம்-** *குடும்ப வாழ்க்கை,* family life. *இல்லறம் என்பது நல்லறமாகும்.* Family life is a good virtue.

**இல்லாத-** *இராத. மணம் இல்லாத மலர்,* a flower without fragrance.

**இல்லாமல்-** *இல்லாவிட்டால்,* with out. *நீ இல்லாமல் நான் இல்லை.* I cannot exist without you.

**இல்லாமை-** *இராத நிலை,* lack of. *பண்பு இல்லாமை,* lack of character.

**இல்லாவிட்டால்-** *இல்லை என்றால்,* if not. *அவனுக்குக் காய்ச்சல் இல்லாவிட்டால், வருவான்.* He will come, if he does not have fever.

**இல்லாள்-** *மனைவி,* wife.

**இல்லை-** not, no. *அவன் அங்கு இல்லை.* He is not there. *கிணற்றில் நீர் இல்லை.* There is no water in the well. *நீ அவனைப் பார்த்திருக்கிறாயா? இல்லை.* Have you seen him? No! I haven't.

**இலக்கணம்-** grammar. *தமிழ் இலக்கணம்,* Tamil grammar. *ஒ. இலக்கியம்.*

**இலக்கம்-** *1. எண்,* number *1,2,3,...* *2. 310 என்பது மூன்று இலக்க எண்.* 310 is a three digit number.

**இலக்கியத் திருட்டு-** *பிறர் எழுதிய கருத்தையோ, இலக்கியத்தையோ தனதெனக் கொள்வது.* plagiarism. *அது இலக்கியத் திருட்டா?* Is it plagiarism?.

**இலக்கியம்-** *கவிதை, கதை, நாடகம் முதலான படைப்புகளின் தொகுப்பு,* *2. தமிழ் இலக்கியம்.* Tamil literature. *3. அறிவியல் இலக்கியம்.* Science

literature. *4. துண்டு வெளியீடு.* Please send me any literature on computer.

**இலக்கு-** *1. குறி,* target. *ஏவுகணைகளின் இலக்கு துல்லியமானது.* The target of the rockets is accurate. *2. உட்படு. நான் கடும் விமர்சனத்திற்கு ஆளானேன்.* I became the target of severe criticism. *3. குறிக்கோள்,* target. *திட்டத்தின் இலக்கு என்ன?* What is the target of the plan?

**இலகு-** *1. எளிது,* easy. *அக்கணக்கைச் செய்வது இலகு.* It is easy to do that sum. *இலகு எந்திரம்,* simple machine. *2. கனமற்றது,* light. *இலகு வகைப் போர் விமானங்கள்,* Light weight aircraft.

**இலங்கு-** *திகழ்,* be an example. *அவர்கள் நட்பிற்கு இலக்கணமாக இலங்கினார்கள்.* They are shining examples for friendship.

**இலச்சினை-** *சின்னம்,* emblem. *சோழர்களின் இலச்சினை புலி ஆகும்.* The emblem of the Chola kings was the tiger.

**இலட்சியம்-** *குறிக்கோள்,* objective. *உன் வாழ்க்கையின் குறிக்கோள் என்ன?* What is the objective of your life? *இலட்சிய வாயு,* ideal gas.

**இலந்தைப் பழம்-** Jujube fruit. *இலந்தைப் பழம் இனிக்கும்.* The jujube fruit will be sweet.

**இலயம்-** *ஓசை ஒழுங்கு,* rhythm, harmony.

**இலயி-** *ஒன்றில் ஈடுபடுதல்.* Be absorbed in. *நான் இசையில் முழுமையாக இலயித்துள்ளேன்.* I am totally absorbed in music.

**இலவங்கம்-** *கிராம்பு,* clove.

**இலவசம்-** *காசு பெறாமல் கிடைப்பது. 1. இலவச உணவு,* free feeding. *2. ரூபாய் 500க்குமேல் பொருள்கள் வாங்கினால், கவர்ச்சியான பரிசுப் பொருள்கள் உண்டு.* If you buy things above Rs. 500, you will get attractive prizes.

**இலவம் பஞ்சு-** silk cotton. *இலவம் பஞ்சு தலையணைகளில் திணிக்கப் படுவது.* The pillows are stuffed with silk cotton. *இலவம்பஞ்சு மெத்தை,* cotton mattress.

**இலவமரம்-** cotton tree.

**இலாகா-** *துறை,* department. *நிதித் துறை,* Finance Department. *இலாகா விசாரணை,* Departmental Enquiry.

**இலாடம்-** horse shoe. *இலாட காந்தம்,* horse shoe magnet.

**இலாபம்-** *ஆதாயம்,* gain, profit. *இந்த ஆண்டு இலாபம் என்ன?* What is the gain for this year?

**இலிபி-** *எழுத்து,* script. *உரோமன் இலிபி.* Roman script. *ஆங்கிலம் உரோமன் இலிபியில் எழுதப் படுகிறது.* English is written in Roman script.

**இலுப்பை-** *ஒரு வகை மரம்,* South Indian mahia.

**இலேகியம்-** *ஒரு வகை மருந்து தயாரிப்பு,* electuary. *இலேகியம் உடம்புக்கு நல்லது.* The electuary is good for health.

**இலேசு-** *கனமற்றது,* light. *பஞ்சு இலேசாக இருக்கும்.* Cotton will be light.

**இலை-** *மரம், செடிகளின் தழை,* leaf. *இலைகள் நமக்குப் பலவழிகளில் பயன்படுகின்றன.* Leaves are useful to us in many ways. *வாழை இலை,* plaintain leaf.

**இலைச்சுருட்டுப்புழு-** *இலையைத் தின்னும் ஒருவகை புழு,* leaf roller.

**இலைபோடு**- *உணவு பரிமாற ஆயத்த மாகு.* Get ready to serve food.

**இலைமறைவு காய்மறைவாக**- *பொருள் வெளிப்படையாகத் தெரியாமல்,* Implicit. *சில காரியங்கள் இலை மறைவு காய் மறைவாக இருக்க வேண்டும்,* Certain things should be implicit.

**இவ்வாறு** - *இப்படி,* like this. *இந்த ஆய்வை இவ்வாறு செய்.* Do the experiment like this.

**இவ்விடம்** - *இங்கு,* here. *இவ்விடம் யாவரும் நலம்.* Here all are well.

**இவர்** - He or She. *இவர்கள்* - They, *இவள்* - She, *இவன்* - He, *இவை* - These, *இவை மாம்பழங்கள்* - These are mangoes.

**இழ** - *ஒன்று விட்டு நீங்குதல்,* lose. *1. அவன் தன் வேலை இழந்தான்.* He lost his job.
*2. அவன் தன் நினைவு இழந்தான்.* He lost his conscience.

**இழப்பு** - *நட்டம்,* loss. *பெருமிழப்பு,* great loss.

**இழவு** - *சாவு,* death. *என் வீட்டில் ஒரு சாவு,* a death in my house.

**இழித்து** - *இழிவாக,* derogatory. *அவன் இழிவாகப் பேசினான்.* He spoke derogatorily.

**இழிந்த**- *இழிவாக,* low, mean. *இழிந்த குணம்,* mean quality.

**இழிநிலை**- *கீழ்நிலை,* shameful state. *குடி இழிநிலை தரும்.* Drinking brings a shameful state.

**இழிவு**- *கீழ்த்தரம்,* degradation. *அது உனக்கு ஓர் இழிவு.* It is a degra dation to you. *2. அவமானம்,* dis grace. *அது உனக்கு ஓர் அவமானம்.* It is a disgrace to you.

**இழு**- *1. வண்டியை இழு.* pull the cart. *2. காக்காய்வலிப்பால் அவன் கைகால்கள் வெட்டி இழுத்தன.* His limbs got convulsed due to fits. *3. நாற்காலியை இழுத்துப் போடு.* Draw the chair. *4. என் பெயரை அதில் இழுக்காதே.* Don't involve my name in it.

**இழுக்கு**- *களங்கம்,* blemish. *அது எனக்கு ஓர் இழுக்கு.* It is a blemish to me.

**இழுத்தடி**- *அலைக்கழி,* drag. *என்னை ஏன் இவ்வாறு இழுத்தடிக்கிறாய்?* Why do you drag me like this?

**இழுப்பறை**- drawer. *இம் மேசையில் இரு இழுப்பறைகள் உள்ளன.* This table has two drawers.

**இழுப்பு**- *1. இழுத்தல்,* pulling. *2. வலிப்பு,* fits. *3. நீரின் வேகம்,* water current.

**இழுபறி**- *முடிவு தெரியாத நிலை,* fluid state. *நிலைமை இழுபறியில் உள்ளது.* The condition is in a fluid state.

**இழை**- *1. சீவு,* plane. *மரச்சட்டத்தை இழை.* Plane the reaper. *2. தேய்,* **grind.** *சந்தனம் இழை.* Grind the sandal wood on the stone. *3. பதி,* **set.** *மூக்குத்தி வைரத்தால் இழைக் கப்பட்டுள்ளது.* The nose ring is set with diamond. *4. செய்,* do. *தீங்கிழை.* Do harm. *5. நூற்புரி,* yarn. *6. இழை போன்ற பொருள்,* fibre.

**இழைப்புளி**- *மரத்தை இழைக்கப் பயன்படும் கருவி,* plane. *தச்சர் இழைப்புளியைப் பயன்படுத்து வார்.* The carpenter uses the plane for his work.

**இழையோடு**- *ஊடுருவு,* run through. *அவர் பாடல்களில் மனிதநேயம் இழையோடுகிறது.* Humanism runs through his songs.

**இளக்காரம்**- *1. அவமதிப்பு.* a look of contempt. *அவன் என்னை இளக்காரமாகப் பார்த்தான்.* He cast a look of contempt. *2. சலுகை,* lenience. *குழந்தைகளுக்கு அதிக இளக்காரம் கொடுக்கக் கூடாது.* It is not good to give too much lenience to children.

**இளக்கு**- *உருகுமாறு செய்,* melt. *வெயிலில் பனிக்கட்டி உருகும்.* Ice melts in the Sun. *அவர் மனம் இரக்கத்தால் உருகிற்று.* His heart melted with pity.

**இளங்கலை**- *பல்கலைக்கழகப் பட்டப்படிப்பு.* Undergraduate course, B.A.

**இளநிலை**- *தொடக்கநிலை,* junior grade, junior clerk. *ஒ. முதுநிலை.*

**இளநீர்** - *இளந்தேங்காய் நீர்,* tender coconut water.

**இளப்பம்**- *பா. இளக்காரம்.*

**இளம்**- *1. இளைய,* young. *இளம் பெண்,* young woman. *2. புகழ் பெறும்,* bright. *இளம் எழுத்தாளர்,* bright writer. *3. வெளிர்,* pale. *இளம் பச்சை,* pale green. *4. மிதமான,* gentle. *இளந்தென்றல்,* gentle breeze.

**இளம்பிள்ளை வாதம்**- *குழந்தைகளுக்குக் கைகால்கள் விளங்காமை,* polio. *தற்போது குறிப்பிடத்தக்க அளவுக்கு இளம் பிள்ளைவாதம் கட்டுப்படுத்தப் பட்டுள்ளது.* Now polio has been controlled consi derably.

**இளமை**- *1. வாலிபம்,* youth. *இளமைக் காலம் இனிமையானது.* The period of youth is sweet. *2. இளமையுள்ளவர்.* He is a youth. *நாட்டின் இளைஞர்கள்,* the youth of the country. *இளைஞர் கலாச்சாரம்,* youth culture. *இளைஞர் கழகம்,* youth club. *என்றும் இளமை,* ever fresh youth.

**இளரத்தம்**- *இளம் வயது,* young blood, daring youth.

**இளவட்டம்**- *இனிமையாகப் பொழுது போக்க விரும்பும் இளைஞன்,* a care free youth.

**இள வயதினர்**- *பதினெட்டு வயது நிரம்பியவர்,* minor.

**இளவரசன்**- *அரசன் மகன்,* prince. *இளைய இளவரசர்,* junior prince. *மூத்த இளவரசர்,* senior prince.

**இளவரசி**- *அரசனின் மகள்,* princess.

**இளவல்**- *1. தம்பி,* younger brother. *2. இளைஞன்,* youth.

**இளவேனில்**- *கோடைத் தொடக்கம்,* spring, mild summer. mid April.

**இளி**- *பொருள் இல்லாமல் சிரி.* Laugh without sense.

**இளிச்சவாயன்**- *எளிதில் ஏமாறுபவன்,* simpleton. *நாங்கள் இளிச்சவாயர்கள் அல்லர்.* We are not simpletons.

**இளிப்பு**- *பொருளற்ற சிரிப்பு,* meaningless laughter.

**இளை**- *1. உடல் மெலிதல்,* reduce in weight. *நீ இளைத்திருக்கிறாய்.* You have reduced in weight. *2. மதிப்பில் குறைதல்,* inferior. *நான் யாருக்கும் இளைத்தவன் அல்லன்.* I am not inferior to anybody.

**இளைப்பாறு**- *ஓய்வு கொள்,* take rest. *கடின வேலைக்குப்பின், நான் சிறிது நேரம் இளைப்பாறினேன்.* After hardwork, I took rest for some time.

**இளைய**- *1. பின்னால் பிறந்த,* younger. *இளைய மகன்,* younger

son. 2. வயது குறைந்த, younger. இளைய தலைமுறை, younger generation.

**இளையாள்-** இரண்டாவது மனைவி, second wife.

**இற-** சாதல், die. அவர் நேற்று இறந்தார். He died yesterday.

**இறக்கம்-** 1. சரிவு, slope. கூரையின் இறக்கம், the slope of a roof. செங்குத்து இறக்கம், steep slope. 2. குறைவு, reduction, fall. விலையிறக்கம், fall in prices.

**இறக்கு-** கீழே கொண்டு வா, lower. சரக்குகளை இறக்கு. Lower the goods. 2. விளையாட அனுப்பு, send in. ஆட்டக்காரர்களை இறக்கு, send in the players. 3. தரையில் இறக்கு, land. வானூர்தி பாதுகாப்பாக இறங்கியது. The airplane landed safely. 4. வடியச் செய், tap. கள் இறக்கு. Tap the toddy. 5. நீக்கு, remove. நாட்டு மருத்துவர் பாம்பு நஞ்சை நீக்கினார். The country doctor removed the snake's poison. 6. குழாய் இறக்கு, Sink the pipe.

**இறக்குமதி-** அயல்நாட்டிலிருந்து தருவிக்கப்படும் பொருள், import. இவ்வாண்டு இறக்குமதிகள் அதிகமில்லை. This year the imports have come down considerably. ஒ. ஏற்றுமதி.

**இறக்கை-** 1. பறப்பதற்கு பயன்படும் உறுப்பு, wing. பறவைகளுக்குப் பறக்கச் சிறகுகள் உண்டு. The birds have wings to fly. 2. விமானத்தின் இறக்கை, the wing of an airplane.

**இறகு-** இறக்கையின் பகுதி, feather. இனம் இனத்தோடு சேரும், birds of a feather. அருஞ்செயல், feather in one's cap. இறகுகள் பறவையின் உடலை மூடியிருக்கும். Feathers will cover the body of a bird.

**இறங்குதுறை-** படகுத்துறை, Jetty. இங்குப் படகுத்துறை எங்குள்ளது? Where is the jetty here?

**இறங்குமுகம்-** சரியும் நிலை, down ward trend. வியாபாரம் இறங்குமுகத்தில் உள்ளது. The business is in the downward trend. ஒ. ஏறுமுகம்.

**இறங்குவரிசை-** மேலிருந்து கீழ்ச் செல்லுதல், descending order. பின்வரும் எண்கள் இறங்குவரிசையில் உள்ளன. The following numbers are in descending order. 100, 99, 98, 97 ஒ. ஏறுவரிசை.

**இறந்த காலம்-** (இலக்) காலத்தால் முந்தியது, past tense. (எ.டு) அவன் வந்தான். He came.

**இறப்பு-** சாவு, death, demise. இறப்பு பிறப்பு விவரங்கள், particulars of birth and death. ஒ. பிறப்பு.

**இறவாமை-** மரணமில்லா நிலை, immortality. தேவர்கள் இறவாமை பெற்றவர்கள். The Devas have attained immortality.

**இறவை-** நீர்ப் பாய்ச்சி பயிர் விளையுமாறு செய்தல், cultivation by irrigation. இறவை நிலம், irrigated land.

**இறால்-** உண்பதற்குரிய சிறு மீன் போன்ற நீர்வாழ் உயிரினம், prawn. இறால் பண்ணை, prawn farming.

**இறு-** 1. பதில் அளி, give answer. ஒரே வரியில் பதில் இறு. Give your answer in one line. 2. வடிகட்டு, decant. தெளிந்த நீரை இறு. Decant the clear water.

**இறுக்கம்**- *1.* இறுக்கு விசை, thrust. நீர்மங்களுக்கு இறுக்கமுண்டு. Liquids possess thrust. *2.* பிடிப்பு, being tight. சட்டை இறுக்கமாக உள்ளது. The shirt is tight. *3.* நெருக்கம், intimacy. நட்பின் இறுக்கம், the intimacy of friendship. *4.* புழுக்கம். Being sultry. இன்று இறுக்கம் அதிகம். Today it is very sultry.

**இறுக்கு**- இறுக்கிப் பிடி, make tight. கயிற்றை இறுக்கு. Make the rope tight. ஆப்பை நன்கு இறுக்கு. Screw the wedge well.

**இறுதி**- முடிவு, final. இறுதி முடிவு, final decision.

**இறுதி ஊர்வலம்**- சவ ஊர்வலம், funeral procession. இறந்த தலைவருக்கு ஒரு பெரிய இறுதி ஊர்வலம் நடைபெற்றது. A mammoth funeral procession was taken out for the departed leader.

**இறுதிச் சடங்கு**- ஈமக்கிரியை, funeral rites. இறுதிச்சடங்கு நாளை நடைபெறும். The funeral rites will take place tomorrow.

**இறுதி மரியாதை**- அஞ்சலி, homage, last respects. இறந்த தங்கள் மாபெரும் தலைவருக்கு மக்கள் இறுதி மரியாதை செலுத்தினர். People paid their homage to their great departed leader.

**இறுதியாக**- முடிவாக, finally. இறுதியாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். Finally, I would like to say one thing.

**இறும்பூது எய்து**- பெருமிதம் அடை, feel elated or proud. உனக்கு விருது கிடைத்ததற்காக நான் உண்மையிலேயே இறும்பூது எய்துகிறேன். I really feel elated to know that you have received the award.

**இறுமாந்திரு**- பா. இறும்பூது எய்து.

**இறுமாப்பு**- செருக்கு, pride. என்ன உன் இறுமாப்பு! What a pride you have!

**இறை**- *1.* வீசு, throw. காசுகளை இறை. Throw coins. *2.* நீர் இறை. Draw water. *3.* வீணாகச் செலவு செய். பணத்தை வாரி இறை. Spend your money lavishly.

**இறை**- கடவுள், God. இறையருள், God's grace. இறைவணக்கம், prayer. இறைவழிபாடு, worship.

**இறைச்சி**- மாமிசம், meat, flesh. கொத்திய இறைச்சி உருண்டை, meat ball. தெய்வீகப் படையல், meat offering.

**இறைச்சிப் பொருள்**- (இலக்.)குறிப்புப் பொருள், இது சங்க இலக்கிய பாடல்களில் காணப்படுகிறது. suggestive meaning. conveyed indirectly by reference to the distinctive features of the tract of land. This is found in the poems of the Sangam Literature.

**இறைஞ்சு**- வேண்டு, plead, pray. நான் கருணை வேண்டி இறைஞ்சுகின்றேன். I pray for mercy.

**இறைமை**- கடவுள் தன்மை, divinity. சான்றோர் வாழ்க்கையில் இறைமை உண்டு. Divinity is found in the life of great people.

**இறையரசு**- இறைவன் ஆட்சி, Kingdom of God. இறையரசு வரட்டும். Let the Kingdom of God come.

**இறையாண்மை**- ஒரு நாட்டின் முழு உரிமை, sovereignty. சுதந்திர நாட்டிற்கு இறையாண்மை உண்டு. An independent country has sovereignty.

**இறையியல்**- கடவுள் கொள்கை, theology. *இறையியலார்*, theologian.

**இறைவன்**- *1. கடவுள்*, God. *2. எழுந்தருளி இருக்கும் ஆண்டவன்.* presiding male deity.

**இறைவி**- *பெண் தெய்வம்,* presiding female deity. *இறைவியின் திருப் பெயர் அம்பிகை.* The holy name of the presiding deity is Ambigai.

**இன்பம்**- *1. மகிழ்ச்சி,* joy, pleasure. *உண்மையில் உங்களைப் பார்ப் பதே இன்பம்.* Indeed it is a pleasure to see you. *2. சிற்றின்பம்,* sexual pleasure. *ஒ. இன்பம்.*

**இன்பியல்**- *இன்பத்தில் முடியும் நாடகம் அல்லது திரைப்படம்,* comedy. *ஷேக்ஸ்பியர் பல இன்பியல் நாடகங்கள் எழுதி யுள்ளார்.* Shakespeare has written many comedies. *ஒ. துன்பியல்.*

**இன்புறு**- *இன்பமடை,* enjoy. *குழந்தைகள் நீரில் விளையாடி இன்புற்றன.* Children enjoyed them selves playing in water.

**இன்மை**- *இல்லாமை,* absence. *அடிப்படை வசதியின்மை,* without basic necessities.

**இன்றி**- *இல்லாமல்,* without. *ஏழை கள் உணவின்றி வருந்துகின்றனர்.* The poor suffer without food.

**இன்றியமையாத**- *தவிர்க்க இயலாத,* essential. *வாழ்வதற்கு உணவு இன்றியமையாதது.* Food is essen tial for living.

**இன்றியமையாமை**- necessity. *அதற் குரிய இன்றியமையாமை என்ன?* What is the necessity for it?

**இன்று**- *இந்த நாள்,* today. *நாம் அவ் வேலையை இன்று செய்வோம்.* Let us do the work today.

**இன்றைய**- *1. இந்நாளின்,* today's. *இன்றைய ஆட்டம் நன்றாக இல்லை.* Today's game is not good. *2. இன்றைய செய்தி நாளைய வரலாறு.* Today's news is tomo rrow's history.

**இன்ன**- *குறிப்பிட்ட,* particular. *அவர் இன்ன வேலை செய்கிறார் என்று தெரியவில்லை.* We don't know what particular job he does.

**இன்னது**- *குறிப்பிட்ட ஒன்று,* the nature of. *வறுமை இன்னது என்பது பணக்காரர்களுக்குத் தெரியாது.* The rich don't know the nature of poverty.

**இன்னபிற**- *மற்ற,* other. *நாம் புத்தகம், பேனா இன்ன பிற பொருள்களும் வாங்க வேண்டும்.* We have to buy books, pen and other things.

**இன்னமும்**- *1. இன்னும்,* till now. *அவன் இன்னமும் வரவில்லை.*Till now, he hasn't come. *2. மேலும்,* further. *நீ விரும்பியதைப் பெற்றுக் கொண்டாய். இன்னமும் என்ன வேண்டும்?* You received what all you asked for. What do you want further? *3. இப்பொழுதும்,* even now, still. *இன்னமும் நீ அமைதி அடையவில்லையா?* Aren't you satisfied still?

**இன்னல்**- *துன்பம்,* suffering. *வாழ்க்கை இன்னல்கள் நிரம்பியது.* Life is full of sufferings.

**இன்னாத**- *பொல்லாத,* unpleasant. *இன்னாத செயல்,* unpleasant deed. *'இன்னா நாற்பது' ஒரு தமிழ் நீதி நூல்.* 'Inna Narpathu' is a didactic work in Tamil. *ஒ. இனியவை நாற்பது.*

**இன்னார்-** இப்படிப்பட்டவர், person of such nature. அவர் இன்னார் என்று எனக்குத் தெரியாது. I don't know that he is a man of such nature.

**இன்னிசை-** மெல்லிசை, light music. இன்னிசை என்பது திரைப்படப் பாடல்களைக் குறிக்கும். Light music means film lyrics.

**இன்னொரு-** பிறிதொரு, another. இன்னொரு நாள் படம் பார்க்கச் செல்வோம். Let us go to the picture another day.

**இன ஒதுக்கல்-** ஓர் இனம் மற்றொரு இனத்தைப் பிரித்து வைத்தல், apartheid. இன ஒதுக்கல் கொள்கை இப்பொழுது ஆப்பிரிக்காவில் ஒழிக்கப்பட்டுவிட்டது. The policy of apartheid has now been abolished in Africa.

**இனக்கவர்ச்சி-** பால் கவர்ச்சி, sexual attraction. இனக்கவர்ச்சி என்பது இயல்பாய் அமைந்த தன்மை. Sexual attraction is a natural trait.

**இனச்சேர்க்கை-** உடல் உறவு, reproduction. இனச்சேர்க்கை என்பது உயிர்ப் பொருள்களின் ஒரு சிறப்பியல்பு. Reproduction is a characteristic feature of living things.

**இனப்படுகொலை-** ஓர் இனம் மற்றொரு இனத்தைக் கொல்லுதல், genocide. இனப்படுகொலை சில நாடுகளில் நடைபெறுகிறது. Genocide goes on in some countries.

**இனப்பெருக்கம்-** பா. இனச்சேர்க்கை.

**இனம்-** 1. பிரிவு, race. மனித இனம், human race. தாவர இனம், plant generation. 2. வகுப்பு, class. 3. பேரினம். genus. 4. சிறப்பினம், species. 5. வகை, sort, item. 6. சாதிப் பிரிவு, community. இனக்கலவரம், communal violence.

**இனம்காட்டு-** அடையாளத்தைக் காட்டு, identify. பின்வரும் தாவரங்களை இனம் காட்டு. Identify the following plants.

**இனம்காண் -** பா. இனங்காட்டு.

**இனம்தெரியாத-** விளக்க இயலாத, strange. இனம் தெரியாத உணர்ச்சி, strange feeling.

**இனவெறி-** தன் இனமே உயர்வானது என்னும் தவறான கருத்து, racism. இனவெறிக் கொள்கை, policy of racism. இனவெறிக் கலவரம், racist riot.

**இனாம்-** அன்பளிப்புப் பொருள், gift. பொங்கல் இனாம், pongal gift.

**இனி-** 1. இனித்தல், be sweet to taste. சர்க்கரை இனிக்கும். Sugar tastes sweet. இனிய மாலை, pleasant evening.

**இனி-** 1. இனிமேல், hereafter. இனி ஒரு விதி செய்வோம். Let us make a law hereafter. 2. எதிர்காலத்தில், in future. நல்லவர்களை இனி நாம் பார்ப்பது அரிது. It is rare to see good people in future.

**இனிது-** நிறைவு, be pleasant. கூட்டம் இனிது முடிந்தது. The meeting came to a pleasant conclusion.

**இனிப்பகம்-** இனிப்புத் தின்பண்டங்கள் விற்கும் கடை sweet stall.

**இனிப்பு-** தித்திப்பு தரும் பொருள், sweet. சர்க்கரை ஓர் இனிப்புப் பொருள். Sugar is a sweet sub stance.

**இனிமை-** 1. புலனுக்கு இன்பந் தருவது. melody. இசை இனிமை

அருமை. The melody of music is fine. 2. இன்பம், joy, pleasure. வாழ்க்கை இனிமை, the joy of life.

**இனிய-** 1. விருப்பமான, delicious, இனிய உணவு, delicious food. 2. மகிழ்ச்சிதரும், pleasant. இனிய மாலை, pleasant evening.

**இஷ்டதேவதை, தெய்வம்-** குடும்பத் தெய்வம், family deity. எங்கள் இஷ்ட தேவதை மாரியம்மன். Our family deity is Mariamman.

## ஈ

**ஈ-** 1. கொடு, give. ஈதல் இசைபட வாழ்தல், giving and earning fame. 2. வீட்டு ஈ, house fly. வீட்டு ஈ ஒரு தொற்றுயிரி. The house fly is a pest.

**ஈக்கில் கட்டு-** கைப்பிடியுள்ள துடைப் பம், broom stick with a long handle.

**ஈகை-** கொடை, generosity. சிற்றர சன் பாரி ஈகையுள்ளவன். The chieftain Paari was endowed with generosity. ஈகை உள்ளம், generous mind.

**ஈச்சை-** ஈச்ச மரம், date palm.

**ஈசல்-** இறக்கை முளைத்த கரையான், winged white-ant. ஈசல்கள் வெளிச்சம் நோக்கிப் பறப்பவை. The winged white-ants fly towards light.

**ஈசன்-** கடவுள், God. எல்லாம் ஈசன் செயல். It is all God's act.

**ஈசானிய மூலை-** வடகிழக்குப் பக்கம். northeast. நாம் இப்பொழுது ஈசானிய மூலை நோக்கி உள் ளோம். Now we face the northeast.

**ஈசுவரி-** பார்வதி, goddess Parvathi the cohort of Lord Siva.

**ஈட்டி-** 1. வேல், lance, spear. ஈட்டி ஓர் எறிபடை. The lance is a missile. 2. விளையாட்டு எறிகருவி, javelin.

**ஈட்டி எறிதல்-** javelin throw. அவன் ஈட்டி எறிதலில் முதலிடம் பெற் றான். He secured first place in javelin throw.

**ஈட்டிக்காரன்-** அதிக வட்டிக்குப் பணம் கடன் கொடுத்து வாங்கு பவன். Usurer, one who lends money at a higher rate of interest.

**ஈட்டியவிடுப்பு-** அரசு அலுவர்க்கு வழங்கப்படும் ஒரு வகை விடுப்பு. earned leave. ஈட்டிய விடுப்பு அரசு அலுவலர்களுக்கு உண்டு. Earned leave is granted to government servants.

**ஈட்டு-** பெறு, earn. பொருள் ஈட்டு, Earn money. புகழ் ஈட்டு, Earn fame.

**ஈட்டுப்படி-** ஈடாக வழங்கப்படும் தொகை. (எ-டு) நகர ஈட்டுப்படி, city compensatory allowance, given to metropolitan employees in order to compensate the higher cost of living.

**ஈட்டுப்பத்திரம்-** கடன் அடைப்பு உறுதிப்பத்திரம், bond executed by a debtor pledging something for the loan taken.

**ஈட்டுறுதி-** குறிப்பிட்ட உடைமை யைக் கொண்டு கடனை அடைக் கும் உறுதிமொழி, a promise by a debtor who offers securites for the loan taken.

**ஈடிணை-** ஒப்பு, peer, equal. இசை உலகில் அவருக்கு யாரும் ஈடிணை இல்லை. There is no peer for him in the world of music.

**ஈடு-** 1. இணை, equal. 2. மாற்று, substitute. கடின உழைப்பிற்கு ஈடு ஏதுமில்லை. There is no substitute for hard work. 3. அடகு, pledge, pawn. என் சங்கிலியை ஈடாக வைத்துப் பணம் வாங்கினேன்.

I got money by pledging my golden chain. *4. இட்லி இன்னும் இரண்டு ஈடுகள் எடு,* Cook two more sets of idlies. *5. தடவை,* time. *இந்த ஈட்டில் நல்ல காய்ப்பு.* This time the yield is good.

**ஈடுகட்டு-** *ஈடுசெய்,* make up. *இதை நீ எவ்வாறு ஈடுகட்டப் போகிறாய்?* How are you going to make up this loss? *2. மாற்று வழியில் நிறைவேற்று,* satisfy by some other means. *தொழிலாளர் கோரிக்கைகளை வேறு வகையில் நிறைவேற்று.* Satisfy the demands of the workers by some other means.

**ஈடுகொடு-** *1. சமமாக இரு,* be equal to. *ஈகையில் அவருக்கு ஒருவரும் ஈடு கொடுக்க முடியாது.* In genero sity none can equal him. *2. சரி செய்,* adjust. *அவர் விருப்பங்களுக்கு ஈடுகொடுத்து நட.* Adjust yourself to satisfy his desires. *3. ஈடு செய்,* compensate. *அவ்விழப்பை ஒருவரும் ஈடுசெய்ய இயலாது.* None can compensate the loss.

**ஈடுபடு-** *இறங்கு,* be involved. *அவர் முழுதும் அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார்.* He is totally involved in science research.

**ஈடுபடுத்து-** engage. *நான் மொழிபெயர்ப்பாளராக ஈடுபடுத்தப் பட்டுள்ளேன்.* I have been engaged as an interpreter.

**ஈடுபாடு-** *நாட்டம்,* involvement, dedication. *அவர் இசை ஈடுபாடு மிக அருமையானது.* His dedication to music is really remarkable.

**ஈடுபெற்ற கடன்-** *ஒன்றை ஈடாக வைத்துப் பெற்ற கடன்,* secured loan. *நான் ரூபாய் 50,000 ஈடுபெற்ற கடனாக வங்கியிலிருந்து வாங்கி உள்ளேன்.* I have got Rs.50,000 as secured loan.

**ஈடுபெறாக் கடன்-** *ஈடு இல்லாக் கடன்,* unsecured loan. *நான் ரூ. 25,000 வங்கியிலிருந்து ஈடுபெறாக் கடனாகப் பெற்றுள்ளேன்.* I have got Rs. 25,000 as unsecured loan.

**ஈடுவை-** *அடகுவை,* pledge. *நான் நகையை ஈடுவைத்து ரூ. 1,000 வாங்கினேன்.* I pledged my jewel to get Rs 1,000.

**ஈடேற்றம்-** *மீட்சி,* redemption. *பாவிகளுக்கு ஈடேற்றம் இல்லை.* There is no redemption for sinners.

**ஈடேற்று-** *நிறைவேற்று,* fulfil. *உன் பெற்றோர்கள் ஆசையை ஈடேற்று.* Fulfil your parents' desire.

**ஈமக்கடன்-** *இறுதிச் சடங்கு,* funeral rites. *என் மாமனின் ஈமக்கடன் நாளை நடைபெறுகிறது.* The funeral rites of my uncle take place tomorrow.

**ஈமான்-** *இறை நம்பிக்கை,* faith in God.

**ஈயப்பற்று-** *ஈயமும் காரீயமும் சேர்ந்த கலவை.* solder an alloy of lead and tin. *ஈயப்பற்று கடின உலோகங்களை இணைக்கப் பயன்படுவது.* Solder is used to join harder metals.

**ஈயம்-** *காரீயம்,* lead. *மின்கல அடுக்குகள், கம்பிகள் முதலியவை செய்வதில் காரீயம் பயன்படுவது.* Lead is used in the manufacture of batteries and cables.

**ஈயம்பூசு-** *கலாய் பூசு,* coat with lead. *வீட்டில் பல பித்தளைப் பாத்திரங்கள் ஈயம் பூசப்பட வேண்டி*

*யுள்ளன.* There are many vessels to be coated with lead.

**ஈயோட்டு-** *சும்மா இரு,* while away the time. *சோம்பேறிகளே ஈயோட்டுவர்.* The lazy people only will whileaway the time.

**ஈர்-** *1. இழு,* attract. *புவி எல்லாப் பொருள்களையும் தன் பக்கம் நோக்கி இழுக்கிறது.* The earth attracts all bodies towards it. *2. உறிஞ்சு,* absorb. *உலர்ந்த மண் நீரை உடன் ஈர்க்கும்.* The dry soil will immediately absorb water. *3. கவனத்தை ஈர்,* attract attention. *4. பேன் முட்டை,* louse's egg. *5. இரண்டு,* two. *ஈரடிச் செய்யுள்,* couplet. *திருக்குறள் ஈரடிச் செய்யுள் வடிவத்தில் உள்ளது.* Thirukkural is in the couplet form.

**ஈர்க்குச்சி-** *தென்னை, பனை ஈர்க்கு,* rib of a palm leaf.

**ஈர்ப்பு-** *1. கவர்ச்சி,* attraction. *அவள் சிரிப்புக்கு ஒரு தனிக் கவர்ச்சி உண்டு.* Her laughter has an attraction of its own. *2. ஈர்ப்பாற்றல்,* gravity. *ஒவ்வொரு பொருளின் உள்ளார்ந்த பண்பு.* Gravity is an inherent property of every object.

**ஈர்வலி-** *ஈர் எடுக்க உதவும் சீப்பு,* a kind of wooden comb to remove lice from hair.

**ஈரப்பசை** - *1. ஈரம்,* moisture. *நெல்லில் ஈரப்பசை உள்ளது.* There is moisture in the paddy. *2. இரக்க உணர்வு,* compassionate feeling. *உனக்கு நெஞ்சில் ஈரப்பசையே இல்லையா?* Don't you have a feeling of compassion in your heart.

**ஈரப்பதம்-** *ஈரநிலை,* humidity. *ஈரப்பதம் வானிலை நிலைமைகளில் ஒன்று.* Humidity is one of the climatic conditions.

**ஈரல்-** *கல்லீரல்,* liver.

**ஈருள்ளி-** *வெங்காயம்,* onion of small variety.

**ஈவிரக்கம்-** *இரக்கம், பரிவு,* mercy. *ஈவிரக்கம் ஒரு மனிதப் பண்பு.* Mercy is a human quality.

**ஈவு-** *ஒரு எண்ணை மற்றொரு எண்ணால் வகுப்பதால் கிடைக்கும் தொகை,* quotient. *ஆறை இரண்டால் வகு. கிடைக்கும் ஈவு மூன்று.* Divide 6 by 2. The quotient is 3.

**ஈளை-** 1. *ஆஸ்துமா,* Asthma. *அவர் ஈளைநோயால் அதிகம் அவதிப் படுகிறார்.* He suffers a lot from asthma. *2. கோழை,* sputum.

**ஈற்றயல்-** *இறுதிக்கு முந்திய,* penultimate, last but one. *ஈற்றயல் எழுத்து,* the penultimate. *மாதத்தின் ஈற்றயல் நாள்,* The penultimate day of the month.

**ஈற்று-** *கன்று போடும் எண்ணிக்கை,* litter. *முதல் ஈற்று நாய்க் குட்டிகள்,* the puppies of the first litter.

**ஈறாக-** *1. வரை,* from-to. *இன்று பெரிய அலுவலர் முதல் சிறிய அலுவலர் ஈறாகப் பலர் கையூட்டு வாங்குகின்றனர்.* At present, some officers from top to bottom receive bribe.

**ஈறு-** *1. இறுதி,* end, last. *ஈற்றடி,* the last line. *2. சொல்லின் இறுதி,* the last letter of a word. *(எ.டு) பாடாத- இதில் 'த' என்பது ஈறு.*

**ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்-** *(இலக்) (எ.டு) பாடாப் பைங்கிளி. பாடாத பைங்கிளி என்ற*

தொடரில் உள்ள 'த்' கெட்டு 'ப்' ஆக மாறியுள்ளது. This is a kind of adjective in which the last letter changes suitably. ஈறுகெடல், change of last letter.

**ஈன்**- 1. குட்டி போடு, calve. எங்கள் பசு விரைவில் கன்று ஈனும். Our cow will be calving soon. 2. பிள்ளைப் பேறு, give birth to, be born. என் தங்கை ஆண்குழந்தை ஈன்றெடுத் துள்ளாள். My younger sister has given birth to a boy.

**ஈன்றாள்**- தாய், mother. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை. (குறள் 656). Though your mother suffers hunger, don't do a deed condemned by the great.(T. 656)

**ஈனம்**- 1. இழிவு, disgrace. என்னைப் பொறுத்த வரையில் அது ஓர் ஈனச் செயல். As far as I am concerned, it is a disgraceful act. 2. மெல்ல, feeble, ஈனக்குரல், feeble voice.

## உ

**உக்கிரம்**- 1. கடுமை, intensity. வெயி லின் உக்கிரம் தாங்க முடிய வில்லை. The intensity of the sunshine is unbearable. 2. சீற்றம், fury. காளி உக்கிரத்துடன் தோன்றி னாள். Goddess Kali appeared with fury.

**உக்கிராணம்**- சமையல் பொருள் அறை, store room. இந்தக் கல்யாண மண்டபத்தில் உக்கிராணம் எங்குள்ளது? Where is the store room in this marriage hall?

**உகந்த**- 1. ஏற்ற, suitable. சுற்றுலா விற்கு உகந்த இடம், a place suitable for tour. 2. பிடித்த, pleasing. உகந்த நண்பன், a pleasing friend.

**உகப்பு**- மகிழ்ச்சி, joy, pleasure. அச் செய்தியைக் கேட்க உகப்பாக உள்ளது. It is a pleasure to hear the news.

**உகு**- வடி, shed. கண்ணீர் உகு. Shed tears.

**உச்சக்கட்டம்**- முடிவு நெருங்கும் கட்டம், climax. படத்தின் உச்சக் கட்டம் நன்று. The climax of the film is fine.

**உச்சந்தலை**- மேல் தலையின் நடுப் பகுதி, crown of the head. உச்சந் தலையில் எண்ணெய் வைத்துத் தேய். Rub the crown of the head with oil.

**உச்சநீதிமன்றம்**- தலைமை நீதி மன்றம், Supreme Court, ApexCourt. இந்தியாவின் இறுதி நீதிமன்றம் உச்சநீதி மன்றமே. The final court of India is the Supreme Court.

**உச்சம்**- தீவிரம், extreme stage. நல்ல ஆட்சியின் உச்சம் இது தான். This is the extreme stage of a good government.

**உச்சமட்டம்**- உயர்நிலை, the highest. ஓரமைப்பில் செயற்குழுதான் உச்ச மட்டம். The executive committee is the highest body in an organization.

**உச்சரி**- 1. ஒலி, pronounce. சொற் களைச் சரியாக உச்சரி. Pronounce the words correctly. 2. ஓது, chant. மந்திரம் உச்சரி. Chant the mantras.

**உச்சரிப்பு**- pronunciation. உன் உச்சரிப்பு சரியாக உள்ளது. Your pronunciation is correct.

**உச்சவரம்பு**- உயர் எல்லை, upper limit ceiling. நில உச்சவரம்புச் சட்டம், the land ceiling act.

**உச்சஸ்தாயி-** குரல் மேல் எல்லை, high pitch. *பாடகர் உச்சஸ்தாயியில் பாடினார்.* The singer sang in a high pitch.

**உச்சாடனம்-** ஒரே சீராக ஓதுகை, uniform chanting of mantras. *அவர் கவிதை படித்தது மந்திர உச்சாடனம் போல் இருந்தது.* His reading of the poem was like the chanting of mantras.

**உச்சாணிக் கொம்பு-** *மரஉச்சி,* top of a tree, ivory tower.

**உச்சி-** *1.* நுனி, top. கோபுர உச்சி, the top of a temple tower. *2.* உச்சந்தலை, crown of head. *3.* வகிடு, parting line. *4.* செல்வாக்கு உயர்நிலை, zenith. *அவர் புகழ் உச்சியில் உள்ளார்.* He is at the zenith of his glory.

**உச்சிக்காலப் பூசை-** *பகல் பன்னிரண்டு மணிப் பூசை,* midday temple worship.

**உச்சிக் குடுமி-** *பின் குடுமி,* tuft of hair. ஒ. *முன் குடுமி.*

**உச்சிக் கொண்டை-** *பெண்களின் ஒரு வகைத் தலையலங்காரம்,* twisted hair knot bun. *குதிரைவால் கொண்டை,* horse tail like bun.

**உச்சிகுளிர்-** புகழ்வதால் பெரு மகிழ்ச்சி ஏற்படுதல், feel flattered. *ஒருவரைப் புகழ்ந்து உச்சிகுளிரச் செய்யலாம்.* Cajoling makes one feel flattered.

**உச்சிப் பொழுது-** *நண்பகல்,* midday. *இப்பொழுது உச்சிப்பொழுது.* Now it is midday.

**உச்சி மாநாடு-** *முக்கிய முடிவுகள் எடுக்க முக்கிய நாட்டுத் தலைவர்கள் கூடும் மாநாடு.* summit conference, a meeting between the heads of countries to take decisions on important issues. *ஆக்ரா உச்சி மாநாடு,* Agra Summit Conference.

**உச்சி முகர்-** *முன் தலையில் முத்தமிடு,* kissing the children on the forehead to show one's affection usually done by parents or close relatives.

**உச்சி வானம்-** *தலைக்கு மேல் நேராக உள்ள வானம்,* sky overhead, zenith. ஒ. *அடிவானம்.*

**உச்சி வெயில்-** *நண்பகல் வெயில்,* hot sun. *இன்று உச்சிவெயில் தாங்க முடியவில்லை.* Today the hot sun is unbearable.

**உசுப்பு-** 1. ஏவு, set on. *நாயை உசுப்பி விடு.* Set on the dog. *2.* தூண்டு, instigate. *தொழிலாளர் தலைவர்கள் போராட்டத்தை உசுப்பி விட்டனர்.* The labour leaders instigated the strike.

**உஞ்சவிருத்தி-** *ஒருவர் தம் ஒவ்வொருநாள் உணவிற்கும் அரிசியைக் கொடையாகப் பெறுதல்,* one receiving rice only as alms for each and every day.

**உட்கரு-** *1.* மையப்பொருள், central theme. *கதையின் உட்கரு நன்றாக உள்ளது.* The central theme of the story is fine. *2.* உயிரணுவின் மையப் பகுதி, nucleus. *ஒவ்வொரு உயிரணுவிற்கும் ஓர் உட்கரு உண்டு.* Each and every cell has a nucleus. *3.* அணுவின் மையப்பகுதி, the nucleus of an atom.

**உட்கருத்து-** *உணர்த்தும் கருத்து,* inner meaning. *அதன் உட்கருத்து இதுவே.* The inner meaning is this.

**உட்காய்ச்சல்-** *உணர இயலாத காய்ச்சல்,* latent fever.

**உட்கார்-** *அமர்,* sit. *நாற்காலியில் உட்கார்.* Sit on the chair.

**உட்கிடக்கை-** *பா. உட்கருத்து.*

**உட்குழு-** *சிறு குழு,* inner group, sub-committee.

**உட்கொள்-** *1. சாப்பிடு,* eat. *என்ன உட்கொள்கின்றாய்?* What are you eating? *2. உறிஞ்சு,* absorb. *பஞ்சு நீரை உட்கொள்ளும்.* The sponge absorbs water. *3. அடங்கியிரு,* consist of. *துகள்களாலானது அணு.*.An atom consists of particles.

**உட்செலுத்து-** *1. நுழை,* insert. *பூட்டைத் திறக்கச் சாவியை உட்செலுத்து.* Insert a key into a lock to open it. 2. *உள்ளே போகச் செய்,* inject. *மருந்தை உட்செலுத்து.* Inject the medicine into the body.

**உட்பட்ட-** *குறைந்த,* below. *முப்பது வயதுக்கு உட்பட்டவர்கள் இப்போட்டியில் கலந்து கொள்ளலாம்.* People below thirty can take part in this competition.

**உட்பட-** *சேர்ந்து,* including. *தலைமை ஆசிரியர் உட்பட எல்லா ஆசிரியர் களும் இப்போட்டியில் கலந்து கொள்கின்றனர்.* All teachers including the headmaster take part in this competition.

**உட்படு-** *1. கட்டுப்படுதல்,* subject to. *நாம் சட்டத்திட்டங்களுக்கு கட்டுப்பட்டவர்கள் ஆவோம்.* We are subjected to rules and regulations. *2. போராட்டத்தின் பொழுது பயணிகள் பல துன்பங் களுக்கு ஆளாகின்றனர்.* During strike, the passengers are subjected to a lot of sufferings.

**உட்பிரிவு-** *துணைப்பிரிவு,* sub division. *சட்டத்தின் மூன்றாம் பிரிவு,* the third subdivision of law.

**உட்புறம்-** *உட்பகுதி,* inside. *கோட்டையின் உட்புறத்தில் ஒரு பூங்கா உள்ளது.* There is a park inside the fort.

**உட்பூசல்-** *சொந்த நலன் காரணமாக எழும் பூசல்,* infighting. *உட்பூசல் கட்சி அரசியலிலிருந்து பிரிக்க இயலாதது.* Infighting is inseparble from party politics.

**உட்பொருள்-** *பா. உட்கருத்து.*

**உடந்தை-** *துணையாக இருத்தல்,* accomplice. *இக்குற்றத்திற்கு அவன் உடந்தை.* He is an accomplice to this offence.

**உடம்படுமெய்-** *(இலக்) ய்,வ், முதலான மெய்யெழுத்துகள்,* consonantal glide to connect vowels. *(எ.டு) மணி + ய் + அழகு= மணியழகு. இள + வ் + அழகன்= இளவழகன்.*

**உடம்பு-** *உடல்,* body. *பருவுடம்பு,* physical body.

**உடல்நலம்-** *நோயற்ற நிலை,* health. *உடல் நலத்தை பேணுக.* Guard your health. *உடல்நலத்திட்டம்* - health programme.

**உடலுழைப்பு-** *கடின உழைப்பு,* physical labour. *இந்த நற்செயலுக்கு உன் உடலுழைப்பைத் தருக.* Give your physical labour for Cause.

**உடலுறவு-** *ஆண், பெண் பாலுறவுச் சேர்க்கை,* sexual intercourse. *தகா உடலுறவு எய்ட்ஸ் நோய்க்கு வழிவகுக்கும்.* Unhealthy sexual intercourse leads to AIDS.

**உடற்கல்வி-** *விளையாட்டுக் கல்வி.* physical education. *உடற்கல்வி*

பாடத்திட்டத்தின் ஒரு பகுதி யாகும். Physical education is part of syllabus. உடற்கல்வி ஆசிரியர், physical education teacher. உடற் கல்வி இயக்குநர், physical director.

**உடற்கூறியல்-** உடலில் உள்ள அமைப்பை ஆராயுந்துறை. anatomy, the study of internal structure. மனித உடற்கூறியல். human anatomy.

**உடற்பயிற்சி-** physical exercise. உடற்பயிற்சி உடலுக்கு நலந்தரும், Physical exercise gives health to body.

**உடன்-** உடனே, immediately. உடன் கிளம்பவும். Start immediately.

**உடன்கட்டை ஏறுதல்-** கணவன் சிதையில் மனைவி இறங்கித் தன் உயிரை விடுதல். Sathi, the wife burning herself alive along with her husband in the funeral pyre.

**உடன்படிக்கை-** குறிப்பிட்ட பொருள் குறித்து இரு நாடுகள் செய்து கொள்ளும் உடன்பாடு, pact made between countries on a paricular subject. அமைதி உடன்படிக்கை, peace pact.

**உடன்படு-** ஒத்துக்கொள், agree. அவர் என் கருத்திற்கு உடன் பட்டார். He agreed to my idea.

**உடன்பாடு-** 1. இணக்கம், acceptance, approval. சட்டம் மக்கள் உடன் பாட்டைப் பெற்றது. The law gained the acceptance of the people. உடன்படிக்கை, treaty. 3. ஆம், affirmative.

**உடன்பிறந்த-** 1. கூடப்பிறந்த, born of the same parent. அவன் என் உடன்பிறந்த சகோதரன். He is my brother.

**உடன்பிறந்தார்-** சகோதர, சகோதரி கள், brothers and sisters. உடன் பிறந்தார் நாங்கள் பத்துப் பேர். We are ten brothers and sisters.

**உடன்பிறந்தான்-** சகோதரன், brother.

**உடன்பிறந்தாள்-** சகோதரி, sister.

**உடன்பிறப்பு-** கூடப் பிறந்தவர், brother/sister.

**உடனடியாக-** உடனே, immediately. உடனடியாக ரூ. 1,000 அனுப்பவும். Send immediately Rs 1,000.

**உடனிகழ்ச்சி-** ஒருசேர நடைபெறும் நிகழ்வு, accompaniment. வெளிச்சம் வேதிவினையின் ஓர் உடனிகழ்ச்சி. Light is an acccompaniment of chemical action.

**உடனிரு-** அருகிலிரு, be with. வேலை முடியும்வரை என்னுடனிரு. Be with me until the work is done.

**உடனுக்குடன்-** அவ்வப்பொழுது, then and there. நான் எனக்கு வரும் கடிதங்களுக்கெல்லாம் உடனுக்குடன் பதில் எழுதுகிறேன். I reply to all the letters I receive then and there.

**உடுக்கு-** கிராமப் பூசாரி ஒரே கையில் பிடித்துக்கொண்டு அடிக்கும் சிறு மேளம், a small hand - held drum used by the village temple priest.

**உடுக்குறி-** * ஒரு வாக்கியத்தில் ஒன்றை வற்புறுத்தப் பயன்படும் நட்சத்திரக்குறி, asterisk, star shaped symbol used in a sentence to call attention to something.

**உடுக்கை-** பா. உடுக்கு.

**உடுத்து-** அணி, wear. அவன் சீருடை உடுத்தினான். He wore uniform. புடவை உடுத்து. Drape a saree.

**உடுப்பு-** ஆடை, dress. போர்ப் படை உடுப்பு, military dress.

**உடும்பு-** ஒரு பல்லி இன விலங்கு, a lizard like animal, monitor lizard.

உடும்புத்தோல் கஞ்சிரா செய்யப் பயன்படுகிறது. The skin of this lizard is used to make tambourine. உடும்புப்பிடி, lizard like catch.

**உடை-** 1. ஆடை, dress, garment. 2. துண்டாக்கு, break. கண்ணாடிக் குவளைக் கீழே விழுந்தால் உடையும். If you drop a glass tumbler, it will break. 3. தகர்த்தல், break. மழையால் ஏரிக்கரை உடைந்தது. The lake breached due to rains. 4. பிளத்தல், burst open.கட்டி உடைந்தது. The boil burst open. 5. உடைத்தல், break. ஒரு திருடன் பூட்டை உடைத்து உள்ளே நுழைந்தான், A thief broke the lock and got in. 6. திற, break open. கட்டைத் திற, Break open the bundle. 7. பிளவு உண்டாக்கு, split. ஆளுங்கட்சி எதிர்க்கட்சியை உடைக்க முயலுகிறது. The ruling party tries to split the opposition. 8. பிள, split. விறகு உடை, Split the log.

**உடைசல்-** உடைந்து போன பொருள், broken piece, junk. இந்த ஓட்டை உடைசல்களை யார் வாங்குவார் கள்? Who will buy this junk?

**உடைப்பில் போடு-** வேண்டாத பொருளைத் தூக்கி எறி, throw out. இந்தப் பயனில்லாப் பொருள் களை எல்லாம் உடைப்பில் போடு. Throw out all these waste materials.

**உடைவாள்-** உடையில் உள்ள வாள், sword. பழங்காலத்தில் உடைவாள் வீரர்களின் உடைமையாகும். In olden days, the sword was the possession of soldiers.

**உண்-** அருந்து, eat, drink. உணவு உண். Eat meal. நீர் அருந்து. Drink water.

**உண்டாக்கு-** 1.உருவாக்கு, create, produce. இக்கதையில் நல்ல பாத்திரங்கள் உண்டாக்கப்பட் டுள்ளன, Good characters have been created in this story. இக் கல்லூரி நல்ல மாணவர்களை உண்டாக்கியுள்ளது. This college has produced good students. 2. நிறுவு, establish. இந்நிறுவனம் 1930இல் உண்டாக்கப் பட்டது. This institution was established in 1930. 3. விளைவி, cause. குழப்பம் உண்டாக்கு. Cause confusion.

**உண்டான-** உரிய, due. எனக்கு உண் டான பங்கைக் கொடு. Give the share due to me .

**உண்டி-** உணவு, food. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே. Those who offered food offered life.

**உண்டியல்-** 1. உருளை வடிவில் உள்ள பணப்பெட்டி, hundi, container for collecting contributions in temples. 2. பட்டியல், bill. உண்டியலை வங்கியில் அளி. Present the bill to the bank.

**உண்டு-** 1. இரு, be. இவ்வுலகில் நல்லவர்களும் உண்டு, கெட்டவர் களும் உண்டு. There are good and bad people in this world. 2. உண்டு அல்லது இல்லை என்று கூறு. Say yes or no.

**உண்டு பண்ணு-** பா. உண்டாக்கு.

**உண்டைக்கட்டி-** உருண்டை வடிவக் கட்டிச்சோறு, cooked rice balls given in temples.

**உண்ணாவிரதம்-** உண்ணா நோன்பு, fasting. உண்ணாவிரதம் மேற் கொள்வது உடல்நலத்துக்கு

நல்லது. Fasting is good for health. தொழிலாளர்களின் உண்ணா விரதப் போராட்டம், hunger strike by workers.

**உண்ணி-** *1. ஆடு, மாடு முதலிய விலங்குகளில் ஒட்டிக்கொண்டு வாழும் சிற்றுயிர்,* mite, tick. *உண்ணிகளால் நாய் பாதிக்கப் பட்டுள்ளது.* The dog is infested with ticks. *2. ஊன்உண்ணி, புலி,* carnivore, tiger. *3. புல்பூண்டு உண்ணி, யானை,* herbivore, elephant. *4. அனைத்துண்ணி,, காகம்,* omnivore, crow. *5. ஒட்டுண்ணி, நாக்குப்பூச்சி,* parasite, ascaris. *6.சாறுண்ணி, பூஞ்சை.* saprophyte, fungus.

**உண்மை-** *1. மெய்ம்மை.* truth. *உண்மையே வெல்லும்.* Truth alone will triumph. *2. உண்மையானது,* genuine, real. இது ஓர் உண்மைப் பூ. This is a real flower. *3. உண்மை நண்பன்,* True friend. *4. அடிப்படை உண்மை,* fundamental truth.

**உண்மைவிளம்பி-** *உண்மையைப் பேசுபவர்,* one who speaks truth.

**உணர்-** *1. அறி,* feel. *அதிர்ச்சியை உணர்ந்தேன்.* I felt the shock. *2. புரிந்துகொள்,* realize. *உண்மையை உணர்.* Realise the truth.

**உணர்ச்சி-** *1. உணர்வு,* feeling. *பிறர் உணர்ச்சிகளை மதிப்பது நல்லது.* It is better on our part to respect the feelings of others. *2. மனஎழுச்சி,* emotion. *அது ஓர் உளஎழுச்சி நிறைந்த கதை.* It is an emotional story.

**உணர்ச்சிவசப்படு-** *உளம்நெகிழ்,* become emotional. *அந்த விருதைப் பெறும்பொழுது அவர் உணர்ச்சி வசப்பட்டார்.* When he received that award, he became emotional

**உணர்த்து-** *1. அறியுமாறு செய்,* make one understand. *அவன் மடமையை உணர்த்து,* Make him understand his folly. *2. குறிப்பிடு,* indicate. *மௌனம் சம்மதத்தை உணர்த்துவது.* Silence indicates acceptance.

**உணர்வு-** *1. உள்ளுணர்வு,* intuition. *அவன் நல்லவன் என்று என் உணர்வு கூறுகிறது.* My intuition says that he is a good fellow. *2. தன் நினைவு,* consciousness. *அவன் தன் உணர்வு இழந்தான்.* He lost his consciousness.

**உணவு-** *ஊட்டம் பெறச் சாப்பிடும் பொருள்,* food eaten to get nutrition. *கெட்டி உணவு,* solid food. *நீர்ம உணவு,* liquid food.

**உணவுக் குழல்-** *வாயிலிருந்து இரைப்பை வரை உள்ள குழாய்,* alimentary canal, food tube. *உணவுக்குழல் செரித்தல் மண்டலத்தின் ஒரு பகுதியாகும்.* The ali mentary canal is a part of the digestive system.

**உணவகம்-** *1. விலைக்கு உணவு வழங்குமிடம்,* hotel. *2. உறுப்பினர்களுக்கு மட்டும் உணவு வழங்குவது,* hostel.

**உணவு விடுதி-** *பா. உணவகம்.*

**உத்தமம்-** *1. நல்லது,* good. *உண்மையைக் கூறுவது நல்லது.* It is better to tell the truth. *2. உயர்ந்தது, போற்றத்தக்கது,* sterling. *உத்தம குணம்,* sterling quality. *3. மங்களம்* mark of auspiciousness. *உத்தமன்,* a man of sterling quality.

**உத்தமி-** *கற்பில் சிறந்தவள், உயர்ந்த குணமுள்ளவள்,* a virtuous woman.

**உத்தர கிரியை-** *இறுதிச்சடங்கு,* final obsequies.

**உத்தரம்-** *1. தளத்தைத் தாங்கும் தடித்த மரம்,* beam. *பழைய வீடுகளில் உத்தரம் காணப்படும்.* Beam is found in old houses. *2. மறுமொழி,* reply. *உன் உத்தரம் என்ன?* What is your reply? *3. 27 விண்மீன்களில் பன்னிரண்டாவது,* The twelth of the twenty seven stars.

**உத்தரவாதம்-** *1. வாக்குறுதி,* guarantee. *அவருக்காக நான் உத்தரவாதம் அளிக்கிறேன்.* I offer guarantee for him. *2. உறுதி,* assurance. *வேலை கிடைக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம்?* What is the assurance for the job. *3. பாதுகாப்பு,* safety, protection. *உயிருக்கு உத்தரவாதமில்லை.* There is no protection for life.

**உத்தரவு-** *1. ஆணை,* order, command. *அரசு ஆணை,* Government order. *2. அனுமதி,* permission. *தொழிற்சாலையைச் சுற்றிப் பார்க்க உத்தரவு தேவை.* Permission is necessary to go around the factory.

**உத்தராயணம்-** *புவி கதிரவனைச் சுற்றும்பொழுது, அதன் வடபகுதி கதிரவனை நெருங்கிவரும் ஆறு மாத காலம்,* The six month period of the sun's northward passage. *ஒ. தட்சிணாயனம்.*

**உத்தி-** *1. நுணுக்கம்,* technique. *விளம்பர உத்திகள்,* advertisement techniques. *2. முறை,* device. *இலக்கிய உத்திகள்,* literary devices.

**உத்தியோகம்-** *1. வேலை,* profession, employment. *எனக்குச் சொந்த ஊரில் உத்தியோகம் கிடைத்து விட்டது.* I got employment in my native place. *2. பதவி,* job, post. *உத்தியோக உயர்வு,* job promotion.

**உத்திரட்டாதி-** *இருபத்தேழு விண்மீன்களில் இருபத்தாறாவது,* the twenty sixth of the twenty seven stars.

**உத்திராட்ச பூனை-** *சாதுவான புறத்தோற்றமுள்ள போலி மனிதன்,* pious hypocrite.

**உத்திராட்சம்-** *சைவர்கள் பூஜைக்குப் பயன்படுத்தும் ஒரு வகைக் கொட்டைகளால் ஆன ஜெப மாலை,* rosary, string of beads used for prayer by saivites.

**உத்திராடம்-** *இருபத்தேழு விண்மீன்களில் இருபத்தொன்றாவது,* The twenty first of the twenty seven stars.

**உத்தேசம்-** *1. எண்ணம்,* proposal. *மேல் நடவடிக்கை எடுக்கும் உத்தேசம் இல்லை.* There is no proposal to take further action. *2. தோராயம்,* approximation. *உத்தேசமாக விலை ரூ. 50.* Approximately the price is Rs 50.

**உத்தேசி-** *1. எண்ணு,* intend. *உங்கள் வசதி கருதி இந்த ஏற்பாடு.* We intend to make this arrangement for the sake of your convenience. *2. முன்மொழி. சட்டத்திருத்தம் கொண்டு வர அரசு உத்தேசித்துள்ளது.* There is a proposal by the government to bring about an amendment to the law.

**உத்வேகம்-** *உந்தல்,* urge, impulse. *உடன் இந்த வேலையை முடிக்க*

வேண்டும் என்ற உத்வேகம் எனக்குள்ளது. I have an urge to finish this job at once.

**உதட்டுச்சாயம்-** உதட்டில் பூசும் வண்ணப்பூச்சு, lipstick. உதட்டுச் சாயம் பெண்கள் உதட்டில் பூசிக் கொள்ளும் ஓர் அழகு சாதனம். Lipstick is a cosmetic applied to the lips by fashionable ladies.

**உதடு-** இரண்டாகப் பிரிந்து பற்களை மூடும் வாயின் புறப் பகுதி, lip.

**உதயம்-** *1.* தோற்றம், rise. கதிரவன் உதயம், sunrise. *2.* பிறப்பு, birth. பெண் குழந்தை மாலை நான்கு முப்பதுக்கு உதயம். The birth of a female child at 4.30 p.m.

**உதரவிதானம்-** மார்புக்கும் வயிற்றுக் கும் இடையிலுள்ள தசை, dia phragm. உதரவிதானம் உடலி லுள்ள தசைகளில் மிகப் பெரியது. The diaphragm is the largest muscle of the body.

**உதவாக்கரை-** உருப்படாதவன், a good-for-nothing fellow.

**உதவு-** *1.* உதவுதல், help. என் உதவி உனக்கு தேவையா? Do you require my help? *2.* பணஉதவி, financial aid. *3.* உதவி இயக்குநர், assistant. director.

**உதவித் தொகை-** *1.* உபகாரச் சம்பளம், scholarship. நான் ஒரு உதவித் தொகைத் திட்டத்தில் படிக்கிறேன். I am studying under a scholarship scheme. *2.* துயர் நீக்க உதவி, relief. வெள்ள உதவி. flood relief.

**உதவு-** உதவி செய், help. நான் உனக்கு உதவலாமா? May I help you?

**உதறல்-** *1.* நடுக்கம், trembling. காய்ச்ச லால் அவனுக்கு உதறல் ஏற்பட்டது. He was trembling due to fever. *2.* பயம், fear. அவன் செய்த தவறு அவனுக்கு உதறலை உண்டாக்கியது. The wrong done by him caused trembling.

**உதறு-** *1.* உதறுதல், shake off. தூசி போகத் துண்டை உதறு. Shake off the towel to remove dust. *2.* வலிப் பால் அவன் கைகால்கள் உதறின. His hands and legs shook due to fits. *3.* அவர் தன் வேலையை உதறினார். He gave up his job.

**உதாசீனம்-** அலட்சியம், neglect. இப்படிப்பட்ட உதாசீனம் தீமையே விளைவிக்கும். Such a neglect will cause only harm.

**உதார குணம்-** பிறருக்கு உதவும் பண்பு, generosity. அவர் உதார குணம் போற்றுதற்குரியது. His generosity is really laudable.

**உதார சிந்தை-** தாராள மனப் பான்மை, liberal mind. அவருக்கு உதாரசிந்தை உண்டு. He has a liberal mind.

**உதாரணம்-** 1. எடுத்துக்காட்டு, example,model. பாதரசம் நீர்மத் திற்கு ஓர் உதாரணம். Mercury is an example of a liquid. *2.* முன்மாதிரி. அவர் மற்றவருக்கு உதாரணம். He is a model for others.

**உதி-** 1. தோன்று, rise. கதிரவன் கிழக்கில் உதிக்கிறது. The sun rises in the east. *2.* பிறந்திடு, be born. பெரும் மகான்கள் உதித்த நாடு இது. This is the land where great saints have born.

**உதிர்-** 1. விழு, fall down. இலைகள் உதிர்ந்தன. Leaves fell down.

கோபத்தில் சொற்களை உதிர்க்காதே. Don't utter words in anger.

**உதிரம்-** குருதி, blood. உதிரம் உறையக் கூடியது. Blood has the property to coagulate.

**உதிரி-** *1.* தனி, solitary. உதிரிப்பூ, solitary flower. *2.* மாற்று, spare. உதிரிப் பாகங்கள், spare parts.

**உதை-** 1. பந்தை உதை, kick the ball. *2.* குழந்தைத் தன் கால்களை உதைத்துக் கொண்டது. The child kicked its legs. *3.* அவன் நன்கு உதைக்கப்பட்டான். He was kicked severely. *4.* கணக்கு உதைக்கிறது, The figures do not tally.

**உதைப்பு-** குற்றஉணர்வு, a feeling of guilt.

**உந்தி-** தொப்புள், navel.

**உந்து-** 1. உந்திச் செல், pedal. உன் மிதிவண்டியில் உந்திச் செல். Pedal your cycle. *2.* முன்னோக்கிச் செல், push forward. பாய்மரக் கப்பல்கள் காற்றால் உந்தப்படுகின்றன. Air pushes forward the sailing ships. *3.* தூண்டு, urge. உனக்கு உதவி செய்ய வேண்டும் என்று உந்தப் பட்டேன். I was urged to help you.

**உந்துதல்-** ஊக்கம், impetus. உன் பாராட்டு எனக்கு ஓர் உந்துதல். Your appreciation is an impetus to me.

**உப்பங்கழி-** *1.* காயல், lagoon. *2.* உப்பளம், salt-pan. உப்பங்கழி கடலுக்கருகில் இருக்கும். The lagoon is found near the sea.

**உப்பரிகை-** மேல்மாடம், balcony in a palace. உப்பரிகையில் உலாவு. Stroll in the balcony.

**உப்பு-** *1.* பருத்திடு, bulge. குமிழில் காற்றை நிரப்ப அது உப்பும் If you fill up the balloon with air, it will bulge. *2.* வீங்கு, bloat. வீங்கிய முகம், a bloated face. *3.* சோற்றுப்பு, common salt.

**உப்புக்கடலை-** உப்பும் மஞ்சள் தூளும் சேர்ந்து வறுக்கப்பட்ட பட்டாணி, chick peas seasoned with a mixture of salt and turmeric powder.

**உப்புக் கண்டம்-** *1.* உப்பிட்டுக் காய வைத்த இறைச்சி, salted meat. *2.* கருவாடு, salted fish.

**உப்புக் காகிதம்-** உப்புத்தாள், sand paper.

**உப்புக் காற்று-** கடலிலிருந்து வீசும் உப்புத் தன்மை நிறைந்த காற்று, brackish sea breeze. உப்புக் காற்று பொருள்களை அரிக்கும். Brackish sea breeze erodes objects.

**உப்புச் சப்பு-** சுவை, taste, interest. உப்புச் சப்பில்லாச் சாப்பாடு, a tasteless meal. உப்புச் சப்பற்ற பேச்சு, a speech lacking interest.

**உப்புசம்-** *1.* வயிற்று வீக்கம், swelling of the stomach. *2.* வயிற்றுக் கோளாறு, gastric trouble.

**உப்புமா-** உடைத்த அரிசி அல்லது கோதுமை கொண்டு செய்யப்படும் உணவு, a dish prepared with broken rice or wheat.

**உப-** துணை, assistant. உபதலைமை ஆசிரியர், assistant headmaster.

**உப உணவு-** துணை உணவு, side dish.

**உபகரணம்-** துணைக் கருவி, apparatus used in laboratory, (e,g) instrument, tool. திருப்புளி ஓர் உபகரணம். Screw driver is a tool.

**உபகாரச் சம்பளம்-** *பா. உதவித் தொகை.*

**உபகாரம்-** *உதவி,* help. *உபகாரம் செய்வது மனித இயல்பு.* To help others is human nature. *ஒ. அபகாரம்.*

**உபகாரி-** *உதவுபவர்,* benefactor. One who helps others.

**உபசரி-** *உபசரித்தல்,* receive. *அவர் எங்களை அன்புடன் உபசரித்தார்.* He received us with love and affection.

**உபசரிப்பு-** *உபசரித்தல்,* hospitality. *உபசரிப்பில் என் தாயார் பேர் பெற்றவர்கள்.* My mother is known for her hospitality.

**உபசாரம்-** *1. உபசரிப்பு,* hospitality. *2. சம்பிரதாயம்,* formality, careful observation of rules and regulations. *உபசாரம் எனக்குப் பிடிக்காது.* I do not like formalities.

**உபத்திரவம்-** *தொல்லை,* hindrance. *பிறருக்கு உபத்திரவம் செய்யாதே.* Don't cause hindrance to others.

**உபதேசம்-** *அறிவுரை,* preaching, advice. *விவேகானந்தர் அறிவுரை,* The prechings of Vivekananda. *ஆன்றோர்களின் அறிவுரை,* the advice of elders.

**உபதேசி-** *அறிவுரை கூறு,* preach. *எப்பொழுதும் நல்லதையே உபதேசி.* Preach always good things.

**உபதேசியார்-** *கிறித்தவ ஆலயங்களில் பங்குத் தந்தையுடன் இணைந்து உபதேசப் பணிகளைச் செய்பவர்,* catechist, preacher.

**உப தேர்தல்-** *இடைத் தேர்தல்,* by-election. *அண்மையில் ஓர் உப தேர்தல் நடைபெற்றது.* Recently a by- election was conducted.

**உபநதி-** *பெரிய நதியில் வந்து விழும் ஒரு சிறிய ஆறு,* tributary, a small river thats flows into larger river.

**உபநயனம்-** *பூணூல் சடங்கு,* thread-wearing ceremony.

**உபநிடதம்-** *வேதத்தின் மெய்யறிவுப் பகுதி,* the philosophical part of the Vedas.

**உபந்நியாசம்-** *சொற்பொழிவு,* lecture speech, discourse. *சமய உபந்நியாசம்,* a religious discourse.

**உபமானம்-** *உவமை,* object of comparison. *"திங்கள் போன்ற முகம்". இதில் "திங்கள்" உபமானம்.* In "the moon like face", the "moon" is the object of comparison.

**உபமேயம்-** *உவமிக்கப்பட்ட பொருள்,* subject of comparison. *(எ.டு) 'முகம்' போன்ற திங்கள். இதில் முகம் உபமேயம்.* In 'face like moon', the 'moon' is the subject of comparison.

**உபயம்-** *நன்கொடை,* donation. *இந்த இரும்புக் கதவு என் உபயம்.* This iron gate is my donation.

**உபயோகம்-** *பயன்,* use. *வெளி உபயோகத்திற்கு மட்டும்.* For external use only. *உயிர்வளியின் பயன்கள்,* uses of oxygen.

**உபயோகி-** *பயன்படுத்து,* use. *ஒருவர் தமக்கு இருக்கும் அதிகாரத்தை நல்ல காரியங்களுக்கே உபயோகிக்க வேண்டும்.* One should use one's power for good things only.

**உபரி-** *அளவுக்கு அதிகமானது,* surplus. *உபரிநீர்,* surplus water.

**உபவாசம்-** *உண்ணாநோன்பு,* fasting.

**உபாசகன்-** *தீவிர வழிபாட்டாளர்,* an ardent devotee. *அவன் அங்காள பரமேஸ்வரி உபாசகன்.* He is an

ardent devotee of Angalapara meswari.

**உபாசனை-** *வழிபாடு,* worship.

**உபாசி-** *வழிபடு,* worship. *அம்பாளை உபாசி.* Worship Ambal.

**உபாத்தியாயர்-** *ஆசிரியர்,* teacher, educator. *உபாத்தியாயர் தொழில் ஒரு புனிதத் தொழில்.* Teacher's profession is a noble professoin.

**உபாதை-** *நோய்நிலை,* indisposition, suffering. *வயிற்றுவலி உபாதை,* the suffering from stomach-ache.

**உபாயம்-** *வழி,* method, device. *இதைச் செய்வதற்குரிய உபாயம் யாது?* What is the method of doing this?

**உம்மணாம்மூஞ்சி-** *கலகலப்பாக இல்லாதவன்,* a morose person. *அவன் ஓர் உம்மணாம்மூஞ்சி.* He is a morose person.

**உம்மா-** *அம்மா,* mother - the term used by Tamil Muslims.

**உம்மைத் தொகை-***(இலக்) 'உம்'- என்னும் இடைச்சொல் மறைந்து வருவது.* (gram) a phrase in which the particle '*உம்*' is understood. (e,g) *செடி கொடி (செடியும், கொடியும்)*

**உமி-** *நெல்லின் புறத்தோல்,* husk. *நெல் உமி,* paddy husk.

**உமிழ்-** *1. துப்பு,* spit. *இங்கே உமிழ்.* spit here. *2. வெளிப்படுத்து,* emit. *கதிரவன் வெளிச்சத்தை உமிழ்கிறது.* The sun emits light.

**உமிழ்நீர்-** *எச்சில்,* saliva.

**உமிழ்நீர்ச் சுரப்பி-** *எச்சிலை உருவாக்கும் உறுப்பு,* salivary gland. *உமிழ்நீர்ச் சுரப்பிகள் வாயில் உள்ளன.* Salivary glands are found in the mouth.

**உமை-** *பார்வதி,* Goddess Umai.

**உய்-** *நற்கதி அடை,* be redeemed. *உலகம் உய்ய மகான்கள் அவதரிக்கின்றார்கள்.* Savants are born to redeem the world.

**உய்த்தறி-** *உய்த்துணர்,* guess, infer. *நீ உய்த்தறிந்தது சரி.* What you inferred is correct.

**உய்வு-** redemption. *உலக உய்வு,* redemption of the world.

**உயர்-** *1. உயர்த்து,* raise. *உன் கைகளை உயர்த்து.* Raise your hands. *2. உயர்வு,* rise. *காய்கறிகள் விலை உயர்ந்துள்ளது.* The cost of vegetables has risen. *3. மதிப்பில் உயர்,* rise in dignity.

**உயர்-** *மேல். உயர் படிப்பு,* higher studies.

**உயர்ச்சி-** *உயர்வு, உயரம்,* elevation.

**உயர்திணை-** *மனிதர், தேவர் முதலியோரை உள்ளடக்கியது.* Rational beings including humans and gods.

**உயர்ந்த-** *உயரமான,* high. *உயர்ந்த மலை,* high mountain.

**உயர்ந்த பட்சம்-** *அதிக அளவு,* maximum. *உயர்ந்தபட்சக் கூலி,* maximum wages.

**உயர்ந்தோங்கு-** *சிறப்படை,* flourish. *நாட்டின் வருமானம் உயர வேண்டுமானால், தொழில்கள் உயர்ந்தோங்க வேண்டும்.* The industries should flourish in order to enhance the national income.

**உயர்நிலைப் பள்ளி-** *6 முதல் 10 வகுப்புகள் வரையுள்ள பள்ளி,* high school having standards from VI to X.

**உயர்நீதி மன்றம்-** *ஒரு மாநிலத்தில் மற்ற நீதிமன்றங்களைக் கட்டுப்*

படுத்தும் தலைமை வழக்கு மன்றம். A high court exists in a state to control other courts.

**உயர்மட்டக் குழு-** உயர்நிலை அமைப்பு, high level committee. கூலியமைப்பை ஆராய அரசு ஓர் உயர்மட்டக் குழுவை அமைத்துள்ளது. The government has appointed a high level committee to inquire into the wage structure.

**உயர்விளைச்சல் வகை-** அதிகப் பலன் தரும் பயிர்வகை, high yielding variety.

**உயர்வு-** 1. அதிகரிப்பு, rise. கூலி உயர்வு, wage rise. 2. பதவி உயர்வு, promotion.

**உயர்வு மனப்பான்மை-** மேலோங்கிய உளப்பாங்கு, superiority complex. ஒ. தாழ்வு மனப்பான்மை.

**உயரம்-** பருமன்களில் ஒன்று, height. சுவரின் உயரமென்ன? What is the height of the wall?

**உயரிய-** உயர்ந்த, noble. அவர் ஒரு உயரிய மனிதர். He is a noble man.

**உயரே-** மேலே, higher. மேலே செல்லச் செல்லக் காற்றின் அழுத்தம் குறையும். Atmospheric pressure decreases as you go higher and higher.

**உயிர்-** 1. உயிர்ப் பொருள், living thing, being. 2. அன்பிற்குரியது, darling. என் உயிரே! Oh, my darling!

**உயிர்க் கொலை-** உயிரை நீக்கும் செயல், killing, murder. சைன மதம் உயிர்க் கொலையைத் தவிர்ப்பது. Jainism avoids killing.

**உயிர்காக்கும் மருந்துகள்-** நோயாளியின் உயிரைக் காப்பாற்றும் மருந்துகள், life saving drugs.

**உயிர்ச் சத்து-** vitamins. உயிர்ச்சத்துகள் உயிரியல் வினை ஊக்கிகள். Vitamins are biological catalysts.

**உயிர்ச் சேதம்-** உயிர் இழப்பு, damage to life. ஒரு பயங்கரப்புயல் அதிக உயிர்ச் சேதம் விளைவித்தது. A fierce storm caused much damage to life.

**உயிர்த் துடிப்பு-** 1. நாடித்துடிப்பு, pulse. 2. ஆர்வம், zeal. உயிர்த் துடிப்புள்ள இளைஞன். a zealous youth.

**உயிர்த்தெழு-** மீண்டும் உயிர் பெறுதல், come back to life, resurrect. செத்தவரை உயிர்த் தெழச் செய்யும் அளவுக்கு இரைச்சல் இருந்தது. The noise was enough to resurrect the dead. பண்டைய நல்ல வழக்கங்களை உயிர்த்தெழச் செய்வது அறிவுடைமை ஆகும். It is wise to resurrect good, old customs.

**உயிர்நாடி-** ஒன்று நிலைக்க அடிப் படை, basis, essence. கவிதையின் உயிர்நாடி உணர்ச்சி. The basis of poetry is emotion.

**உயிர்நிலை-** பா. உயிர்நாடி

**உயிர்ப்பி-** மீண்டும் வழக்கத்திற்குக் கொண்டு வா. Revive old customs.

**உயிர்ப் பிச்சை-** உயிர் தர வேண்டுதல். sparing one's life. புராணத்தில் சாவித்திரி எமனிடம் தன் கணவனுக்கு உயிர்ப்பிச்சை வேண்டினாள். In the Purana, Savitri prayed to Yama, the god of death to spare the life of her husband.

**உயிர்ப்பு-** மூச்சு, இயக்கம், breath, a breath of air, the breath of spring, your breath. வாழ்வின் உயிர்ப்பு சமயம். Religion is the breath of life.

அவர் தன் உயிர்ப்பு இழந்தார். He lost his breath. உயிர்ப்பாய்வு, breathing test.

**உயிர்பிழை-** சாவிலிருந்து தப்பு, survive. விமான விபத்தில் ஒரு சிலரே உயிர் பிழைத்தனர். In the aircrash, only a few people survived.

**உயிர்மூச்சு-** இன்றியமையாதது, breath of life. சுதந்திரம் என் உயிர் மூச்சு. Freedom is the breath of my life.

**உயிர்மெய்-** உயிர் எழுத்தும் மெய் யெழுத்தும் சேர்ந்த எழுத்து 'க' முதல் 'ன' வரை. vowel consonant. ஆங்கிலத்தில் உயிர்மெய் எழுத்துகள் இல்லை.

**உயிர்வாழ்-** உயிரோடிரு, live. உனக் காகத் தான் நான் உயிர் வாழ்கி றேன். I live for your sake only.

**உயிர்விடு-** இற, give up one's life. வீரர்கள் தம் நாட்டிற்காக உயிர் விடுபவர்கள். Soldiers give up their lives for the sake of the country.

**உயிரணு-** அடிப்படையான உயிர்ப் பொருள், cell. உயிரின் அமைப்பு அலகும் செயல் அலகும் உயிரணு வாகும். The cell is the structural and functional basis of life.

**உயிரி-** உயிர், living thing. உயிரி தொழில் நுட்பவியல், biotechnology. நுண்ணுயிரியியல், microbiology.

**உயிரியல்-** தாவரம், விலங்கு முதலிய வற்றை ஆராயும் துறை, biology, the study of plants and animals.

**உயிரியல் பூங்கா-** biological park. அண்ணா உயிரியல் பூங்கா. Anna Biological park.

**உயிரிழ-** இற, lose one's life. போரில் எண்ணற்றோர் உயிரிழக்கின்றனர். In war, millions lose their lives.

**உயிரினம்-** உயிர்ப் பொருள்கள், living things.

**உயிரூட்டு-** எழுச்சியளி, give life. கதை இப்படத்திற்கு உயிர் ஊட்டுகிறது. Story gives life to this film.

**உயிரெடு-** தொல்லை கொடு, annoy. தேவையில்லாமல் ஏன் என் உயிரை எடுக்கிறாய்? Why do you annoy me unnecessarily?

**உயிர் எழுத்து-** உயிர், vowel. 'அ' முதல் 'ஔ' வரை உயிர் எழுத்துகள். Vowels in English (e.g) a,e,i,o,u. ஆங்கில உயிர் எழுத்துகள் ஐந்தும் உள்ள சொல் "EDUCATION"

**உயிரைக் கொடு-** அதிகம் உழை, work hard. நான் உயிரைக் கொடுத்து இந்த வேலையைச் செய்துள்ளேன். I have worked hard to finish this work.

**உயிரை வாங்கு-** உயிர் எடுத்தல், take a toll of life. கோரப்புயல் பல பேர் உயிரை வாங்கியுள்ளது. The fierce storm has taken a heavy toll of life.

**உயிரோட்டம்-** உணர்வியல்பு, vitality. இக்கதையில் உயிரோட்டம் உள்ளது. There is vitality in this story.

**உயில்-** ஒருவர் தன் மரணத்திற்குப் பின் தன் சொத்துக்கள் இன்னா ருக்குச் சேரும் என எழுதி வைக்கும் விருப்ப ஆவணம், will. என் தந்தை எனக்கு ஓர் உயில் விட்டுச் சென் றுள்ளார். My father has left me a will.

**உரக்க-** பலத்த ஒலியுடன், loudly. அவன் உரக்கச் சிரித்தான். He laughed loudly.

**உரசல்-** 1. உராய்வு, friction. உரசல் என்பது ஓர் எதிர்ப்பு விசை. Friction is a resisting force. 2. மனத் தாங்கல். எங்கள் இருவரிடையே உரசல் உள்ளது. There is friction between us. 3. நெரிசல். இன்று பேருந்தில் உரசல் அதிகம். Today there is more jostle in the bus.

**உரசு-** 1. உராய்வு ஏற்படுத்து, rub. மரத்தில் ஒரு பசு உரசிக் கொண்டிருந்தது. A cow was rubbing against the tree. 2. தேய், தீக்குச்சியை உரசு. Strike the match.

**உரத்த-** பா. உரக்க.

**உரத்த சிந்தனை-** loud thinking.

**உரம்-** 1. ஊட்டம், fertilizer. பயிர் நன்கு வளர உரம் தேவை. Ferti lizers are quite essential for the growth of crops. 2. வலிமை, strength. உனக்கு உரம் தேவை. You need strength.

**உரல்-** நெல் குற்ற அல்லது மாவு இடிக்கப் பயன்படும் கல் அல்லது மரக் கருவி. Stone or wooden mortar.

**உராய்-** பா. உரசு.

**உராய்வு-** friction. உராய்வுக் கோணம், angle of friction. உராய்வு விதிகள், laws of friction.

**உரி-** 1. தோலை நீக்கு, peel. வாழைப் பழத்தை உரி. Peel the banana. 2. களை, ஆடையை நீக்கு, Strip. துச்சாதனன் திரௌபதையின் துகில் உரிந்தான். Dhutchathanan stripped the clothes of Draupadi. 3. பட்டையை உரி. strip the bark of a tree. 4. பிடுங்கு. Pluck the feathers of a chicken.

**உரிச்சொல்-** பெயருக்கும் வினைக்கும் அடையாக வரும் சொல், attributive word. "உறு பொருள் கொடுத்தும்", "உறு" உரிச்சொல். Give due respect "due" attributive word or adjective.

**உரித்தாக்கு-** தெரிவி, express. நான் என் நன்றியை உரித்தாக்குகிறேன். I express my thanks.

**உரித்தான-** இயல்பான, characteristic of. அவருக்கே உரித்தான நடை, a style characteristic of him.

**உரித்துக் காட்டு-** வெளிப்படுத்து, reveal. அவன் செயல் அவனுடைய இயல்பை உரித்துக்காட்டுகிறது. His behaviour reveals his nature.

**உரித்து வை-** ஒன்றே போல் இரு. Be like. அவன் தன் தந்தையைப் போலவே இருக்கிறான். He is like his father. Like father like son.

**உரிமம்-** ஒன்றை நடத்துவதற்குரிய அனுமதி, licence. உரிமத்தைக் காட்டு. Show your licence.

**உரிமை-** இயல்பாகவும் சட்ட மூலமும் பெறுவது, சொத்தில் எனக்கு உரிமையுள்ளது. I have a right in the property.

**உரிமைக் குழு-** சட்டமன்ற நாடாளு மன்ற உரிமைகளைக் காக்கும் குழு, privileges committee. இந்தப் பொருள் உரிமைக்குழுவிற்கு எடுத்துச் செல்லபட்டது. This matter was taken to the Privileges Committee.

**உரிமை கொண்டாடு-** உரிமை கேள், claim. நான் நிலத்திற்கு உரிமை கொண்டாடினேன். I claimed ownership of the land. நீ அளவுக்கு மீறி உரிமை கொண்டாடுகிறாய். You take undue advantage.

**உரிமைப்பங்கு-** *உரிமையாகக் கிடைக்கும் தொகை,* royalty. *என் நூலுக்கு நல்ல உரிமைப் பங்கு கிடைக்கிறது.* I get good royalty for my books.

**உரிமையாக்கு-** *சொந்தமாக்கு,* leave something to somebody. *அந்த நில உரிமையாளர் தம் நிலங்கள் சிலவற்றைப் பூதானத்திற்கு உரிமையாக்கினார்.* That landlord left some of his lands for the Bhoodan Movement.

**உரிமையாளர்-** *உரிமைக்குரியவர்,* owner, proprietor. *கடை உரிமையாளர்,* owner of the shop.

**உரிமையியல்-** *சொத்துப்பத்துத் தொடர்பானது,* the civil. *உரிமையியல் நீதிமன்றம்,* civil court.

**உரிய-** *உரித்தான,* due. *உனக்குரிய பங்கைக் பெறு.* Get your due share.

**உரு-** *1. பிம்பம்,* image. *மாய உரு,* virtual image. *உண்மை உரு,* real image, *ஆடியுரு,* mirror image. *2. உருவம்,* figure. *கனத்த உருவம்,* heavy figure.

**உருக்கம்-** *நெகிழச்செய்யும்,* moving. *உருக்கமான வேண்டுகோள்,* a moving appeal.

**உருக்கு-** *1. உருகுமாறு செய்,* melt. *இரும்பை உருக்கு,* Melt the iron. *2. எஃகு,* steel. *உருக்காலை,* Steel mill.

**உருக்குலை-** *வடிவத்தைக் கெடு,* disfigure. *சமூக விரோதிகள் சிலர் அச்சிலையை உருக்குலைத்தனர்.* A few antisocial elements disfigured that statue.

**உருக்கொள்-** *தோன்று,* form. *வங்கக் குடாக்கடலில் புயல் தோன்றியுள்ளது.* A storm has formed in the Bay of Bengal.

**உருகு-** *1. இளகு,* melt. *பனிக்கட்டி உருகுகிறது.* Ice melts. *2. நெகிழ்,* melt. Heart melts.

**உருகுநிலை-** *திண்மம் நீர்ம நிலைக்கு மாறும் நிலை,* melting point. *பனிக் கட்டியின் உருகுநிலை 0° செ.* The melting point of ice is 0°C.

**உருட்டல் மிரட்டல்-** *அச்சுறுத்தல்,* threat, intimidation. *உன் உருட்டல் மிரட்டலுக்கு நான் கவலைப்படவில்லை.* I am not worried about your intimidation.

**உருட்டு-** *1. உருளச்செய்,* roll. *பீப்பாயை உருட்டு.* Roll the barrel. *2. உருண்டையாக்கு,* make a ball. *சோற்றை உருண்டையாக்கு,* Make the rice into a ball.

**உருட்டு புரட்டு-** *பித்தலாட்டம்,* fraud. *உன் உருட்டு புரட்டை விட்டுவிடு.* Give up your fraud.

**உருண்ட-** *கோளமான,* round. *உருண்ட முகம்,* round face.

**உருண்டு திரண்ட-** well-built. *உருண்டு திரண்ட உடற்கட்டு,* well built-physique.

**உருண்டை-** *கோளம்,* sphere. *உலகம் ஓர் உருண்டை,* The world is a sphere. *சோற்றுருண்டை,* ball of cooked rice.

**உருது-** *ஒரு மொழி,* Urudu. A Parsi language.

**உருப்படி-** *பொருள்,* article. *எத்தனை உருப்படிகள்?* How many articles?

**உருப்படியாக-** *பயனுள்ள வகையில்,* concretely. *நீ உருப்படியாகச் செய்த செயல்கள் என்ன?* What things have you done concretely?

**உருப்படு-** முன்னேறு, progress. வாழ்க்கையில் உருப்பட நன்கு உழை. Work hard to progress in life.

**உருப்பெருக்காடி-** உருவைப் பெருக்கிக் காட்டும் கண்ணாடி, magnifying glass, lens.

**உருப்பெறு-** வடிவம் பெறு, form. நீ கதை எழுத ஒரு கருத்து உருவாக்க வேண்டும். You must form an idea to write a story.

**உருப்போடு-** நெட்டுருச் செய், get by heart. மனப்பாடச் செய்யுளை உருப்போடு, Get by heart the memorietor poem.

**உருபன்-** பொருள் அடிப்படையில் பிரிக்க இயலாத சொல் பகுதி, morpheme. 'கண்கள்' இதில் கண், கள் என இரு உருபன்கள் உள்ளன. Morpheme, the smallest meaningful unit into which a word can be divided. "Eyes" This word contains two morphemes: eye-s.

**உருபு-** பொருளின் வேற்றுமையைக் காட்டும் இடைச்சொல், case suffix, preposition. நான்காம் வேற்றுமை உருபு 'கு'. ஒரு பரிசு அவனுக்குக் கொடுக்கப்பட்டது. Dative case suffix "to". A prize was given to him.

**உருமால்-** முண்டாசு, turban. உருமால் புலவன் பாரதி. The turbanned poet Bharathi.

**உருவ அமைதி-** வடிவ ஒழுங்கு, harmony in form. இக்கதையில் உருவ அமைதி உள்ளது. This story has harmony in form.

**உருவகப்படுத்து-** 1. உருவகமாகக் கூறு, உருவகி, describe in metaphor. இக்கதையில் 'கிளி' என்பது ஒரு பெண்ணுக்கு உருவகமாகப் பயன்படுகிறது. In this story 'parrot' is used as a metaphor for a woman. 2. கற்பனை செய்து கொள், imagine. கதை எழுதும் பொழுது தகுந்த முறையில் நிகழ்ச்சிகளை உருவகப் படுத்திக் கொள்ள வேண்டும். Before writing a story, imagine events in a fitting manner.

**உருவகம்-** (இலக்) உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுபாடின்றி கூறல். (gram) metaphor.

**உருவம்-** 1. வடிவம், figure, shape. யானை பருத்த உருவம் கொண்டது. The elephant has a huge figure. 2. படம், picture. அழகான பெண்ணின் உருவம். The picture of a beautiful girl. 3. நிழல் வடிவம், shadow like figure.

**உருவ வழிபாடு-** உருவத்தை வழிபடுதல், idol worship. இந்து சமயத்தில் உருவ வழிபாடு ஒரு நிலைத்த இயல்பாகும். In Hinduism, idol worship is a constant feature.

**உருவாக்கு-** 1. தோற்றுவி, create. மனிதனைக் கடவுள் உருவாக்கினார். God created man. 2. உண்டாக்கு. எங்கள் பள்ளி நல்ல மாணவர்களை உருவாக்குகிறது. Our school creates good students. 3. ஏற்படுத்து, draw. புதிய திட்டங்களை உருவாக்கு. Draw new plans.

**உருவு-** வெளியில் எடு, draw. உன் வாளை உருவு. Draw your sword.

**உருவெடு-** 1. ஒன்று வேறு ஒன்றாதல். transform, develop. வாழ்க்கைப் பிரச்சினை ஒரு பெரும் போராட்டமாக உருவெடுத்துள்ளது. Life problems have transformed into a struggle. 2. வடிவெடு, take the form

of. *திருமால் பன்றியாக உரு வெடுத்தார்.* Lord Thirumal took the form of a pig.

**உருவெளித்தோற்றம்-** *மாயத் தோற்றம்,* illusion. *பழுதையைப் பாம்பு என்று தவறாக நினைப்பது உருவெளித் தோற்றமாகும்.* To mistake a piece of rope for a snake is an illusion.

**உருவேற்று-** *ஓது,* chant. *இறைவனை எண்ணி மந்திரத்தை உருவேற்று.* Chant mantras thinking of God.

**உருள்-** *1. புரள்,* roll over. *அவன் மெத்தையில் படுத்து உருண்டான்.* He rolled over the mattress. *2. உருண்டு செல்,* move rolling on. *கோலிக் குண்டுகள் உருளும்.* The marbles will move on rolling on the floor.

**உருளி-** *உருளை வடிவக்கலம்,* jar.

**உருளை-** *நீண்டும் உருண்டும் உள்ளது,* cylinder. *பொதுவாக, ஓர் எந்திரத்தில் பல உருளைகள் இருக்கும்.* Generally, a machine will have many cylinders.

**உருளைக்கிழங்கு-** *ஒரு வகைக் கிழங்கு,* potato. *உருளைக்கிழங்கு ஒரு தரைகீழ்த் தண்டு.* The potato is an under ground stem.

**உரை-** *1. கூறு,* state, say. *நீ உரைப்பது என்ன?* What do you say? *2. உரசு,* rub. *பொற்கொல்லர் பொன் அணிகலனை உரைத்துப் பார்ப்பர்.* Goldsmith will rub the gold ornament on the touchstone. *3. பேச்சு,* speech. *நாடாளுமன்ற உரைகள்,* Parliamentary speeches. *4. விளக்க வுரை,* commentary. *திருக்குறளுக்கு அடியார்க்கு நல்லார் உரை,* The commentary of Adiyarku Nallar on Thirukkural.

**உரைக்கோவை-** *1. ஒரு பொருளைப் பற்றிய கட்டுரைத் தொகுப்பு,* anthology of essays on a subject. *2. கருத்தரங்கம்,* symposium. *வான வெளி அறிவியல் கருத்தரங்கம்.* A symposion on space science.

**உரைகல்-** *1. தங்கத்தின் தரத்தினை அறிய தேய்த்துப் பார்க்கும் கல்,* touchstone. *2. தரம் அறிவதற்குரிய எடுத்துக்காட்டு.* standard of comparison. *சோழர் காலச் சிற்பத் திற்குத் தஞ்சைப் பெரிய கோயில் ஓர் உரைகல்.* The Big Temple of Thanjavur is a touchstone for the Chola sculpture.

**உரைகாரர்-** *உரையாசிரியர்,* commentator. *தமிழில் சிறந்த உரையா சிரியர்கள் உள்ளனர்.* There are fine commentators in Tamil.

**உரைசெய்-** *உரை எழுது,* write commentary.

**உரைநடை-** *செய்யுளில் இல்லாத நடை,* prose. *உரைநடைநூல்கள்,* prose works. *ஓ. செய்யுள் நடை.*

**உரையாடல்-** *1. கருத்துப் பரிமாற்றப் பேச்சு,* conversation. *2. வசனம்,* dialogue. *கதை உரையாடல் முறையில் எழுதப்பட்டுள்ளது.* The story is written in the form of a dialogue.

**உரையாடு-** *உரையாடல் செய்,* converse. *அவர்கள் தமிழில் நன்கு உரையாடினர்.* They conversed well in Tamil.

**உரோமம்-** *மயிர்,* hair. *உரோம வளர்ச்சி,* growth of hair.

**உல்லாசப் பயணம்-** *இன்ப உலா,* tour. *நாங்கள் மகாபலிபுரம் உல்லாசப்*

பயணம் செல்கிறோம். We go on a tour to Mahapalipuram. உல்லாசப் பயண வண்டி, tourist car. உல்லாசப் பயணி, tourist. உல்லாசப் பயணத் திட்டம், tour programme.

**உல்லாசம்-** கேளிக்கை, entertainment, fun and frolic. உல்லாசமாகப் பொழுது போக்கு. Spend your time in fun and frolic.

**உலக்கை-** இடிக்கும் உருளை, wooden pestle. உலக்கை தற்பொழுது அரிதாகப் பயன் படுவது. Now the wooden pestle is rarely used. உரலும் உலக்கையும், mortar and pestle. உலக்கைக் கொழுந்தும் கூத்தாணி வேரும், ultterly foolish.

**உலகக் கோப்பை-** world cup. டேவிஸ் உலகக் கோப்பை. Davis World Cup.

**உலகப் பற்று-** மனிதர்கள் உலகத்தில் உள்ள பொருள்கள் மீது கொண் டுள்ள பிடிப்பு, worldly attachment. உலகப் பற்று அவ்வளவு எளிதாக விடக்கூடிய பற்றன்று. Worldly attachment is hard to give up.

**உலகம்-** வையகம், world, earth. நாம் உலகில் வாழ்கிறோம். We live on the earth. இலக்கிய உலகம், the world of literature. உலகம் கண்ணீர் விட்டது. The world shed tears.

**உலக வங்கி-** உலக நாடுகளுக்கு உதவும் நிதி அமைப்பு, World Bank, otherwise known as International Bank for Reconstruction and Development. உலகவங்கிக் கடன். World Bank Loan

**உலக வழக்கு-** 1. பெரும்பாலோர் பின்பற்றுவது, common practice. 2. சொல்லாட்சி, word usage.

**உலகாயதம்-** பொருள் முதல் வாதம், materialism. உலகாயதவாதி, materia list.

**உலகு-** பா. உலகம்.

**உலர்-** உலர்ந்த, dry. உலர்சலவை, dry cleaning. உலர்சலவையாளர், dry cleaners.

**உலர்த்து-** உலறுமாறு செய், dry. உன் துணிகளை வெயிலில் உலர்த்து. Dry your clothes in the Sun.

**உலவு-** 1. திரி, wander, roam. சிங்கம் காட்டில் உலவும். The lion roams about in the forest. 2. நடந்து செல். stroll around. நான் இரவில் பூங்காவைச் சுற்றி உலவுவேன். During night, I stroll around the park. உலவுந் தென்றல், the blowing breeze.

**உலா-** 1. ஊர்வலம், procession. 2. வீதி உலா, street procession. 3. சிற்றி லக்கிய வகைகளில் ஒன்று. Ula; a minor literature.

**உலாத்து-** பா. உலவு.

**உலாவு-** உன்னைப் பற்றி ஒரு வதந்தி உலாவுகிறது. A rumour is set afloat about you.

**உலுக்கு-** ஆட்டு, shake. கிளையை உலுக்கு. Shake the branch.

**உலுத்தன்-** அயோக்கியன், dishonest fellow.

**உலை-** 1. சோறு சமைக்கப் பயன் படும் பாத்திரம், cooking vessel. உலை வைத்து விட்டாயா? Have you placed the cooking vessel on the oven? 2. அடுப்பு, furnace. உலை மூடி, lid of the cooking vessel.

**உலோகம்-** தனிமத்தில் ஒருவகை, metal. பாதரசம் ஓர் உலோகம். Mercury is a metal. ஒ. அலோகம்.

**உலோபி-** கஞ்சன், miser. அவன் ஒரு கடைந்தெடுத்த கஞ்சன். He is a mean miser.

**உவகை-** மகிழ்ச்சி, joy, pleasure. உன்னைப் பார்ப்பதில் எனக்கு ஓர் உவகை. It gives me pleasure to see you.

**உவப்பு-** பிடித்த, மகிழ்ச்சியான, glad, pleasing. உவப்பான செய்தி, glad news. உவப்பிலா ஆனந்தம், endless joy.

**உவமானம்-** பா. உபமானம்.

**உவமி-** ஒப்பிட்டுப் பேசு. Speak by way of comparison.

**உவமேயம்-** பா. உபமேயம்.

**உவமை-** ஒப்புமை, simile. தமிழ் இலக்கியத்தில் அழகிய உவமைகள் உண்டு. There are beautiful similes in Tamil literature.

**உவர்த்தன்மை-** உப்புத்தன்மை, salinity. உவர்த்தன்மையுள்ள மண். saline or alkaline soil.

**உவர்மண்-** கொழுமண், fuller's earth.

**உழப்பு-** மழுப்பு, muddle. உழப்பாதே, நேரிடையாகக் கூறு. Don't muddle. come to the point.

**உழல்-** 1. சுழல், revolve around. வேலையைச் சுற்றியே என் வாழ்வு உழல்கிறது. My life revolves around my job. 2. துன்புறு, suffer. நான் அதிகம் உழன்றேன். I suffered a lot.

**உழவன்-** குடியானவன், farmer. உழவன் உலகத்திற்கு அச்சாணி. The farmer is the linchpin of the world.

**உழவு-** உழுதல், ploughing. முதல் உழவு, first ploughing.

**உழு-** உழுதல், plough. நிலத்தை நன்கு உழு. Plough well the lands.

**உழை-** 1. கடினமாக வேலை செய். work hard. 2. நீண்ட நாள் பயன் படுதல், last long. இத்துணி நன்றாக உழைக்கும். This cloth will last long.

**உழைப்பாளி-** 1. உழைப்பவர், toiler. 2. தொழிலாளி, labourer. உழைப்பாளி வர்க்கம், .working class.

**உழைப்பு-** 1. பணி, work. உழைப்புக் கேற்ற ஊதியம். Wages according to working capacity.

**உள்-** 1. உள்பக்கம், inside. 2. உள் நாட்டு அஞ்சல், inland letter. 3. உள்ளே என்ன செய்து கொண் டிருக்கிறாய்? What are you doing inside. ஒ. வெளி.

**உள்கை-** கையாள், accomplice. இக் குற்றத்தில் அவன் ஓர் உள்கை. He is an accomplice in this offence.

**உள்துறை-** நாட்டின் உள் விவகாரங் களைக் கவனிக்கும் அரசு பிரிவு, Home Ministry, உள்துறை அமைச்சர், Home Minister.

**உள்நாக்கு-** தொண்டையின் உள்பகுதியில் தொங்கும் சிறு சதை. uvula. உள்நாக்கு அழற்சி, uvulitis.

**உள்நோக்கம்-** வெளிப்படையாக சொல்லாத எண்ணம், inner motive. உன் செயலில் ஓர் உள் நோக்கம் உள்ளது. There is an inner motive in your action.

**உள்நோயாளி-** மருத்துவ மனையில் தங்கியிருப்பவர், in-patient. மருத்துவமனையில் பல உள் நோயாளிகள் உள்ளனர். There are many in - patients in the hospital. ஒ. புறநோயாளி.

**உள்பாவாடை-** மகளிர் உள்ளே அணியும் ஆடை, petticoat.

**உள்மனம்-** அடிமனம், the unconscious mind. உள்மனம் மிக ஆற்றலுள்ளது. The unconscious mind is the most powerful one.

**உள்முகந்தேடல்-** உள்நோக்கல், introspection.

**உள்முகநோக்கி-** உள்நோக்கர், introvert.

**உள்வாங்கு-** திரும்பிவா, comeback. எதிரியின் தாக்குதலைச் சமாளிக்க இயலாமல் விமானங்கள் உள் வாங்கின. The airplanes came back due to fierce attack by the enemy. 2. உட்குழிந்து இருத்தல், கடும் காய்ச்சலால் கண்கள் உள்வாங்கியுள்ளன. The eyes are sunken due to acute fever.

**உள்வாடகை-** ஒரு வாடகைதாரர் தன் பொறுப்பிலுள்ள இடத்தில் தானே இன்னொருவரை வாடகைக்கு அமர்த்திக் கொள்ளல், sub-letting உள்வாடகை அனுமதியில்லை. Sub - letting is not allowed.

**உள்கிடக்கை-** உட்கருத்து, hidden desire. என் உள்கிடக்கை ஏழைக்கு உதவுவதே. My hidden desire is to help the poor.

**உள்ளங்கால்-** காலின் அடிப்பகுதி, sole of the foot.

**உள்ளங்கால்-** கையின் உள்பகுதி, palm. உள்ளங்கை வடிவக் கூட்டிலை, palmatety compound leaf.

**உள்ளடக்கம்-** உட்பொருள், content. நூலின் உள்ளடக்கம், contents of a book.

**உள்ளடக்கு-** 1. ஒன்றோடு மற்றொன்றைச் சேர், include. இக்கையேடு விரிவான அறிவுறுத்தல்களை உள்ளடக்கி உள்ளது. Detailed instructions are included in the guide. 2. கட்டுப்படுத்து, control. கோபத்தை உள்ளடக்கு. Control your anger.

**உள்ளது-** உண்மை, truth. உள்ளதை மறைக்காதே. Don't hide the truth.

**உள்ளபடி-** உண்மையாக, in fact. உள்ளபடி அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. In fact, I don't know anything about it.

**உள்ளம்-** நெஞ்சம், mind. உள்ளம் என்பது மூளையின் ஒரு செயலே. The mind is a function of the brain.

**உள்ளாக்கு-** ஆளாக்கு, subject to. அவன் சித்தரவதைக்கு உள்ளாக்கப்பட்டான். He was subjected to torture.

**உள்ளாட்சி-** ஊராட்சி முதலியவை, local body.

**உள்ளாடை-** உள்ளே அணியும் ஆடை, under garment.

**உள்ளார்ந்த-** உட்பொதிந்துள்ள, intrinsic. இலக்கியத்தின் உள்ளார்ந்த இயல்புகள், the intrinsic features of literature.

**உள்ளாற்றல்-** உள்ளார்ந்த ஆற்றல், inherent talent. உன் உள்ளாற்றல் உண்மையில் மதிப்பிடற்கரியது. Your inherent talent is really invaluable.

**உள்ளி-** 1. வெள்ளைப்பூண்டு, garlic. 2. சிறுவெங்காயம், little onion.

**உள்ளிட்ட-** சேர்ந்த, including, inclusive of. தலைமை ஆசிரியர் உள்ளிட்ட எல்லா ஆசிரியர்களும் விளையாட்டுப் போட்டியில் கலந்து கொண்டனர். All the teachers including the head-master took part in the sports.

**உள்ளிருப்பு வேலை நிறுத்தம்-** உள்ளிருப்புப் போராட்டம், stay-

in-strike. *தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர்.* The workers engaged themselves in a stay-in-strike.

**உள்ளீடு-** *உள்ளமை பொருள்,* core. *கனியின் உள்ளீடு,* the core of the fruit. *வாதத்தின் உள்ளீடு,* core of the argument.

**உள்ளுக்கு மாத்திரை-** *விழுங்க வேண்டிய மாத்திரை,* oral tablets.

**உள்ளுணர்வு-** *உள்ளமைந்த உணர்வு,* intuition. *நன்மை நடக்கும் என்று என் உள்ளுணர்வு கூறுகிறது.* My intuition says that good things will happen.

**உள்ளும் புறமும்-** *முழுமையாக,* in and out, thoroughly. *எனக்கு அவரை உள்ளும் புறமும் தெரியும்.* I know him thoroughly.

**உள்ளுறை-** *1. குறிப்பால் உணர்த்தும் உவமை,* symbolic imagery. *2. உள்ளடக்கம்,* content.

**உள்ளுறைவெப்பம்-** *மறை வெப்பம்,* latent heat. *நீருக்கு உள்ளுறை வெப்பம் உண்டு.* Water has latent heat.

**உள்ளூர்-** *சொந்த ஊர், உள்ளூர் ஆள்,* local man. *உள்ளூர் தொலை பேசிக் கட்டணம்,* local telephone charge.

**உள்ளூர் வரி-** local tax.

**உள்ளே வா-** come in.

**உளவியல்-** *உள்ளத்தைப் பற்றிக் கூறும் அறிவியல் துறை.* psychology.

**உளப்பாங்கு-** *மனப்பான்மை, உளப்பாங்கு மாறுவது,* Attitude is subject to change.

**உளவாளி-** *ஒற்றுப் பார்ப்பவர்,* spy.

**உளவியல்-** *மனத்தைப் பற்றி ஆராயும் அறிவியல் பிரிவு,* psychology.

**உளவு-** *உளவு பார்த்தல்,* spying, espionage.

**உளவுபார்-** spy.

**உளறல்-** *பொருளற்ற பேச்சு,* babbling. *என்ன உளறல் இது?* What babbling is this?

**உளறு-** babble. *என்ன உளறுகிறாய்?* What are you babbling?

**உளறுவாயன்-** babbler. *அவன் ஓர் உளறுவாயன்.* He is a babbler.

**உளி-** *ஒரு செதுக்கும் கருவி,* chisel.

**உளு-** *வீணாக்கு,* get decayed. *உத்திரம் உளுக்கிறது.* The beam is decaying.

**உளுத்தம் பருப்பு-** broken blackgram.

**உளுந்து-** blackgram.

**உளை-** *குத்திக் குடையும் வலி,* have pricking pain. *கால் உளைகிறது.* I have pricking pain in my legs.

**உளை-** *சேறு,* mud, mire. *வண்டி உளையில் மாட்டிக் கொண்டது.* The cart got entangled in the mud.

**உளைச்சல்-** pricking pain, agony. *உளைச்சல் தாங்க முடியவில்லை.* The agony is unbearable.

**உற்சவம்-** *திருவிழா,* festival. *மாரியம்மன் கோயில் உற்சவம் நாளை தொடங்குகிறது.* The festival of the Mariamman temple begins tomorrow.

**உற்சவ மூர்த்தி-** *மூலவிக்ரகத்திற்கு மாற்றாக ஊர்வலத்தில் எடுத்து செல்லப்படும் விக்ரகம்,* the procession deity.

**உற்சாகம்-** *மகிழ்ச்சி,* cheer and joy. *உற்சாகம் கரைபுரண்டு ஓடுகிறது.* Cheer and joy is endless.

**உற்பத்தி-** உண்டாக்குதல், production. *உற்பத்தி அதிகமானால் பொருள்கள் விலை குறையும்.* The more the production, the less the price. *உற்பத்திச் செலவுகள்,* production expenses.

**உற்பாதம்-** *தீய விளைவு,* misfortune, calamity. *இயற்கையின் உற்பாதங்கள்,* the calamities of nature.

**உற்ற-** *மிக வேண்டிய,* close. *உற்ற நண்பன்,* close friend.

**உற்றறிவு-** *தொடுஉணர்வு,* sense of touch. *உற்றறிவுக்குக் காரணம் உடல்.* The body is responsible for the sense of touch.

**உற்றார்-** *சொந்தக்காரர்,* relative. *நில நடுக்கத்தில் என் உற்றார் அனைவரையும் இழந்தேன்.* I lost all my relatives in the earthquake.

**உற்று-** *உற்றுப்பார்,* look closely.

**உறக்கம்-** *தூக்கம்,* sleep. *ஆழ்ந்த உறக்கம்,* deep sleep.

**உறவாடு-** *உரிமையுடன் பழகு,* move closely. *நண்பர்களுடன் உறவாடு,* Move closely with friends.

**உறவினர்-** *பா. உற்றார்.*

**உறவு-** *சொந்தம்,* relation(s). *மைய மாநில அரசு உறவு,* the relations between the Centre and the State.

**உறவுமுறை-** *உறவுள்ள முறை,* relationship. *அண்ணன் தம்பி உறவுமுறை,* relationship between the elder brother and the younger brother.

**உறி-** *கூம்பு வடிவத் தொங்கும் அமைப்பு,* a hanging conical network of rope.

**உறிஞ்சு-** *உள்ளிழு,* absorb. *உலர் மண் நீரை விரைவாக உறிஞ்சும்.* Dry soil absorbs water quickly.

**உறிஞ்சும் தாள்-** blotting paper.

**உறுத்து-** *தொல்லை உணர்,* irritate. *கண்ணில் விழுந்த தூசி உறுத்துகிறது.* The dirt in the eye irritates.

**உறுதி-** *1. வலிமை,* strength. *இரும்பு உறுதியுள்ளது.* Iron has strength. *2. நிச்சயம்,* certainly. *அவன் வருவது உறுதி.* It is certain that he will come.

**உறுதி செய்-** *மெய்ப்பி,* prove. *அது மெய் என்று உறுதி செய்.* Prove that it is true.

**உறுதிப்பாடு-** *1. உறுதியான நம்பிக்கை,* firm faith. *நாட்டின் இறையாண்மையில் எனக்கு ஆழ்ந்த உறுதிப்பாடு உண்டு.* I have deep faith in the sovereignty of the nation.

**உறுதிப்பொருள்-** *அடைய வேண்டிய பொருள்,* objective. *அறம், பொருள்,இன்பம்,வீடு என்பவை இலக்கியம் கூறும் உறுதிப்பொருள்கள்.* The objectives of literature are virtue, wealth, love and bliss.

**உறுதிமொழி-** *உறுதியுள்ள மொழி,* pledge, assurance. *ஓர் உறுதிமொழி எடுத்துக் கொள்வோம்.* Let us take a pledge.

**உறுதுணை-** *உதவியாய் இருத்தல்,* support. *கணவனும் மனைவியும் ஒருவருக்கு மற்றொருவர் உறுதுணை.* Husband and wife serve as support to each other.

**உறுப்பினர்-** *அங்கத்தினர்,* member. *எங்கள் கழகம் 100 உறுப்பினர்களைக் கொண்டது.* There are 100 members in our association.

**உறுப்பு-** *பகுதி,* organ. *உள்ளுறுப்பு,* Internal organ. *புற உறுப்பு,* external organ. *உறுப்பு நாடு,* member country.

**உறுமல்-** உறுமல் ஓசை. Dogs growl. Pigs grunt. Tigers roar.

**உறுமிமேளம்-** ஒரு வகை தோல் கருவி, a double-headed folklore drum.

**உறுமு-** பா. உறுமல்.

**உறை-** 1. கெட்டிநிலை அடை, freeze. நீர் உறையும். Water will freeze. 2. வாழ், live. இறைவன் உன்னுள் வாழ்கிறான். God lives within you.

**உறை-** 1. கடிதக் கூடு, envelope. 2. தாள் உறை, cover. 3. வட்ட உறை, round concrete ring.

**உறை குத்து-** பாலில் சிறிதளவு மோர் ஊற்றித் தயிராக்கு. Make milk curdle.

**உறைநிலை-** திரவம் திண்மமாக மாறும் வெப்பநிலை. freezing point. நீரின் உறை நிலை 0° செ. Freezing point of water is 0° C.

**உறைப்பு-** காரம், hot taste. மிளகாய் உறைப்புச் சுவையுள்ளது. The chilly is hot to taste.

**உறைபனி-** இறுகிய பனித்தூள், frost.

**உறைமோர்-** பாலைத் தயிராக்கப் பயன்படுத்தப்படும் மோர். butte rmilk used for making curds.

**உறையுள்-** தங்குமிடம், lodging. உண்டியும் உறையுளும், boarding and lodging.

**.றைவிடம்-** வாழுமிடம், abode, dwelling. உன் உறைவிடம் எங்கே? Where is your abode?

**ன்மத்தம்-** 1. வெறி, frenzy. அவன் உன்மத்தம் பிடித்தவன். He is in a frenzy. 2. போதை, intoxication.

**உன்னதம்-** மேன்மை, excellence. உன்னதமான மனிதர், a man of excellence.

**உன்னிப்பு-** கவனிப்பு, attention. அவர் மிக உன்னிப்பாகக் கேட்டார். He listened with rapt attention.

## ஊ

**ஊக்க ஊதியம்-** ஒன்றை ஊக்க முடன் செய்வதற்குத் தரப்படும் தொகை, incentive. This is given to one to encourage a person to work harder. ஊக்க ஊதியத் திட்டம், incentive scheme.

**ஊக்கம்-** உற்சாகம், encouragement. ஊக்கம் அளி, offer encouragement.

**ஊக்கு-** பாதுகாப்பான இணைப்பூசி safety pin, fastner. ஊக்கை நாம் அன்றாடம் பயன்படுத்துகிறோம். We use safety pins daily.

**ஊக்குவி-** ஊக்கப்படுத்து, encourage. அரசு சிறுதொழில் வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கிறது. The government encourages the growth of small industries.

**ஊகம்-** தோராயக் கணிப்பு, guess. ஆராய்ச்சியில் ஊகத்திற்கு இடமில்லை. There is no place for guess in research.

**ஊகி-** தோராயமாகக் கணி, guess. மழை வரலாம் என ஊகிக்கிறேன். I guess that it may rain.

**ஊசல்-** முறுக்கற்ற மெல்லிய நூலில் தொங்க விடப்படும் குண்டு, pendulum. This is a bob suspended by a torsionless thread from a stand. தனி ஊசல், simple pendulum. வினாடி ஊசல், seconds pendulam. ஈடுசெய்த ஊசல், compensated pendulum.

**ஊசல்-** கெட்டுப்போன உணவு, stale food.

**ஊசலாட்டம்-** *தடுமாற்றம்*, oscillation. *இந்த ஊசலாட்டம் ஏன்?* Why is this oscillation?

**ஊசலாடு-** *தடுமாறு*, oscillate. *என் மனம் ஊசலாடுகிறது.* My mind oscillates.

**ஊசி-** *தைக்கும் கூரிய கம்பி*, needle.

**ஊசிக் காது-** *கூர்மையாகக் கேட்கும் செவி*, sharp ear. *அவனுக்கு ஊசிக் காது, மெதுவாகப்பேசு.* Speak in a low tone. He has a sharp ear.

**ஊசித் தொண்டை-** *1. காதைத் துளைக்கும் குரல்*, high pitched voice. *2. குறுகிய தொண்டை*, narrow gullet. *ஊசித்தொண்டை தாழி வயிறு*, narrow gullet and pot like belly.

**ஊசி போடு-** *ஊசியால் குத்தி மருந்தை உடலினுள் உட் செலுத்து*, inject. *ஊசி போடு.* Give an injection.

**ஊசியிலைக்காடு-** *ஊசியிலை மரக்காடு*, coniferous forest. *ஊசியிலைக்காடு காட்டில் ஒரு வகை.* The coniferous forest is a kind of forest.

**ஊசிவெடி-** *மெல்லிய வெடி*, small slender cracker.

**ஊஞ்சல்-** *உந்தியாடும் பலகை*, swing. *குழந்தைகள் ஊஞ்சல் ஆடுகின்றனர்.* Children ride on the swing.

**ஊஞ்சலாடு-** *ஊஞ்சலில் அமர்ந்து உந்தியாடு*, ride on the swing

**ஊட்டச் சத்து-** *உடலுக்கு வலுவளிக்கும் உணவுப் பொருள்*, nutrition, nutrient. *குழந்தை நலத்திற்கு ஊட்டம் தேவை.* Nutrition is necessary for children's health. *ஊட்டஉணவு*, nutritious food.

**ஊட்டு-** *1. வாயில் செலுத்து*, feed. *குழந்தைக்குப் பாலூட்டு.* Feed the baby with milk. *2. உண்டாக்கு*, instil. *நம்பிக்கை ஊட்டு.* Instil hope. *3. ஆர்வமூட்டு*, enthuse. *குழந்தைகளைப் படிக்குமாறு ஆர்வமூட்டு.* Enthuse children to read.

**ஊடகம்-** *1. ஒளி ஊடுருவும் பொருள்.* medium. *முப்பட்டகம் ஓர் அடர் ஊடகம்.* The prism is a denser medium. *2. கருத்துத் தெரிவிக்கும் கருவி*, medium. *தொலைக்காட்சி ஓர் ஆற்றல் வாய்ந்த ஊடகம்.* The T.V is a powerful medium. *ஊடகத்தார்*, media people.

**ஊடல்-** *காதலரிடையே ஏற்படும் பிணக்கு*, pretended quarrel, sulking. *ஊடல் காமத்திற்கு இன்பம்.* Sulking offers joy to love.

**ஊடாடு-** *பா. ஊசலாடு.*

**ஊடு கதிர்-** *ஊடுருவும் கதிர்*, X-ray. *ஊடுகதிரைக் கண்டறிந்தவர் இராண்ட்ஜன்.* Rontgen discovered the X-rays.

**ஊடு சுவர்-** *குறுக்குச்சுவர்*, partition wall. *ஊடுசுவர் வீட்டை இரண்டாகப் பிரிக்கிறது.* The partition wall divides the house into two.

**ஊடுருவு-** *1. ஊடுருவிச் செல்*, penetrate. *மரவேர்கள் மண்ணில் ஊடுருவிச் செல்கின்றன.* The roots of the tree penertrate into the soil. *2. சட்டத்திற்குப் புறம்பாக நுழை*, infiltrate. *பாக்கிஸ்தான் பயங்கரவாதிகள் ஜம்மு காஷ்மீரில் ஊடுருவுகின்றனர்.* Pakistani terrorists infiltrate into Jammu Kashmir. *3. விரவுதல்*, permeate. *அவர்தம் கதைகளில் அறிவியல் கருத்துகள்*

ஊடுருவுகின்றன. Scientific ideas penetrate his stories..

**ஊடே-** இடையே, through. கிளைகளுக்கிடையே கதிரவன் ஒளி பாய்ந்தது. The sunrays passed through the branches of the tree.

**ஊடை-** ஆடையின் குறுக்கு இழை, woof.

**ஊண்-** உணவு, food. மனித வாழ்விற்கு அடிப்படைத் தேவைகள் ஊண், உடை, உறைவிடம் ஆகியவையாகும். The basic necessities of human life are food, clothing and shelter.

**ஊத்தப்பம்-** ஒரு வகைக் கனமான தோசை, a kind of thick dosai.

**ஊத்தை-** பல்லழுக்கு, dirt of unclean teeth.

**ஊதல்-** 1. ஊதாங்குழல், whistle. ஊதலை ஊது. Blow the whistle. 2. வாடை, cold wind.

**ஊதல் போடு-** புகை ஊதிக் காய்களைப் பழுக்கச் செய், fumigate. வாழைக்காய்களைப் பழுக்கப்போடு. Fumigate the raw plantains. ஊதல் போடல், fumigation.

**ஊதா-** கத்தரிப்பூ நிறம், violet. ஊதா ஏழு நிறங்களில் ஒன்று. Violet is one of the seven colours.

**ஊதாங்குழல்-** பா. ஊதல்.

**ஊதாரி-** 1. உருப்படாதவன், spend thrift. 2. ஊதாரிச் செலவு, extra vagant expenses.

**ஊதித்தள்ளு-** எளிதாகச் செய், do something easily. கணக்குகளை எல்லாம் நான் ஊதித் தள்ளிவிட்டேன். I have done all the sums easily.

**ஊதியம்-** சம்பளம், salary, pay. என் மாதச் சம்பளம் ரூபாய் 5,000. My monthly salary is Rs 5,000.

**ஊது-** வாயால் காற்றை வெளிப்படுத்து, blow. ஒலிப்பானை ஒலிக்கவும். Blow the horn.

**ஊதுகாமாலை-** ஒரு வகைக் காமாலை, jaundice with drops.

**ஊதுகுழல்-** காற்றை ஊதினால் இசை தோன்றும் குழல், flute.

**ஊதுபத்தி-** நறுமணக் கலவை பூசப்பட்ட குச்சி. இதனைக் கொளுத்தினால் நறுமணப் புகை வரும். incense stick, scented stick.

**ஊமச்சி-** ஊமைப்பெண், dumb woman.

**ஊமத்தை-** ஒரு வகை முட்செடி, datura.

**ஊமை-** பேச இயலாதவன், the dumb.

**ஊமைக் காயம்-** வெளித் தெரியாத காயம், bruise.

**ஊமைக் கோட்டான்-** ஆந்தை போல் விழிக்கும் ஆள், one who simply keeps mum.

**ஊமைப்படம்-** பேசாத படம், silent movie.

**ஊமையடி-** பா. ஊமைக்காயம்.

**ஊர்-** 1. ஊர்ந்து செல், crawl. நத்தை மெல்ல ஊர்ந்து செல்லும். The snail crawls slowly. 2. வாழும் இடம், village, town.

**ஊர்க்கட்டுப்பாடு-** ஊர் விதிமுறை, taboo. ஊர்க்கட்டுப்பாடு என்பது பழைய மரபு. Taboo is a good old custom.

**ஊர்க்கதை-** வம்பளப்பு, gossip. ஊர்க்கதை பேசாதே. Don't engage yourself in gossip.

**ஊர்க்காவல் படை-** உள் நாட்டில் பொதுமக்கள் சேவைக்காக அரசு தனியார் துறை ஊழியர்களைக் கொண்டு அமைக்கப்பட்ட பகுதி நேரப் படைப்பிரிவு, homeguard. அரசு அலுவலர்கள் ஊர்க்காவல் படை யில் சேர்த்துக்கொள்ளப் படுகின்றனர். Government servants are recruited to the homeguard.

**ஊர்ச்சுற்று-** திரி, wander. ஊர் சுற்றுவது அவன் வேலை, Wan dering is his job.

**ஊர்தி-** வாகனம், vehicle, carrier. பேருந்து ஓர் ஊர்தியாகும். Bus is a vehicle. ஊர்தி அலை, carrier wave. ஊர்தி வரி, vehicles tax.

**ஊர்ப்புறம்-** 1. ஊரகம், rural area. 2. ஊரை விட்டுத் தள்ளி உள்ள இடம், outskirts of village. ஒ. நகர்ப்புறம்.

**ஊர்வசி-**தேவலோகத்தில் நாட்டிய மாடும் பெண், Oorvasi, a celestial dancing girl.

**ஊர் வம்பு-** வீண்வம்பு, unwanted affair. அது ஓர் ஊர் வம்பு. It is an unwanted affair.

**ஊர்வலம்-** 1. அணிஅணியாகச் செல்லுதல், procession, rally. கட்சித் தொண்டர்கள் ஊர்வல மாகச் சென்றனர். The party workers took out a procession. 2. வீதி ஊர்வலம், street pro cession.

**ஊர்வன-** தரையின் மேல் படர்ந்து நகர்ந்து செல்லும் விலங்குகள், reptile முதலை ஊர்வன வகுப்பைச் சார்ந்தது. The crocodile belongs to the class of reptiles.

**ஊரடங்கு உத்தரவு-** மக்கள் வெளியே நடமாடக் கூடாது என்னும் சட்டம், curfew. ஊரடங்கு உத்தரவு போடப்பட்டது, A curfew was clamped.

**ஊரல்-** அரிப்பு, itching.

**ஊராட்சி-** ஊர் நிர்வாக அமைப்பு, village panchayat.

**ஊராட்சி ஒன்றியம்-** panchayat union.

**ஊரார்-** ஊரில் வாழும் மக்கள், villagers, inhabitants.

**ஊரார் உரையாடல்-** the villagers' gossip.

**ஊருணி-** ஊர்மக்கள் குடிப்பதற்காக நீரைத் தரும் நீர்நிலை, tank. ஒவ்வொரு ஊருக்கும் ஓர் ஊருணி உண்டு. Every village has a tank. ஊருணி நீர் நிறைந்தற்றே உலக வாம் பேரறிவாளன் திரு. The wealth of an emininent man is like the full waters of a village tank (T. 215)

**ஊழ்-** விதி, fate, destiny. ஊழிற் பெருவலி யாவுள Which is stronger than fate? (Kural. 380) ஆகூழ் - prosperous fate. போகூழ் - adverse fate.

**ஊழ்வினை-** ordained destiny. ஊழ் வினை வந்து உறுத்தும். The ordained destiny will come and harm you.

**ஊழல்-** கையூட்டு, corruption. நல்லவர் விரும்புவது ஊழலற்ற ஆட்சியே. Good people desire only a Government without corruption.

**ஊழி-** காலக்கூறு, age. வானவெளி ஊழி, space age.

**ஊழியம்-** தொண்டு, service. கடவுள் ஊழியம், service to God.

**ஊழியர்**- *1. பணியாளர்,* employee. *2. தொண்டர்,* worker.

**ஊளை**- *ஊ என விலங்குகள் எழுப்பும் ஒலி,* howling. *ஒரு நரி ஊளையிடுகிறது.* A fox howls.

**ஊளை**- *புளித்த நாற்றம்,* stink. *மோரின் ஊளை நாற்றம்,* the stink of sour milk.

**ஊளைச்சதை**- *அளவுக்கு அதிகம் தொங்கும் சதை,* flabby flesh.

**ஊற்று**- *1. கொட்டு,* pour. *2. செடிக்கு நீர் ஊற்று,* Water the plant.

**ஊற்று**- spring. *ஊற்றுக்கண்,* orifice of a spring. *ஊற்று நீர்,* spring water.

**ஊறல்**- *ஊறும் நீர்,* fermented water. *சாராய ஊறல்,* arrack fermented water.

**ஊறு**- *சுரத்தல்,* secrete. *வாயில் நீர் ஊறுகிறது.* Saliva secretes in the mouth. *கிணற்றில் நீர் ஊறுகிறது,* Water springs in the well.

**ஊறு**- *தீங்கு,* harm, evil. *ஒருவருக்கும் ஊறு செய்யாதே.* Don't harm anyone.

**ஊறுகாய்**- *உப்பு நீரில் ஊற வைக்கப் பட்டுப் பக்க உணவாகச் சாப்பிடப் படும் காய்,* pickle *(எ-டு) மாங்காய் ஊறுகாய்,* mango pickle.

**ஊன்**- *புலால்,* flesh. *ஊன் உண்பது தவிர்.* Avoid eating flesh.

**ஊன்றி**- *உன்னிப்பாக,* with rapt attention. *பாடங்களை ஊன்றிக் கேள்.* Listen to the lessons with rapt attention.

**ஊன்று**- *நடு,* plant. *கன்றை ஊன்று.* Plant the sapling.

**ஊன்றுகோல்**- *தாங்குகோல்,* walking stick. *வயதானவர்கள் ஊன்று கோலுடன் நடப்பர்.* Aged people walk with walking stick.

**ஊனக்கண்**- *முகத்தில் இருக்கும் கண்,* physical eye.

**ஊனம்**- *உடற்குறை,* handicap.

**ஊனமுற்றோர்**- the handicapped. *ஊனமுற்றோருக்குப் பேருந்து களில் தனி இடம் உண்டு.* Seats are reserved for the handicapped in buses.

**ஊனுண்ணி**- *புலால் உண்ணும் விலங்கு,* carnivore. *புலி ஓர் ஊனுண்ணி.* The tiger is a carnivore.

## எ

**எஃகு**- *இரும்பில் ஒருவகை,* steel. *சேலம் எஃகுத் தொழிற்சாலை,* Salem Steel plant.

**எக்களி**- *பெருமகிழ்ச்சி கொள்,* rejoice. *நான் உன் வெற்றி கண்டு எக்களிக்கின்றேன்.* I rejoice over your victory. *எக்களிப்பு,* rejoicing.

**எக்காளம்**- *மங்கல ஊதுகருவி,* cornet. *ஊர்வலத்தில் எக்காளம் முழங்கியது.* The cornet sounded heavily in the procession.

**எக்கு**- *1. உள்ளிழு,* draw in. *காற்றுக் குழாய் காற்றை எக்கும்.* The pump draws in air. *2. பாலை அடக்கு,* hold back milk. *பசு பாலை அடக்கிற்று.* The cow held back its milk.

**எகத்தாளம்**- *1. கேலி ஒலி,* mocking tone. *2. திமிர்,* arrogance. *எகத் தாளப் பதில்,* a mocking reply.

**எகிறு**- *துள்ளு,* bounce. *ரப்பர் பந்து நன்கு குதித்தெழும்.* A rubber ball bounces well.

**எங்கணும்**- *எங்கும்,* everywhere. *உன் புகழ் எங்கணும் பரவுக.* Let your glory spread everywhere.

**எங்கண்**- *எங்கள்,* our. *எங்கள் வளம்,* our prosperity.

**எங்கே**- *எந்த இடம்,* where. *அவன் எங்கே?* Where is he?

**எங்ஙனம்**- *எவ்வாறு,* how. *நீ இதை எங்ஙனம் செய்தாய்?* How did you do this?

**எச்சம்**- *1. விலங்குக் கழிவு,* droppings. *காக்கை எச்சம்,* droppings of the crow. *2. மிச்சம்,* remains. *பசுமைக் காடுகளின் எச்சத்தைக் கேரளத்தில் காண இயலும்.* The remains of green forests is found in Kerala. *3. எச்சச் சொல்,* non-finite form.

**எச்சரி**- *எச்சரிக்கையாக இருக்கும் படி கூறு,* warn. *வறட்சி பற்றி எதிர்க்கட்சிகள் அரசை எச்சரித்தன.* The opposition warned the govern ment against the drought.

**எச்சரிக்கை**- warning. *எச்சரிக்கை விடு,* Issue a warning.

**எச்சில்**- *உமிழ்நீர்,* saliva. *எச்சில் சுரப்பி,* salivary gland.

**எசமான்**- *முதலாளி,* master. *இவர் எங்கள் புதிய எசமான்.* He is our new master. *எசமானி,* mistress.

**எட்ட**- *எட்டி,* far away. *எட்டப் பார்வை,* long sight. *ஒ. கிட்ட*

**எட்டி**- *நீட்டி,* to stretch out. *கிணற்றை எட்டிப்பார்.* Stretch out your head to see the bottom of the well.

**எட்டி**- *எட்டிக்காய்,* nux vomica. *எட்டி பழுத்தென்ன, ஈயாதார் வாழ்ந்தென்ன!* Neither the ripening of nux vomica nor the living of a miser is useful!

**எட்டிப்பார்**- *கழுத்தை நீட்டிப்பார்.* Stretch out your head to see.

**எட்டிப்பிடி**- *முயன்று பெறு,* reach. *இலக்கு இன்னும் எட்டிப் பிடிக்கப் படவில்லை.* The target has not yet been reached.

**எட்டு**- *1. அடை,* reach. *இலக்கை எட்டு.* Reach the goal. *2. புலப்படு,* strike. *அது எனக்கு எட்டவில்லை.* It does not strike me.

**எட்டு**- *ஏழுக்கு அடுத்த எண்,* eight.

**எட்டுக்கால் பூச்சி**- *சிலந்தி,* spider.

**எடு**- *1. தூக்கு,* take. *அதை எடு.* Take it. *2. நல்ல பொருள் கொள்,* Take it in the right sense. *3. பெறு,* score. *கணக்கில் அவன் அதிக மதிப் பெண்கள் பெற்றுள்ளான்.* He has scored high marks in maths.

**எடுகோள்**- *கருதுகோள்,* hypothesis. *எடுகோள் அறிவியல் முறையின் ஒரு இன்றியமையாப் படி.* Hypo thesis is an important step in scientific method.

**எடுத்த எடுப்பில்**- *தொடக்கத்தி லேயே,* at the outset. *எடுத்த எடுப்பிலேயே உறுப்பினர்கள் தீர்மானத்திற்கு மறுப்புத் தெரி வித்தனர்.* At the outset, the members raised objection to the resolution.

**எடுத்ததெற்கெல்லாம்**- *தேவை யில்லாத ஒவ்வொன்றுக்கும்,* for each and every trifle. *எடுத்ததற் கெல்லாம் நீ ஏன் வருத்தப் படுகிறாய்?* Why do you feel regret for each and every trifle thing?

**எடுத்தலளவை**- *நிறுத்தலளவை,* measurement of weight.

**எடுத்தாள்**- *கையாள்,* employ. *இவர் தம் கதையில் உவமைகளை நன்கு எடுத்தாண்டுள்ளார்.* He has employed similies well in his story.

**எடுத்துக்காட்டு**- *வெளிப்படுத்து,* show, reveal. *இந்நூல் அவர்*

சிறந்த எழுத்தாளர் என்பதை எடுத்துக் காட்டுகிறது. This book reveals that he is a good writer.

**எடுத்துக்காட்டு-** உதாரணம், example. தகுந்த எடுத்துக்காட்டுகள் தருக. Give suitable examples.

**எடுத்துக்கொள்-** 1. உரிமையாக்கிக் கொள், take possession of. இன்று வீட்டை எடுத்துக் கொண்டோம். We took possession of the house today. 2. உதாரணமாகக் கொள். Take me as an example.

**எடுத்துச்செல்-** பரப்பு, take. இந்தச் செய்தியை மக்களிடம் எடுத்துச் செல்க. Take this message to people.

**எடுத்துவளர்-** பேணிவளர், bring up. rear. அவர் என்னை எடுத்து வளர்த்தார். He brought me up. நாங்கள் வீட்டில் ஒரு நாயை எடுத்து வளர்க்கிறோம். We rear a dog in our house.

**எடுத்தெறிந்து பேசு-** மதிக்காமல் பேசு. Talk impolitely.

**எடுப்பார் கைப்பிள்ளை-** தன் சிந்தனையற்றவர், puppet. அவன் நிர்வாகத்திற்கு எடுப்பார் கைப் பிள்ளை. He is a puppet of the management.

**எடுப்பு-** தொடங்குமிடம் (பாட்டு), beginning.

**எடுப்பாக-** நேர்த்தியாக, attractive. நீ இந்த உடையில் எடுப்பாக உள்ளாய். You are attractive in this dress.

**எடுப்புச் சாப்பாடு-** அடுக்குப் பாத்திரத்தில் எடுத்துவரும் சாப்பாடு, carrier meal.

**எடுபடு-** வரவேற்கப்படுதல், gain acceptance. வெறும் வாக்குறுதி மட்டும் இனி மக்களிடம் எடு படாது. Mere assurance won't gain acceptance among people.

**எடுபிடி-** 1. சிறுபணி ,odd job. 2. உதவு பவர், helper. அவன் ஓர் எடுபிடி. He is an errand boy.

**எடை-** நிறுத்து உறுதி செய்யும் அளவு, weight. இக்கடிதம் 100 கிராம் உள்ளது. The weight of the letter is 100 grams. எடைக்கல், known standard weight.

**எடைகட்டு-** தராசில் ஒரு தட்டில் வைக்கும் ஏனத்தின் எடைக்குச் சமமான எடையை மறுதட்டில் போட்டுச் சமப்படுத்தல். Counter balance the container first before pouring the oil into it.

**எடைபோடு-** 1. எடையைக் கணக்கிடு. இந்த விறகை எடை போடு. Weigh this bundle of fuel wood. 2. மதிப்பிடு, judge. அவர் மக்களை எளிதில் எடை போடு பவர். He will judge people easily.

**எண்-** 1, 2, 3, முதலியவை, numeral or numbers like 1,2,3. எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும். Letters and numbers are the eyes of man.

**எண்கோணம்-** எட்டுக் கோண வடிவம், octagon.

**எண்சுவடி-** வாய்பாடு, multiplication tables.

**எண்சோதிடம்-** numerology.

**எண்ணக்கரு-** கருத்து, concept. எண்ணக்கரு இக்கதையில் நன்றாக உள்ளது. The concept is fine in this story.

**எண்ணம்-** 1. சிந்தனை, thought. நான் பல எண்ணங்களால் குழம்பினேன். I was confused by many thoughts.

2. திட்டம், idea. உன் மகளைக் கல்லூரியில் சேர்க்க வேண்டும் என்னும் திட்டம் என்னவாயிற்று? What happened to your idea of admitting your daughter in a college? 3. மதிப்பு, opinion. அவர் பற்றிய உன் எண்ணம் என்ன? What is your opinion about him?

**எண்ணிக்கை-** எண், number. இந்த பள்ளியிலுள்ள அறைகள் எத்தனை? What is the number of rooms in the school?

**எண்ணு-** 1. கணக்கிடு, count. உருப் படிகளை எண்ணு. Count the number of articles. 2. சிந்தி, think of. அவனைப் பற்றி நீ என்ன எண்ணுகிறாய்? What do you think of him?

**எண்ணெய்-** சமைப்பதற்கும், எரிப் பொருளாகவும் பயன்படும் ஒரு திரவம், oil. விளக்கெண்ணெய், caster oil.

**எண்ணெய்க்கிணறு-** oil well.

**எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலை-** பண்படா எண்ணெயைத் துப்புரவு செய்யும் ஆலை, oil refinery. சென்னை மணலியில் ஓர் எண்ணெய்ச் சுத்தி கரிப்பு ஆலை உள்ளது. There is an oil refinery at Manali, Chennai.

**எண்ணெய் வித்து-** எண்ணெய் தரும் விதைகள், oil seeds.

**எண்பது-** எட்டு பத்துக்கள், eighty. எண்பது பேர், eighty people.

**எண்பி-** மெய்ப்பி, prove. உன்னால் எல்லாம் முடியும் என்று எண்பி. Prove that you can do all.

**எத்தன்-** ஏமாற்றுபவன், fraud. அவன் ஓர் எத்தன். He is a fraud.

**எத்தனி-** முயற்சி செய், try to do. நல்லதைச் செய்ய எப்பொழுதும் எத்தனி. Try to do good things always.

**எத்தனை-** எண்ணாகக் கூறும் அளவு எவ்வளவு, how many? கூட்டத் திற்கு எத்தனை பேர் வந்தனர்? How many people attended the meeting?

**எத்துணை-** எவ்வளவு, how much? எத்துணைப் பெரிது யானை! How big is the elephant!

**எதார்த்தம்-** வெளிப்படை, realism. எப்பொழுதும் எதார்த்தமாக இருப்பது நல்லதன்று. To follow the principle of realism is not always good.

**எதிர்-** 1. மறு, oppose. உன்னை நான் தேர்தலில் எதிர்க்கப் போகிறேன். I am going to oppose you in the election. 2. எதிர், opposite. எதிர் வீடு, opposite house. 3. எதிர்க் குற்றச்சாட்டு, counter allegation.

**எதிர்க்கட்சி-** ஆளுங்கட்சிக்கு மாற்றுக்கட்சி, the opposition. எதிர்க்கட்சி மக்களாட்சியின் ஓர் அங்கம். The opposition is part of democracy.

**எதிர்காலம்-** 1. வருங்காலம், future. நாளை என்பது எதிர்காலம். Tomorrow denotes future. 2. எதிர் கால வாக்கியம், future tense. (எ.டு) அவன் நாளை வருவான். He will come tomorrow.

**எதிர்கொள்-** சந்தி, face. வாழ்வில் நாம் எதையும் எதிர்கொள்ள வேண்டும். We must face anything in life.

**எதிர்ச் சொல்-** நேர் எதிர்ப் பொருள் கொண்ட சொல், opposite,

antonym. 'தீயது' என்பதற்கு 'நல்லது' என்பது எதிர்ச்சொல். 'Good' is the antonym of 'bad'. ஒ. ஒரு பொருள் பல சொல்.

**எதிர்த்தரப்பு-** எதிர்ப்பக்கம், the opposing party. எதிர்த் தரப்பு வாதம், the argument of the opposing party.

**எதிர்த்து-** மறுத்து, against. அவர் கீழ் நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்து மேல் முறையீடு செய்தார். He appealed to a higher court against the judgement of the lower court.

**எதிர்த்துப் பேசு-** மதிக்காமல் பேசு, talk against. அப்பாவை எதிர்த்துப் பேசாதே. Don't talk against father.

**எதிர்நீச்சல் போடு-** எதிர்த்துப் போராடு, face difficulties. நாம் வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட்டே ஆகவேண்டியுள்ளது. We have to face difficulties in life.

**எதிர்நோக்கு-** காத்திரு, wait for. யாரை நீ எதிர்நோக்குகிறாய்? For whom are you waiting?

**எதிர்ப்பதம்-** பா. எதிர்ச்சொல்.

**எதிர்ப்பாளர்-** கொள்கை மறுப்பாளர், opponent. அவர் தீயவற்றின் எதிர்ப்பாளர். He is an opponent of evil.

**எதிர்ப்பு-** 1. கண்டனம், protest. விலைவாசி உயர்வுக்கு மக்கள் நடுவே கடும் எதிர்ப்பு எழுந்தது. There was severe protest for the rise of prices among people. 2. மறுப்பு, refusal, opposition. உன் எழுத்துகளுக்கு கடும் எதிர்ப்பு எழுந்துள்ளது. There is a strong opposition to your writings. 3. தற்காப்புச் செயல், reaction, response.

**எதிர்பார்-** எதிர்பார்த்தல், expect. நீ என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறாய்? What do you expect from me? எதிர்பார்ப்பு, expectation. உன் எதிர்பார்ப்பு என்ன? What is your expectation? பெரும் எதிர்பார்ப்புகள், great expectation.

**எதிர்பார்ப்பு ஜாமீன்-** முன்கூட்டித் தரப்படும் ஜாமீன் உத்தரவு, anticipatory bail. பொடா சட்டத்தில் எதிர்பார்ப்பு ஜாமீன் இல்லை. There is no provision for anticipatory bail in POTA.

**எதிர்மறை-** நேர்மாறானது, negative. உடன்பாடா எதிர்மறையா? Is it positive or negative?

**எதிர்மாறான-** உடன்படாத, contrary. எதிர்மாறான கருத்துகள், contrary views.

**எதிர்வரும்-** இனிவரும், forthcoming. எதிர்வரும் ஆண்டு, forthcoming year.

**எதிர்விளைவு-** எதிர்வினை, reaction, response. எதிர்விளைவைப் பார்த்து ஒன்றைச் செய். Do a thing taking into consideration the reaction.

**எதிரணி-** 1. எதிர்த்துப் போட்டியிடும் பிரிவு, defending team. எதிரணியில் நல்ல விளையாட்டாளர்கள் உள்ளனர். There are good players in the defending team. 2. எதிர்த் தரப்பு அணி. rival camp.

**எதிராளி-** எதிரி, enemy. எதிராளியைத் தவறாக எடை போடாதே. Don't judge your enemy wrongly. ஒ. போராளி.

**எதிரி-** எதிர்ப்புத் தெரிவிப்பவர், opponent. அவர் என் அரசியல் எதிரி. He is my political opponent.

**எதிரிடை-** முரண், contradiction, opposite. எதிரிடையான கருத்துகள், views of contradiction.

**எதிரில்-** எதிரே, in front of, opposite. உன் எதிரில் உட்கார்ந்திருப்பது யார்? Who is sitting in front of you?

**எதிரொலி-** 1. திரும்பி வரும் ஒலி, echo. இந்த மன்றத்தில் எதிரொலி உள்ளது. There is echo in this hall. 2. ஒரே மாதிரியாக வெளிப்படுத்து, echo. தொண்டர்கள் தங்கள் தலைவரின் கருத்துகளை எதிரொலித்தனர். The workers echoed the views of their leader.

**எதிரொளி-** 1. பிரதிபலி, reflect. கண்ணாடி ஒளியை எதிரொளிக்கும். Mirror reflets light. 2. எதிரொளிப்பு, reflection.

**எதிரோட்டம்-** எதிர்த்து வரும் நீர்ப் போக்கு, cross-current. ஆற்றில் எதிரோட்டம் உள்ளது. There is cross-current in the river.

**எது-** which. நீ நன்கு விரும்புவது எது? Which do you like best?

**எதுகை-** இரண்டாம் எழுத்து ஒத்து வருதல், (எ-டு) யானை, பானை. rhyming words (e.g.) cot, pot.

**எதேச்சதிகாரம்-** தன்னாதிக்கப் போக்கு, despotism. எதேச்சதிகாரம் மக்களாட்சிக்கு முரணானது. Despotism is contradictory to democracy. எதேச்சதிகாரி, despot. ஒ. சர்வாதிகாரி, சர்வாதிகாரம்.

**எதேச்சை-** தன்னிச்சை, acting wantonly.

**எதேச்சையாக-** தற்செயலாக, by chance. எதேச்சையாக நான் என் நண்பனை வழியில் சந்தித்தேன். I met my friend on the way by chance.

**எந்த-** 1. குறிப்பிடும் ஒன்று, which one. எந்த வீட்டில் நீ இருக்கிறாய்? In which house do you live? 2. எவ்வாறு, what. உனக்கு அவர் எந்த வகையில் உறவு? In what way is he related to you?

**எந்திரம்-** 1. வேலை செய்யும் கனமான கருவியமைப்பு, engine. டீசல் எந்திரம், Diesel engine. எந்திரவியல், mechanics. 2. தானியங்கள் அரைக்கும் கருவி, round stone grinder.

**எப்படி-** எவ்வாறு, how. நீ அதை எப்படிச் செய்தாய்? How did you do it?

**எப்படிப்பட்ட-** எத்தகைய, whatever. எப்படிப்பட்ட சிக்கலையும் அவர் தீர்க்கவல்லவர். Whatever the problem may be, he will solve it.

**எப்போது-** எப்பொழுது, when. எப்போது அவர் வருகிறார்? When does he come?

**எம்-** எங்கள், our. இந்தியா எம் நாடு. India is our country.

**எம்பு-** துள்ளு, jump. ஆட்டுக்குட்டி எம்பியது. The lamb jumped up in joy.

**எமகண்டம்-** தீய நேரம், inauspicious time.

**எமகாதகன்-** மிகுந்த திறமை கொண்டவன். astute, scheming person who may even kill Yama.

**எ(ய)மன்-** மரண தேவன், Yama, the god of death.

**எய்-** விடு, shoot. அம்பை விடு, Shoot the arrow.

**எய்து-** அடை, reach. குறிக்கோளை எய்து. Reach the goal.

**எயிறு-** ஈறு, gum of teeth. எயிற்றில் குருதி வடிகிறது. Blood oozes out of the gum.

**எரி-** 1. எரிய விடு, burn. விளக்கை எரிய விடு. Burn the lamp. 2. எரிச்சல்

உண்டாதல், feel irritation. நான் தோலில் எரிச்சலை உணர்கிறேன். I feel irritation in the skin. 3. சுடுதல், scorch. வெயில் எரிகிறது. The sun scorches.

**எரிஉலை-** உலோகத்தை உருக்கும் உலை, furnace. ஊது உலை, blast furnace.

**எரிகல்-** எரிந்து விழும் கல், meteorite. எரிகல் வானவெளிப் பயணத் திற்குத் தீங்கை உண்டாக்குவது. Meteorite poses a danger to space travel.

**எரிகொள்ளி-** விண்கொள்ளி, meteor.

**எரிச்சல்-** 1. சினம், irritation. எரிச்சல் உண்டாக்காதே. Don't cause irritation. 2. எரிவது போன்ற உணர்ச்சி, burning sensation. 3. பொறாமை, envy. இந்த எரிச்சல் ஏன்? Why this envy?

**எரிசக்தி-** எரிபொருள் ஆற்றல், fuel energy.

**எரிசாராயம்-** எளிதில் தீப்பற்றும் ஒரு திரவம், spirit.

**எரிசோடா-** சலவைச் சோடா, caustic soda, Sodium Carbonate. ஒ. ஆப்பச் சோடா.

**எரிந்துவிழு-** கோபப்படு, get irritated. ஏன் அடிக்கடி எரிந்து விழுகிறாய்? Why do you get irritated often?

**எரிநட்சத்திரம்-** வானத்திலிருந்து எரிந்துகொண்டே விழும் விண்கல், meteor.

**எரிபந்தம்-** தீவட்டி, torch. எரிபந்தம் பிடி, hold a torch.

**எரிபொருள்-** விறகு முதலியவை, fuel. நிலக்கரி ஓர் எரிபொருள். The coal is a fuel.

**எரிமலை-** எரிகுழம்பைக் கக்கும் மலை, volcano. வீறுள்ள எரிமலை, active volcano. வீறற்ற எரிமலை, dormant volcano. எரிமலை இயல், volcanology. எரிமலைப்பாறை, volcanic rock.

**எரியூட்டு-** இறந்த உடலைச் சிதையில் வைத்துத் தீ வை, light the funeral pyre.

**எரிவாயு-** எரியக்கூடிய இயற்கை வாயு, natural gas. மீத்தேன் ஓர் இயற்கை வாயு. Methane is a natural gas.

**எரு-** 1. உரம், manure. 2. வறட்டி, dried cow-dung cake. வறட்டி ஓர் எரி பொருள். Dried cow-dung cake is a fuel. எருக்குழி, manure pit.

**எருக்கு-** எருக்கஞ்செடி, calotropis.

**எருது-** காளை, ox. எருது சிவனின் ஊர்தி. The ox is the vehicle of Lord Siva.

**எருமை-** எருமை மாடு, buffalo. எருமைப்பால், buffalo milk.

**எல்லாம்-** அனைத்தும், all. எல்லாம் வந்து விட்டன. All arrived.

**எல்லாரும்-** 1. அனைவரும், all. நம் நண்பர்கள் எல்லாரும் வந்து விட்டனர். All our friends arrived. 2. நான் சொல்வதை எல்லாரும் கேளுங்கள். All of you listen to me.

**எல்லை-** வரம்பு, border, frontier. வடக்கே நமக்கு எல்லை இமய மலை. In the North, the Himalayas is our border. எல்லைக் காவல் படை, Border Security Force BSF. எல்லை தாண்டிய பயங்கரவாதம், cross-border terrorism.

**எலி-** rat, mouse. எலிப்பொறி, mouse trap.

**எலும்பு-** கடினத்திசு, bone, the hard tissue. எலும்புக்கூடு, skeleton. எலும்பு மண்டலம், skeletal sytem.

**எலும்பும் தோலுமாக-** *எலும்பு வெளியே தெரியாதபடி,* bony. *நீ எலும்பும் தோலுமாகத் தெரிகிறாய்.* You look bony.

**எலும்புருக்கி-** *காசநோய்,* tuberculosis. *எலும்புருக்கி ஒரு குணப் படுத்தக் கூடிய நோய்.* Tuberculosis is a curable disease.

**எலுமிச்சை-** *எலுமிச்சை மரம், பழம்,* lemon tree or fruit.

**எவ்வளவு-** *எந்த அளவு,* how much. *எவ்வளவு தொலைவு நாம் நடக்க வேண்டும்?* How much distance have we to walk?

**எவர்-** *யார்,* who. *வந்தவர் எவர்?* Who came?

**எவர்சில்வர்-** *ஓர் உலோகக் கலவை,* an alloy, eversilver.

**எவன்-** *யார்,* who. *எவன் வந்தான்?* Who came?

**எவை-** what. *ஒரு நல்ல ஆசிரியருக்கு இருக்க வேண்டிய தகுதிகள் யாவை?* What are the qualifications of a good teacher?

**எழில்-** *அழகு,* beauty. *இயற்கை எழில்,* the beauty of Nature.

**எழு-** *1. எழுந்து நில்,* rise. *அவர் இருக்கையிலிருந்து எழுந்து எங்களை வரவேற்றார்.* He rose from his seat and welcomed us. *2. விழித்தெழு,* get up. *அதிகாலையில் எழு.* Get up early in the morning.

**எழுச்சி-** upsurge,upheaval, rousing, resurgence. *இலக்கிய எழுச்சி,* literary resurgence.

**எழுத்தர்-** *பதிவேடுகள், கணக்கு முதலானவற்றை எழுதும் இளநிலை அலுவலர்,* clerk. *ஓர் அரசு அலுவலகத்தில் பல எழுத்தர்கள் உள்ளனர்.* There are many clerks in a goverment office.

**எழுத்தறிவு-** *படிப்பறிவு,* literacy. *எழுத்தறிவு நம் நாட்டில் அதிகம் இல்லை.* Literacy is not high in our country. *எழுத்தறிவு இயக்கம்,* literarcy campaign.

**எழுத்தாணி-** *பனை ஓலையில் எழுதப் பயன்படும் கருவி,* stylus. *தற்பொழுது எழுத்தாணி அரிதாகப் பயன்படு கிறது.* Now the stylus is rarely used.

**எழுத்தாளர்-** *கதை, கவிதை முதலான படைப்புக்களை எழுதுபவர்,* writer. *அவர் ஒரு புகழ்பெற்ற எழுத்தாளர்.* He is a famous writer. *எழுத்தாளர் கழகம்,* writers' association.

**எழுத்து-** *1. வரிவடிவம்,* letter. *அகரம் ஓர் எழுத்து.* A is a letter. *2. கையெழுத்து,* handwriting. *3. படைப்பு,* writing. *4. எழுதிய வடிவம்,* written form.

**எழுத்துக் கூட்டு-** *ஒவ்வொரு எழுத்தை யும் ஒலி,* spell.

**எழுத்தெண்ணிப் படி-** *நுணுக்கமாய்ப் படி,* study in great detail.

**எழுது-** *1. வரிவடிவத்தில் குறி,* write. *எழுதப் பழகு.* Cultivate the habit of writing. *2. கதை எழுது,* Write a story. *3. குறி,* write down. *செலவுகளை யார் கணக்கில் எழுதுவது?* In whose name will the expenses be written down? *4. நன்றாகத் தேர்வு எழுதியுள் ளாயா?* Have you written the examination well?

**எழுதுகோல்-** *எழுதப் பயன்படுங் கருவி,* pen. *எழுதுகோல் வாளை விட வலிமை வாய்ந்தது.* The pen is mightier than the sword.

**எழுதுபொருள்-** *தாள், பேனா முதலியவை,* stationery. *எழுதுபொருள் துறை,* stationery department.

**எழுந்தருள்-** *வீற்றிரு,* grace by holy presence.

**எழுந்திரு-** *1. எழு,* stand up. *மாணவர்களே எல்லோரும் எழுந்திருங்கள்.* Boys! all of you stand up. *2. விழித்தெழு,* wake up. *அவர் அதிகாலையில் எழுந்திருப்பார்.* He will wake up early in the morning.

**எழுப்பு-** *1. கட்டு,* build. *சுவர் எழுப்பு.* Build a wall. *வினா எழுப்பு.* Raise a question. *உயிர்பெறச்செய்.* Raise the dead.

**எழுபது-** *ஏழு பத்துகள்,* seventy. *இப்பொழுது எனக்கு வயது எழுபது.* Now I am seventy years old.

**எழுவாய்-** *(இலக்) ஒரு வாக்கியத்தின் வினைச்சொல் குறிக்கும் செயலைச் செய்வது எது அல்லது யார் என்பதைக் குறிக்கும் சொல் அல்லது தொடர்.* subject. *(எ.டு) மணி பாடுகிறான்.* Mani sings. *இவ் வாக்கியத்தில் 'மணி' எழுவாய்.* Mani is the subject of this sentence.

**எள்-** *ஒரு வித்து,* seasame.

**எள்ளல்-** *அங்கதம்,* satire. *அவர் எழுத்துகளில் எள்ளல் ஒரு தனிச் சிறப்பு.* In his writings, satire is a unique feature.

**எள்ளி நகையாடு-** *பரிகசி,* mock at. *அவன் எள்ளி நகையாடப்பட்டான்.* He was mocked at.

**எள்ளுருண்டை-** *எள்ளும் வெல்லமும் கலந்த சிறு உருண்டை வடிவத் தின்பண்டம்,* a ball shaped sweet. made of seasame and jaggery.

**எளிது-** *எளிமையானது,* easy. *அது செய்வதற்கு எளிது.* It is easy to do. *ஒ. அரிது.*

**எளிமை-** *பகட்டின்மை,* simplicity. *அவர் எளிமையின் ஏந்தல்.* He is the very personification of simplicity.

**எளிய-** *1. தெளிவான,* easy. *எளிய கேள்விகள்,* easy questions. *ஏழ்மையான,* poor. *எளிய குடும்பம்,* poor family. *பகட்டற்ற, எளிய பேர்வழி,* a simple man.

**எளியார்-** *ஏழை,* the poor. *எளியாரை எல்லாரும் எள்ளுவர்.* All will despise the poor.

**எற்று-** *1. உதை,* kick. *பந்தை எற்று.* Kick the ball. *சில்லை எற்று,* kick the piece of flat stone.

**எறி-** *வீசு,* throw. *பந்தை எறி.* Throw the ball. *எறிகுண்டு,* hand grenade. *எறிநாடா,* throw shuttle. *எறிபந்து,* throw ball, missile.

**எறும்பு-** ant. *எறும்புப் புற்று,* ant-hill.

**எறும்புத் தின்னி-** anteater. *எறும்புத் தின்னி ஒரு விலங்கு.* The ant eater is an animal.

**என்-** *எனக்கு உரிய,* my. *என் வீடு,* My house.

**என்றால்-** *அப்படி நடந்தால்,* if it be. *மழைபெய்தது என்றால், பயிர் செழிக்கும்.* If it rains, the crops will flourish.

**என்று-** *எந்தநாள்,* which day. *என்று உன் பிறந்தநாள்?* Which day is your birthday?

**என்று-** *என்ற பெயரிட்டு,* be called. *ஒட்டகத்தைப் பாலைவனக் கப்பல் என்கிறோம்.* We call the camel the ship of the desert.

**என்றும்-** எப்பொழுதும், ever. என்றும் நான் உன்னை நினைவில் கொள்வேன். I shall ever remember you.

**என்ன-** what. உன் பெயர் என்ன? What is your name?

**என-** பா. என்று.

**எனவே-** ஆகவே, hence, therefore. ஆகவே நான் சொல்வது உண்மை. Therefore, what I say is true.

**எனில்-** பா. என்றால்.

**எனினும்-** இருந்தாலும், although. விளக்குகள் அணைக்கப்பட்டாலும், நிலவொளி பளிச்சென்று வீசியது. Although the lights were put out, the moon shone brightly.

## ஏ

**ஏக்கம்-** இழப்புணர்வு, longing. உனக்கு ஏன் இந்த ஏக்கம்? Why do you have this longing?

**ஏக-** அதிகமான, large. ஏகக்கூட்டம், large crowd.

**ஏக-** ஒரே, unanimous. ஏகமனதாக, unanimously.

**ஏகத்துக்கு-** ஏகமாக, excess. ஏகத்துக்கு மருந்து தடவி இருக்கிறாய். You have applied excess medicine.

**ஏகப்பட்ட-** மிகுதியான, more. ஏகப் பட்ட வேலை, more work to do.

**ஏகபத்தினி விரதம்-** ஒரே ஒரு மனைவியை மட்டும் கொள்ளும் உறுதி, a vow to have only one wife.

**ஏகபோகம்-** முற்றுரிமை, monopoly. அரசு ஏகபோகம், a goverment monopoly.

**ஏகமுடி-** நீள்மான தலைமுடி, long hair. நாடகமேடை நடிகருக்கு ஏகமுடி உண்டு. A stage actor will have long hair.

**ஏகவசனம்-** மரியாதை இல்லாமல் பேசுதல். speaking in disrespectful terms. இதைச் சொல்ல அவன் யார்? Who is this fellow to tell this?

**ஏகாங்கி-** தனிமையானவன், a lonely man. ஏகாங்கி. I am a lonely man.

**ஏகாதசி-** உண்ணாநோன்பு நாள், an auspicious fasting day.

**ஏகாதிபத்தியம்-** சிறிய நாடுகளைப் பெரிய நாடுகள் ஆட்டிப் படைத்தல், imperialism.

**ஏகாதிபத்திய நாடு-** imperialistic country.

**ஏகாந்தம்-** தனிமை, solitidue. இப் பொழுது எனக்குத் தேவை ஏகாந் தம். Now I require solitude.

**ஏகோபித்த-** பா. ஏக.

**ஏங்கு-** தவி, yearn. நான் என் தாய் நாடு செல்ல ஏங்குகிறேன். I yearn (long for) to return to my native country. ஏங்குதல், yearning.

**ஏச்சு-** திட்டுதல், scolding. என் தவறுக்கு நல்ல திட்டு கிடைத்தது. I got a bitter scolding for my mistake. ஏசு, scold. அவன் பேசுவது ஏசுவது போல் இருக்கும். His speech will be like scolding.

**ஏசுநாதர்-** பா. இயேசு.

**ஏட்டிக்குப்போட்டி-** ஒருவர் தனக்குக் கிடைத்த அடி, காயம் (அ) அவமானத்தைத் திருப்பித் தரும் சூழல், tit for tat. அவன் என்னை அடித்தான். ஏட்டிக்குப் போட்டி யாக நான் அவனைத் திருப்பி அடித்தேன். He hit me, so I hit him back - it was tit for tat.

**ஏட்டு-** தலைமைக்காவலர், head constable.

**ஏட்டுச் சுரைக்காய்**- அனுபவத்தோடு பொருந்தாத கல்வி, bookish learning. *ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது.* Bookish learning will not be useful to life.

**ஏடாகூடம்**- *முறைதவறிய செயல்,* improper thing. *ஏதாவது ஏடா கூடம் செய்துவிடாதே.* Don't do any improper thing.

**ஏடு**- *1. இதழ்,* periodical, journal. *வள்ளுவம் என்பது ஓர் இதழ்.* Valluvam is a periodical. *2. தாள்,* sheet, page. *ஓர் ஏடு கிழிந்துள்ளது.* A page is torn. *3. சுவடிக்கட்டு,* palm leaf manuscript. *4. பால்ஆடை,* cream of milk. *பால்ஆடை இனிப் பாக இருக்கும்,* The cream of milk will be sweet. *5. நறுக்கிய வாழை இலை,* part of a plantain leaf. *6. நூல்,* book.

**ஏணி**- *ஏறுவதற்குப் பயன்படும் படி அமைப்பு,* ladder. *மர ஏணி,* wooden ladder. *இரும்பு ஏணி,* Iron ladder.

**ஏணை**- *தொட்டில்,* cloth hammock, a sort of cradle.

**ஏதாவது**- *எந்த ஒன்றாவது,* anything. *குடிப்பதற்கு ஏதாவது ஒன்று கொடு.* Give me anything to drink.

**ஏது**- *1. காரணம்,* reason. *ஏதுகாட்டு.* Show reason. *2. வசதி,* being convenient. *அது உனக்கு ஏதுவாக இருக்கும்.* It will be convenient to you.

**ஏது**- *1. எங்கே,* where. *நீ கூறுகிற பள்ளி அங்கே ஏது?* Where is the school that you mention? *2. எப்படி,* how. *உனக்கு இவ்வளவு பணம் ஏது?* How do you possess such an amount of money?

**ஏதேனும்**- *பா. ஏதாவது.*

**ஏந்து**- *தாங்கிப் பிடி,* carry. *கட்சித் தொண்டர்கள் தம் கைகளில் கொடிகளை ஏந்திச் சென்றனர்.* The party workers carried flags in their hands.

**ஏப்பம்**- *வயிற்றிலிருந்து வாய் வழியாக வாயுவை ஓசையுடன் வெளியிடல்,* belching. *ஏப்பம். ஏப்பம் விடுவது போல் எண்ணங் களைத் தெரிவிக்கக் கூடாது.* Thoughts should not be expressed like belching.

**ஏப்பம் விடு**- *அபகரி,* swindle. *திரட்டிய நிதியை அவன் ஏப்பம் விட்டு விட்டான்.* He swindled the money collected.

**ஏமாளி**- *எளிதில் ஏமாறுபவன்,* one who is easily deceived,simpleton, dunce, fool. *ஏமாளி இருக்கும் வரை ஏமாற்றுபவர்களும் இருப் பார்கள்.* As long as there are simpletons, there will be cheats.

**ஏமாற்றம்**- *நினைத்தது நிறைவே றாமை,* disappointment. *பெருத்த ஏமாற்றம்,* great disappointment.

**ஏமாற்று**- *ஏமாறச்செய்,* deceive, cheat. *போலிகள் உன்னை எளிதில் ஏமாற்றும்.* Imitations will easily deceive you.

**ஏய்**- *ஏமாற்று,* fool. *நீ என்னை ஏய்க்க முடியாது.* You can't fool me. *ஏய்த்தல்,* fooling.

**ஏர்**- *கலப்பை,* plough. *பார்முழுதும் ஏர் முனையிலே!* The whole world revolves round the plough.

**ஏர்க்கால்**- *ஏரையும் நுகத்தடியையும் இணைக்கும் பகுதி,* the long pole connecting the plough with the yoke. *2. மாட்டுவண்டியில் நுகத்தடிக்குத் தாங்குதலான நீண்ட கழி,* the long

wooden or metal piece to support the yoke.

**ஏர்கட்டு-** *கலப்பையில் மாட்டை இணை.* Yoke the ox to the plough.

**ஏர்பிடி-** *உழு,* plough.

**ஏர்பூட்டு-** *பா. ஏர்கட்டு.*

**ஏராளம்-** *அதிகம்,* large number. *கூட்டத்திற்கு வந்தோர் ஏராளம்.* A large number of people attended the meeting.

**ஏரி-** *பெரிய நீர்நிலை,* lake. *பாசனத்திற்கு உதவுவது ஏரி.* A lake is useful for irrigation.

**ஏலம்-** *ஏலத்தில் விடுதல்,* auction. *ஈடு வைத்த நகைகள் ஏலம் விடப்பட்டன.* The pawned jewels were put to auction.

**ஏலம்-** *ஏலக்காய்,* cardamom.

**ஏலரிசி-** *ஏலக்காய் விதை,* seed of cardamom.

**ஏவல்-** *1. கட்டளை,* order, command. *தந்தையின் ஏவல்,* father's order. *2. ஏவல் வாக்கியம்,* imperative sentence. *நில்,* stop. *ஏவலாள்,* servant, attendant.

**ஏவாள்-** *ஆதாமின் மனைவி,* Eve, wife of Adam.

**ஏவு-** *1. தூண்டிவிடு,* set on. *நாயை ஏவிவிடு.* Set on the dog to go. *2. விடு,* launch. *ஏவுகணை விடு* launch a rocket. *ஏவுகணை ஓர் எறிபடை* Rocket is a missile.

**ஏழ்மை-** *1. வறுமை,* poverty. *இந்தியா ஏழ்மையில் ஆழ்ந் துள்ளது,* India is steeped in poverty. *2. ஏழ்மைக் குடும்பம்,* poor family.

**ஏழாம்பொருத்தம்-** *ஒத்து வராத தன்மை,* incompatibility. *எங்களிடையே ஏழாம் பொருத்தம் உள்ளது.* There is incompatibility between us.

**ஏழு-** *ஆறுக்கு அடுத்த எண்,* seven.

**ஏழை-** *பணவசதியற்றவர்,* the poor. *ஏழைகளும் பணக்காரர்களும்.* The poor and the rich.

**ஏழைப் பங்காளன்-** *ஏழைகளின் நண்பன்,* champion of the poor.

**ஏளனம்-** *நக்கல்,* ridicule.

**ஏளனப்பார்வை-** *நக்கலுடன் பார்த்தல்,* a look of ridicule.

**ஏற்கனவே-** *முன்னரே,* already. *ஏற்கனவே இதுபற்றிச் செயல் குறிப்புகள் விரிவாக வழங்கப் பட்டுள்ளன,* Already instructions have been elaborately issued about this matter.

**ஏற்ப-** *ஏற்றபடி,* according to. *வசதிக் கேற்பச் செய்.* Do it according to your convenience.

**ஏற்படு-** *1. நிகழ்,* happen. *வாழ்வில் சில செயல்கள் தாமாகவே ஏற்படுகின்றன.* Certain things in life happen of their our accord. *2. நிறுவு,* establish. *தொழிற்சங்கம் ஏற்படுத்து,* Establish a trade union.

**ஏற்பாடு-** *ஏற்பச் செய்யும் செயல்,* arrangement, system. *செயற்கைக் கோளில் பல ஏற்பாடுகள் உள்ளன.* There are many systems in a satellite.

**ஏற்பு-** *ஒப்புதல்,* acceptance, consent. *அமைச்சரின் ஏற்பு,* acceptance of the minister. *பதவிஏற்பு,* assumption of office.

**ஏற்புடைய-** *ஏற்ற,* suitable. *ஏற்புடைய கருத்து,* acceptable idea.

**ஏற்புத் திறன்-** *ஏற்றுக்கொள்ளும் இயல்பு,* susceptibility. *காந்த ஏற்புத் திறன்.* magnetic susceptibility.

**ஏற்புரை-** *ஏற்றுக் கூறும் உரை,* acceptance address. *ஏற்புரை சுருக்கமாகவும் இனிமையாகவும்*

இருந்தது. The acceptance address was short and sweet.

**ஏற்பு வலி-** *ஜன்னி,* tetanus.

**ஏற்ற-** *பொருத்தமான,* suitable. *ஏற்ற இடம்,* suitable place.

**ஏற்ற இறக்கம்-** *உயர்வுதாழ்வு,* fluctuations. *மின்னோட்டத்தில் ஏற்ற இறக்கம் உள்ளது.* There are fluctuations in the electric current.

**ஏற்றம்-** *1. நீர் இறைக்கும் அமைப்பு,* pycott. *ஏற்றம் இன்னும் சில கிராமங்களில் உள்ளது.* The pycott still exists in some villages. *2. உயர்வு,* steep. *3. கொடிஏற்றம்,* flag-hoisting. *4. குதிரைஏற்றம்,* mounting on horse. *5. சிறப்பு,* excellence.

**ஏற்று-** *1. சரக்கு ஏற்று,* load. *2. மேல் ஏற்று,* run over. *ஒரு பயணி பேருந்து ஏறிச் செத்தார்.* A passenger was run over by a bus. *3. கொடி ஏற்று,* hoist the flag. *4. குருதி ஏற்று,* transfuse blood.

**ஏற்று-** *கொளுத்து, விளக்கு ஏற்று.* light the lamp.

**ஏற்றுமதி-** *பிற நாட்டுக்கு அனுப்பப் படும் பொருள்,* exports. *ஏற்றுமதிகள் அந்நியச் செலாவணி கொண்டு வருகின்றன.* Exports bring foreign exchange. *ஒ. இறக்குமதி.*

**ஏறஇறங்க-** *மேலுங்கீழுமாக,* an up and down look.

**ஏறக்கட்டு-** *நிறுத்து,* close. *இலாபம் இல்லாததால், வியாபாரம் ஏறக் கட்டப்பட்டது.* Due to loss, the business was closed.

**ஏறக்குறைய-** *தோராயமாக,* more or less, approximately. *இலாபம் ஏறக் குறைய ரூ.10,000.* The profit is approximately Rs. 10,000.

**ஏறிட்டு-** *உயர்த்தி,* with raised head. *ஏறிட்டுப்பார்,* look with raised head.

**ஏறு-** *1. மேல் செல்,* ascend. *மேடையில் ஏறு.* ascend the platform. *2. உயர்தல். மேட்டூர் அணையில் நீர்மட்டம் உயர்ந்துள்ளது.* The water level in the Metur Dam has risen.

**ஏறுக்குமாறு-** *நேர்மாறு,* in an inconsistent way. *ஏறுக்கு மாறாகப் பேசுகிறாய்.* You are inconsistent in your talk.

**ஏறுதழுவுதல்-** *காளையை அடக்குதல்,* controlling a bull.

**ஏறுநடை-** *பீடுநடை,* majestic gait.

**ஏறுமுகம்-** *முன்னேற்றம்,* upward trend. *வணிகத்தில் தற்பொழுது ஏறுமுகம் உள்ளது.* Now there is an upward trend in trade. *ஒ. இறங்கு முகம்.*

**ஏறுவரிசை-** *மேல்நோக்கிய வரிசை,* ascending order. *ஏறுவரிசையில் எழுது.* Write in the ascending order. *ஒ. இறங்குவரிசை.*

**ஏன்-** *எதற்காக,* Why. *நீ ஏன் இப்படிச் செய்தாய்?* Why did you do like this?

**ஏனம்-** *கலன்,* vessel. *ஏனத்தில் என்ன உள்ளது?* What is in the vessel?

**ஏனென்றால்-** *ஏனெனில்,* because. *நாளை பள்ளி இல்லை; ஏனென்றால் தீபாவளி.* There is no school tomorrow because of Deepavali.

**ஏனைய-** *பிற,* other, all other. *தலைமை ஆசிரியரும் ஏனைய ஆசிரியர்களும் முதன்மைக்கல்வி அலுவலரைச் சந்தித்தனர்.* The Headmaster and the other teachers met the Chief Educational officer.

**ஏனோ-** காரணம் ஏதும் இல்லாம லேயே, without any reason. ஏனோ என்னை உனக்குப் பிடிக்கவில்லை. You hate me without reason.

**ஏனோதானோ என்று-** ஈடுபாடு இல்லாத, half-heartedly. ஏனோ தானோ என்று எதையும் செய்யாதே. Don't do anything half heartedly.

## ஐ

**ஐக்கியநாடுகள் சபை-** United Nations Organization, UN. ஐ.நா. ஓர் அனைத்துலக அமைப்பு. The UN is an international organization.

**ஐக்கியம்-** 1. ஒன்றுபடுதல், union. இயற்கையோடு ஐக்கியம், union with nature. 2. ஒற்றுமை, unity. தொழிலாளர் ஐக்கியம், workers' unity.

**ஐசுவரியம்-** செல்வம், wealth. இறை யருளால் சகல ஐசுவரியங்களும் கிடைக்கும். We can get all wealth by the grace of God.

**ஐதிகம்-** மரபுவழி நம்பிக்கை, traditional belief. குரங்கைத் துன்புறுத்தக் கூடாது என்பது ஓர் ஐதிகம். It is a traditional belief that we should not harm a monkey.

**ஐந்தாண்டுத் திட்டம்-** ஐந்து ஆண்டு களுக்கு ஒரு தடவை அரசு வகுக்கும் திட்டம், Five year plan. இந்திய அரசு பல ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்துள்ளது. The Indian Government has drawn many five-year plans.

**ஐந்தாம்படை-** உள்நாட்டில் இருந்து கொண்டே எதிரிக்கு உதவும் கும்பல், fifth column. ஒரு நாட்டில் ஐந்தாம் படை இருக்கத்தான் செய்யும். The fifth column is bound to exist in a country.

**ஐந்தொகை-** வரவு, செலவு, கொள் முதல், விற்றுவரவு, இருப்பு ஆகிய ஐந்தையும் கொண்ட கணக்கு, balance sheet. ஐந்தொகை போட் டாகி விட்டதா? Have you prepared the balance sheet?

**ஐப்பசி-** ஏழாம் தமிழ் மாதம், the name of the seventh Tamil month, (mid October to mid November.)

**ஐம்பது-** fifty. ஐம்பது பேருக்குச் சமைக்கவும். Cook for fifty people.

**ஐயந்திரிபு-** சந்தேகமும் குழப்பமும். ஐயந்திரிபுக்கு இடமில்லாமல் அது மெய்ப்பிக்கப்பட்டுவிட்டது. It has been proved beyond doubt.

**ஐயப்பாடு-** சந்தேகம், suspicion. எனக்கு ஓர் ஐயப்பாடு. I have a suspicion.

**ஐயம்-** 1. சந்தேகம், doubt. உன் ஐயம் என்ன? What is your doubt? 2. பிச்சை, **alms.** ஐயம் இட்டுண். Eat after giving alms.

**ஐயர்-** கோயிலில்/மாதாகோயிலில் பூஜை செய்பவர், priest of a temple/ church. ஐயர் எங்கே? Where is the priest?

**ஐயனார்-** திறந்த வெளிக் கோயில் களில் வழிபடப்படும் ஒரு கிராமத் தெய்வம், a village deity worshipped in an open - air temple.

**ஐயா-** ஆண்களை மரியாதையாக அழைக்கும் சொல், Sir.

**ஐயுறு-** ஐயங்கொள், doubt. ஏன் என் மீது வீணாக ஐயுறுகிறாய்? Why do you doubt me unnecessarily?

# ஒ

**ஒக்கிடு-** *பழுதுபார்,* repair. *கடிகாரத்தை ஒக்கிடு.* Repair the watch.

**ஒட்ட-** *1. அறவே,* completely. *பாலை ஒட்டக் கறக்காதே.* Don't milk completely. *2. மிகக்குட்டையாக, முடியை ஒட்டவெட்டு.* Cut the hair closely.

**ஒட்டகச்சிவிங்கி-** *நீண்ட கழுத்தும் கால்களும் உள்ள ஒரு பாலூட்டி,* giraffe. *ஒட்டகச்சிவிங்கி தீங்கற்ற விலங்கு.* The giraffe is a harmless animal.

**ஒட்டகம்-** *நீண்ட கழுத்தும் கால்களும் முதுகில் திமிலும் உள்ள ஒரு பாலூட்டி,* camel. *ஒட்டகம் பாலைவனக் கப்பல் எனப்படும்.* The camel is called the ship of the desert.

**ஒட்டடை-** *நூல்போல் உள்ள தூசி,* cobweb. *வீட்டில் ஒட்டடை நிறைய உள்ளது.* The house is full of cobwebs. *ஒட்டடைக் கம்பு,* cobweb removing stick.

**ஒட்டி-** *1. அடுத்தாற்போல்,* close to. *கோயிலை ஒட்டிக் கடைத்தெரு உள்ளது.* There is a bazaar close to the temple. *2. அடுத்து,* following.

**ஒட்டி உறவாடு-** *நெருங்கிப்பழகு,* move colsely. *அளவோடு ஒட்டி உறவாடு,* Move closely with anyone within a limit.

**ஒட்டியாணம்-** *பெண்கள் இடுப்பை சுற்றி அணியும் ஒரு நகை.* a waist ornament for women.

**ஒட்டில்-** *ஓரத்தில்,* on the edge. *ஏன் திண்ணை ஒட்டில் அமர்ந்திருக்கிறாய்?* Why are you sitting on the edge of the pial?

**ஒட்டு-** *சேர், இணை,* stick. *வில்லையைப் பசையால் ஒட்டு.* Stick the label with paste. *2. பற்று,* The caterpillar stuck to the leaf. *3. நெருக்கமாக இரு,* attach. *அக்குழந்தை தன் அத்தையுடன் மிக ஒட்டுதலாக உள்ளது.* The child is very much attached to its aunt. *4. ஒடுங்குதல்,* sunken. *ஒட்டிய வயிறு,* sunken stomach.

**ஒட்டு-** *1. துண்டு,* patch. *பையில் ஓர் ஒட்டுள்ளது.* There is a patch in the bag. *2. தொடர்பு,* contact. *நமக்குள் இனி ஒட்டும் வேண்டாம் உறவும் வேண்டாம்.* Hearafter there will be no contact between us. *3. சேர்,* graft. *நல்ல தண்டு நல்ல ஒட்டினை உண்டாக்கும்.* A good shoot forms a good graft. *தோல் ஒட்டு,* skin graft.

**ஒட்டுக்குடித்தனம்-** compartmental living unit.

**ஒட்டுக்கேள்-** *ஒருவர் பேசுவதை மறைந்திருந்து கேள்,* overhear. *நாங்கள் பேசியதை அவன் ஒட்டுக் கேட்டான்.* He overheard our conversation.

**ஒட்டுண்ணி-** *தன் உணவிற்கும் இருப்பிடத்திற்கும் பிற உயிரை அண்டிவாழும் உயிர்,* parasite. *நாக்குப் பூச்சி ஓர் ஒட்டுண்ணி.* Ascaris is a parasite. *ஒ. சாறுண்ணி.*

**ஒட்டுத் திண்ணை-** narrow pial.

**ஒட்டுத்துணி-** *ஏழைகள் ஒட்டுத்துணி அணிவார்கள்.* The poor wear patched clothes.

**ஒட்டுப்பலகை-** *பல மெல்லிய பலகைகள் சேர்ந்தது,* plywood. *ஒட்டுப்பலகைத் தடுப்பு,* a plywood partition.

**ஒட்டுமொத்தம்**- *முழு,* total. *ஒட்டு மொத்த முதலீடு,* total investment.

**ஒட்டுவாரொட்டி**- *தொற்றுநோய்,* contagious disease.

**ஒட்டுவேலை**- plastering work. *ஒட்டு வேலை நடைபெற்றுக் கொண்டு உள்ளது.* Plastering work is going on.

**ஒட்டுறவு**- *பாசஉறவு,* close relationship. *அனைவரிடமும் எனக்கு ஒட்டுறவு உண்டு.* I have close relationship with all.

**ஒட்டைச்சிவிங்கி**- *பா. ஒட்டகச் சிவிங்கி,* giraffe.

**ஒடி**- *1. முறி,* break. *கரும்பை இரண்டாக ஒடி.* Break the sugarcane into two. *2. திருப்பு,* turn. *வண்டியை ஒடி,* turn the vehicle.

**ஒடிசல்**- *ஒல்லி,* thin. *அவன் ஒல்லியான ஆள்.* He is a thin fellow.

**ஒடியல்**- *உலரவைத்த பனங்கிழங்கு.* dried palmyra root tuber.

**ஒடுக்கம்**- *1. குறுகல்,* being narrow. *ஒடுக்கமான சந்து,* narrow lane. *2. அடக்கம்,* contain. *அண்டத்தில் எல்லாம் ஒடுக்கம்.* The cosmos contains all.

**ஒடுக்கல்**- *ஒடுக்கும் வேதிவினை,* reduction. *ஒடுக்கி,* reducing agent.

**ஒடுக்கு**- *கட்டுப்படுத்து,* suppress. *கலகம் ஒடுக்கப்பட்டது.* The rebellion was suppressed.

**ஒடுக்கு**- *நெளிவு,* dent. *ஏனத்தில் ஒடுக்கு உள்ளது.* There is a dent in the vessel.

**ஒடுக்குமுறை**- *பா. அடக்குமுறை.*

**ஒடுங்கிய**- *வாய் ஒடுங்கிய ஏனம்,* narrow mouthed vessel.

**ஒடுங்கு**- *குறை,* subdue. *கூட்டத்தில் ஆரவாரம் ஒடுங்கிற்று.* The ovation subdued in the meeting.

**ஒண்டி**- *தனி,* being alone, one who lives alone.

**ஒண்டிக்கட்டை**- *திருமணம் செய்து கொள்ளாதவர்,* a single person.

**ஒண்டு**- *பதுங்கு,* hide. *பாம்பு எறும்புப் புற்றில் ஒண்டும்.* The snake will hide in an anthill.

**ஒண்டுக்குடி**- *பா. ஒட்டுக்குடித்தனம்.*

**ஒத்த**- *ஒரே,* same, similar. *ஒத்த வடிவங்கள்,* similar figures.

**ஒத்தடம்**- *ஒத்தடம் கொடு.* Apply fomentation.

**ஒத்தாசை**- *உதவி,* help. *உன் உதவிக்கு நன்றி.* Thank you for your help.

**ஒத்தி**- *அடகு,* a sort of mortgage.

**ஒத்திகை**- *ஒத்திகை பார்த்தல்,* rehearsal. *நாடகமேடை ஒத்திகை,* stage rehearsal.

**ஒத்திசைவு**- *இயைபு,* harmony. *நாங்கள் ஒத்திசைவுடன் செயற்படுகிறோம்.* We act in harmony.

**ஒத்திப்போடு**- *தள்ளிப்போடு,* postpone. *ஒரு பணியினை ஒத்திப் போடுவது நல்லதன்று.* Postponing a work is not good.

**ஒத்திரு**- *ஒன்றுபோல் இரு,* be alike. *பிடிவாதத்தில் நீ உன் தந்தை போல் இருக்கிறாய்.* You are like your father in obstinacy.

**ஒத்திவை**- *பா. தள்ளிப்போடு. ஒத்தி வைப்பு,* postponement.

**ஒத்திவைப்புத் தீர்மானம்**- *குறிப்பிடத் தக்கப் பிரச்சினையை விவாதிக்கச் சட்டமன்றத்தின் வழக்கமான நடவடிக்கையை ஒத்தி வைக்கக் கோரும் தீர்மானம்,* adjournment motion in an assembly.

**ஒத்து**- *ஒத்துவாழ்,* live in harmony.

**ஒத்துக் கொள்-** *1. ஏற்றுக்கொள்,* accept. *நீ கூறுவதை நான் ஒத்துக் கொள்கிறேன்.* I accept what you say. *2. ஒப்புக் கொள்,* admit. *என் தவறை ஒத்துக் கொள்கிறேன்.* I admit my mistake. *3. இசைவு அளி,* consent. *நான் உனக்கு உதவ ஒத்துக் கொள்கிறேன்.* I consent to help you. *4. பொருந்துதல்,* agree able. *ஒத்துக் கொள்ளும் உணவு,* agreeable food.

**ஒத்துப்பாடு-** *ஆமாம் போடு,* play second fiddle. *நான் உனக்கு ஒத்துப் பாட விரும்பவில்லை.* I don't want to play second fiddle to you.

**ஒத்துப்பார்-** *ஒப்பிட்டுச் சரிபார்,* verify. *எல்லா உருப்படிகளும் வந்துள்ளனவா என்று ஒத்துப்பார்.* Verify if all articles have come correctly.

**ஒத்துப்போ-** *இணங்கிப்போ,* agree. *சில செயல்களில் நாம் ஒத்துப்போக வேண்டியதுதான்.* In certain matters, we have to agree.

**ஒத்துழை-** *உதவு,* co-operate. *அருள் கூர்ந்து என்னுடன் ஒத்துழை.* Please co-operate with me. *ஒத்துழைப்பு,* co-operation.

**ஒத்துழையாமை-** *ஒத்துழையாமை இயக்கம்,* civil disobedience movement.

**ஒத்தூது-** *பா. ஒத்துப்பாடு.*

**ஒதுக்கிவை-** *1. விலக்கிவை,* ostracize. *அவன் சமூகத்திலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டான்.* He was ostra cized from society. *2. செலவுக்குத் தொகையைத் தனியாக வை,* set apart. *நான் இம்மாதம் குடும்பச் செலவுகளுக்காக ரூ. 2000 ஒதுக்கி வைத்துள்ளேன்.* This month, I have set apart Rs. 2000 for family expenses.

**ஒதுக்கீடு-** *ஒதுக்கித் தருவது,* allotment. *ஒதுக்கீடு இன்னும் செய்யப்பட வில்லை.* Allotment has not yet been made.

**ஒதுக்கு-** *1. தள்ளு,* adjust. *முடியை ஒதுக்கு.* adjust your hair. *2. தனிமை யாக்கு,* isolate. *நான் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளேன்.* I have been isolated.

**ஒதுக்குப்புறம்-** *தனித்த இடம்,* isolated place. *அத்திரையரங்கு ஊரின் ஒதுக்குப் புறத்தில் இருந்தது.* The theatre was in an isolated place of the town.

**ஒதுங்கு-** *1. ஒண்டு,* take shelter. *நிழலுக்காக நான் மரத்தடியில் ஒதுங்கினேன்.* I took shelter under a tree. *2. ஒரு பக்கத்தில் சேர்,* be swept ashore. The dead body was swept ashore.

**ஒப்ப-** *அதன்படி,* as. *நீங்கள் சொன்னதற்கு ஒப்ப அச்செயலை முடித்து விட்டேன்.* I have completed that work as you instructed.

**ஒப்படை-** *1. பொறுப்பில் விடு,* entrust. *இந்தச் செயலை நான் உன்னிடம் ஒப்படைக்கிறேன்.* I entrust this task to you. *2. சேர்ப்பி,* handover. *பணத்தை மேலாளரிடம் ஒப்படை.* Handover the money to the manager.

**ஒப்பந்தக்காரர்-** *ஒப்பந்த வேலை செய்பவர்,* contractor. *கட்டட ஒப்பந்தக்காரர்,* building contractor.

**ஒப்பந்தப் புள்ளி-** *வேலை விவர ஆவணம்,* tender. *உள்ளூர் ஒப்பந்தப் புள்ளி,* local tender.

**ஒப்பம்-** கையெழுத்து, signature. ஒப்பம் பெறுக. Get the signature. மேலொப்பம், counter signature.

**ஒப்பற்ற-** மிகச்சிறந்த, peerless. ஓர் ஒப்பற்ற படைப்பு, a peerless creation.

**ஒப்பனை-** அலங்காரம், makeup. ஒப்பனை அழகாக இருந்தது. The makeup was good.

**ஒப்பாய்வு-** ஒப்புநோக்கிச் செய்யப் படும் ஆய்வு, comparative study. ஒப்பாய்வு தமிழில் அண்மைக் காலத்தில் ஏற்பட்டது. Comparative study is of recent origin in Tamil.

**ஒப்பாரி-** புலம்பல் பாட்டு, lamen tation, dirge. நாட்டுப்புறக் கலையில் ஒப்பாரி சிறந்த கலை. In folklore, the dirge is a remarkable art.

**ஒப்பி-** அப்படியே திருப்பிச்சொல், recite. செய்யுளை ஒப்பி, recite the poem.

**ஒப்பிடு-** ஒப்பிட்டுப்பார், compare. குளிரை வெப்பத்தோடு ஒப்பிடு. Compare cold with heat. ஒப்பீடு, comparison.

**ஒப்பு-** 1. இணங்கு, consent. நான் உன்னுடன் செல்ல ஒப்புகின்றேன். I consent to go with you. 2. உடன் படு, accept. ஆராய்ச்சியாளர்கள் இம்முடிவுகளை ஒப்புவர். The research scholars will accept these findings.

**ஒப்பு-** இணை, equal. நான் உங்களை என் தந்தைக்கு ஒப்பாக மதிக்கிறேன். I consider you as equal to my father.

**ஒப்புக்கு-** சம்பிரதாயத்துக்காக, அவன் ஒப்புக்குச் அழுதான். He wept for the sake of formality. ஒப்புக்குச் சப்பாணி, a dummy.

**ஒப்புக்கொடு-** பா. ஒப்படை.

**ஒப்புக்கொள்-** பா. ஒத்துக்கொள்.

**ஒப்புதல்-** இசைவு, consent, approval, assent. அந்த மசோதாவிற்குக் குடியரசுத் தலைவர் ஒப்புதல் அளித்தார். The President accorded his assent to the bill.

**ஒப்புதல் வாக்குமூலம்-** confession statement.

**ஒப்புநோக்கு-** பா. ஒப்பிடு.

**ஒப்புமை-** ஒப்பிடத் தகுந்தது, comparison, similarity. தெருக் கூத்துக்கும் நாடகத்திற்கும் ஒப்புமை உண்டு. There is similarity between streetplay and drama.

**ஒப்புவி-** சேர், handover. இப்பொருள் களை உரிமையாளரிடம் ஒப்புவி. Handover these things to the owner.

**ஒப்பேற்று-** 1. சரிக்கட்டு, make up. இப்பணத்தைக் கொண்டு செலவை ஒப்பேற்று. Make up the expenses with this amount. 2. நிறைவேற்று, fulfil. உன் உறுதிமொழியை நிறை வேற்று. Fulfil your promise.

**ஒய்யாரம்-** கவர்ச்சிநிலை, elegance. Wearing beautiful dress brings elegance to women.

**ஒய்யாரி-** கவர்ச்சியான அழகி, remarkable beauty.

**ஒயில்-** பா. ஒய்யாரம்.

**ஒயில்கும்மி-** ஒயிலாட்டம், a group folkdance, waving colourful hand kerchiefs.

**ஒரு-** ஒன்று, a. அவன் ஒரு பையன். He is a boy.

**ஒருக்களித்து-** விலாப்புறமாகச் சாய்ந்து, reclining to one side. அவர் ஒருக்களித்துப் படுத்திருந்தார். He was reclining to one side.

**ஒரு கண் வை-** *கருத்தாகப் பார்,* have an eye. *அவன் பேரில் ஒரு கண் வை.* Have an eye on him.

**ஒருகால்-** *ஒருவேளை,* perhaps. *ஒருகால் அவர் மறந்திருக்கலாம்.* Perhaps he may have forgotten it.

**ஒருகாலும்-** *ஒருபொழுதும்,* never. *ஒருபொழுதும் பொய் சொல்லாதே.* Never tell a lie.

**ஒருகை பார்-** *1. சமாளி,* deal somehow or other. *அவனை நான் ஒரு கை பார்க்கிறேன்.* I shall deal with him somehow or other. *2. வயிறு கொள்ள உணவருந்து.* Enjoy food heartily.

**ஒருங்கமை-** *ஒன்றுசேர்,* join together. *கணிப்பொறியில் பல பகுதிகள் ஒருங்கமைந்துள்ளன.* Many parts are joined in a computer.

**ஒருங்கிணை-** *1. ஒன்றாக இணை,* integrate. *ஆறுகளை ஒருங்கிணை.* Integrate rivers. *2. ஒன்றுபடுத்து,* co-ordinate. *நிகழ்ச்சிகளை ஒருங்கிணை,* co-ordinate the programme. *ஒருங்கிணைப்பாளர்,* co-ordinator. *ஒருங்கிணைப்பு,* co-ordination, integration.

**ஒருசாரார்-** *ஒரு சிலர்,* some people. *ஒருசாரார் எப்பொழுதும் குறை கூறிக் கொண்டே இருப்பார்கள்.* Some people will always find fault with others.

**ஒருசாலை மாணாக்கர்-** *கல்விக்கூடத்தில் ஒரே சமயத்தில் படித்தவர்,* schoolmate.

**ஒருசிறிது-** *கொஞ்சம்,* a little. *பரிவு ஒரு சிறிது கொள்.* Have a little sympathy.

**ஒருசேர-** *ஒன்றாக இணைந்து,* simultaneously. *நாடகத் தொடக்கத்தில் தவிலும் நாகஸ்வரமும் ஒருசேர ஒலித்தன.* At the beginning of the play, tavil and nagaswaram played simultaneously.

**ஒருத்தன்-** *ஒரு ஆண்,* a man, a person.

**ஒருத்தி-** *ஒரு பெண்,* a woman.

**ஒருதடவை-** *ஒருசமயம்,* once. *ஒரு தடவை நான் அவரைச் சந்தித்திருக்கிறேன்.* I have met him once.

**ஒருதரப்பு-** *ஒருசார்பாகச் செய்யப்படுவது,* onesided. *ஒருதரப்பான முடிவு,* onesided decision. *ஒருதரப்புவாதம்,* onesided argument.

**ஒருதரம்-** *பா. ஒரு தடவை.*

**ஒருதலை-** *பா. ஒருதரப்பு.*

**ஒருதலைக்காதல்-** *ஒருவர் மட்டும் மற்றொருவரை விரும்பும் காதல்,* onesided love.

**ஒருதார மணம்-** *ஒரே மனைவியுடன் வாழ்தல்,* monogamy. *ஒ. பலதார மணம்.*

**ஒருநிலைப்படுத்து-** *ஒருமுகப்படுத்து,* concentrate. *உன் கவனத்தை ஒருமுகப்படுத்து.* Concentrate your attention.

**ஒருநேரம்-** *ஒருபகுதி,* half a day. *இன்று பள்ளி ஒருநேரம் வேலை செய்தது.* Today, the school worked half a day.

**ஒருபடித்தான-** *ஒரே தன்மையுள்ள,* homogeneous. *ஒருபடித்தான கலவை,* homogeneous mixture.

**ஒருபொழுது-** *ஒருவேளை மட்டும் உண்ணுதல்.* Eating one meal a day.

**ஒருமனதாக-** *ஏகமனதாக,* unanimously. *தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.* The resolution was passed unanimously.

**ஒருமாதிரி-** *இயல்புக்கு மாறானது,* eccentric. He is an eccentric.

**ஒருமுகப்படுத்து-** *நிலைகொள்ளச் செய்,* concentrate. *ஒன்றில் மனத்தை ஒருமுகப்படுத்து.* Concentrate your mind on something.

**ஒருமுகமாக-** *பா. ஒரு தடவை.*

**ஒருமுனைவரி-** *ஓரிடத்தில் மட்டும் விதிக்கப்படும் வரி,* single point tax. *வணிகர்கள் ஒருமுனை வரியையே விரும்புவர்.* The traders opt for a single point tax only. *ஒ. பலமுனை வரி.*

**ஒருமை-** *முழுமை,* unity. *கதையில் ஒருமை உள்ளது.* There is unity in the story. *2. ஒன்று என்னும் எண்ணிக்கையை உணர்த்துவது,* singular. '*அவள்*' *ஒருமை.* 'She' singular. *ஒ. பன்மை.*

**ஒருமைப்பாடு-** *முழுநிலை, முழுமை,* integration. *நாட்டின் ஒருமைப்பாடு,* the integration of the country.

**ஒருவகையில்-** *ஒருநிலையில்,* in a way. *ஒருவகையில் அதுவும் நல்லது.* In a way, it is also good.

**ஒருவர்-** *ஓர் ஆண் அல்லது பெண்,* one man, one woman.

**ஒருவருக்கொருவர்-** *அவர்கள் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்கும் கொள்கையைப் பின்பற்றினர்.* They followed a policy of give and take.

**ஒருவழியாக-** *ஒருவழியாகச் சிக்கல் தீர்ந்தது.* Somehow, the problem was solved.

**ஒருவன்-** *ஒருத்தன்.*

**ஒருவாய்-** *ஒருகவளம்,* morsel. *ஒரு வாய்ச்சோறு,* a morsel of food.

**ஒருவாறு-** *பா. ஒருவழியாக.*

**ஒருவிதத்தில்-** *பா. ஒருவாறு.*

**ஒருவிதம்-** *பா. ஒருமாதிரி.*

**ஒருவேளை-** *பா. ஒருகால்.*

**ஒரே-** *வேறு இல்லாத,* only. *என் ஒரேமகன்,* my only son.

**ஒரேமூச்சில்-** *ஒரே தடவையில்,* at one stretch. *ஒரே மூச்சில் கதையைப் படித்தேன்.* I read the story at one stretch.

**ஒரேயடியாக-** *மிகவும்,* completely. *பத்தாண்டுகளுக்குப் பின் கிராமம் ஒரேயடியாக மாறியுள்ளது.* Within ten years, the village has completely changed.

**ஒல்லி-** *மெலிவு,* thin. *நீ ஒல்லியாகக் காணப்படுகிறாய்.* You look thin.

**ஒலி-** *ஓசை,* sound. *இருபொருள்கள் மோதினால் ஒலி உண்டாகும்.* If two objects collide, sound is produced.

**ஒலி-** *உச்சரி,* pronounce. *சொற்களைச் சரியாக உச்சரி.* Pronounce words properly.

**ஒலிக்குறிப்பு-** *ஓர் அணி,* onomatopoeia, '*சலசல*' *என்று நீர் ஓடியது. சலசல என்பது ஒலிக்குறிப்பு.* 'Sizzle' and 'hush' are onomatopoeic words.

**ஒலிநயம்-** *சந்தம்,* rhythm. *பானை, யானை.* Cot, pot.

**ஒலிநாடா-** *ஒலிப்பதிவு செய்யப்பட்ட நாடா,* audiotape.

**ஒலிப்பதிவாளர்-** *ஒலிப்பதிவு செய்பவர்,* sound recordist. *ஒலிப் பதிவு,* sound recording.

**ஒலிப்பு-** *உச்சரிப்பு,* pronunciation.

**ஒலிபரப்பு-** *வானொலி மூலம் வெளியிடல்,* broadcast.

**ஒலிபெயர்ப்பு-** *ஒரு சொல்லில் உள்ள ஒலியமைப்பை மற்றொரு மொழி எழுத்துக்களைக் கொண்டு எழுதுதல்,* transliterate. *(எ-டு)*

Television, என்பதை 'டெலிவிஷன்' என எழுதுதல்.

**ஒலிபெருக்கி-** *ஒலியினை அதிகமாக்கும் கருவி,* loud speaker.

**ஒலியமைப்பு-** sound arrangement.

**ஒலியியல்-** *ஒலிபிறப்புப் பற்றிக் கூறுவது,* phonetics.

**ஒலியிழை-** *பா. ஒலிநாடா.*

**ஒலிவாங்கி-** *ஒலியை வாங்கும் கருவி,* receiver.

**ஒவ்வாமை-** *ஒத்துக்கொள்ளாமை,* allergy. *கத்தரிக்காய் எனக்கு ஒவ்வாமையை உண்டாக்கும்.* Brinjal produces allergy in me.

**ஒவ்வொரு-** *தனித்தனியான,* every. *ஒவ்வொரு நாளும்,* everyday.

**ஒவ்வொன்று-** *தனித்தனியாக ஒன்று.* each one. *ஆளுக்கு ஒவ்வொன்று கொடு,* give each one.

**ஒழி-** *1. நீக்கு,* abolish. *அடிமை முறையை ஆப்ரகாம்லிங்கன் ஒழித்தார்.* Abraham Lincoln abolished slavery. *2. இல்லாமல் செய்,* eradicate. *வறுமையை ஒழி.* Eradicate poverty. *ஒழிப்பு,* abolition.

**ஒழிந்தநேரம்-** *ஓய்வாக இருக்கும் நேரம்,* leisure, free time. *ஒழிந்த நேரத்தில் நான் இசை கற்றுக் கொள்கிறேன்.* During leisure time, I learn music.

**ஒழிய-** *1. தவிர,* though, in spite of. *மழை பெய்ததே ஒழிய, வெப்பம் குறைய வில்லை.* Though it rained, heat did not lessen. *2. அல்லாமல்,* unless, if not. *நீ கேட்டால் ஒழிய அவன் உனக்குக் கொடுக்கப் போவதில்லை.* Unless your demand it, he won't give it to you.

**ஒழுக்கக்கேடு-** *ஒழுக்க நலிவு,* improper conduct. *அரசியலில் இன்று ஒழுக்கக் கேடு பெருமளவுக்குப் பெருகியுள்ளது.* Today improper conduct has multiplied largely in politics.

**ஒழுக்கம்-** *நல்லொழுக்கம்,* right conduct. *ஒழுக்கம் விழுப்பம் தரும்.* Right conduct gives excellence.

**ஒழுக்கு-** *கசிவு,* leakage. *கட்டிடத்தில் ஒழுக்கு உள்ளது.* There is leakage in the building.

**ஒழுகலாறு-** *பழக்கவழக்கம்,* custom. *மனித ஒழுகலாறு,* human custom.

**ஒழுகு-** *1. கசி,* ooze. *குருதி ஒழுகுகிறது.* Blood oozes out. *2. நட.* conduct, follow. *சமூகவிதிகளைப் பின்பற்றி ஒழுகுக.* Follow social laws.

**ஒழுங்கீனம்-** *ஒழுங்கில் குறைபாடு,* indiscipline. *மாணவர் ஒழுங்கீனம்,* students' indiscipline.

**ஒழுங்கு-** *1. நியதி,* order. *இயற்கையில் ஓர் ஒழுங்கு உள்ளது.* There is an order in nature. *2. கட்டுப்பாடு,* discipline.

**ஒழுங்குசெய்-** *ஏற்பாடு செய்,* arrange. *ஒரு கூட்டத்திற்கு ஒழுங்கு செய்யப்பட்டுள்ளது.* A meeting has been arranged.

**ஒழுங்கு நடவடிக்கை-** disciplinary action. *ஒழுங்கு நடவடிக்கை எடு.* Take disciplinary action.

**ஒழுங்குப் பிரச்சினை-** *விதிகள் மீறப்படுகின்றன என்று ஓர் அவையில் உறுப்பினர்கள் எழுந்து பேசும் சிக்கல்,* point of order. *ஓர் ஒழுங்குப் பிரச்சினை சட்டமன்றத்திலோ நாடாளுமன்றத்திலோ எழுப்பப்படுகிறது.* A point of order is raised either in the Legislative Assembly or Parliament.

**ஒழுங்குமுறை-** *1. கட்டுப்பாடு,* discipline, order. *வாழ்க்கைக்கு ஒழுங்குமுறை கட்டாயம் தேவை.* Discipline is a dire necessity of life. *2. வழி,* provision. *இச்சட்டத்தில் கடன் வசதிக்கு ஒழுங்குமுறை செய்யப்பட்டுள்ளது.* Provision is made for loan facilities in this act.

**ஒளி-** *வெளிச்சம்,* light. *இருட்டைப் போக்குவது ஒளி.* Light dispels darkness.

**ஒளி-** *மறைத்து வை,* hide. *இப்பொருளை ஒளித்துவை.* Hide this object.

**ஒளிக்கற்றை-** *ஒளிக்கதிர்த் தொகுப்பு,* beam of light.

**ஒளிச்சிதறல்-** *ஒளிசிதறிச் செல்லுதல்,* dispersion. *ஒளிச்சிதறல் ஒளியின் பண்புகளில் ஒன்று.* Dispersion is one of the properties of light.

**ஒளிச்சேர்க்கை-** *ஒரு தாவரத்தின் பச்சை இலைகள் கதிரவன் ஒளியில் மாவுப்பொருள் தயாரிக்கும் செயல்,* photosynthesis.

**ஒளிப்பதிவாளர்-** *ஒளியைப் பதிவு செய்பவர்,* cameraman. *ஒளிப்பதிவு,* lighting and shooting.

**ஒளிபரப்பு-** *தொலைக்காட்சி நிகழ்ச்சி,* telecast.

**ஒளியமைப்பு-** *விளக்கு ஏற்பாடு,* lighting arrangement.

**ஒளியாண்டு-** *ஒளி ஓராண்டில் கடக்கும் தொலைவு,* light year. *ஒரு வானியல் அலகு.* Light year is an astronomical unit.

**ஒளிர்-** *பளபளத்தல்,* shine. *விண்மீன்கள் வானில் ஒளிர்கின்றன.* The stars shine in the sky.

**ஒளிவட்டம்-** *வட்டவடிவ ஒளி,* halo.

**ஒளிவிடம்-** *மறைவிடம்,* hideout.

**ஒளிவிலகல்-** *ஓர் ஊடகத்திலிருந்து மற்றொரு ஊடகத்திற்கு ஒளி செல்லும்பொழுது அது தன் வழியை விட்டு விலகுதல்,* refrac tion. *ஒளிவிலகல், ஒளிப் பண்புகளில் ஒன்று.* Refraction is one of the properties of light.

**ஒளிவிளக்கு-** illuminating light.

**ஒளிவுமறைவு-** *தெரியாத வகையில் மறைத்தல்,* with holding information. *மருத்துவரிடம் ஒளிவுமறைவு இல்லாமல் பேசு.* Don't withhold any information from a doctor.

**ஒற்றடம்-** *பா. ஒத்தடம்.*

**ஒற்றறி-** *உளவறி,* spy. *ஒற்றறிதல் உளவுத்துறையின் வேலை.* Spying is the job of the intelligence department.

**ஒற்றன்-** *உளவாளி,* spy. *அனைவரையும் ஆராய்வது ஒற்று.* Spy observes all carefully. (T. 584) *ஒற்று,* spying.

**ஒற்று-** *ஒற்றி எடு,* sponge up. *மையை உறிஞ்சு தாளால் ஒற்றி எடு.* Sponge up ink with a blotting paper.

**ஒற்றுமை-** *1. ஒன்றாக இருக்குந் தன்மை,* unity. *இப்பொழுது வேண்டுவது ஒற்றுமையே,* Unity is the need of the hour. *2. ஒற்றுமை,* similarity. *நாடகத்திற்கும் தெருக் கூத்திற்கும் சில ஒற்றுமைகள் உண்டு.* There are certain similarities between drama and streetplay.

**ஒற்றெழுத்து-** *மெய்யெழுத்து,* consonants. *க், முதல் ன் வரை தமிழ் ஒற்றெழுத்துகள்.* (e.g) B,C,D. *ஒ. உயிர்எழுத்து.*

**ஒற்றை-** *இரண்டில் ஒன்று,* one of a pair. *ஒற்றைக் கொம்பன் காண்டா மிருகம்,* rhinoceros, the single

horned. *2. தனி,* single. *தனியாள்,* single man.

**ஒற்றைக்காலில் நில்-** *பிடிவாதமாக இரு,* be firm. *குழந்தை தனக்குக் பாப்பா பொம்மை வேண்டு மென்று ஒற்றைக்காலில் நின்றது.* The child was firm in getting the toy baby.

**ஒற்றைத் தலைவலி-** *ஒருபக்கத்தில் மட்டும் உண்டாகும் தலைவலி,* migraine. *சில சமயங்களில் எனக்கு ஒற்றைத் தலைவலி வரும்.* Some times, I have an attack of migraine.

**ஒற்றை நாடி-** *ஒல்லி,* thin. *அவருக்கு ஒற்றைநாடி உடல்.* He has a thin body.

**ஒற்றைப்படை எண்-** *இரண்டால் வகுபடா எண் 1,3,5 முதலிய எண்கள்,* odd numbers like 1, 3 and 5 cannot be divided by 2.

**ஒற்றையடிப்பாதை-** *ஒருவர் மட்டுமே நடந்து செல்வதற்குரிய வழி,* single track. *கிராமங்களில் ஒற்றையடிப் பாதை இருக்கும்.* There will be a single track in villages.

**ஒன்பது-** nine. *ஒன்பது சுவை,* nine tastes.

**ஒன்றாக-** *கூட்டாக,* together. *ஒன்றாகச் செய்வோம்; அதை நன்றாகச் செய்வோம்.* Let us do things together; let us do them well.

**ஒன்று-** *1. ஐக்கியமாகு,* become one with. *சிவாஜிகணேசன் தாம் நடிக்கும் பாத்திரத்துடன் ஒன்றி விடுவார்.* Sivaji Ganesan will become one with the character that he acts. *2. ஒன்றுபடு,* identify. *இசையில் அவர் ஒன்றிவிட்டார்.* He identified himself with music.

**ஒன்று-** *எண் 1,* one. *2. ஒருபொருள்,* something, one thing. *நான் உன்னிட மிருந்து ஒன்றை எதிர் பார்க்கிறேன்.* I expect something from you. *3. சரி சமம்,* equal. *அவர்கள் இருவரும் ஒன்றே.* Both of them are equal. *4. ஒன்று... அல்லது,* either... or. *நீ பேசு அல்லது என்னைப் பேசவிடு.* Either you speak or let me speak.

**ஒன்றுக்கொன்று-** *ஒன்றுடன் ஒன்று,* to one another. *நீ சொன்ன விஷயங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை.* The things that you mentioned are contrary to one another.

**ஒன்றுகூட்டு-** *பா. ஒன்றுசேர்.*

**ஒன்றுசேர்-** *1. அனைவரும் ஒன்றாகச் சேர்தல்,* join together. *நரிகள் ஒன்று சேர்ந்து ஊளையிட்டன.* The foxes joined together and howled. *2. ஒற்றுமை கொள்,* get united. *எதிரிகள் எல்லாம் ஒன்று சேர்ந்தனர்.* All the adversaries got united.

**ஒன்றுபட்ட-** *ஒன்றுகூடிய,* being united. *தொழிலாளர்களின் ஒன்று பட்ட போராட்டம்,* the united struggle of workers.

**ஒன்றுபடு-** *1. ஒற்றுமையுடன் இரு,* be united. *ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.* If we are united, we shall have a flourishing life. *2. ஒத்துப்போ,* agree on. *தலைவரும் செயலரும் பல விஷயங்களில் ஒன்றுபட்டனர்.* Both the President and the Secretary agreed on many matters.

**ஒன்றுபடுத்து-** *ஒற்றுமைப்படுத்து,* make united. *முரண்பட்ட இரு தரப்*

பிளரையும் ஒன்றுபடுத்து. Make the two contradictory parties united.

**ஒன்றும்-** எவ்வகையிலும், in any way. நான் ஒன்றும் முட்டாள் அல்ல. I am not a fool in anyway. 2. அழுத்தம், emphasis everything. இங்கு நடக்கும் ஒவ்வொன்றும் எனக்குத் தெரியும். I know every thing that is taking place here.

**ஒன்றுவிட்ட-** 1. ஒன்றுவிட்ட அண்ணன், cousin. 2. ஒன்று விட்ட இலையமைவு, alternate leaf arrangement.

**ஒன்றுவிடாமல்-** அனைத்தையும், without omitting anything. அவன் ஒன்று விடாமல் செய்யுளை ஒப்புவித்தான். He recited the poem without omitting anyline.

## ஓ

**ஓ-** either... or. பணமாகவோ பொருளாகவோ அன்பளிப்பைத் தருக. Contribute either in kind or cash.

**ஓங்காரம்-** 1. ஓம் என்னும் மந்திரம், the mystic mantra Ohm. 2. பலத்த ஓசை, loud noise. புயல் ஓங்காரமிட்டு அடித்தது. The storm blew with a loud noise.

**ஓங்கி-** 1. உயரமாக, tall. ஓங்கி வளர்ந்த தென்னை, coconut. 2. கையால் ஓங்கி அடித்தான். He struck me heavily with his hands. 3. ஏன் இப்படி ஓங்கிப் பேசுகிறாய்? Why do you speak in such a loud voice?

**ஓசை-** ஒலி, noise, sound. அலைகள் ஓசை உண்டாக்கும். The waves produce rhythmic sound.

**ஓசைப்படாமல்-** சத்தம் செய்யாமல், without making noise. ஒரு திருடன் ஓசைப்படாமல் அந்த வீட்டின் உள்ளே நுழைந்தான். A thief entered that house without making any noise.

**ஓட்டப்பந்தயம்-** ஓடும்போட்டி, running race, dash. நூறுமீட்டர் ஓட்டப்பந்தயம், 100 metres dash.

**ஓட்டம்-** 1. ஓடுதல், run. அவர் கிரிக்கெட்டில் 20 ஓட்டங்கள் எடுத்தார். He took 20 runs in cricket. 2. நடைஓட்டம், flow of style. 3. குருதிஓட்டம், blood circulation.

**ஓட்டம்பிடி-** தப்பிஓடு, flee. திருடன் ஓட்டம் பிடித்தான். The thief fled.

**ஓட்டாஞ்சல்லி-** மண்பானைத் துண்டு, broken piece of earthenware.

**ஓட்டாண்டி-** பிச்சைக்காரன் நிலையில் உள்ளவன், pauper. அவன் ஓர் ஓட்டாண்டி. He is a pauper.

**ஓட்டி-** ஓட்டுபவன், driver. காரோட்டி எங்கே? Where is the driver?

**ஓட்டு-** drive. மாடுகளை ஓட்டிச் செல். Drive away the cattle. 2. ஊர்தியை ஓட்டு. Drive the Car.

**ஓட்டுநர்-** ஊர்தியை இயக்குபவர், driver of a vehicle.

**ஓட்டை-** 1. hole. குடையில் ஓர் ஓட்டை உள்ளது. There is a hole in the umbrella. 2. குறைபாடு, loophole. சட்ட ஓட்டைகள். Loopholes in law. 3. ஓட்டை வண்டி, condemned cart.

**ஓட்டையுடைசல்-** உடைந்த பாகங்கள், scraps.

**ஓட்டைவாய்-** எதையும் பிறரிடம் எளிதாகச் சொல்லும் நிலை, blabber mouth.

**ஓடம்-** படகு, boat. ஓடம்விடு. Row a boat.

**ஓடாக-** உடல் மெலியும்படி, worn out. நீ முழுதும் ஓடாகிவிட்டாய். You are completely worn out.

**ஓடிப்போ-** காதலனும் காதலியும இரகசியமாக வீட்டை விட்டு வெளியேறுதல், elope. அவன் ஒரு பெண்ணுடன் ஓடிப்போனான். He eloped with a girl.

**ஓடியாடு-** சுறுசுறுப்பாக இருத்தல், be active. இந்த எழுபது வயதிலும் அவர் ஓடியாடிக் கொண்டுதான் உள்ளார். Even at this age of seventy, he is active.

**ஓடு-** 1. விரைந்து செல், run. புகை வண்டியைப் பிடிக்க ஓடு. Run to catch the train. 2. இயங்கு, ply. இன்றுமுதல் புதிய பேருந்துகள் ஓடும். From today onwards, new buses will ply. 3. நீர்மம் இயங்குதல், flow. நீர்மங்கள் ஓடும். Liquids will flow. 4. கழிதல், pass. ஓராண்டு ஓடி விட்டது. A year has passed.

**ஓடு-** 1. சீமை ஓடு, Mangalore tile. 2. நாட்டு ஓடு, pantile. 3. ஆமை ஓடு, tortoise shell.

**ஓடுகாலி-** ஓரிடத்தில் நிலையாக இருக்காதவர், a runaway. அவன் ஓர் ஓடுகாலி. He is a runaway.

**ஓடுதளம்-** ஓடுபாதை, runway in an airport.

**ஓடை-** நீரோடை, stream. நீரோடைகள் பள்ளத்தாக்கில் உண்டு. Streams are found in a valley.

**ஓணான்-** தோட்டத்தில் காணப்படும் ஊர்வன வகுப்பைச் சேர்ந்த சிறுபிராணி, a garden lizard. ஓணான் ஒரு தீங்கற்ற விலங்கு. The garden lizard is a harmless animal.

**ஓதப்பள்ளி-** இஸ்லாமியர் குரான் பயிலும் பள்ளி, Koran school.

**ஓதம்-** ஈரம், 1. dampness 2. hydro cele.

**ஓது-** 1. வேதம் ஓது, recite Vedas. 2. இரகசியமாகச் சொல்லுதல், whisper. என்ன ஓதுகிறாய்! What do you whisper?

**ஓதுவார்-** தேவாரம் பாடுபவர், reciter of Devaram. ஒ. பட்டாச் சாரியார்.

**ஓந்தி-** பா. ஓணான்.

**ஓம்-** பா. ஓங்காரம்.

**ஓம்பு-** பேணு, guard. தனிமனித ஒழுக்கத்தை ஓம்பு. Guard the conduct of an individual.

**ஓமப்பொடி-** ஒரு வகை காரச் சிற்றுண்டி, a savoury in the form of noodles.

**ஓமம்-** மருந்துப்பொருள், Bishop's weed. ஓமம் செரித்தலை தூண்டும். The Bishop's weed increases digestive power.

**ஓமம்-** வேள்வித்தீ, sacrificial fire. ஓமம் செய். Make sacrificial fire.

**ஓய்-** 1. நில், stop. மழை ஓய்ந்தது. The rain stopped. 2. அடங்கு. subdue. சந்தடி ஓய்ந்தது. The noise subdued. ஓய்ச்சல், tiredness, fatigue.

**ஓய்வு-** 1. களைப்பாறுதல், rest. ஓய்வு கொள். Take rest. 2. ஓய்வு ஒழிச்சல், the least time to spare. 3. ஓய்வுக் காலம், period of retirement. 4. நிரந்தர ஓய்வு, eternal rest.

**ஓய்வுநாள்-** 1. விடுமுறைநாள், holiday. பொதுவாக, ஞாயிறு ஓய்வு நாளாகும். Generally, Sunday is a holiday. 2. ஓய்வுகொள்ளும் நாள், Sabbath day, Sunday, the day of rest.

**ஓய்வுபெறு-** பணியிலிருந்து முறைப்படி விலகு, retire. நான் அண்மையில்

ஓய்வு பெற்றேன், I retired recently. ஓய்வூதியம், pension.

**ஓய்வெடு-** ஓய்வுகொள், take rest.

**ஓயாமல் ஒழியாமல்-** ceaselessly. எப்பொழுதும் அவர் ஓயாமல் ஒழியாமல் வேலை செய்பவர். He works ceaselessly.

**ஓர்-** எண்ணிக்கையில் ஒரு பொருளைக் குறிப்பது. an. ஓர் ஆப்பிள், an apple.

**ஓர்ப்படி-** ஓரகத்தி, co-sister. அவள் என் ஓர்ப்படி. She is my co-sister.

**ஓர்மம்-** மனஉறுதி, courage. அவர் ஓர்மம் உள்ளவர். He is a coura geous man.

**ஓரங்க நாடகம்-** ஒரே அங்கம் கொண்ட நாடகம், one act play. பல பள்ளிகளில் ஓரங்க நாடகங்கள் நடைபெறும். One act plays are enacted in several schools.

**ஓரம்-** 1. பக்கம், மூலை, side, corner. வண்டியை மூலையில் விடு. Leave the cart in the corner. 2. முனை, edge. கத்தி ஓரம், edge of a knife. 4. விளிம்பு, margin. இலைவிளிம்பு, margin of a leaf.

**ஓரம்கட்டு-** 1. வேண்டாமென விலக்கு, sideline. பயனில்லாததால், அவர் ஓரம் கட்டப்பட்டார். As he is no more useful, he is sidelined. 2. ஓரத்தில் விடு, leave. வண்டியை கொட்டகையில் விடு. Leave the car in the shed.

**ஓரவஞ்சகம்-** ஓரவஞ்சனை, partiality. ஏன் இந்த ஓரவஞ்சகம்? Why is this partiality?

**ஓரளவு-** சிறிது, to some extent. ஓரளவு வசதிபடைத்தவர். He is well off to some extent.

**ஓராசிரியர் பள்ளி-** ஒரே ஓர் ஆசிரியர் மட்டும் பணியாற்றும் பள்ளி, single teacher school.

**ஓரிரு-** சில, a few. தலைவர் ஓரிரு சொற்களே பேசினார். The leader spoke a few words only.

**ஓரினச்சேர்க்கை-** ஒத்த பாலினத்துடன் உடலுறவு, homosexuality. ஓரினச்சேர்க்கைக்குக் கடுந் தண்டனை உண்டு. There is severe punishment for homosexuality.

**ஓலம்-** துயரஒலி, lamenting cry. போர்க் கள ஓலம், lamenting cry in the battlefield.

**ஓலை-** 1. தென்னை, பனை முதலிய வற்றின் இலை, palm leaf. ஓலைச் சுவடி, palmleaf manuscript. 2. கடிதம், letter.

**ஓவியம்-** சித்திரம், portrait. சொல லோவியம், word picture. ஓவியன், artist.

## ஔ

**ஔடதம்-** மருந்து, medicine. இலங்கணம் பரம ஔடதம். Fasting an excellent medicine.

**ஔடனம்-** மிளகுநீர், pepper water.

**ஔவியம்-** தீவினை, envy. ஔவியம் பேசேல். Don't speak out of envy.

**ஔவை-** 1. தவப்பெண், saintly woman. 2. பெண்புலவர் ஔவை, poetess Avvai.

**ஔவை நோன்பு-** மகளிர் செவ்வாய் நோன்பு, Tuesday fasting of women.

## க

**கக்கம்-** அக்குள், armpit. கக்கத்தில் என்ன வைத்திருக்கிறாய்? What do you keep in your armpit?

**கக்கு** - வாந்தி எடு, vomit. குழந்தை வாந்தி எடுக்கிறது. The child vomits. கக்கல், vomiting.

**கக்குவான்**- இருமல் நோய், whooping cough. குழந்தைக்குக் கக்குவான். The child has whooping cough.

**கங்கணம்**- மங்கலக் காப்பு, auspicious thread worn around the wrist.

**கங்கணம் கட்டு**- உறுதிகொள், resolve. தேர்வில் முதல் மதிப்பெண் பெறவேண்டும் என்று அவன் கங்கணம் கட்டியுள்ளான். He has resolved to get first mark in the examination.

**கங்காணி**- 1. மேற்பார்வையாளர், plantation supervisor. 2. முகவர், agent.

**கங்காரு**- ஆஸ்திரேலியாவில் வாழும் ஒரு பாலூட்டி வகை விலங்கு, Kangaroo, the Australian marsupial.

**கங்கு**- தணல், cinder.

**கங்குகரை**- வரம்பு, bound. அவர் மகிழ்ச்சி கங்குகரை இல்லாம லிருந்தது. His joy knew no bounds.

**கச்சா எண்ணெய்**- பண்படா எண்ணெய், crude oil. Petroleum is extracted from crude oil.

**கச்சாப் பொருள்கள்**- மூலப் பொருள்கள், raw materials. Coal, oil and minerals are raw materials of industry.

**கச்சிதம்**- பொருத்தம், apt. அவன் தன் வேலையை எப்பொழுதும் கச்சிதமாகச் செய்வான். He will always do his work aptly.

**கச்சு**- மகளிர் மார்பில் அணியும் ஆடை, a sort of brassiere.

**கச்சேரி**- 1. இசை நிகழ்ச்சி, concert. அந்த கச்சேரி நன்றாக இருந்தது. The music concert was fine. 2. தாலுகா அலுவலகம், taluk office. இன்று கச்சேரி வேலை செய்கிறது. Today the taluk office works.

**கச்சை கட்டு**- பா. கங்கணம் கட்டு,

**கசக்கிப் பிழி**- வருத்தி வேலை வாங்கு, extract hard work. எங்கள் முதலாளி தொழிலாளர்களைக் கசக்கிப் பிழிவார். Our master will extract work from workers.

**கசக்கு**- தேய், rub. பச்சிலையைக் கசக்கு. Rub the herbs.

**கசகசா**- அபினி விதை, poppy seed.

**கசங்கு**- மடிப்பு கலைதல், wrinkle. சட்டை கசங்கியுள்ளது. The shirt has wrinkled.

**கசடன்**- மட்டமானவன், mean fellow. அவன் ஒரு கசடன். He is a mean fellow.

**கசடு**- கழிவுப்பொருள், slag. உலோகம் பிரித்தெடுத்த பின் கசடு தோன்றும், Slag will appear after the extraction of metal.

**கசப்பு**- 1. கசக்கும் பண்பு, bitter taste. பாகற்காய் கசக்கும். The bitter-gourd tastes bitter. 2. கசப்பான பட்டறிவு, bitter experience. 3. மனக் கசப்பு, hatred.

**கசாப்புக் கடை**- இறைச்சி விற்பனை செய்யுமிடம், butcher's shop.

**கசி**- சிறிய அளவில் வெளிப்படுதல், ooze, leak. Blood oozes out. The cooking gas, leaks out. கசிவு, leakage.

**கசிர்**- பங்குத்தொகை, dividend. கசிர் அதிகம், a lot of dividend.

**கசை**- சாட்டை, whip. கசையடி, whiplash.

**கஞ்சத்தனம்**- கருமித்தனம், miserliness.

**கஞ்சன்-** கருமி, miser. அவன் கடைந்தெடுத்த கஞ்சன். He is an utter miser.

**கஞ்சா-** ஒருவகைப் போதைப் பொருள், Kanja, the intoxicating substance. கஞ்சா குடி, Inhale kanja.

**கஞ்சி-** 1. தானியக்கஞ்சி, gruel. கஞ்சி வார், Feed the poor with gruel. கஞ்சி வார்ப்பு மையம், gruel centre. 2. மாப்பசை, starch. புடவைக்குக் கஞ்சி போடு. Apply starch to saree.

**கஞ்சி காய்ச்சு-** கிண்டல் செய், mock at, tease. நண்பர்கள் அவனைக் கஞ்சி காய்ச்சினர். He was teased by his friends.

**கஞ்சிரா-** ஒரு பக்கவாத்தியம், tambourine.

**கட்சி-** 1. அரசியல் கட்சி, political party. பல அரசியல் கட்சிகள் நம் நாட்டில் உள்ளன. There are many political parties in our country. 2. பக்கம், தரப்பு, side. எம் பக்கம், our side.

**கட்சிக்காரர்-** 1. வழக்காடுபவர், client. 2. அரசியல் கட்சியைச் சார்ந்தவர், member of a political party.

**கட்சிகட்டு-** ஒரு பிரிவை ஆதரித்தல், take sides. எனக்கு எதிராகக் கட்சி கட்டுகிறாய். You are taking sides against me.

**கட்சி தாவு-** கட்சிமாறு, defect. அவர் கட்சி தாவினார். He has defected to some other party. கட்சிதாவல், defection. Defection is not allowed in law. கட்சி தாவும் தடுப்பு மசோதா, anti-defection bill.

**கட்டடக்கலை-** கட்டட வடிவமைப்புத் தொழில்நுட்பம், architecture. கட்டடம், building. கட்டடப் பொருள்கள், building materials.

**கட்டணம்-** ஒரு சேவையைப் பயன்படுத்த செலுத்தும் பணம், fee, fare. வசதிக் கட்டணம், amenity fee. பேருந்துக் கட்டணம், bus fare.

**கட்டம்-** 1. சதுரம், square, chequered pattern. கட்டம் போட்ட சட்டை, chequred shirt. 2. நிலை, stage, phase. முதல் கட்டம், first stage. 3. உச்சகட்டம், climax.

**கட்டம் கட்டிய செய்தி-** சிறப்புக் கருதி ஒரு செய்தித்தாளில் கட்டத்தில் போடும் தகவல், box news.

**கட்டமைப்பு-** 1. அமைப்புமுறை, structure, construction. 2. கட்டு, binding.

**கட்டவிழ்த்துவிடு-** ஏவி விடு, let loose. அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டது. Violence was let loose.

**கட்டழகன்-** ஆணழகன், a man with a well built physique, handsome man.

**கட்டழகி-** கட்டுக்குலையாத பெண், remarkable beauty.

**கட்டளை-** 1. ஆணை, order. மேலிடத்துக் கட்டளை, the order of the High command.
2. இறைவன் ஆணை, commandment. பத்துக் கட்டளைகள், ten commandments. 3. அறக்கட்டளை, endowment. உள்ளூர் நிலக்கிழார் கட்டளை, the endowment of the local landlord.

**கட்டாந்தரை-** 1. வறண்ட நிலப்பகுதி, bare ground. 2. வெறும் தரை, floor.

**கட்டாயக் காத்திருப்பு-** ஓர் உயர் அலுவலர் அடுத்த பதவி கிடைக்கும் வரை கட்டாயம் காத்திருக்கவேண்டிய காலம், period of compulsory waiting.

**கட்டாயம்-** தவிர்க்க இயலாத சூழ்நிலை, dire necessity. உணவு

ஒரு கட்டாயத் தேவை. Food is a dire necessity.

**கட்டாரி-** *குத்துவாள்,* dagger.

**கட்டி-** *1. புடைப்பு,* swelling, boil.
*2. மண்கட்டி,* lump of earth.
*3. தங்கக்கட்டி,* ingot of gold. *4. சவர்க்காரக்கட்டி,* soap bar.

**கட்டிக்கொள்-** *திருமணம் செய்து கொள்,* marry. He got married recently.

**கட்டிப்பால்-** *இறுகிய பால்,* condensed milk.

**கட்டித் தழுவு-** *அன்புடன் கட்டிப் பிடி,* The lovers embraced each other.

**கட்டிப் புரள்-** *கட்டிப்பிடித்து உருளுதல்,* roll over. The two boys fought and rolled over the sands.

**கட்டிமேய்-** *கட்டுப்படுத்து,* control, manage. A teacher has to manage several boys a day.

**கட்டியங்காரன்-** *ஒரு நாடகத்தில் பிற நடிகர்களை அறிமுகப்படுத்தும் பாத்திரம்.* the character introducing other characters in a play.

**கட்டியங்கூறு-** *அறிவி,* herald. The cooing of cuckoos heralded the advent of spring.

**கட்டியாள்-** *நடத்து,* conduct, manage. He has been efficiently managing the family for so many years.

**கட்டில்-** *படுத்துக் கொள்வதற்குரிய பலகை அமைப்பு,* cot. It is a wooden cot.

**கட்டிவளர்-** *பா: கட்டியாள்.*

**கட்டிளங்காளை-** a virile youth.

**கட்டிளம் பெண்-** a charming beauty.

**கட்டு-** *1. அமை,* build. Build a house.
*2. எழுது,* compose. Compose a song.
*3. கயிற்றால் கட்டு.* Bind with a rope.
*4. புடவை கட்டு.* Wear a saree.

**கட்டு-** *1. காயக்கட்டு,* bandage.
*2. முடிச்சு,* knot, tie.
*3. தாள் கட்டு,* bundle of papers.
*4. சாதிக்கட்டு,* social taboo.

**கட்டுக்கதை-** *1. கற்பனை,* myth.
*2. இட்டுக்கட்டியது,* fabricated tale.

**கட்டுக் கழுத்தி-** *சுமங்கலி,* married woman.

**கட்டுக் காவல்-** *கடுமையான காவல்,* tight security.

**கட்டுக்கோப்பு-** *உறுதியான பிணைப்பு,* well-knit story.

**கட்டுச்சோறு-** *பொட்டலத்தில் கட்டிய உணவு,* parcel food.

**கட்டுப்படியாகு-** *கட்டிவருதல்,* be reasonable. The price will not be reasonable to me.

**கட்டுப்பாடு-** *பணி,* abide by. We abide by your decision.

**கட்டுப்படுத்து-** *அடக்கு,* control. Control your anger. *கட்டுப்பாடு,* discipline.

**கட்டுப்பாட்டு அறை-** *கட்டுப்படுத்தும் அறை,* control room. (police, airport)

**கட்டுப் பெட்டி-** an old fashioned rattan box. *கட்டுப்பெட்டி உள்ளம்,* narrow mind.

**கட்டு மரம்-** *மரக்கட்டைகள் சேர்ந்த மிதவை,* catamaran, raft. The fishermen use a catamaran.

**கட்டுமானம்-** *1. நிர்மாணம்,* construction. The consturction is fine.
*2. அமைப்பு,* structure. It is a fine structure.

**கட்டுரை-** *வியாசம்,* essay, article. It is an article on science.

**கட்டுவிரியன்-** *ஒரு நச்சுப்பாம்பு,* krait. The krait is a poisonous snake.

**கட்டெறும்பு-** *பெரிய கருநிற எறும்பு,* black ant.

**கட்டை-** *1. வெட்டப்பட்ட மரத் துண்டு,* block of wood, log.

*2. துப்பாக்கி மரத்துண்டு,* butt of a gun.

*3. சிறிய பட்டை வடிவத்துண்டு,* reed.

*4. உயரக்குறைவு,* short.

**கட்டைக்குரல்-** *கனத்த குரல்,* deep voice.

**கட்டைப் பிரம்மச்சாரி-** *திருமணம் செய்து கொள்ளாது உறுதியாக இருப்பவர்,* confirmed bachelor.

**கட்டை வண்டி-** a coverless bullock cart. *ஒ. கூண்டு வண்டி, வில் வண்டி.*

**கட்டை விரல்-** *பிடிப்பதற்கும் ஊன்றுவதற்கும் பயன்படும் கை விரல்,* thumb, toe. The thumb is in the hand. The toe is in the foot.

**கட்டோடு-** *அறவே,* completely. I hate you completely.

**கட-** *1. நீங்கு,* cross. Cross the street carefully.

*2. கடந்து நிற்றல்,* transcend. A good literature transcends time.

**கடகம்-** *கடகராசி,* cancer, the fourth sign of the zodiac, the crab.

**கடகம்-** *பனை ஓலைப்பெட்டி,* palm-leaf box.

**கடத்தல்-** *1. வெப்பக் கடத்தல்,* conduction of heat.

*2. ஆளைக் கடத்தல்,* kidnapping.

*3. விமானத்தைக் கடத்தல்,* hijacking.

*4. கள்ளக் கடத்தல்,* smuggling. Except the first one, all others are criminal offences.

**கடத்தி-** *வெப்பத்தையும், மின்சாரத் தையும் கடத்தும் பொருள்,* conductor of heat and electricity. Copper is a good conductor. *ஒ. அரிதில் கடத்தி.*

**கடத்து-** *1. செலுத்து.* Copper conducts electricity.

*2. கழி,* pass. Pass your time usefully.

**கடந்த-** *கடந்த ஆண்டு,* last year.

**கட்டுபாடு-** *கடமை,* obligation. I have to fulfil an obligation to you.

**கடப்பாரை-** *தோண்ட உதவும் கூரான இரும்புக் கழி,* crowbar. A crowbar can be used as a lever.

**கடப்பைக்கல்-** *கறுப்புநிறக் கல்,* granite. The granite is a flooring material.

**கடம்-** *தாள இசைக்கருவியாகப் பயன்படும் ஒருவகை மண் பானை,* a pot used as a percussion instrument.

**கடமான்-** *ஒரு வகைப் பெரிய மான்,* sambar.

**கடமை-** *பணி,* duty. It is my duty to help you.

**கடமைப்பட்டிரு-** *கடமையுள்ளவராக இரு,* be indebted. I am indebted to you for your timely help.

**கடல்-** *உப்பு நீர்ப்பரப்பு,* sea. *பெருங் கடல்,* ocean. Arabian sea, Indian ocean.

**கடல்குதிரை-** *ஒரு குதிரையின் தலைபோன்ற உடலமைப்பு கொண்ட சிறிய கடல்மீன்,* seahorse.

**கடல்நாய்-** *நீர்நாய்,* otter.

**கடல் மட்டம்-** *சந்திர, சூரியனின் ஈர்ப்பு சக்தியினால் கடல் அலை பொங்கி முன்னேறும் பொழுது*

**தவத்திரு-** அருட்திரு, புனிதமான மதத்தலைவரின் பெயருக்கு முன் சேர்க்கப்படும் மரியாதைத் தொடர். His Holiness. *தவம்,* penance.

**தவலை-** *பித்தளைக் குடம்,* a pot like brass vessel.

**தவழ்-** *1. ஊர்ந்து செல்,* crawls. The child crawls on the floor. *2. நிலவு,* beam. He beamed with satisfaction.

**தவளை-** *நீரிலும் நிலத்திலும் வாழும் சிறுபிராணி,* frog, an amphibian. *தவளைச் சொறி,* a kind of skin eruption.

**தவற விடு-** *1. பேருந்தைத் தவற விட்டேன்.* I missed the bus. *2. தொலைத்தல்,* lose. I lost my pen.

**தவறாக-** *தெரியாமல்,* by mistake. By mistake, I did it.

**தவறாமல்-** *கண்டிப்பாக,* without fail. Attend the meeting without fail.

**தவறு-** *1. தப்பு,* mistake. Don't mistake me. *2. தீங்கு,* harm. Don't do harm to anybody. *3. குறை,* fault; mechanical fault.

**தவி-** *தொல்லைப்படு,* suffer. I suffered a lot without money. *தவித்தல், தவிப்பு,* suffering, worry.

**தவிடு-** *உமி,* bran. *தவிட்டெண்ணெய்,* bran oil.

**தவிடுபொடியாகு-** *சிதறு,* crumble. The rock crumbled due to dynamite explosion.

**தவிர்-** *விலக்கு,* avoid. Avoid bad association.

**தவிர்த்த-** *தவிர,* except. All came except you.

**தவிரவும்-** *மேலும்,* moreover. He is a good man. Moreover he helps all.

**தவில்-** *தோலிசைத் தாளக் கருவி,* tavil, double-headed drum. tavil vidwan.

**தழல்-** *தணல்,* cinder.

**தழும்பு-** *வடு,* scar. There is a scar on the forehead.

**தழுவல்-** *மூல நூலினை ஒட்டி எழுதியது,* adaptation.

**தழுவிய-** *முழுதும்,* throughout, general strike throughout the country.

**தழுவு-** *1. அணை,* embrace. The lovers embraced each other. *2. சேர்,* He embraced Christianity.

**தழை-** *1. தளிர்,* shoot forth. The tree shoots forth well due to rain. *2. இலை,* leaf. *தழைச்சத்து,* nitrogen content.

**தழையுரம்-** *அடியுரம்,* green manure.

**தள்ளாடு-** *தடுமாறு,* stagger. The porter staggered because of heavy head load. *தள்ளாத காலம்,* old age. *தள்ளாமை,* infirmity.

**தள்ளி-** *விலகி,* away. My house is a little away from the school.

**தள்ளிப் போடு-** *ஒத்திப் போடு,* postpone. The meeting is postponed.

**தள்ளிவிடு-** *வேண்டாம் என ஒதுக்கு,* reject. The defective applications were rejected.

**தள்ளு-** *கதவைத் தள்ளு,* push the door. *தள்ளுபடி,* discount, rebate.

**தள்ளுபடி செய்-** *1. நிராகரி,* dismiss. The case was dismissed. *2. இரத்து செய்,* waive. The interest was waived.

**தள்ளுவண்டி-** *தள்ளிச் செல்லும் வண்டி,* wheel barrow.

**தளகர்த்தர்-** *1. படைத்தலைவர்,* general. *2. தலைவர்,* leader.

**தளம்-** *1. தரை,* floor, storey. *2. போர்ப் படைத்தளம்,* military base.

**தளர்-** *1. பிடி தளர்,* the grip loosened. *2. உள உறுதி இழ,* lose one's heart. *தளர்ச்சி,* fatigue. *தளர்த்து,* loosen, relax. The rules are relaxed.

**தளவாடம்-** 1. போர்க் கருவிகள், arms and ammunition. 2. தேவையான பொருள்கள், requisites.

**தளவாய்-** படைத்தலைவர், military commander.

**தளிர்-** இளம் இலை, tender leaf.

**தளுக்கு-** கவர்ச்சி, enticing, bewitching.

**தளை-** 1. தடை, bondage, 2. விலங்கு fetters. 3. பற்று, sentiment.

**தற்காத்துக்கொள்-** பாதுகாத்துக் கொள், Protect oneself. Protect yourself against attack. தற்காப்பு, self-protection.

**தற்காலம்-** இக்காலம், contemporary period, modern period.

**தற்காலிகம்-** தற்சமயம், temporary.

**தற்குறி-** எழுதப்படிக்கத் தெரியாதவர், illiterate.

**தற்கூற்று-** ஆசிரியர் கூற்று அல்லது பாத்திரத்தின் கூற்று, first person narration.

**தற்சமயம்-** தற்பொழுது, at present. At present, I am unemployed.

**தற்சார்பு-** பிறர் உதவியின்றித் தானே வாழும் நிலை, self-reliance.

**தற்செயல்-** எதிர்பாராமல் நிகழ்வது, accident. தற்செயல் விடுப்பு, casual leave.

**தற்புகழ்ச்சி-** தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளல், self - praise.

**தற்பெருமை-** தன்னைப் பெருமையாகப் பேசுதல், self - boasting.

**தறி-** 1. வெட்டு, cut down. The trees were cut down.
2. நெய்யும் எந்திரம், loom.

**தறிகெட்டு-** நெறிகெட்டு, uncontrollable. The temple elephant became uncontrollable.

**தறுதலை-** ஊர்சுற்றி, vagabond.

**தறுவாய்-** சமயம், juncture. At this juncture, it is difficult to save you.

**தன்மானம்-** சுயமரியாதை, self-respect. It is a disgrace to my self-respect.

**தன்முனைப்பு-** செருக்கு, ego.

**தன்மை-** 1. இயல்பு, nature. The nature of the soil is clayey. 2. சீரான போக்கு, soft temperament.

**தன்வினை-** செய்பவன் செயல், action of the doer. ஒ. பிறவினை.

**தன்னகத்தே-** தன்னுள்ளே, inside. There are many parts inside the computer.

**தன்னடக்கம்-** பணிவு, self-restraint. Self-restraint is a good quality.

**தன்னந்தனியாக-** முற்றிலும் தனியாக, all alone. I am all alone in this mansion.

**தன்னம்பிக்கை-** தன்னால் முடியும் என்னும் உறுதி. self-confidence. I admire your self-confidence.

**தன்னலம்-** சுயநலம், selfishness. I hate your utter selfishness. ஒ. பொது நலம்.

**தன்னாட்சி-** சுய ஆட்சி, self-rule. autonomy. தன்னாட்சிக் கல்லூரி, Presidency College is an autonomous college.

**தன்னிகரற்ற-** ஒப்பற்ற, matchless. He is a matchless leader.

**தன்னிச்சை-** தன்விருப்பம், one's own decision. It is your own decision.

**தன்னிலை விளக்கம்-** ஒருவர் தானே அளிக்கும் விளக்கம், self-explanation. He offered his self-explanation for the decision that he had taken.

**தன்னிறைவு-** தானே பெறும் நிறைவு, self-sufficiency. We have not yet attained self-sufficiency.

**தன்னுணர்வு-** *சுய உணர்வு,* consciousness.

**தனதாக்கு-** *தனக்கு உரியதாக்கு,* make one's own. Many business men make the poramboke lands their own.

**தனம்-** *செல்வம்,* wealth. He has wealth but he has no mind to give.

**தனயன்-** *மகன்,* son.

**தனரேகை-** *(சோதி) செல்வரேகை,* a line on the palm which is supposed to predict one's fortune.

**தனவந்தன்-** *செல்வந்தன்,* rich man.

**தனி-** *1. அலாதி,* unique. It is a unique art. *2. தனியறை,* separate room. *3. தனி ஆவர்த்தனம், ஒரு தாளத்தின் இயல்பை வெளிப்படுத்தும் இசை ஒழுங்கு.* Solo performance of every artist in a music concert done in unison. *இப்பொழுது தனி ஆவர்த்தனம் நடைபெறுகிறது.* Now the solo performance is going on. *ஒ. கெத்து.*

**தனி ஊசல்-** *முறுக்கற்ற நூலில் தொங்கவிடப்பட்டிருக்கும் குண்டு,* simple pendulum. *வினாடி ஊசல்,* seconds pendulum.

**தனிக்குடித்தனம்-** *கூட்டுக் குடித்தனத்திலிருந்து பிரிந்து கணவன், மனைவி மற்றும் அவர்கள் குழந்தையுடன் நடத்தும் குடும்ப வாழ்வு,* running the family separately.

**தனித்தமிழ்-** *பிற மொழி கலவாத தூய தமிழ்,* pure Tamil.

**தனித்தன்மை-** *தனிப்பண்பு,* individuality.

**தனித்தனியாக-** *ஒவ்வொன்றாக, ஒவ்வொருவராக.* one by one. Come one by one.

**தனித்தேர்வர்-** *ஒரு கல்வி நிறுவனத்தில் சேராமல் தனிப்பட்ட முறையில் படித்துத் தேர்வு எழுதுபவர்,* private candidate.

**தனிநபர்-** *தனியாள்,* individual. individual income.

**தனிக்கட்டை-** *தனியாக வாழ்பவர்,* bachelor, loner.

**தனிப்பட்ட-** *சொந்த,* personal. It is your personal opinion.

**தனிப்பாடல்-** *உதிரிப் பாடல்,* solitary verse.

**தனிமை-** *தனித்துவிடப்பட்ட நிலை,* solitude. I live in solitude. *தனிமைப் படுத்து,* isolate.

**தனியா-** *கொத்துமல்லி,* coriander.

**தனியார்-** *தனிப்பட்டவர்,* private. *தனியார் துறை,* private sector.

**தனியுடைமை-** *தனியாள் சொத்து,* individual property.

**தனிவட்டி-** *ஒவ்வொரு ஆண்டும் கணக்கிடப்படும் வட்டி,* simple interest. *கூட்டு வட்டி,* compound interest.

**தனுசு-** *1. வில்,* bow. *2. வில் வடிவம் கொண்ட ராசி,* Sagittarius.

**தனுர்வாதம்-** *தசை விறைப்பு ஜன்னி,* tetanus.

## தா

**தா-** *கொடு,* give. Please give me an apple.

**தாக்கம்-** *விளைவு,* impact, impact of foreign culture on India.

**தாக்கல் செய்-** *1. வழங்கு,* produce. Evidence produced. *2. அளி,* present. The Finance Minister presented the budget. *3. எடுத்தெழுது,* transfer. Have you transferred the daily entries to the ledger?

**தாக்கீது-** *உத்தரவு,* summons, order. Have you served the summons?

**தாக்கு-** *1. அடித்திடு,* attack. The robbers attacked the passengers. *2. தரக்குறைவாகப் பேசு,* attack. He attacked the leader severely. *3. நோய்தாக்குதல்,* attack, attack of Malaria.

**தாக்குப்பிடி-** *சமாளி,* withstand. How are you going to withstand the drought conditions?

**தாகம்-** *நீர்வேட்கை,* thirst. I quenched my thirst with cold water.

**தாங்கி-** *தாங்கும் அமைப்பு,* stand, holder.

**தாங்கு-** *1. ஏற்றுக் கொள்,* endure. He endured the toothache. *2. சும,* bear. Bear the weight. *3. செய்தி வெளியிடு,* carry. The newspapers carry important news.

**தாங்குகட்டை-** *ஊன்றுகோல்,* crutches.

**தாசன்-** *1. வழிபடுபவன்,* devotee. *2. வழிநடப்பவர்,* follower.

**தாசி-** *விலை மாது,* courtesan.

**தாசில்தார்-** *வருவாய்த் துறை அதிகாரி,* Tahsildar.

**தாடி-** *1. தாடைமுடி,* beard. *2. தாடையில் தொங்கும் முடி,* tuft of hair.

**தாடை-** *பற்களைத் தாங்கும் முகத்தின் பகுதி,* jaw.

**தாண்டவம்-** *நடனம்,* dance. *தாண்டவமாடு,* be rampant. Corruption is rampant in public life.

**தாண்டு-** *1. தாவிக்கட,* jump over, cross. Jump over the obstacle. *2. சாலையைக் கட,* Cross the road. carefully.

**தாத்தா-** *1. அப்பாவின் அப்பா,* grand father. *2. கிழவர்,* old man.

**தாத்பரியம்-** *பொருள்,* meaning. What is the meaning of this ceremony?

**தாதி-** *1. ஆயா,* nurse. *2. அரண்மனைப் பணிப்பெண்,* maid-servant.

**தாது-** *1. தனிப்பொருள்,* ore, mineral. *2. மகரந்தத்தூள்,* pollen grain.

**தாபம்-** *ஏக்கம்,* longing, yearning; a longing for home.

**தாம்பத்தியம்-** *குடும்பவாழ்க்கை,* family life.

**தாம்பாளம்-** *பெரியதட்டு,* salver, plate.

**தாம்புக் கயிறு-** *முறுக்கிய கயிறு,* long twisted rope for drawing water from the well.

**தாம்பூலம்-** *வெற்றிலைப்பாக்கு,* betel and arecanut. *தாம்பூலம் தரி,* chew the betel. *தாம்பூலம் மாற்று,* exchange of betel for marriage confir-mation.

**தாமதம்-** *தாமதப்படுத்தல்,* delay.

**தாமதி-** *நீட்டிப்புச் செய்,* delay.

**தாமரை-** *முளரி,* lotus.

**தாமாக-** *தானாக,* of one's own will.

**தாமிரம்-** *செம்பு,* copper.

**தாய்-** *1. அம்மா,* mother. *2. தாய்க் கழகம்,* parent organization. *தாய்க்குலம்,* women folk. *தாய்சேய் நல விடுதி,* maternity and child care hospital.

**தாய்நாடு-** *பிறந்த நாடு,* mother land.

**தாய்ப் பத்திரம்-** *மூலபத்திரம்,* original deed.

**தாய்ப்பால்-** *முலைப்பால்,* mother's milk.

**தாய்மாமன்-** *தாயின் சகோதரன்,* maternal uncle.

**தாய்மை**- 1. மகப்பேறு, motherhood. 2. தாய் இயல்பு, motherly affection.

**தாய்மொழி**- ஒரு குழந்தை முதலில் கற்றுக் கொள்ளும் மொழி; ஒருவர் பிறப்பு, வளர்ப்பு, இடத்தினால் கற்றுக்கொள்ளும் மொழி, mother tongue.

**தாயக்கட்டை**- தாயம் ஆடும் கட்டை, dice. தாயம் ஆடு, play dice.

**தாயகம்**- 1. தாய்நாடு, motherland. 2. முதலில் தோன்றிய இடம், home.

**தாயத்து**- மந்திரித்த பொருள் உள்ள உலோகக் கூடு, talisman.

**தாயாதி**- தந்தைவழி உறவினர், male descendants.

**தாயார்**- 1. தாய், mother. 2. திருமகள், consort of Lord Vishnu.

**தார்**- 1. குலை, cluster of plantain bunches. 2. சாலை போடப் பயன் படுத்தப்படும் கறுப்புப் பிசின், tar. 3. தார்க்குச்சி, goad.

**தார்ப்பாய்**- தார்ப் பூசப்பட்ட கித்தான், tarpaulin. தார்ப்பாய்ச்சு, wear the dhoti by tucking one end of it.

**தார்மீக**- அற அடிப்படையிலான, moral. தார்மீக அடிப்படை, on moral basis. தார்மீக ஆதரவு, moral support.

**தாரக மந்திரம்**- 'ஓம்' என்னும் மந்திரம், the mystic incantation. 'Ohm'

**தாரகை**- விண்மீன், star.

**தாரதம்மியம்**- குறைநிறை, difference, disparity. There is disparity in the pay.

**தாரம்**- மனைவி, wife. முதல்தாரம், first wife. இரண்டாம் தாரம், second wife.

**தாரா**- குள்ள வாத்து, dwarf duck.

**தாராளம்**- தயாளம், liberality.

**தாராளமயமாக்கல்**- liberalization. தாராளமாக, liberally.

**தாரை**- 1. ஊதும்கொம்பு, trumpet. 2. நீர்ப்பீச்சு, jet of water.

**தாலாட்டு**- தாலாட்டுப் பாடு, sing lullabies. தாலாட்டு, lullaby.

**தாலி**- திருமாங்கல்யம், sacred cord. தாலிகட்டு, tie the sacred cord. தாலிப்பிச்சை, request to spare one's husband's life. தாலியறு, become a widow.

**தாலுக்கா**- வட்டம், taluk.

**தாவங்கட்டை**- முகவாய், chin.

**தாவணி**- பெண்கள் மார்பில் அணியும் மேலாடை, half-saree.

**தாவர உண்ணி**- புல், பூண்டு, செடி, கொடி உண்டு வாழும் பிராணி, herbivore. The elephant is a herbivore. தாவர எண்ணெய், vegetable oil.

**தாவரம்**- மண்ணில் நிலைத்து வளர்வது, plant. தாவரச் சமூகம், plant society. தாவரவியல், botany. தாவரவியல் பூங்கா, botanical garden.

**தாவா**- தகராறு, dispute. Land dispute.

**தாவு**- தாவிச் செல், leap. The frog leapt out.

**தாழ்த்து**- 1. கீழேவருமாறு செய், lower. Lower the flag. 2. குறை, stocks lowered in value.

**தாழ்ந்த**- மட்டமான, low, poor. I have a poor opinion about him.

**தாழ்ந்துபோ**- அடங்கிப்போ, be submissive.

**தாழ்ப்பாள்**- கதவை தாழிடும் அமைப்பு, latch, bolt.

**தாழ்மை-** *பணிவு,* humility.

**தாழ்வாரம்-** *திண்ணைக்கு அடுத்த தாழ்ந்த பகுதி,* veranda.

**தாழ்வு-** *1. கீழ் நிலை,* inferiority. *2. வீழ்ச்சி,* fall.

**தாழ்வுணர்ச்சி-** *தாழ்வு மனப்பான்மை,* inferiority complex.

**தாழம்பூ-** *தாழையின் பூ,* screwpine flower.

**தாழி-** *பெரிய மண்பானை,* large pot.

**தாழை-** *ஒரு வகைத் தாவரம்,* fragrant screwpine.

**தாள்-** *1. காகிதம்,* paper. *2. வினாத் தாள்,* question paper. *3. பயிர்களின் கதிர் உள்ள பகுதி,* stubble. *4. கால்,* feet. *5. தாழ்ப்பாள்,* latch, bolt.

**தாளக்கட்டு-** *தாளத்தோடு ஆடும் முறை,* rhythmic beat.

**தாளடி-** *குறுவைக்கு அடுத்த சாகுபடி,* second crop.

**தாளம்-** beat. *தாளம் போடு, தாள வாத்தியம்,* percussion musical instrument. keep beat, dance to one's tune.

**தாளம்மை-** *பொன்னுக்கு வீங்கி,* mumps.

**தாளாமல்-** *தாங்கமுடியாத,* unable unbearable. unbearable pain.

**தாளாளர்-** *கல்வி நிலையப் பொறுப் பாளர்,* correspondent.

**தாளி-** *தாளித்தல்,* season, flavour. highly seasoned sauces. *தாளிதப் பொருள்,* seasoning stuffs.

**தாறுமாறாக-** *1. முறையற்ற,* without any order, in disorder. *2. தரக்குறைவு,* indecently.

**தான்தோன்றித்தனம்-** *தன் விருப்பம்.* irresponsibility.

**தானம்-** *தர்மம்,* charity, donation.

**தானாக-** *தூண்டுதல் இல்லாமல்,* on one's own accord. He did it on his own accord.

**தானியங்கி-** *தானே இயங்கும் கருவி,* automobile, automatic machine. *தானியங்கல்,* automation.

**தானியம்-** *கூலம்,* grains, cereals.

**தானை-** *சேனை,* army. *தானைத் தலைவன்,* general, army chief.

# தி

**திக்கற்ற-** *ஆதரிப்பாரின்றி,* being destitute. *திக்கற்றவர் இல்லம்,* Home for destitutes. *ஒ. அனாதை*

**திக்கு-** *1. தடுமாறிப் பேசு,* stammer. He stammered to speak. *திக்குவாயர்,* stammerer. *2. திசை,* direction. *திக்குத் தெரியாத காடு,* the forest hard to find the direction.

**திக்குமுக்காடு-** *திணறு,* struggle. I struggled hard to go through the crowd.

**திக்பிரமை-** *தன்னுணர்வு இல்லாமை,* stupor. He was in a stupor.

**திகட்டு-** *அளவுக்குமேல் உண்ண இயலாத நிலை.* I was cloyed with rich food.

**திகழ்-** *1. பொலிவுடன் இரு,* shine. The stars shine in the sky. *2. புகழுடன் இரு,* be an illustrious man.

**திகில்-** *பயம்,* fright. He trembled with fright.

**திகை-** *மலைத்தல்,* perplex. I was perplexed as to what to do. *திகைப்பு,* perplexion.

**திங்கள்-** *1. சந்திரன்,* moon. *2. மாதம்,* month. *3. திங்கள் கிழமை,* Monday.

**திசு-** *உயிரணுக்களின் தொகுதி,* tissue. The muscle is a soft tissue.

**திசை-** திக்கு, direction. The main directions are four in number. திசைச் சொல், loan word.

**திசைதிருப்பு-** கவனத்தைத் திருப்பு, divert one's attention.

**திசைமானி-** திசையறி கருவி, compass.

**திட்டக்குழு-** திட்ட ஆணையம், planning commission. திட்டம், plan. திட்டவட்டம், firmly.

**திட்டப்படுத்து-** உறுதிசெய், confirm. Confirm the news.

**திட்டிவாசல்-** சிறுவாயில், wicket gate.

**திட்டு-** 1. குறைகூறு, scold. He scolded me severely. 2. கண்டி, reproach. He reproached his servant.

**திட்டு-** 1. உயர்ந்த பகுதி, island, elevation. 2. சொட்டை, patch.

**திட்பம்-** உறுதி, firmness.

**திடஉணவு-** கெட்டி உணவு, solid food. திடப்பொருள், solid. திடம், firmness.

**திடல்-** மைதானம், ground, play ground.

**திடீர்-** 1. சட்டென, sudden. திடீர் மாற்றம், sudden change. 2. உடன், instant. திடீர் இட்லி, instant idly.

**திடுக்கிடு-** அதிர்ச்சியடை, be shocked. I was shocked to hear the bad news.

**திண்டாட்டம்-** தவிப்பு, trouble, worry. I understand your trouble.

**திண்டாடு-** தவி, struggle. I am struggling hard for my livelihood.

**திண்டு-** 1. வட்டத் தலையணை, cylindrical cushion.

**திண்ணம்-** உறுதி, certain. It is certain that taxes will be raised. திண்ணிய, strong.

**திண்ணை-** உயர்த்தப்பட்ட மேடை, pial. திண்ணைப் பள்ளி, pial school. திண்ணைக் குறடு, step or projection adjacent to pial.

**திண்மம்-** கெட்டிப்பொருள், solid. திண்மை, firmness, solidity.

**திணறு-** 1. திண்டாடு, struggle. 2. மூச்சுத் திணறு, hard to breathe.

**திணி-** 1. அடை, stuff. Don't stuff things in the bag.
2. சுமத்து, thrust. The position was thrust upon him.
3. கட்டாயமாகத் தெரிந்து கொள்ளச் செய், impose. Impose a foreign language. திணிப்பு, imposition.

**திணை-** வகுப்பு, class. உயர்திணை, rational class. அஃறிணை, irrational class. திணைக் களம், department.

**தித்தி-** இனித்தல், be sweet. The tea is very sweet. தித்திப்பு, sweet.

**திதி-** lunar day.

**திப்பி-** மிதக்கும் துகள்கள், floating bits or particles.

**திப்பிலி-** ஒரு மருந்துப் பொருள், long pepper.

**திமிசுக்கட்டை-** திமிசு போடும் கட்டை, raming block of wood.

**திமிர்-** செருக்கு, arrogance. What an arrognace!

**திமில்-** கொண்டை, hump.

**திமிலோகப்படு-** பரபரப்படை, be in a commotion, get provoked.

**திமிறு-** விடுபட முயலு, struggle to be free from one's grip.

**தியாகம்-** தன்னல நீக்கம், sacrifice. Our freedom fighters did great sacrifice to the country. தியாகி, freedom fighter, patriot.

**தியானம்-** மனத்தை ஒருமுகப் படுத்திப் பிரார்த்தனை செய்தல், meditation. தியானி, meditate.

**திரட்சி**- *திரள்*, mass; a mass of flesh.

**திரட்டு**- *1. சேகரி*, collect, gather. Collect his writings. *2. கூட்டு*, mobilize. All parties are mobilizing their supporters to vote at the election. *3. திரட்டு*, collection, anthology. *4. திரட்டுப் பால்*, a kind of condensed sweet milk.

**திரண்ட**- *1. அதிகமுள்ள*, vast; vast fortune. *2. திரண்ட கருத்து*, gist.

**திரவம்**- *நீர்மம்*, liquid. Water is a liquid. *திரவ உணவு*, liquid food.

**திரவியம்**- *செல்வம்*, wealth. *திரை கடல் ஓடியும் திரவியம் தேடு*. Go to foreign lands to earn.

**திரள்**- *1. கூடு*, gather. People gathered in large number. *2. பூப்படை*, come of age. *3. திரட்சி*, bundle. *குழாய்த் திரள்*, vascular bundle.

**திராட்சை**- *1. திராட்சைப் பழம்*, grapes. *2. உலர்ந்த கொடிமுந்திரி*, raisin.

**திராவிடம்**- *1. திராவிடமொழி*, Dravidian languages: Tamil, Mala yalam, Tulu, Telugu and Kanarese. *2. திராவிடர் வாழும் பகுதி*, Dravidian land. *திராவிடர்*, Dravidians. *திராவிடப் பல்கலைக் கழகம்*, Dravidian University.

**திரி**- *1. அலை*, wander. The lion wanders in the forest. *2. கெடுதல்*, get spoiled. *3. முறுக்கு*, twist, twist rope. *4. வேறு படுத்து*, distort. The newspapers distorted the news. *4. திரித்த நூல்*, wick. wick of the lamp. *5. வத்தி*, fuse.

**திரிகாலம்**- *மூன்றுகாலம்*, triennial period: present, past and future.

**திரிகை**- *மாவரைக்கும் எந்திரம்*, grinding stone.

**திரிசங்கு நிலை**- *இரண்டும் கெட்டான் நிலை*, dilemma. I am in a great dilemma.

**திரிசூலம்**- *மூன்று முனைகள் கொண்ட ஈட்டி*, trident, the weapon of goddess Kali.

**திரித்துவம்**- *முந்நிலை*, Father, Son and Holy spirit as one God in Christianity.

**திரிபு**- *மாறுதல்*, deviation, variation, deviation in the text.

**திரு**- *1. திருமகள்*, goddess of wealth. *2. செல்வம்*, wealth. *3. அடை*, holy. *திருவடி*, holy feet.

**திருக்கண்ணமுது**- *பாயசம்*, a kind of sweet liquid.

**திருக்கல்யாணம்**- *தெய்வத் திருமணம்*, Divine marriage.

**திருக்காப்பு**- *கோயில் கதவு*, temple door.

**திருக்கை**- *ஒருவகைக் கடல் மீன்*, sting ray. *திருக்கைவால்*, tail of sting ray.

**திருகாணி**- *1. திருகு உள்ள ஆணி*, screw. *2. திருகி உட்செலுத்தும் கம்பி*, pin-like part in a stud. *3. திருகுமானி*, screw gauge.

**திருகு**- *1. திருகுதல்*, screw, turn, screw the bracket to the wall. *2. மரை*, thread. *3. திருகு தாளம்*, chicanery.

**திருச்சபை**- *மத அமைப்பாகச் செயல்படும் கிறித்துவச் சமூகம்*, the Church.

**திருட்டு**- *களவு*, theft. *சிறு திருட்டு*, petty theft. *திருடன்*, thief. *திருடி*, woman thief.

**திருடு**- *1. களவாடு,* steal. It is wrong to steal other's property. *2. களவு,* theft.

**திருத்தம்**- *1. தவறு நீக்குதல்,* correction. The page needs a lot of corrections. *2. மாற்றம்,* amendment. constitutional amendment.

**திருத்தமாக**- *தவறு இல்லாமல்,* correctly. Speak correctly.

**திருத்தியமை**- *மாற்றியமை,* modify. renovate; modified form.

**திருத்து**- *1. பிழை நீக்கு,* correct. Correct the mistake. Correct him.
*2. விடைத்தாள் திருத்து,* Value the script.

**திருநாள்**- *திருவிழா,* festival, important day. Independence Day.

**திருநீறு**- *விபூதி,* holy ashes.

**திருப்தி**- *மனநிறைவு,* satisfaction. full satisfaction.

**திருப்பணி**- *1. கோயில் புதுப்பிக்கும் பணி,* renovation work.
*2. நற்பணி,* social service, public service.

**திருப்பள்ளி எழுச்சி**- *இறைவனைத் துயில் எழுப்புவதாகப் பாடப்படும் காலைப் பாடல்,* Morning song sung as though to wake up God.

**திருப்பு**- *1. திசைமாற்று,* turn. Turn the boat. *2. அடகிலிருந்து நகையை மீள்,* redeem the jewel.

**திருப்பு முனை**- *குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி,* turning point. It is a turning point in my life.

**திருப்புளி**- *திருகைத் திருகப் பயன் படும் கருவி,* screw-driver. The screw-driver is a simple machine.

**திரும்பப் பெறு**- *மீண்டும் பெறு,* withdraw. I withdraw my resignation.

**திரும்பு**- *1. திசைமாறு,* turn. He turned to the right. *2. வீடு திரும்பினேன்,* I returned home.

**திருமஞ்சனம்**- *வழிபாட்டு விக்ரகத் தைப் புனித நீராட்டல்,* holy bathing of the deity.

**திருமண்**- *நாமக்கட்டி,* chalk-like white earth used by Vaishnavaites for drawing their holy mark on their fore-heads.

**திருமணம்**- *கல்யாணம்,* marriage.

**திருமதி**- *திருமணம் ஆன பெண்,* Mrs.

**திருமால்**- *விஷ்ணு,* Lord Thirumal.

**திருமுறை**- *நாயன்மார்கள் பாடிய பாடல் தொகுப்பு,* Saiva canonical literature, classified works of Devaram.

**திருமேனி**- *புனித உடல்,* sacred image of deity, sacred body of a saint.

**திருவாட்சி**- *அரைவட்ட அணியழகு உலோக வளைவு,* ornamental arch. behind the pedestal of an idol.

**திருவாதிரை**- *27 விண்மீன்களில் ஆறாவது,* Sixth of 27 stars.

**திருவாளர், திரு**- *ஓர் ஆணின் பெயருக்கு முன் சேர்க்கப்படும் மரியாதை அடைமொழி,* Mr.

**திருவாழத்தான்**- *ஒரு வேலையைச் குழப்புபவன்,* bungler.

**திருவாளர்கள்**- *திருவாளரின் பன்மை,* Messrs, M/s.

**திருவிழா**- *உற்சவம்,* festival.

**திருவிளையாடல்**- *1. திருக்கூத்து, கடவுளின் விளையாட்டுச் செயல்,* miracle, wonder. *2. தகாத செயல்,* unworthy deed.

**திருவுருவம்**- *இறைவன் உருவம்,* idol.

**திருவுளச்சீட்டு**- *ஒன்றை முடிவு செய்யப்போடும் சீட்டு,* lots.

**திருவோடு-** *பிச்சைப்பாத்திரம்,* begging bowl.

**திருவோணம்-** *27 விண்மீன்களில் 22 ஆவது,* The twenty second of 27 stars.

**திருஷ்டி-** *கண்ணேறு,* evil eye.

**திருஷ்டிகழி-** dispel the bad effects of the evil eye.

**திரை-** *1. திரைச் சீலை,* screen curtain. *2. சுருக்கம்,* wrinkle, screen. *3. அலை. 4. திரையிடு,* screen.

**திரைப்படம்-** *காட்சிகள் பதிவு செய்யப்பட்ட படம்,* film, movie.

**திரைமறைவு-** *மறைமுகமாக நடைபெறுவது,* behind the screen, something taking place behind the screen.

**தில்லானா-** *தில்லா (அ) தில்லானா என்று முடியும் துரித கதியில் ஆன ஒருவகை இசைப்பாட்டு. இது அரங்கிசையின் இறுதியில் பாடப்படும்.* a kind of musical composition ending with the expression 'tilla' or 'tillana'

**தில்லு முல்லு-** *புரட்டு,* unfair means. Unfair means in the election.

**திலகம்-** *1. பொட்டு,* mark on the fore head. *2. சிறந்தவர்,* gem.

**திவ்வியம்-** *1. புனிதத் தன்மை,* divinity. *2. சிறப்பு,* excellence.

**திவலை-** *நீர்த்துளி,* drop of water.

**திவால்-** *நொடித்தல்,* bankruptcy. *திவாலானவர்,* bankrupt.

**திவான்-** *மன்னரின் முதல் மந்திரி,* Divan, chief minister of a princely state in India before Independence. (e.g) Divan of Mysore.

**திளை-** *1. இன்பம் நுகர்,* enjoy, I enjoyed much your hospitality. *2. உழல்,* wallow, indulge. Some politicians wallow in corruption.

**திற-** *கதவைத் திற,* open the door.

**திறந்த-** *திறந்துள்ள,* open. *திறந்த வெளி அரங்கு,* open air theatre. *திறந்த மனம்,* open mind. *திறந்த வெளிச் சிறைச்சாலை,* open air jail. *திறந்தவெளிப் பல்கலைக்கழகம்,* Open University.

**திறந்து வை-** *திறந்து வைத்தல்,* inaugurate. The collector inaugurated the exhibitiion.

**திறப்பு-** *துளை,* opening in the door. *திறப்பு விழா,* inaugural function, Opening ceremony.

**திறம்-** *திறன்,* skill, skill in drawing.

**திறம்பட-** *சிறப்பாக,* ably. He did it ably.

**திறமை-** *திறம்,* skill. *தனித்திறமை,* individual skill. *குழுத் திறமை,* group skill.

**திறவுகோல்-** *சாவி,* key.

**திறனாய்வு-** *ஒன்றின் குறை நிறையை ஆய்வு செய்தல்,* criticism. *திறனாய்வாளர்,* critic.

**திறை-** *கப்பம்,* tribute.

**தின்பண்டம்-** *உண்ணும் பொருள்,* snacks.

**தினசரி-** *நாளிதழ்,* daily.

**தினப்படி-** *தினசரி செலவுக்குத் தரப்படும் பணம்,* daily allowance.

**தினம்-** *நாள்,* day.. *தினமும்,* daily.

**தினவு-** *அரிப்பு,* itch.

**தினுசு-** *வகை,* kind, sort, variety.

**தினை-** *ஒரு தானியம்,* millet.

## தீ

**தீ-** *நெருப்பு,* fire. *தீ விபத்து,* fire accident. *தீக்காயம்,* burn. *தீக்குச்சி,* match. *தீக்குழி,* fire pit. *தீச்சட்டி,* fire pot.

**தீக்குளி-** தானே எரித்துக் கொள்ளுதல், immolate, தீக்குளித்தல், immolation.

**தீங்கு-** தீமை, harm.

**தீட்டு-** 1. கூர்மையாக்கு, sharpen. 2. தூய்மையின்மை, defilement. 3. வீட்டு விலக்கு, menses.

**தீண்டாமை-** தீண்டத்தகாத நிலை, untouchability.

**தீப்பெட்டி-** தீக்குச்சிப் பெட்டி, match box.

**தீபகற்பம்-** தீவு, island.

**தீபம்-** விளக்கு, light.

**தீமிதி-** தீயை மிதித்து நடந்து செல்லுதல், fire - walking.

**தீமூட்டு-** சிதைக்குத் தீ வை, light the funeral pyre.

**தீமை-** தீங்கு, harm.

**தீய-** கெட்ட, bad, harmful. தீய நட்பு, bad association.

**தீயணைப்புப் படை-** தீயை அணைக்கும் பயிற்சி பெற்ற அணி, fire brigade.

**தீர்-** 1. கடனைத் தீர், clear the loan. 2. தீர்ந்து விட்டது, use up.

**தீர்க்க தரிசனம்-** எதிர்காலம் உரைத்தல், prophecy. தீர்க்கதரிசி, prophet.

**தீர்க்க ரேகை-** நீள்கோடு, longitude.

**தீர்த்தம்-** புனித நீர், holy water.

**தீர்ப்பளி-** வழக்கினை விசாரித்து நியாயம் கூறு, pronounce judgement. தீர்ப்பு, judgement, decision

**தீர்ப்பாணை-** நீதிமன்ற ஆணை, decree.

**தீர்மானம்-** முடிவு, resolution. தீர்மானி, decide, resolve.

**தீர்வு-** சிக்கலுக்குரிய முடிவு, solution.

**தீர்வை-** வரி, duty, tax.

**தீர-** முற்றிலும், தீர ஆராய்ந்து முடிவு செய், Examine the matter thoroughly and decide.

**தீரம்-** துணிவு, bravery, adventure. தீரன், warrior.

**தீவட்டி-** தீப்பந்தம், torch. தீவட்டித் தடியன், good-for-nothing fellow.

**தீவனம்-** தீனி, fodder.

**தீவிரச்சிகிச்சைப் பிரிவு-** அவசரச் சிகிச்சைப் பிரிவு, Intensive Care Unit, ICU.

**தீவிரம்-** 1. முனைப்பு, seriousness. 2. கடுமை, gravity. தீவிரவாதம், terrorism. தீவிரவாதி, terrorist.

**தீவினை-** பாவம், sin.

**தீவு-** நாற்புறமும் நீரால் சூழப்பட்ட நிலம், island.

**தீவைப்பு-** தீயிட்டுக் கொளுத்துதல், arson.

**தீனி-** உணவு, fodder, food.

## து

**துக்கம்-** துயரம், sorrow, grief. துக்கம் கொண்டாடு, mourn. துக்கம் விசாரி, condole.

**துகள்-** இம்மி, particle. துகள் இயற்பியல், particle physics.

**துகில்-** துணி, textile, saree.

**துகில் உரி-** உடையினை நீக்கு, strip.

**துடிப்பு-** 1. தவிப்பு, anxiety. 2. நாடித் துடிப்பு, pulse.

**துடுக்கு-** குறும்பு, michief.

**துடுப்பு-** 1. மரக்கோல், oar, paddle. 2. அகப்பை, ladle.

**துடை-** 1. நீக்கு, wipe. 2. அழி, rub off. துடைப்பக் கட்டை, broomstick.

**துண்டம்-** துண்டு, piece.

**துண்டாடு-** பிளவுபடுத்து, divide.

**துண்டி-** *1. துண்டித்தல்,* cut off. *2. முறி,* break, sever. *துண்டு,* piece, towel.

**துண்டுப் பிரசுரம்-** *விளம்பரத்துண்டு,* pamphlet.

**துண்டு விழு-** *பற்றாக்குறை ஏற்படுதல்,* incur a deflicit. deflicit budget.

**துணி-** *1. துணிவு கொள்,* be brave. *2. ஆடை,* cloth. *உடை,* clothes.

**துணிகரம்-** *துணிச்சல்,* daring act.

**துணிவு-** *முடிவு,* conviction. It is my conviction.

**துணிவு-** *துணிச்சல்,* courage.

**துணுக்கு-** *1. சிறு பகுதி,* small piece. *2. துணுக்குச் செய்தி,* titbit.

**துணை-** *உதவி,* help. *துணைப் பேராசிரியர்,* assistant professor. *துணைக் கேள்வி,* supplementary question.

**துணைக் கண்டம்-** *ஒரு கண்டத்தின் பகுதி,* sub-continent. India is a subcontinent.

**துணைக்கோள்-** *ஒரு பெரிய கிரகத்தைச் சுற்றிவரும் சிறு கிரகம்,* satellite. The moon is the satellite of the earth.

**துணைநில்-** *உதவு,* support.

**துணைநிலை ஆளுநர்-** *பாண்டிச்சேரி முதலிய மாநில ஆளுநர்,* lieutenant governor.

**துணை நூற்பட்டியல்-** *கருவி நூல் பட்டியல்,* bibliography.

**துணைவன்-** *1. நண்பன்,* friend. *2. வாழ்க்கைத் துணைவன்,* husband. *3. வழிகாட்டி,* guide.

**துணைவி-** *மனைவி,* wife.

**துணைவேந்தர்-** *பல்கலைக்கழகத் தலைவர்,* vice-chancellor.

**துத்தநாகம்-** *ஓர் உலோகம்,* zinc.

**துதி-** *தொழு,* worship. Worship God. *துதிப்பாடல்,* prayer song.

**துதிக்கை-** *யானையின் நீண்ட மூக்கு,* trunk.

**துதிபாடு-** *புகழ்,* flatter.

**துப்பறி-** *உளவறி,* detect. *துப்பறி புதினம்,* detective novel.

**துப்பாக்கி-** *சுடுங்கருவி,* gun, rifle. *துப்பாக்கிச் சூடு,* firing.

**துப்பு-** *1. உமிழ்,* spit. *2. திறன்,* ability. *3. தகவல்,* clue. *4. துப்புத் துலக்கு,* find more clues.

**துப்புரவு-** *தூய்மை,* cleanliness.

**தும்பி-** *தட்டான் பூச்சி,* butterfly.

**தும்பு-** *குட்டைக் கயிறு,* tether.

**தும்பை-** *ஒரு வகைச்செடி,* white dead nettle.

**தும்மல்-** *தும்முதல்,* sneezing. *தும்பு,* sneeze.

**துய்-** *நுகர்,* enjoy. Enjoy life.

**துயர்-** *துன்பம்,* suffering.

**துயில்-** *தூக்கம்,* sleep. *துயில் நடை,* sleep - walking. *துயிலெழு,* wake up.

**துர்நாற்றம்-** *கெட்ட வாடை,* foul smell.

**துர்பாக்கியம்-** *கெட்ட அதிர்ஷ்டம்,* misfortune.

**துர்மரணம்-** *கெட்ட சாவு,* unnatural death.

**துரத்து-** *துரத்திப்பிடி,* chase. chase the thief.

**துரதிஷ்டம்-** *நற்பேறு இல்லாமை,* bad luck.

**துரப்பணக் கிணறு-** *ஆழ்குழாய்க் கிணறு,* deep borewell.

**துரப்பணம்-** *துளைக்கும் கருவி,* drill, drilling machine.

**துரவு-** *பெரிய கிணறு,* deep well.

**துரிதம்-** *விரைவு,* quickness. *துரித வண்டி,* express train.

**துரு-** *துருப்பிடித்தல்,* rust.

**துருத்தி-** *காற்றூதும் கருவி,* bellows.

**துருதுருப்பு-** *சுறுசுறுப்பு,* ever active.

**துருப்பு-** *படை,* army, force. *துருப்புச் சீட்டு,* trump card.

**துரும்பு-** *சிறுகுச்சி,* thin piece.

**துருவ நட்சத்திரம்-** *வானில் வடக்குத் திசையில் மிகுந்த ஒளிவிடும் விண்மீன்,* polestar.

**துருவம்-** *முனை,* pole. *வடதுருவம்,* north pole. *தென் துருவம்,* south pole. *துருவ ஒளிகள்,* polar lights.

**துருவல்-** *இரும்புத் துருவல்,* iron filings.

**துருவு-** *1. திருவு,* grate. *2. தேடு,* search.

**துரோகம்-** *நம்பினவருக்கு எதிராகச் செயல்படுதல்,* betrayal, treachery. *துரோகி,* betrayer, traitor.

**துல்லியம்-** *நுட்பம்,* accuracy. Accuracy is a determining factor in science.

**துலக்கு-** *1. பல் துலக்கு,* Clean your teeth. *2. தெளிவுப்படுத்து,* make clear.

**துலாம்-** *சோதிடத்தில் ஒரு இராசி,* Libra.

**துவக்கப்பள்ளி-** *தொடக்கப்பள்ளி,* elementary school. *துவக்கப்பள்ளி ஆசிரியர்,* elementary school teacher.

**துவக்கம்-** *தொடக்கம்,* beginning. *துவக்கு,* begin, start.

**துவட்டு-** *1. துண்டால் துடை.* Dry your body with a towel. *2. வதக்கு,* braise.

**துவர்ப்பு-** *உவர்ப்பு,* a stringent taste.

**துவரம் பருப்பு-** *உடைத்துத் தோல் நீக்கிய மஞ்சள் நிறப்பருப்பு,* dhal, broken bengal gram.

**துவள்-** *1. வாடுதல்,* wilt. *2. சோர்தல்,* become weak. *3. வருந்து,* get depressed.

**துவாரம்-** *துளை,* hole, pore, opening.

**துவேஷம்-** *பகை,* enmity, hatred. communal hatred.

**துவை-** *துணியின் அழுக்கினை நீக்குதல்,* wash the clothes.

**துழாவு-** *1. துருவிப்பார்,* grope. *2. தேடு,* search.

**துள்ளு-** *குதி,* jump.

**துளசி-** *துளசிச் செடி,* basil.

**துளி-** *சொட்டு,* drop. *கண்ணீர்த் துளி,* tear drop.

**துளிர்-** *1. தளிர்த்தல்,* put forth tender leaves. *2. இளம் இலை,* tender leaf.

**துளை-** *துவாரம்,* hole.

**துற-** *கைவிடு,* give up. He gave up his job.

**துறட்டி-** *அலக்கு,* pole fixed with a hook.

**துறவறம்-** *துறவற வாழ்க்கை,* asceticism. *துறவி,* ascetic, hermit. *துறவு,* renunciation.

**துறை-** *பிரிவு,* department, field. *துறைத் தலைவர்,* head of the department.

**துன்பம்-** *துயரம்,* suffering.

**துன்பியல்-** *துன்ப முடிவுள்ள நாடகம்,* tragedy.

**துன்புறு-** *வருந்து,* suffer. I suffered a lot.

# தூ

**தூக்கக் கலக்கம்**- *தூக்கம் நீங்காத நிலை.* half-sleep, drowsiness.

**தூக்கணாங் குருவி**- *கூடுகட்டும் ஒரு சிறு பறவை,* weaver bird.

**தூக்கம்**- *உறக்கம்,* sleep; deep sleep.

**தூக்கம்**- *அதிகம்,* excess.

**தூக்கியெறி**- *அகற்று,* throw off, over throw. People overthrew the cruel ruler.

**தூக்கில்போடு**- *கழுத்தில் கயிறு கட்டி இழுத்து சாகடி,* hang, He was hanged till death. *தூக்குக் கயிறு,* hanging rope.

**தூக்கு**- *உயர்த்து,* lift. Lift your hands. *தூக்கு, ஒரு பாத்திரம்,* a vessel with an arch - shaped handle. *தூக்குக் குண்டு,* plumb line. *தூக்குத் தண்டனை,* sentence of death by hanging. *தூக்குப் பாலம்,* draw bridge. *தூக்கு மரம்,* gallows. *தூக்குமேடை,* platform with gallows.

**தூங்கி வழி**- *1. தூக்கக் கலக்கத்தில் இரு,* be sleepy.
*2. மந்தமாக இரு,* be dull.

**தூங்கு**- *உறங்கு,* sleep. *தூங்குமூஞ்சி,* a lethargic fellow.

**தூசி**- *1. அழுக்கு,* dust. *2. அற்பம்,* trifle.

**தூண்**- *கம்பம்,* pillar, pillar of strength.

**தூண்டில்**- *மீன்பிடி கருவி,* fishing rod. *தூண்டில்முள்,* fishing hook.

**தூண்டி விடு**- *கிளப்பி விடு,* induce. instigate.

**தூண்டு**- *1. திரியைத் தூண்டு,* raise the wick. *2. உணர்ச்சியைத் தூண்டு,* stimulate.

**தூண்டுகோல்**- *உந்துதல்,* impetus, incentive.

**தூதர்**- *பிற நாட்டில் இருக்கும் ஒரு நாட்டின் பிரதிநிதி,* ambassador, emissary. *தூதரகம்,* embassy. *தூதன்,* messenger. *தூது,* message. *தூதுக்குழு,* delegation.

**தூதுவளை**- *ஒரு மருந்துச் செடி,* climbing brinjal.

**தூபம்**- *நறுமணப் புகை,* smoke of incense. *தூபம் போடு, தூண்டு,* incense, incite.

**தூம்பு**- *வடிகுழாய்,* drain pipe.

**தூமகேது**- *ஒரு வால்நட்சத்திரம்,* a comet.

**தூய்மை**- *தூய தன்மை,* cleanliness. Cleanliness is next to Godliness. *தூய ஆட்சி,* clean administration. *தூய்மைக் கேடு,* pollution.

**தூய**- *தூயதான,* pure. *தூயதமிழ்,* pure Tamil. *தூய பேதுரு,* St. Peter.

**தூர்**- *மூடு,* fill up with sand and other things.

**தூர**- *தள்ளி,* be away.

**தூரம்**- distance, menses.

**தூரப்பார்வை**- *1. கண்ணில் உள்ள ஒரு குறை. எட்டப் பார்வை.* Long sight. *2. தொலைநோக்கு,* foresight.

**தூரிகை**- *மயிர்த்தொகுப்புள்ள குச்சி,* brush.

**தூவானம்**- *மழைத் துளிச்சிதறல்,* drizzling.

**தூவு**- *தெளி,* sprinkle, spray.

**தூள்**- *துகள்,* powder; coffee powder.

**தூள் கிளப்பு**- *நன்றாகச் செய்,* do extremely well.

**தூளி**- *ஏணை,* cradle.

**தூற்று**- *1. தூற்றுதல்,* winnow.
*2. வசைமாரி பொழி,* slander.

**தூறல்-** *சிறுதுளி மழை,* light shower.
**தூறு-** *தூறுதல்,* drizzle. It drizzles.

# தெ

**தெப்பக்குளம்-** *தெப்ப விழா நடத்தப் படும் கோயில் குளம்,* tank meant for float festival. *தெப்பம்,* raft, float. *தெப்பத் திருவிழா,* float festival.
**தெம்பு-** *வலு, ஆற்றல்,* strength, energy.
**தெம்மாங்கு-** *ஒரு வகை நாட்டுப்புற இசைப்பாடல்,* a folk song.
**தெய்வக் குற்றம்-** *தெய்வத்திற்கு இழைக்கும் தவறு,* sacrilege. *தெய்வச் செயல்,* providence, act of God. *தெய்வம்,* god, deity. *தெய்வீகம்,* divinity.
**தெரி-** *தெரிதல்,* be visible, seen. *தெரிந்துகொள்,* know. Know it well.
**தெரிந்தே-** *வேண்டுமென்றே,* purposely. He did it purposely.
**தெரியப்படுத்து-** *தெரியுமாறு செய்,* Let it be known.
**தெரிந்தோ தெரியாமலோ-** *அறியாமல்,* knowingly or unknowingly.
**தெரிவி-** *1. அறிவி,* inform. Please inform me about it. *திருப்தி தெரிவி,* Express satisfaction.
**தெரிவு செய்-** *தேர்ந்தெடு,* choose, select. Which do you choose?
**தெரு-** *வீதி,* street. *வடக்குப் பெருந் தெரு,* North Main Street. *தெருக் கூத்து,* street play.
**தெவிட்டு-** *திகட்டுதல்,* cloy.
**தெள்ளத் தெளிய-** *மிகத் தெளிவாக,* crystal clear.
**தெள்ளிய-** *தெளிந்த,* clear.
**தெளி-** *1. தெளிவாக இரு,* be clear. *2. தெளித்தல்,* spray/sprinkle. *தெளிப்பான்,* sprayer. *தெளிப்பு நீர்ப் பாசனம்,* sprinkler irrigation.
**தெளிவு-** *தெளிந்த தன்மை,* clarity. *தெளிவுப்படுத்து,* clarify. *தெளிவு படுத்தல்,* clarification.
**தெற்கிந்திய-** *தெற்குப்புற,* southern. *தெற்கு,* south.
**தெற்றுப்பல்-** *துருத்திக் கொண்டிருக்கும் பல்,* projecting tooth.
**தெற்றுவாய்-** *திக்குவாய்,* stammering.
**தெறி-** *தெளித்தல்,* spark of.
**தென்படு-** *தெரிதல்,* be seen.
**தென்றல்-** *தெற்கிலிருந்து வீசும் மென்காற்று,* gentle breeze.
**தென்னம்பிள்ளை-** *தென்னங்கன்று,* coconut sapling. *தென்னை,* coconut tree.

# தே

**தேக்கம்-** *நீர் ஓடாமல் இருத்தல், தடை,* stagnation.
**தேக்கரண்டி-** *சிறுகரண்டி,* teaspoon.
**தேக்கு-** *1. தேக்கு மரம்,* teak wood. *2. சேமி,* store up.
**தேகப்பயிற்சி-** *உடற்பயிற்சி,* physical exercise.
**தேகம்-** *உடம்பு,* body. *அழியும் உடல்,* mortal body.
**தேங்காய்-** *தென்னை மரக்காய்,* coconut and its kernel. *தேங்காய் எண்ணெய்,* coconut oil. *தேங்காய்த் துருவி,* coconut scraper. *தேங்காய்ப் பூ,* coconut scrapings.
**தேங்குழல்-** *ஒருவகை முறுக்கு,* a kind of savoury.
**தேசத்துரோகம்-** *நாட்டைக் காட்டிக் கொடுத்தல்,* treason. *தேசத்துரோகி,* traitor.

**தேசப்படம்-** ஒரு நாட்டின் வரை படம், atlas.

**தேசப்பற்று-** நாட்டுப்பற்று, patriotism. தேசபக்தன், patriot. தேசம், country. தேசாந்திரம், aimless wandering.

**தேசிய கீதம்-** நாட்டுப்பண், national anthem. தேசியம், nationalism. தேசிய மயமாக்கல், nationalization.

**தேட்டம்-** 1. தேடல், pursuit, pros pecting. 2. விருப்பம், desire.

**தேடல்-** தேடுதல், pursuit, search. தேடு, search.

**தேதி-** நாள், date. தேதியிட்ட, dated.

**தேநீர்-** தேயிலையினால் செய்யப் படும் சுவைநீர், tea. தேநீர் விருந்து, tea party.

**தேம்பு-** தேம்பி அழு, sob.

**தேமல்-** தோல் நோய், white patch on the skin.

**தேய்-** 1. உராய்வு உண்டாக்கு, rub. The belt rubs somewhere. 2. தேய்தல், wear out, The shoes are worn out. தேய்பிறை, waning moon. தேய் மானம், depreciation.

**தேயிலை-** தேநீர் போட உதவும் இலை, tea-leaf, tea dust.

**தேர்-** 1. தேர்ந்திருத்தல், be well versed in. He is well versed in maths. 2. தேர்ந்தெடு, select. தேர்ந் தெடுத்தல், selection. 3. ஓர் ஊர்தி, temple car, chariot. 4. தேர்ப் பாகன், charioteer.

**தேர்ந்தெடு-** தெரிவு செய், elect, choose. MLA's AND MP's are elected by people.

**தேர்வர்-** தேர்வு எழுதுபவர், candidate. தேர்வாணையம், public service commission. தேர்வு, test, examination. தேர்வு நிலை, selection grade.

**தேரடி-** கோயில் தேர் நிற்கும் இடம், shed for temple car.

**தேரை-** தவளை போன்ற ஒருவகை சிறு உயிரி, toad.

**தேரோட்டம்-** தேர்த் திருவிழா, temple car festival.

**தேவ ஆவி-** கிறித்துவ மதம் கூறும் பரிசுத்த ஆவி, Holy Spirit.

**தேவகன்னி-** தேவலோகப் பெண், celestial damsel.

**தேவகுமாரன்-** இயேசுபிரான், Jesus Christ, the Son of God.

**தேவதாசி-** கோயில் நாட்டியக்காரி, temple dancing girl.

**தேவதாரு-** ஒரு வகை மரம், red cedar.

**தேவதை-** வானுலகப் பெண், celestial beauty.

**தேவர்-** தேவ உலகில் வாழ்பவர், Devas, celestials.

**தேவன்-** கடவுள், God. ஒன்றே குலம் ஒருவனே தேவன், One caste and one God.

**தேவாங்கு-** குரங்குவகை விலங்கு, loris.

**தேவாமிர்தம்-** அமிழ்தம், ambrosia, manna.

**தேவாலயம்-** கிறித்தவ மாதாக் கோயில், church.

**தேவி-** 1. பெண் தெய்வம், goddess. 2. அரசி, queen.

**தேவை-** வேண்டப்படுவது, need. வீட்டுத் தேவைகள், home needs.

**தேள்-** விஷத்தைக் கொட்டும் ஒரு பூச்சி, scorpion.

**தேற்றம்-** 1. உறுதி, certainly. 2. மெய்ப்பிக்கப்படாத கூற்று, theorem.

**தேற்று-** *ஆறுதல் கூறு,* console, comfort. Please console him.

**தேறு-** *1. தேர்ச்சி பெறு,* pass. *2. உடல் நலம் தேறப்பெறு,* recover. *தேறுதல்,* consolation, solace.

**தேன்-** *மலரிலுள்ள இனிப்பு,* honey. *தேன்மெழுகு,* beeswax. *தேனடை,* honey comb.

**தேன்நிலவு-** *புதுமணம் புரிந்தவர் மேற்கொள்ளும் சுற்றுலா,* honey moon.

**தேனிரும்பு-** *இரும்பில் ஒருவகை,* wrought iron.

**தேனீ-** *தேன் பூச்சி,* bee.

**தேஜஸ்-** *பொலிவு,* lustre,radiance.

## தை

**தை-** *1. தைத்திங்கள்,* Tamil month, Thai (January-February). *2. தையல்,* stitch. *3. குத்திச் செல்லுதல்,* pierce.

**தையல்-** *1. தைத்தல்,* stitches, tailoring suture. *2. பெண்,* woman. *3. தையல் எந்திரம்,* sewing machine. *4. தையல்காரன்,* tailor. *5. தையல் காரி,* woman tailor.

**தைரியம்-** *துணிவு,* courage.

**தைலம்-** *1.* oil extract. *2. தலைவலித் தைலம்,* balm.

## தொ

**தொக்கி நில்-** *பொருள் மறைந்திரு,* understood, implicit. It is understood.

**தொக்கு-** *1. ஊறுகாய்,* pickles. *2. இளப்பம்,* cheap.

**தொகு-** *சேர்த்தல்,* collect the songs. compile. *தொகுப்பு,* collection, compilation.

**தொகுதி-** *1. தொகுப்பு,* system. *வேர்த்தொகுதி,* root system. *2. முதல் தொகுதி,* first volume. *3. வாக்காளர் தொகுதி,* electorate, constituency. *4. மேல் உள்ள எண்,* numerator. *2/3 என்பதில் 2 என்பது தொகுதி.*

**தொகுப்பூதியம்-** *ஆண்டு ஊதிய உயர்வு சேர்க்கப்படாமல் ஒரே அளவாக வழங்கப்படும் சம்பளம்.* consolidated pay.

**தொகை-** *1. குறிப்பிட்ட அளவுப் பணம்,* sum, amount. *2. மொத்த எண்ணிக்கை,* total number. *3. தொகை நூல்,* compilation.

**தொங்கட்டான்-** *தொங்கும் காதணி,* ornament suspended from the earstud, pendant.

**தொங்கல்-** *மார்புத் தொங்கல்,* badge.

**தொங்கு-** *தொங்கவிடு,* suspend. *தொங்கு பாலம்,* suspension bridge.

**தொட்டதற் கெல்லாம்-** *எடுத்ததெற் கெல்லாம்,* for each and everything.

**தொட்டாற்சிணுங்கி-** *தொட்டால் சுருங்கும் செடி,* touch-me-not.

**தொட்டி-** *கொள்கலன்,* tank, trough.

**தொட்டில்-** *குழந்தைக்கான அசையும் சிறு படுக்கை,* cradle.

**தொடக்கப் பள்ளி-** *துவக்கப்பள்ளி,* elementary school.

**தொடக்கம்-** *1. துவக்கம்,* beginning. *2. தொடக்க வேலை,* priliminary things, work.

**தொடங்கிவை-** *துவங்கு,* inaugurate.

**தொடங்கு-** *துவக்கு,* begin, start. Let us begin the meeting.

**தொடர்-** *1. தொடர்ந்து செய்,* continue; yes, continue. *2. வழக்குத் தொடர்,* file a suit. *3. வரிசை,* row, series, serial. *4. சொற்றொடர்,* phrase.

*5. தொடர் உண்ணாவிரதம்,* relay fast. *6. தொடர் ஓட்டம்,* relay race. *7. தொடர் கதை,* serial story, novel.

**தொடர்ச்சி-** *தொடர்தல்,* continuation. *தொடர்ந்து, தொடர்ச்சியாக,* continuously.

**தொடர்பாக-** *தொடர்பான,* in connection with this letter. *தொடர்பு,* contact, connection, affair (love).

**தொடர்புகொள்-** *தொடர்பு ஏற்படுத்து,* contact.

**தொடர்வட்டி-** *கூட்டுவட்டி,* compound interest. *தொடர் வைப்புக் கணக்கு,* recurring deposit. *தொடரியல்,* syntax.

**தொடி-** *மகளிர் அணிகலன்,* a kind of armlet.

**தொடு-** *தோலில் படுமாறு செய்,* touch. *தொடு உணர்ச்சி,* feeling of touch. *2.மாலை தொடு,* string flowers or buds. *3. போர் தொடு,* wage a war.

**தொடுகறி-** *துணை உணவு பண்டம்,* sidedish.

**தொடுவானம்-** *அடிவானம்,* horizon.

**தொடை-** *இடுப்புக்குக் கீழுள்ள பகுதி,* thigh. *தொடைஎலும்பு,* thigh bone. *தொடைதட்டு,* get ready for a fight.

**தொடை நடுங்கி-** *மிகவும் பயந்தவன்,* timid fellow.

**தொண்டர்-** *தொண்டு செய்பவர்,* volunteer, worker. *தொண்டு,* service. *தொண்டு கிழம்,* good old man. *தொண்டு நிறுவனம்,* service organization.

**தொண்டை-** *வாய்க்கு அடுத்துள்ள பகுதி,* throat. *தொண்டைப்புற்று நோய்,* throat cancer. *தொண்டைக் கட்டு,* sore throat. *தொண்டைக் குழி,* pharynx.

**தொண்ணூறு-** *90,* ninety.

**தொணதொணப்பு-** *விடாத பேச்சு,* nagging, boring talk.

**தொந்தரவு-** *தொல்லை,* worry, trouble.

**தொந்தி-** *தொப்பை,* pot belly.

**தொப்பி-** *தலைப்பாகை,* hat, cap.

**தொப்புள்-** *தொப்பூழ்,* navel. *தொப்புள் கொடி,* umblical cord.

**தொம்பங் கூத்தாடி-** *கழைக்கூத்தாடி,* acrobat.

**தொம்பன்-** *கூடை முடைபவன்,* basket maker.

**தொம்பை-** *குதிர் போன்ற பெருங் கூடை,* basket bin.

**தொய்-** *இறங்குதல்,* sag. The cloth-line sagged. *தொய்வு,* sagging.

**தொல்-** *தொன்மையான,* ancient, old. *தொல்பொருள்,* artifacts of archaeological value. *தொல் பொருளியல்,* archaeology.

**தொலை-** *1. காணாமல் போதல்,* lose. I lost my key. *2. நீக்கு,* eradicate. Eradicate corruption. *3. தொலைவு,* distance. *4. தொலை எழுதி,* telewriter. *5. தொலைபேசி,* telephone. *6. தொலை வரை செய்தி,* telegram. *7. தொலை வரைவு,* telegraph. *8. தொலைக்காட்சி,* television. *9. தொலை அறிவியல்,* remote sensing. *10. தொலைக் காட்சிப் பெட்டி,* television set. *11. தொலைத் தொடர்பு,* telecommunications. *12. தொலைத் தொடர் பகம்,* trunk exchange. *13. தொலை நோக்கி,* telescope. *14. தொலைப் பதிவு,* telex. *15. தொலை அச்சு,* teleprinter.

*16. தொலைபேசித் தொடர்பகம்,* telephone exchange.

**தொழில்-** *1. வணிகம்,* trade, occupation, profession, industry. *2. வேலை,* function. *3. தொழில் நுட்பம்,* technology. *4. தொழில் துறை,* industrial sector. *5. தொழில் நிறுவனம்,* indus trial concern. *6. தொழில் நுட்பக் கல்லூரி,* poly technic. *7. தொழில் மயமாக்கு,* industrialise. *8. தொழில்மயமாக்கல்,* industrialisation. *9. தொழில்கல்வி,* vocational or technical education. *10. தொழில் முறையில் செய்பவர்.* professional.

**தொழில் முனைவோர்-** *தொழில் தொடங்குபவர்,* entrepreneur.

**தொழில் வரி-** *தொழிலுக்குரிய வரி,* professional tax.

**தொழிலாளர்-** *தொழில் செய்பவர்,* worker. *தொழிலாளி,* labourer.

**தொழிற்கூடம்-** *தொழிற்சாலை,* factory, industrial plant.

**தொழிற்சங்கம்-** *தொழிலாளர் அமைப்பு,* trade union.

**தொழிற்சாலை-** *தொழிற்கூடம்,* factory.

**தொழிற்படு-** *இயங்கு,* function, work.

**தொழிற்பாடு-** *செயல்,* function.

**தொழிற்புரட்சி-** *இங்கிலாந்தில் புதிய எந்திரங்களால் ஏற்பட்ட தொழில், சமுதாய மாற்றம்,* Industrial Revolution.

**தொழிற்பெயர்-** *(இலக்) வினையிலிருந்து பெறப்படும் பெயர்ச் சொல்,* verbal noun, gerund.

**தொழிற்பேட்டை-** *தொழிற்சாலைகளுக்காக அமைக்கப்பட்ட பகுதி,* industrial estate.

**தொழு-** *வணங்கு,* pray, worship. *தொழுகை,* worship.

**தொழுநோய்-** *பெருநோய்,* leprosy.

**தொழுவம்-** *மாட்டுக் கொட்டில்,* cattle shed.

**தொழுவுரம்-** *கால்நடைக் கழிவுரம்,* farmyard manure.

**தொளதொள-** *தளர்ச்சியாக,* loose.

**தொற்று-** *1. தொற்றுவது,* infection. *2. பயம் தொற்றிற்று,* seized with fear. *3. தொற்றுநோய்,* infectious disease.

**தொன்மை-** *பழமை,* antiquity.

**தொன்றுதொட்டு-** *காலங்காலமாக,* from time immemorial.

**தொன்னை-** *காய்ந்த வாழைச் சருகினால் செய்யப்படும் சிறு கிண்ணம்,* leaf cup.

**தொனி-** *1. குறிப்புப்பொருள் தெரிவித்தல்,* suggest. *2. காட்டு,* express. He expressed his affection. *3. தொனி,* expression, tone.

## தோ

**தோகை-** *1. இறகுத் தொகுதி,* plumage. *2. கரும்புத் தலைப்பகுதி,* sugar cane sheath.

**தோசை-** *அரிசி, உளுந்த மாவினால் செய்யப்படும் ஒருவகைத் தென்னிந்தியச் சிற்றுண்டி,* rice cake. *தோசைக்கல்,* roasting stone.

**தோட்டக்கலை-** *தோட்டம் அமைக்கும் கலை,* gardening, horticulture. *தோட்டக்கால்,* garden land. *தோட்டந்துரவு,* landed property. *தோட்டப் பயிர்,* plantation. *தோட்டம்,* garden.

**தோட்டா-** *1. துப்பாக்கிக் குண்டு,* cartridge, bullet. *2. தகர்க்கும் வெடி மருந்து,* dynamite.

**தோட்டி-** துப்புரவுத் தொழிலாளி, scavenger.

**தோடா-** ஆண்கள் கையில் அணியும் அணிகலன், wrist bracelet worn by man as a mark of honour.

**தோடு-** 1. காதணி, ear stud. 2. ஓடு, shell, crust.

**தோண்டி-** earthen or metal pot.

**தோண்டு-** 1. குழிபறி, dig the soil. 2. நெம்பி எடு, scoop out.

**தோணி-** படகு, boat.

**தோத்திரம்-** 1. துதிப்பாடல், prayer. 2. வணக்கம், greeting.

**தோது-** வசதி, convenience. தோதுப் படு, be convenient.

**தோப்பு-** மரங்கள் நிறைந்த இடம், tope, grove. palm grove.

**தோய்-** 1. நனைதல், soak. 2. படிதல், be overlaid with worries. 3. உறைதல், curdle.

**தோரணம்-** தொங்கல், festoon.

**தோரணை-** பாவனை, posture, bearing.

**தோராயம்-** குத்து மதிப்பு, approximation.

**தோல்-** 1. உடலை அல்லது கனியை மூடும் படலம், skin. 2. தோல்வி யடை, fail. He failed in the examination. தோல்வி, failure. தோலான் துருத்தி, Tom, Dick and Harry.

**தோழன்-** நண்பன், friend, comrade. தோழமை, friendship. தோழமைக் கட்சி, alliance party.

**தோழி-** பணிப்பெண், lady's maid.

**தோள்-** shoulder. தோள்கொடு, give support. தோள்பட்டை, shoulder blade. தோள்பை, shoulder bag.

**தோற்கடி-** தோல்வியுறச்செய், defeat. None can defeat me.

**தோற்பாவை-** ஒருவகைப் பொம்மை, leather puppet.

**தோற்றம்-** 1. பொலிவு, appearance, look. 2. பிறப்பு, genesis, birth.

**தோற்றுவாய்-** 1. துவக்கம், beginning origin. 2. அறிமுகம், introduction.

**தோற்றுவி-** உண்டாக்கு, create. God created all things.

**தோறும்-** ஞாயிறுதோறும், every Sunday.

**தோன்றல்-** வழிவந்தவர், son, descendent.

**தோன்று-** தெரிதல், appear. The sun gently appears in the east. 2. மனத்தில் படுதல், occur. It occurs to me. 3. பிற, be born, He was born in a royal family.

**தோஷம்-** குற்றம், fault.

## ந

**நக்கல்-** 1. கிண்டல், sarcastic remark. 2. கேலி, fun.

**நக்கு-** நாக்கால் தடவு, lick. The bitch licked its pup.

**நக்சலைட்-** நக்சல்பாரி, தீவிரவாதி, naxalite.

**நகச்சுற்று-** விரல் நகத்தின் மேல் தோன்றும் கட்டி, whitlow.

**நகப்பூச்சு-** நகச்சாயம், nail polish. நகம், nail.

**நகர்-** 1. இடம் விட்டுச் செல், move slowly. Please move a little. 2. நகரம், city. நகர்ப்புறம், urban area. நகரியம், township.

**நகரசபை-** நகராட்சி, municipality. நகராட்சி மன்றம், municipal council. நகரத் தந்தை, city father, mayor.

**நகரா-** பெரிய பறை, large drum.

**நகல்**- மூலத்திலிருந்து எடுக்கப்படும் பிரதி, copy.

**நகாசு வேலை**- அணியழகு வேலை, work of embellishment.

**நகை**- 1. சிரி, laugh. நகைத்தல், laughter. 2. அணிகலன், jewel, ornament. 3. நகைச்சுவை, humour.

**நங்கூரம்**- கப்பல் நகராமல் இருக்க மணலினுள் போடப்படும் பெரிய, கனமான கொக்கி போன்ற கருவி, anchor. நங்கூரம் பாய்ச்சு, cast anchor.

**நங்கை**- இளம்பெண், young girl.

**நச்சரி**- தொல்லை கொடு, pester.

**நச்சிலக்கியம்**- கீழ் உணர்ச்சிகளைத் தூண்டும் மலிவு இலக்கியம், pulp literature.

**நச்சு**- 1. நஞ்சு, poison. 2. எரிச்சல் தருவது, vexing.

**நசி**- நலிவடை, become extinct. நசிவு, decline.

**நசுக்கு**- 1. நசுக்குதல், crush. 2. ஒடுக்கு, crush.

**நஞ்சுக் கொடி**- நச்சுக் கொடி, placenta.

**நஞ்சை**- நன்செய், wet land.

**நட்சத்திர இரவு**- நடிக நடிகையர் கலை நிகழ்ச்சி, Star night.

**நட்சத்திர ஓட்டல்**- சொகுசு உணவு விடுதி, star hotel. நட்சத்திரக் குறி, asterisk. நட்சத்திரம், star. நட்சத்திர மண்டலம், galaxy.

**நட்டம்**- இழப்பு, loss.

**நட்டாற்றில் விடு**- ஆதரவின்றி விடு, leave in the lurch.

**நட்டுவம்**- நாட்டியத்தை இயக்குதல், choreography. நட்டுவனார், choreographer.

**நட்டுவாக்காலி**- தேளைவிடப் பெரிய உயிரினம், black scorpion.

**நட்பு**- 1. உறவு, friendship. 2. நல்லிணக்கம், amity.

**நட**- 1. நடத்தல், walk. walk fast. 2. நடைபெறுதல், take place.

**நடத்து**- 1. நிகழ்த்து, conduct. Who conducts this show? 2. குடும்பம் நடத்து, run the family. நடத்துநர், conductor.

**நடத்தை**- நடந்து கொள்ளும் பாங்கு, behaviour, conduct. நன்னடத்தை, good conduct. நடத்தைச் சான்றிதழ், conduct certificate.

**நடப்பு**- நிகழ்வு, state of affairs, current affairs.

**நடம்**- நடனம், dance. It is a fine dance. நடமாட்டம், movement. மக்கள் நடமாட்டம், People's movement.

**நடமாடும்**- இயங்கும், mobile. நடமாடும் நூலகம், mobile library.

**நடவடிக்கை**- 1. நடந்து கொள்ளும் முறை, behaviour. Your behaviour is good. 2. கூட்ட நிகழ்ச்சிக் குறிப்பு, procee-dings. The proceedings of this meeting will be reported next time.

**நடவு**- 1. நடுதல், transplantation. The transplantation is an important process in cultivation. 2. நட்ட பயிர், transplanted crop. The grown paddy seedling becomes transplanted crop.

**நடி**- 1. செய்கையாலும், பேச்சாலும் ஒன்றைப் புலப்படுத்து, act. Shivaji Ganesan acted each and every part beautifully. 2. நாடகம் நடி, enact a play. 3. பாசாங்கு செய், pretend. நடிகன், actor, நடிகை, actress. நடிப்பு, acting, pretence.

**நடு**- 1. ஊன்று, plant a tree or sapling. 2. கம்பத்தை நடு, plant the flag post.

3. நடுப்பகுதி, middle, centre. நடு இரவு, midnight.

**நடுக்கம்-** நடுங்குதல், shivering due to cold. நடுங்கு, shiver, tremble. I trembled with fear on seeing the cobra.

**நடுகல்-** போரில் மரணமடைந்த வீரனுக்காகப் பழங்காலத்தில் நடப்பட்ட கல், hero stone. In olden days, a hero stone was erected as a mark of honour to a dead hero.

**நடுத்தர வகுப்பு-** பணக்காரர்களாகிய மேல் வகுப்பு மக்களுக்கும், உழைக்கும் மக்களாகிய கீழ் வகுப்பு மக்களுக்கும் இடையிலான சமூகப் பிரிவு, middle class. நடுத்தர வயது, middle age. நடுத்தரம், medium, average. நடுநிசி, midnight.

**நடுநிலை-** விருப்பு வெறுப்பற்ற நிலை, neutrality. நடுநிலைப்பள்ளி, middle school.

**நடுவண் அரசு-** மைய அரசு, central government, centre.

**நடுவர்-** நீதிபதி, judge, umpire, referee. நடுவர் மன்றம், tribunal.

**நடுவழி-** இடைப்பட்ட வழி, mid way. நடுவில், in the middle.

**நடுவிரல்-** ஆட்காட்டி விரலுக்கு அடுத்துள்ளது, middle finger.

**நடை-** 1. நடந்து செல்லல், walk, gait. 2. தடவை, time. 3. மொழி நடை, style. நடையியல், stylistics.

**நடைப் பயணம்-** கால் நடையாகச் செல்லும் பயணம், travel on foot. We travelled on foot to Palani to fulfil the vow made to God Muruga.

**நடைப் பிணம்-** ஊக்கமற்றவர், lifeless person, living corpse. I am a living corpse.

**நடைபயில்-** மெதுவாக நட, walk gracefully.

**நடைபாதை-** நடக்கும் வழி, pave ment. நடைபாதை வாழ் மக்கள், Pavement dwellers.

**நடைமுறை-** 1. செயல்படுத்தும் முறை, practice. 2. பாங்கு, method. நடைமுறைப் படுத்து, put into practice.

**நடையைக் கட்டு-** புறப்படு, go away.

**நடைவண்டி-** குழந்தை நடந்து பழகுவதற்குரிய வண்டி, perambulator.

**நண்டு-** நீர்வாழ் ஓட்டின உயிரி, crab. நண்டு, சிண்டுகள், kids.

**நண்பகல்-** மதியம், midday. midday meal.

**நண்பன்-** தோழன், friend, companion.

**நத்தை-** ஒரு மெல்லுடலி, snail.

**நதி-** ஆறு, நதிமூலம், source of river.

**நந்தவனம்-** பூந்தோட்டம், flower garden.

**நந்தாவிளக்கு-** எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும் விளக்கு, ever-burning lamp.

**நந்தி-** சிவன் காளை, sacred bull of Lord Siva.

**நந்தியாவட்டை-** ஒரு வகைப் பூச்செடி, east Indian roseboy.

**நப்பாசை-** நிகழாத எதிர்பார்ப்பு, fond hope.

**நபர்-** ஆள், person.

**நம்பகம்-** நம்பத்தகுந்தது, reliability.

**நம்பிக்கை-** நம்புவதின் பால்பட்டது. faith, confidence. நம்பிக்கை வாக்கு, vote of confi-dence. நம்பிக்கை நட்சத்திரம், risingstar. நம்பிக்கை யில்லாத் தீர்மானம், no confidence motion.

**நம்பு-** *1. நம்புதல்,* believe, believe me. *2. சார்ந்திரு,* depend. The crops depend on water.

**நமர்-** *மொரமொரப்பு நீங்குதல்,* lose crispness.

**நமட்டுச் சிரிப்பு-** *கிண்டல் சிரிப்பு,* sly smile, sarcastic smile.

**நமூனா-** *விண்ணப்பப் படிவம்,* form of application form.

**நமைச்சல்-** *அரிப்பு,* itch.

**நயம்-** *1. நலம்,* beauty. *கலைநயம்,* artistic beauty. *2. நேர்த்தி,* tactful ness. *3. மலிவு,* cheap.

**நயவஞ்சகம்-** *கெடுக்கும் எண்ணம்,* deceit.

**நயனம்-** *கண்,* eye. *நயனமொழி,* language of the eye.

**நர்த்தகி-** *தொழில்முறை நடனமாடு பவள்,* professional dancer.

**நர்த்தனம்-** *நடனம்,* dance.

**நரகம்-** *பாவிகள் உலகம்,* hell.

**நரபலி-** *மனித உயிர்ப்பலி,* human sacrifice.

**நரம்பு-** *1. நரம்புத் திசு,* nerve. *2. இலை நரம்பு,* vein. *3. நரம்பியல்,* neurology. *4. நரம்பூசி,* vein injection. *5. நரம்புத் தளர்ச்சி,* nervous weakness. *6. நரம்பு மண்டலம்,* nervous system.

**நரி-** *காட்டில் வாழும் நாயின விலங்கு,* fox. *குள்ள நரி,* jackal. *நரிக்குறத்தி,* female gypsy. *நரிக் குறவன்,* male gypsy.

**நரை-** *வெளுத்த மயிர்,* grey hair. *நரைதிரை,* grey hair and wrinkles.

**நல்கு-** *வழங்கு,* give, present.

**நல்கை-** *மான்னியம்,* grant.

**நல்ல-** *நன்மையுள்ள,* good. *நல்ல காலமாக,* luckily. *நல்லது,* good, well. *நல்லபடியாக,* prosperously.

**நல்லபாம்பு-** *நாகப்பாம்பு,* cobra.

**நல்ல விளக்கு-** *எண்ணெய் விளக்கு,* oil lamp.

**நல்லுறவு-** *இணக்க உறவு,* cordial relations.

**நல்லெண்ணம்-** *நல்ல எண்ணம்,* good will.

**நல்லெண்ணெய்-** *எள் எண்ணெய்,* seasame oil.

**நலம்-** *1. நலநிலை,* well-being. *2. நலம் பாராட்டல்,* appreciation.

**நலி-** *நலிவடை,* decline, fall. *நலிவு,* decline.

**நவ-** *புதிய,* modern. *நவ நாகரிகம்,* modern civilization. *நவயுகம்,* modern era.

**நவக்கிரகம்-** *ஒன்பது கோள்கள்,* nine planets.

**நவச்சாரம்-** *ஒரு வேதிப்பொருள்,* ammonium chloride.

**நவதானியம்-** *ஒன்பது தானியங்கள்,* nine kinds of grains.

**நவம்-** *ஒன்பது,* nine.

**நவீனம்-** *1. காலத்திற்கேற்ற தன்மை,* modernity. *நவீன வசதிகள்,* modern facilities. *2.புதினம்,* novel. *3. நவீன மயமாக்கு,* modernise, *நவீன மாக்கல்,* modernization.

**நழுவல்-** *தப்பித்தல்,* evasion.

**நழுவு-** *விலகு,* slide. *நழுவு திறப்பி,* slide valve.

**நள்ளிரவு-** *நடு இரவு,* midnight.

**நளபாகம்-** *அருமையான சமையல், (புராண கால நளன் சமையலில் சிறந்தவன்)* fine cooking, self-cooking.

**நளினம்-** *1. அழகு வெளிப்பாடு,* ele gance, grace. *2. நேர்த்தி,* delicacy.

**நற்சான்றிதழ்-** *நன்னடத்தைச் சான்று,* conduct certificate.

**நற்செய்தி**- சுவிசேஷம், gospel. நற்செய்தியாளர், evangelist.

**நறுக்கு**- 1. சிறு துண்டு, piece. 2. வெட்டு, cut. நறுக்குத் தெரித்தாற் போல், succinctly, pointedly.

**நறுமணம்**- இனிய மணம், fragrance.

**நன்கு**- நன்றாக, well.

**நன்கொடை**- அன்பளிப்பு, present, gift.

**நன்மை**- நல்ல தன்மை, benefit.

**நன்றி**- விசுவாசம், gratitude, thanks.

**நன்றிக் கடன்**- கைம்மாறு, debt of gratitude.

**நன்று**- நல்லது, good, fine.

**நன்னாரி**- ஒரு வகை நறுமண வேர், sarsaparilla.

**நனவு**- உண்மை நிலை, reality.

**நனவோடை**- மனத்தில் தோன்றும் எண்ணங்களையும் உணர்வு களையும் வழக்கமான முறையில் விளக்காமலும், உரையாடல் மூலம் சொல்லாமலும், நீரோடை போல் தொடர்ச்சியாக வெளிப் படுத்தும் ஓர் இலக்கிய உத்தி, stream of consciousness.

**நனை**- 1. ஈரமாக்கு, get wet. 2. ஊறு தல், soak. 3. நனையச் செய்தல், drench.

**நஷ்ட ஈடு**- ஓர் இழப்புக்கு ஈடாக வழங்கப்படும் பணம். compensation.

## நா

**நா**- 1. நாக்கு, tongue. 2. மணியின் நாக்கு, tongue of bell. 3. தீ நாக்கு, tongue of fire, bad tongue.

**நாகரிகம்**- 1. பண்பாடு, civilisation, culture. 2. பாங்கு, fashion.

**நாகலிங்கம்**- நாகலிங்க மரம் (அ) பூ, cannonball tree and its flower.

**நாசம்**- 1. அழிவு, destruction. 2. சீரழிவு, ruin. நாசவேலை, sabotage.

**நாசி**- மூக்கு, nose.

**நாட்காட்டி**- தினசரி நாள், கிழமை முதலானவற்றைக் காட்டும் தாள், குறிப்பேடு, calendar.

**நாட்குறிப்பு**- தினந்தோறும் நடை பெறும் நிகழ்ச்சிகளைக் குறித்து வைக்கும் ஏடு, diary.

**நாட்டம்**- 1. விருப்பம், inclination. 2. வேதி நாட்டம், chemical affinity.

**நாட்டாண்மைக்காரர்**- உள்ளூர் கிராமத் தலைவர், leader of the locality.

**நாட்டார் வழக்காற்றியல்**-கிராமிய இலக்கியங்களை ஆராயும்துறை, study of folk-lore.

**நாட்டிய நாடகம்**- நாட்டியமும், நாடகமும் சேர்ந்தது, dance drama.

**நாட்டியம்**- நடனம், dance.

**நாட்டு**- பொருத்து, நடு, plant, fix. நாட்டுப்பசு, indigenous breed of cow.

**நாட்டு ஓடு**- வளைவான ஓடு, pantiles.

**நாட்டுக்கட்டை**- நல்ல உடல் கட்டுக் கொண்ட ஆண் அல்லது பெண். sturdy rustic man or buxom rustic woman.

**நாட்டுச் சர்க்கரை**- பழுப்புநிறச் சர்க்கரை, unrefined sugar brown in colour.

**நாட்டுடமையாக்கு**- நாட்டுக்குரிய தாக்கு, nationalize. நாட்டுடமை யாக்கல், nationalization.

**நாட்டுப்பற்று**- patriotism.

**நாட்டுப் பாடல்**- folksong.
**நாட்டுப் புறம்**- *ஊரகம்,* rural area.
**நாட்டுப் பெண்**- *மருமகள்,* daughter-in-law.
**நாட்டு வைத்தியம்**- indigenous medicine.
**நாடகம்**- *கூத்து;* drama, play.
**நாடா**- *1. துணிப்பட்டை,* ribbon. *2. பட்டைத் திரி,* wick. *3. அளவு நாடா,* tape. *4. ஓடம்,* shuttle.
**நாடாப்புழு**- *நாடா வடிவப்புழு,* tapeworm.
**நாடாளுமன்றம்**- *பாராளுமன்றம்,* parliament.
**நாடி**- pulse. *நாடிபார்,* feel the pulse.
**நாடு**- *1. விரும்பு,* seek. I seek your help. *2. தேசம்,* country, nation.
**நாடுகடத்து**- *நாட்டைவிட்டு வெளியேற்று,* exile, banish. *நாடோடி,* vagabond, wanderer, gypsy.
**நாண்**- *1. கயிறு,* string. *2. சரடு,* thread, chain. *3. நாணம்,* shame.
**நாணயச்சாலை**- *1. நாணயங்கள் செய்யும் இடம்,* mint. *நாணயம்,* coin. *2. நாணய மதிப்பு,* currency. *3. நேர்மை,* honesty. *4. நாணய மாற்று வீதம்,* exchange rate. *நாணயவியல்,* numismatics. *5. நாணயஸ்தன்,* honest man.
**நாத்தனார்**- *கணவனின் சகோதரி,* husband's sister.
**நாத்திகம்**- *கடவுள் இல்லை என்னுங் கொள்கை,* atheism.
**நாதசுரம்**- *நாகசுரம், தென்னிந்திய இசையில் பயன்படும் நீண்ட குழல்,* pipe.
**நாதம்**- *இனிய ஒலி,* sweet sound.
**நாதன்**- *1. கணவன்,* husband. *2. இறைவன்,* god.
**நாதாங்கி**- *தாழ்ப்பாள்,* latch.
**நாதி**-*ஆதரவு,* support.
**நாபி**- *தொப்புள்,* navel.
**நாமகரணம்**- *பெயர் சூட்டல்,* christening.
**நாமம்**- *1. வைணவர் நெற்றிக்குறி,* vaishnavite's religious mark. *2. பெயர்,* name. *3. நாமம்போடு,* cheat. *4. நாமாவளி,* string of names.
**நாய்**- *ஒரு வீட்டு விலங்கு,* dog.
**நாய்க்குடை**- *ஒரு காளான்,* mushroom, agaricus.
**நாயகம்**- *தூதர்,* messenger of Allah.
**நாயகன்**- *கதைத்தலைவன்,* hero.
**நாயகி**- *கதைத்தலைவி,* heroine, lady.
**நாயன்மார்**- *63 சைவ அடியார்கள்,* 63 Saiva savants.
**நாயுருவி**- *ஒட்டுப்புல்,* achyranthus.
**நார்**- *இழை,* fibre. *நார்ச்சத்து,* fibrous matter.
**நாரத்தை**- *எலுமிச்சை வகைப் பழம், காய்,* citrus.
**நாரத வேலை**- *கலகம் மூட்டும் வேலை, ("நாரதர் கலகம் நன்மையில் முடியும்")* creating disharmony leading to a happy ending.
**நாராசம்**- *கடுமை,* jarring.
**நாரை**- *கொக்கு வகைப்பறவை,* stork.
**நாலாப்பக்கமும்**- *எல்லாப்பக்கமும்,* on all sides.
**நாலாவிதம்**- *எல்லாவகை,* all kinds of.
**நாவன்மை**- *நாவாற்றல்,* power of speech, oratorical excellence.
**நாவிதர்**- *முடிதிருத்துபவர்,* barber.
**நாள்**- *24 மணி நேரக் கால அளவு,* day.
**நாள்பட்ட**- *பழைய,* chronic, old.

**நாளடைவில்-** *காலப் போக்கில்,* in the course of time.

**நாளம்-** *குழாய்,* vessel, blood vessel.

**நாளமில்லாச் சுரப்பி-** *குழாயில்லாச் சுரப்பி,* ductless gland. *நாளமுள்ள சுரப்பி,* duct gland.

**நாளிதழ்-** *தினப்பத்திரிகை,* daily.

**நாளை-** *இன்றிலிருந்து 24 மணி நேரம் கழித்துக் கணக்கிடப்படும் காலம், 1. நாளை,* tomorrow. *2. எதிர்காலம்,* future. *நாளை மறுநாள்,* day after tomorrow.

**நாற்காலி-** *நான்கு கால்களைக் கொண்ட இருக்கை,* chair. *இசை நாற்காலி,* musical chair.

**நாற்சந்தி-** *நான்குத் தெருக்கள் கூடும் இடம்,* square.

**நாற்றம்-** *வாசனை, மணம் 1. நறு நாற்றம், நறுமணம்,* fragrance. *2. தீ நாற்றம், தீயமணம்,* foul smell.

**நாற்று-** *இளம் பயிர்,* seedling. *நாற்று விடு,* raise seedlings.

## நி

**நிக்காஹ்-** *முகமதியர் திருமணம்,* Islamic marriage.

**நிகண்டு-** *பண்டைய தமிழ்ச் சொற் களஞ்சியம்,* Tamil thesaurus in verse.

**நிகர்-** *ஒப்பு,* equal. None is equal to me.

**நிகர-** *மொத்த,* net profit.

**நிகழ்-** *நடப்பது,* happen, take place. The meeting takes place today.

**நிகழ்களம்-** *நடைபெறும் இடம்,* scene, war scene.

**நிகழ்காலம்-** *தற்பொழுது நடைபெறும் காலம்,* present time.

**நிகழ்ச்சி-** *1. நிகழ்வு,* event, happening; historical events, TV programme.

**நிகழ்ச்சி நிரல்-** *நிகழ்ச்சி வரிசை,* programme.

**நிகழ்த்து-** *செய், நிகழும்,* perform. God performs miracles. Perform a play; Deliver a speech. *நிகழும்,* forthcoming.

**நிச்சய தாம்பூலம்-** *திருமண உறுதி,* betrothal.

**நிச்சயம்-** *உறுதி,* certain. It is certain. *நிச்சயி,* fix, confirm. marriage fixed.

**நிசப்தம்-** *அமைதி,* silence.

**நிணநீர்-** *கொழுப்பு நீர்,* lymph.

**நித்தம்-** *நாள்தோறும்,* dailv. He comes daily.

**நித்திய கண்டம்-** *உறுதியற்றது,* uncertain. Everything is uncertain.

**நித்திரை-** *உறக்கம்,* sleep.

**நிதர்சனம்-** *பார்த்தால் தெரிவது,* obvious, transparent. It is obvious that your statement is not transparent. *நிதர்சன உண்மை,* transparent truth.

**நிதானம்-** *அமைதி நிலை,* composure. He is remarkable for his composure. *நிதானமாக,* calmly. Do it calmly.

**நிதானி-** *சிந்தி,* consider.

**நிதி-** *1. செல்வம்,* wealth. *2. வருவாய்,* finance, fund. *3. நிதியறிக்கை,* financial report. *4. நிதியாண்டு,* financial year. *5. நிதியம்,* fund, consortium.

**நிந்தனை-** *நிந்தித்தல்,* blasphemy. *நிந்தி,* cast blasphemy.

**நிபந்தனை-** *கட்டுப்பாடு,* condition. terms and conditions.

**நிபுணத்துவம்-** *துறைத் தேர்ச்சி* expertise. *நிபுணர்,* expert, specialist.

**நிம்மதி-** *உள அமைதி,* peace of mind. I have no peace of mind.

**நிமிடம்-** *60 வினாடிகள் கொண்ட கால அளவு,* minute.

**நிமித்தம்-** *1. கணிப்பு,* forecasting. *2. பொருட்டு,* on account of. Tomorrow will be a holiday on account of Independence Day.

**நிமிர்-** *நேராக்கு,* raise your head. *நிமிர்ந்த நடை,* majestic gait.

**நியதி-** *நியமனம், ஒழுங்கு,* law, rule. *இயற்கை நியதி,* natural justice.

**நியமனம்-** *1. ஆணை,* appointment. Your appointment is certain. *2. பெயரிடல்,* nomination. *நியமி,* appoint, nominate.

**நியாயம்-** *நீதி,* justice. *நியாயப்படுத்து,* justify. *நியாயப்படுத்தல்,* justification. *நியாய வாடகை,* fair rent. *நியாயவிலைக் கடை,* fair price shop.

**நிர்க்கதி-** *ஆதரவற்ற நிலை,* helplessness.

**நிர்ணயம்-** *உறுதி,* control, determining. *கூலி நிர்ணயம்,* wages determination. *நிர்ணயி,* determine.

**நிர்ப்பந்தம்-** *கட்டாயம்,* compulsion. I have to do it under compulsion. *நிர்ப்பந்தி,* compel.

**நிர்மலம்-** *தெளிவு,* clear. Clear sky.

**நிர்மாணம்-** *கட்டுதல்,* construction. *நிர்மாணப்பணிகள்,* construction works. *நிர்மாணி,* construct.

**நிர்மூடன்-** *முழுமுட்டாள்,* blockhead.

**நிர்மூலம்-** *பேரழிவு,* annihilation.

**நிர்வகி-** *ஆட்சிசெய்,* administer. *நிர்வாகம்,* administration. *நிர்வாகி,* administrator.

**நிர்வாணம்-** *1. ஆடையில்லாமல் இருத்தல்,* naked-ness. *2. புத்த மதத்தில் கூறப்படும் முக்தி நிலை,* state of liberation, eternal bliss in Buddhism.

**நிரந்தரம்-** *நிலைத்திருப்பது,* permanent, constant. Nothing is permanent in this world.

**நிரப்பு-** *நிரப்புதல்,* fill. Fill the bucket with water. Fill in the application. *நிரப்புதல்,* filling.

**நிரபராதி-** *குற்றமற்றவன்,* not guilty.

**நிரம்ப-** *அதிகம்,* a lot. I have to do a lot of work.

**நிரம்பி வழி-** *அளவுக்கு அதிகமிருத்தல்,* overflow. Water overflows.

**நிரல்-** *வரிசை,* row, order. order of events. *நிரல்பட,* in proper order. Put the events in proper order.

**நிரவு-** *சமமாக்கு,* level up. Level up the pit.

**நிராகரி-** *1. ஏற்கமறு,* reject. Many applications were rejected. *2. புறக்கணி,* ignore. Don't ingnore anybody.

**நிராசை-** *நிறைவேறா விருப்பம்,* unfulfilled desire. I have many unfulfilled desires.

**நிராதரவு-** *ஆதரவின்மை,* without help or support. *நிராயுதபாணி,* unarmed.

**நிருத்தம்-** *நடனம்,* dance.

**நிருபம்-** *கடிதம்,* letter.

**நிருபர்-** *பத்திரிகை நிருபர்,* news reporter.

**நிரூபணம்-** *மெய்ப்பு,* proof. Where is the proof? *நிரூபி,* prove.

**நில்-** *1. நிற்றல். நேராக நில்,* stand erect. *2. நகராமல் இருத்தல்,* stop. Stop and proceed.

**நில அளவர்-** *நிலத்தை அளக்கும் அரசு அலுவலர்,* surveyor.

**நில இயல்-** *புவி அமைப்பியல்,* geology.

**நில உடைமை-** *நிலம் வைத்திருத்தல்,* landholding.

**நிலக்கடலை-** *வேர்க்கடலை,* ground-nut.

**நிலக்கரி-** *பூமிக்கு அடியிலிருந்து எடுக்கப்படும் கரி,* coal. Coal is called the black diamond.

**நிலக்கிழார்-** *நில உரிமையாளர்,* landlord; land owner.

**நிலச்சரிவு-** *மண் சரிதல்,* landslide. Landslide is a common phenomenon in hilly regions.

**நிலத்தடி நீர்-** *நிலத்திற்குக் கீழுள்ள நீர்,* ground water.

**நில நடுக்கம்-** *பூகம்பம்,* earthquake. Earthquake is a natural calamity.

**நிலநடுக் கோடு-** *பூமியைச் சம அளவில் பிரிக்கும் கற்பனைக்கோடு,* equator.

**நிலப்பிரபுத்துவம்-** *பண்ணைமுறை,* feudalism. Traces of feudalism still exist in our country.

**நிலபுலன்-** *நன்செய், புன்செய் நிலங்கள்,* dry and wet lands.

**நிலம்-** *1. பயிர் செய்யுமிடம்,* land. *2. தரை,* ground. *3. நிலப்பிரிவு, ஐந்திணை (தமிழ் இலக்கியத்தில்) 1. குறிஞ்சி* - hills, *2. முல்லை* - forest, *3. மருதம்* - fields, *4. நெய்தல்* - sea & shore, *5. பாலை* - waste land.

**நிலவரம்-** *1. நிலைமை,* condition, situation. The situation is under control. *2. அறிக்கை,* report.

**நிலவரி-** *நில உரிமையாளர் அரசுக்குச் செலுத்தும் வரி, கிஸ்தி,* revenue.

**நிலவறை-** *பூமிக்கடியில் அமைந்த அறை,* cellar, vault.

**நில வாயு-** *எரிவாயு,* natural gas.

**நிலவு-** *1. நிலவுதல்,* prevail. Peace prevails. *2. அமை,* establish. Let democracy be established.

**நிலவு-** *நிலா,* moon. The moon is the natural satellite of the earth.

**நிலுவை-** *பாக்கி,* arrears, arrears of work.

**நிலை-** *1. நிலைத்திரு,* last. The rule will last long. *2. சமூக நிலை,* social status. *3. நிலைப்பாடு,* stand. Your stand is right. *4. நிலைப்படி,* door-frame.

**நிலைக்கண்ணாடி-** *நிலையாகப் பொருத்தப்பட்டிருக்கும் கண்ணாடி,* standing mirror.

**நிலைக்களம்-** *இருப்பிடம்,* source, source book.

**நிலைக்குழு-** *நிலையாக உள்ள உறுப்பினர்கள் அமைப்பு,* standing committee.

**நிலைகுலை-** *சமநிலை இழ,* lose balance. He lost his balance.

**நிலைகொள்-** *தங்கு,* come to stay. The satellite will come to stay in its orbit within two days.

**நிலைதடுமாறு-** *நிலைகுலை,* lose balance.

**நிலைநாட்டு-** *நிலைகொள்ளச் செய்,* establish. Conventions are established once for all.

**நிலைப்படம்-** *பொருளின் அசையா நிலையைக் காட்டும் படம்,* still picture.

**நிலைப்படி-** *கதவுச்சட்டம்,* door-frame.

**நிலைபேறு-** *1. நிலைத்தல்,* get established. Let peace get estab

lished. 2. நிலைத்த தன்மை, eternity. Classics have achieved eternity.

**நிலைமொழி**- முதல்சொல், first word. மரம்+பெட்டி = மரப்பெட்டி இதில் 'மரம்' என்பது நிலை மொழி. 'பெட்டி' என்பது வரு மொழி.

**நிலையம்**- 1. ஒரு நிறுவனம் நிலைத் துள்ள இடம், station. Railway station, Bus stand. 2. வானவெளி நிலையம், space station. 3. கோளிடை நிலையம், interplanetary station.

**நிலையாமை**- நிலையற்றது, instability. One of the features of life is instability.

**நிவாரணம்**- துயர் நீக்க உதவி, relief. flood relief. நிவாரண நிதி, relief fund. நீக்கம், cure.

**நிவாரணி**- நிவாரண மருந்து, pain reliever.

**நிவேதனம்**- படையல், offering.

**நிழல்**- ஒளிமறைவு, shadow, shade. Let us sit under the shade. Your shadow is inseparable from you.

**நிழலாடு**- தெளிவின்றித் தோன்றுதல், appear faintly.

**நிழற்குடை**- போக்குவரத்துக் காவலர், பேருந்துக்காகக் காத்திருக்கும் பயணிகள் போன்றோருக்கான வெயில் மறைப்புக் கூரை. shelter, sunshade. நிழற் கூத்து, shadow play.

**நிழற்படம்**- புகைப்படம், ஒளிப் படம், photo.

**நிற்க**- நிற்பாயாக, ஒழுகுக. கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக. Let your conduct be worthy of your learning. (T. 391)

**நிறம்**- வண்ணம், colour. முதல் நிலை நிறங்கள், primary colours. இரண்டாம் நிலை நிறங்கள், secondary colours. நிறமாலை, spectrum.

**நிறமி**- நிறப்பொருள், pigment. Chloroplast is a pigment.

**நிறவெறி**- இன நிறவெறி, racism. நிறவேற்றுமை, discrimination on the grounds of colour. (colour discrimination)

**நிறு**- எடைபோடு, weigh. Weigh the goods.

**நிறுத்தம்**- நிற்குமிடம், bus stop.

**நிறுத்தலளவை**- எடையளவை, measure of weight.

**நிறுத்தி**- 1. இடைவெளி விட்டுப் படி, read with a pause. 2. நிறம் நிறுத்தி, mordant.

**நிறுத்து**- நிற்கச் செய், stop.

**நிறுவனம்**- நிலையம், firm, concern institute, establishment. It is a well established institute. நிறுவு, establish. Who establilshed this newspaper? instal. The machinery will be installed. Establish your argument.

**நிறை**- 1. நிறைந்திருத்தல், be full. குளத்தில் நீர் நிறைந்துள்ளது, The tank is full of water. 2. எடை, weight, mass. நிறைகுறை, merits and demerits.

**நிறைகுடம்**- நிறைந்த அறிவுள்ளவர். a man of vast knowledge.

**நிறைமதியம்**- முழுநிலா, full, moon.

**நிறைமாதம்**- பேறுமாதம், last month of pregnancy.

**நிறைய**- அதிகம், in plenty. Give him all in plenty.

**நிறைவு**- முழுமை, completion, fulfilment of one's demands. நிறைவு விழா, valedictory function. நிறைவு விழா உரை, valedictory address.

**நிறைவேற்று-** *முடி,* execute the plan.

**நினை-** *நினைவில் கொள்,* think. Think of the present only. *நினைவு, நினைப்பு,* thought, memory, remembrance. *பழைய நினைவுகள்,* past memories. *நினைவாலயம்,* memorial. *நினைவு அஞ்சலி,* homage. *நினைவுக் குறிப்புகள்,* memoirs.

**நினைவு கூர்-** *நினைவுக்குக் கொண்டு வா.* remember, recall. Remember your past.

**நினைவுச் சின்னம்-** memorial, monument. The Tajmahal is a famous historical monument.

**நினைவு திரும்பு-** *இழந்த உணர்வை மீண்டும் பெறு,* regain consciousness.

**நினைவு நாள்-** *மரணம் அடைந்த வரது நினைவைப் போற்றும் நாள், இறந்த நாள்,* death anniversary. day of remembrance.

**நினைவுப் படுத்து-** *1. நினைவுக்குக் கொண்டு வா,* recollect. Can you recollect what happened during the accident? *2. நினைவூட்டு,* remind. Remind him of tomorrow's interview.

**நிஜம்-** *உண்மை,* true, real. It is true. It is a fact.

**நிஷ்களங்கம்-** *குற்றம் இல்லாமை,* flawlessness.

**நிஷ்காமியம்-** *தன்னலம் கருதாமை,* altruism.

**நிஷ்டூரம்-** *கொடுமை,* harshness, severity.

**நிஷ்டை-** *தியானம்,* meditation. Meditation is an essential part of Hinduism.

## நீ

**நீக்கமற-** *எங்கும் நிறைந்துள்ள,* omnipresent. God is omnipresent.

**நீக்கு-** *1. அகற்று,* remove. Remove the dust. He was removed from the post. *2. திரையை நீக்கு,* Draw the curtain. *3. தடையை நீக்கு,* Lift the ban.

**நீக்குப்போக்கு-** *தகைவு,* adaptability. He is a man of high adaptability.

**நீங்கலாக-** *தவிர,* except, excluding. All are admitted except you.

**நீச்சல்-** *நீந்துதல்,* swimming. *நீச்சல் குளம்,* swimming pool.

**நீசம்-** *1. குறைவு,* minimum. minimum temperature. *2. நலிவு,* decline.

**நீட்சி-** *1. நீளம்,* length. *2. நீண்டிருத்தல்,* projection, process.

**நீட்டலளவை-** linear measurement.

**நீட்டி முழக்கு-** *விரித்துக் கூறு,* speak at length. He spoke at length about the merits of democracy.

**நீட்டு-** *1. நீட்டுமாறு செய்,* stretch, Stretch your hands. *2. கத்தியை நீட்டு,* draw the knife. *3. நீட்டிப்பு செய்,* prolong. The meeting prolonged for a long time. *நீட்டிப்பு,* extension.

**நீடூழி வாழ்க-** *நீண்ட நாள் வாழ வேண்டும் எனும் வாழ்த்து முழக்கம்,* Long live.

**நீண்ட-** *அதிகமான,* long distance. *நீண்ட கடிதம்,* lengthy letter.

**நீத்தார்-** *இறந்தவர்,* the dead.

**நீதி-** *1. நியாயம்,* justice. I demand justice. *2. நன்னெறி,* moral. *நல்லவன் வாழ்வான்.* The good will thrive.

**நீதிபதி-** *நீதியரசர்,* judge, justice. Justice Sadasivam. *நீதிமன்றம்,* court of law. *நீதிமான்,* honest man. King Soloman was an honest man.

**நீந்து-** *நீச்சல் அடி,* swim.

**நீர்-** *1. தண்ணீர் கலந்த,* dilute. *நீர்த்த அமிலம்,* dilute acid. *2. தண்ணீர்,* water. *கண்ணீர்,* tears. *புண்நீர்,* pus.

**நீர்க்கடுப்பு-** *சிறுநீர் கழிக்கும் பொழுது எரிச்சல் இருத்தல்,* pain while passing urine.

**நீர்க்காகம்-** *வாத்துப் போன்ற பறவை,* cormorant.

**நீர்க்குதிரை-** *கடல் குதிரை, குதிரை போன்ற சிறு கடல் விலங்கு,* sea-horse.

**நீர்த்தேக்கம்-** *நீர் தேக்கி வைக்கப் பட்டுள்ள இடம்,* dam, reservoir.

**நீர்நாய்-** *நாய்போன்ற விலங்கு,* otter.

**நீர்நிலை-** water source.

**நீர்ப்பாசனம்-** irrigation.

**நீர்ப்பாசி-** *நீரில் வளரும் பாசி,* algae.

**நீர்பிரி-** *சிறுநீர் கழி,* urinate.

**நீர்மட்டம்-** *1.* water level. 2. spirit level.

**நீர்மம்-** *நீர் போன்ற பொருள்,* liquid. Oil is a liquid.

**நீர்மின் நிலையம்-** *நீர் விசையால் மின்சாரம் பெறுதல்,* hydroelectric station, plant.

**நீர்மூழ்கிக்கப்பல்-** *தண்ணீருக்கு உள்ளேயே மூழ்கிச் செல்லும் கப்பல்,* submarine.

**நீர்மோர்-** *நீர் சேர்ந்த மோர்,* diluted buttermilk.

**நீர்யானை-** *நீரில் வாழும் பெரிய விலங்கு,* hippopotamus.

**நீர்வீழ்ச்சி-** *அருவி,* waterfalls.

**நீராகாரம்-** *பழைய சோற்றுநீர்,* cooked rice water.

**நீராட்டு-** *குளிப்பாட்டு,* bathe.

**நீராடு-** *குளி,* take bath.

**நீராவி-** *நீர் கொதிக்கும் போது வெளிப்படும் ஆவி,* steam.

**நீராவிப் படகு-** *நீராவி விசையால் இயங்கும் படகு,* steam boat.

**நீரிணை-** *நீர்க்கூட்டு,* strait.

**நீரியல்-** *நீரின் இயல்புகளை ஆராயும் துறை,* hydrology.

**நீரிழிவு-** *சர்க்கரை நோய்,* diabetes.

**நீரூற்று-** *பூமியில் நீர் வெளிப்படும் இடம்,* spring, fountain.

**நீரேற்று நிலையம்-** *நீர் இறைக்கும் நிலையம்,* water pumping station.

**நீரோட்டம்-** *1. நீர் ஓடுதல்,* water current. *2. வைர நீரோட்டம்,* lustre of a diamond. *3. நீர்க்குறி,* water mark.

**நீலக்கல்-** *நீலமணி,* sapphire.

**நீலம்-** *1. நீலநிறம்,* blue. *2. நீலத்தூள்,* blue powder.

**நீலாம்பல்-** *நீல நிற அல்லி, கருங் குவளை,* blue nelumbo.

**நீலி-** *தீங்கு நினைப்பவள், பசப்பி,* wicked woman. *நீலிக்கண்ணீர், போலி இரக்கம்,* crocodile tears. *நீலிக்கண்ணீர் வடி,* Shed crocodile tears.

**நீவு-** *தடவிவிடு,* massage.

**நீள்-** *நீட்டு,* lengthen.

**நீள்சதுரம்-** *நீண்டசதுரம், செவ்வகம்,* rectangle.

**நீளம்-** *ஒரு முனைக்கும் மறு முனைக்கும் இடையே உள்ள தூரம்,* length, a dimension. What is the length of this wire? *நீளத் தாண்டுதல்,* long jump.

**நீறு-** *1. சுண்ணாம்பு நீறு,* calcium oxide. *2. திருநீறு,* holy ashes. *3. சாம்பல்,* ashes.

## நு

**நுகத்தடி-** *இரு காளைமாடுகளின் கழுத்தைப் பிணைக்கும் தடி,* yoke.

**நுகர்-** *அனுபவி,* enjoy. Enjoy all the pleasures of life. *நுகர்ச்சி, நுகர்வு,*

enjoyment. *நுகர்பொருள்*, consumer goods. *நுகர்வோர்*, consumer. *நுகர்வோர் மன்றம்*, consumers' council.

**நுங்கு-** *பனம் நுங்கு*, the kernel of a tender, Palmyra fruit. *நுங்கும் நுரையுமாக*, foamy. The river is very foamy.

**நுட்பம்-** *நுணுக்கம்*, technique. *தொழில்நுட்பம்*, technology.

**நுண்-** *நுண்ணிய*, minute, microscope.

**நுண்கணிதம்-** *உயர்கணிதம்*, Calculus. *வகை நுண்கணிதம்*, Differential Calculus. *தொகை நுண்கணிதம்*, Integral calculus.

**நுண்கலை-** *அழகுக் கலை*, fine arts. Painting is a fine art.

**நுண்கிருமி-** *நோய் உண்டாக்கும் மிகச் சிறிய உயிரினம்*, micro organism. Virus is a micro-organism.

**நுண்ணியதாக்கல்-** *மிகச் சிறியதாக்கல்*, miniaturization. *மீநுண்ணியதாக்கல்*, micro-miniaturization.

**நுண்ணியிரி-** *நுண்ணோக்கியால் மட்டும் பார்க்கக் கூடிய மிகச் சிறு உயிர்*, micro-organism.

**நுண்ணூட்டச்சத்து-** *பயிர் நுண் ஊட்டம்*, micro-nutrients.

**நுண்ணோக்கி-** *நுண்ணிய பொருள்களைப் பார்க்க உதவும் கருவி*, microscope. *நுண்ணோக்கி ஆய்வுகள்*, micro-scopic studies.

**நுண்மை-** *1. நுண்ணிய தன்மை*, being microscopic. *2. நுட்பம்*, being subtle.

**நுணா-** *ஒரு வகை மரம்*, anona.

**நுணுக்கம்-** *நுட்பம்*, technique.

**நுணுக்கு-** *பொடியாக்கு*, break into bits. Break the tablet into bits.

**நுணுகி ஆராய்-** study minutely.

**நுதல்-** *நெற்றி*, forehead.

**நுரை-** *நுரைத்தல்*, froth, lather. Soft water gives lather when it is shaken with soap. *நுரை தள்ளு*, foam at. The sick dog foamed at the mouth.

**நுரையீரல்-** *மூச்சுக் காற்றை உள் நிரப்பிக் கொள்ளும் பலூன் போன்ற உடல் உறுப்பு*, lungs.

**நுழை-** *உள்ளே செல்*, enter. When the teacher entered the class, students stood up.

**நுழைவாயில்-** *உள் செல்லும் வழி*, entrance.

**நுழைவு-** *நுழைதல்*, entrance. *நுழைவுத் தேர்வு*, entrance examination. *நுழைவுக் கட்டணம்*, entrance fee.

**நுனி-** *1. முனை*, end, end of a road. *2. சுருட்டு நுனி*, cigar end. *3. விரல் நுனி*, finger tip. *4. இலை நுனி*, leaf apex. *5. நுனிப்புல் மேய்*, browse, study superficially.

## நூ

**நூதனம்-** *புதுமை*, novelty. *நூதன முறை*, novel method.

**நூல்-** *1. புத்தகம்*, book. *2. நூலிழை*, thread, yarn. *3. நூல்கண்டு*, ball of thread.

**நூல்கோல்-** *ஒரு காய்கறி*, turnip.

**நூலகம்-** *புத்தக சாலை*, library. *நூலகர்*, librarian. *நூலகவியல்*, library science.

**நூலாம்படை-** *ஒட்டடை*, cobweb.

**நூலிழையில்-** *மிகச் சிறிய அளவு இடைவெளியில், மயிரிழையில்*, by a hair's breadth. We escaped by a hair's breadth.

**நூலேணி-** *கயிற்றினால் செய்யப் பட்ட ஏணி*, rope-ladder.

**நூற்குண்டு-** குண்டுடன் நூல் உள்ள கருவி, plumb line.

**நூற்பா-** சூத்திரம், verse.

**நூற்பாலை-** *1.* நூல் நூற்கும் ஆலை, spinning mill. *2.* நெசவாலை, weaving mill, textiles.

**நூற்றாண்டு-** நூறு ஆண்டுகள் கொண்ட கால அளவு, வரலாறு பல நூற்றாண்டுகளைக் கொண்டது. History has many centuries. நூற்றாண்டு விழா, Centenary. நூற்றாண்டு விழாக் கூடம், Centenary hall.

## நெ

**நெக்குருகு-** உளம் நெகிழ், move. I was moved very much to hear the song.

**நெகிழ்-** *1.* நழுவு, slip. My dhoti began to slip. *2.* உள்ளம் நெகிழ்ந்தது, move one's heart. My heart is moved when I see the hungry people. நெகிழ்ச்சி, tender feeling.

**நெசவாலை-** துணி நெய்யும் ஆலை, textiles. நெசவாளர், weaver. நெசவு, weaving. நெசவு நயம், texture.

**நெஞ்சம்-** உள்ளம், heart, mind. He has a brilliant mind. நெஞ்சமுத்தம், hard-heartedness. நெஞ்சு, chest. நெஞ்சுரம், strong will. நெஞ்செரிச்சல், heartburn.

**நெட்டி-** *1.* நெட்டிமரம், pith plant, pith. *2.* நெட்டி முறி, wrinkle one's finger.

**நெட்டித் தள்ளு-** பலவந்தமாகத் தள்ளு, shove. The policeman shoved me out.

**நெட்டுயிர்த்தல்-** பெருமூச்சு விடுதல், heave a sigh.

**நெட்டுருப்பண்ணு-** மனப்பாடம் செய். get by heart. Learn the poem by heart.

**நெட்டை-** உயரமானவன், tall.

**நெடி-** தீய மணம், pungent odour.

**நெடிய-** *1.* நீண்ட, long road. *2.* உயரமான, tall. The teak is tall.

**நெடுக-** முழுக்க, all along. We saw a huge crowd all along the road.

**நெடுங்கதை-** நீண்ட கதை, novel.

**நெடுஞ்சாலை-** பொதுச்சாலை, highways.

**நெடுந்துயில்-** சாவு, death, eternal sleep.

**நெடுநோக்கு-** தொலைநோக்கு, farsight.

**நெம்பு-** நெம்பி எடு, Lever the stone with a crow bar. நெம்பு கோல், lever. The lever is a simple machine.

**நெய்-** *1.* நூல்களைப் பின்னித் துணியை உருவாக்கு, weave. weave the cloth. *2.* சாப்பாட்டு நெய், edible ghee. *3.* நெய்ப் பந்தம், torch fed with ghee. *4.* நெய்விளக்கு, lamp fed with ghee.

**நெய்தல்-** கடலும் கடல் சார்ந்த இடமும், sea and seashore.

**நெரி-** இறுக்கு. அவன் கொலைகாரனின் தொண்டையை நெரித்தான். He strangled the murderer's neck. நெரிக்கட்டு, swelling of lymph gland.

**நெரிசல்-** நெருக்கல், jam. traffic jam.

**நெருக்கடி-** சிக்கல், crisis. financial crisis. நெருக்கடி நிலை, emergency.

**நெருக்கம்-** *1.* அருகில், close. He was sitting close to him. *2.* பழக்கம், intimacy. We have a close intimacy. *3.* நாட்டம், affinity. chemical affinity.

**நெருக்கு-** *அழுத்தித் தள்ளு,* press. People rushed madly pressing against one another. *நெருக்குதல்,* pressing. *நெருங்கிய உறவு,* close relation.

**நெருங்கு-** *அடை,* reach. The procession reached the conference pandal.

**நெருஞ்சி-** *ஒரு முட்செடி,* cow's thorn.

**நெருடல்-** *உறுத்தல்,* pricking feeling. He has a pricking feeling for his sinful act. *நெருடு,* have a pricking feeling.

**நெருப்பு-** *தீ,* fire, one of five elements. *நெருப்புக் குச்சி,* match stick.

**நெருப்புக் கோழி-** *ஒரு வகைப் பெரிய பறவை,* ostrich.

**நெல்-** *ஒரு முக்கியத் தானியம்,* paddy, rice.

**நெல்லிக்காய்-** *ஒரு காய்,* Indian goose berry.

**நெளி-** *1. நெளிந்து செல்,* wriggle. The worm wirggles. *2. உடம்பை நெளி,* twist your body. *3. குடத்தை நெளி,* dent the pot. *4. சுருள்,* curl. *5. நெளிவு சுளிவு,* ins and outs

**நெற்களஞ்சியம்-** *நெல் பாதுகாத்து வைக்கும் இடம்,* granary. Thanjavur is the granary of Tamilnadu.

**நெற்றி-** *புருவத்திற்கு மேலுள்ள -பகுதி,* forehead. *நெற்றிச் சுட்டி,* a forehead ornament. *நெற்றிப் பொட்டு,* temple.

**நெற்று-** *முற்றிய காய்,* pod, seed.

**நெறி-** *1. புருவத்தை நெறி,* knit one's brows. *2. சமய நெறி,* religious path or principle. *நெறிப்படுத்து,* direct, guide. *நெறிமுறை,* principle. *நெறியாளர்,* guide. *இயக்குநர்.* direrctor.

# நே

**நேச நாடுகள்-** *நட்பு நாடுகள்,* the Allies.

**நேசம்-** *பற்று,* affection, love. One should love one's country. *நேசி,* love. I love you.

**நேத்திரம்-** *கண்,* eye.

**நேத்திரங்காய்-** *ஒரு வகை வாழைக் காய்,* a variety of plantain.

**நேயம்-** *நேசம், மனித நேயம்,* humanism. *நேயர்,* listener, reader, viewer.

**நேர்-** *1. நிகழ்,* happen. When did the accident happen. *2. நேராக,* straight. *நேர்வழி,* straight path, route.

**நேர்காணல்-** *நேர்முகத் தேர்வு, பேட்டி,* interview.

**நேர்கோடு-** *நேரான கோடு,* straight line.

**நேர்த்தி-** *சீரிய தன்மை,* elegance and excellence. He will stamp his elegance and excellence in each and everything he does. *நேர்த்திக்கடன்,* vow made to a deity.

**நேர்மாறு-** *தலைகீழ்,* opposite, contrary. You do everything contrary to conventions.

**நேர்முக உதவியாளர்-** *ஓர் உயர் அலுவலருக்கு உதவியாளர்,* Personal Assistant. P.A.

**நேர்முக வருணனை-** *உடனுக்குடன் விளக்கம் தருவது,* running commentary. *நேர்முக வரி,* direct tax.

**நேர்மை-** *நேரிய தன்மை,* honesty, rectitude. Your honesty is exemplary.

**நேரடி-** *1. நேரடிப் பங்கேற்பு,* direct participation. *2. நேருக்கு நேர்,* encounter, face to face. *3. நேரடி ஒளிபரப்பு,* live broadcasting.

**நேரம்-** *1.பொழுது,* time. What is the time now? *2. மணி,* hour. It will take half an hour to reach the temple. *நேரம் கெட்ட நேரம்,* inopportune time.

**நேரில்-** *நேரில் காண்,* meet in person.

**நேற்று-** *முந்தைய தினம்,* yesterday. I met him yesterday. *நேற்றைய நிகழ்ச்சி,* yesterday's event, happening.

## நை

**நை-** *நசுக்கு,* crush. Crush the ginger.

**நைப்பு-** *ஈரப்பசை,* moisture, paddy moisture.

**நையப்புடை-** வன்மையாக அடி, beat black and blue. The thief was beaten black and blue.

**நையாண்டி-** *கேலி,* ridicule, mocking. I had to face mocking among my friends. *நையாண்டி மேளம்,* a folklore drum.

**நைவேத்தியம்-** *படையல்,* offering.

## நொ

**நொச்சி-** *ஒரு வகைச் செடி,* five leaved shrub.

**நொடி-** *1. ஒடி,* crash, snap. The pandal post crashed into the soil. *2. மனம் நோகு,* heart-broken. *3. விளாடி ஊசல்,* seconds pendulum. *4. கணநேரம்,* moment. Do it in a moment. *5. புதிர்,* riddle. *6. நோய் நொடி,* disease.

**நொடித்துப் போ-** *1. திவாலாகு,* become bankrupt. *2. சீர்குலை,* fall on evil times. The family fell on evil times.

**நொண்டி-** *1. முடம்,* the crippled. *2. நொண்டியடிக்கும் விளையாட்டு,* hopping game with a folded leg. *3. நொண்டிச் சமாதானம்,* lame excuse. *4. நொண்டு,* limp. The dog is limping.

**நொதி-** *புளிப்புப்பொருள்,* ferment, enzyme. *நொதித்தல்,* fermentation. The ferment is a catalyst.

**நொந்துகொள்-** *1. வருந்து,* regret. I have to regret myself. *2. குறைகூறு,* blame.

**நொய்-** *நொய்யரிசி,* broken rice.

**நொறுக்கித் தள்ளு-** *நன்கு செய்,* do well. I have done the examination well.

**நொறுங்கு-** *சிதை,* crush. crush the cashewnut kernels. *நொறுக்குத் தீனி,* snacks.

## நோ

**நோ-** *1. வலி,* ache, pain. I am suffering from headache. *2. ஒருவர் மனத்தையும் நோகச் செய்யாதே,* Don't wound anybody's feelings.

**நோக்கம்-** *குறிக்கோள்,* aim, objective, purpose. The aim of my visit is to help you.

**நோக்கு-** *1. உற்றுநோக்கு,* observe. Observe all the conditions carefully. *2. பார்வை,* outlook, scientific outlook.

**நோஞ்சான்-** *நலிந்த குழந்தை,* puny child.

**நோட்டம்-** *மதிப்பிடும் பார்வை,* glance. Have a glance at it.

**நோண்டு-** *குழி தோண்டு,* dig a hole.

**நோய்-** *வியாதி,* disease. *நோய் நொடி,* ailment. *நோய்வாய்ப்படு,* fall ill. He fell ill suddenly. *நோயாளி,*

patient. புறநோயாளி, out - patient. உள்நோயாளி, in - patient.

**நோவு-** வலி, pain, ache.

**நோன்பு-** விரதம், உண்ணாநோன்பு, fasting. I observe fasting today.

## ப

**பக்கபலம்-** வலிய துணை, tower of strength. நீ எனக்குப் பக்கபலம். You are a tower of strength to me.

**பக்கம்-** 1. பரப்பு, side. வீட்டுக்கு நான்கு சுவர்கள் உண்டு. The house has four walls. 2. அருகில், near. என் தாய் என் பக்கத்தில் உள்ளார். My mother is near my side. 3. தரப்பு, party. நான் யார் தரப்பும் அல்ல. I am a party to none. 4. தாளின் புறம், page. ஒரு தாளுக்கு இரு பக்கங்கள் உண்டு. A sheet has two sides.

**பக்கவாட்டு-** ஒரு பக்கம், sideways. விசுப்பலகையைப் பக்கவாட்டில் தூக்கிச்செல். Carry the bench sideways. ப்க்கவாட்டுத் தோற்றம், side view, profile.

**பக்கவாத்தியம்-** உடன் இசைக்கும் கருவி, accompaniment. வயலின் பக்கவாத்தியம், violin accompaniment.

**பக்கவாதம்-** உடலின் ஒரு ப்க்கம் செயல் இழத்தல், paralysis. அவருக்குப் பக்கவாதம் திடீரென்று வந்தது. He had an attack of paralysis suddenly.

**பக்கவிளைவு-** மருந்தினால் ஏற்படும் உடல் தொல்லைகள், side effects. Homeopathy has no side effects.

**பக்காவாக-** திருத்தமாக, perfectly. உன் வேலையைப் பக்காவாகச் செய். Do your duty perfectly.

**பக்கிரி-** பரதேசி (முகமதியர்), fakir. அவர் ஒரு பக்கிரி. He is a fakir.

**பக்குவப்படுத்து-** பதப்படுத்து, preserve. வெளிநாட்டுக்கு அனுப்ப மீன்கள் குளிர்ச் சேமிப்பில் பக்குவப் படுத்தப்படுகின்றன. Fish are preserved in cold storage for export.

**பக்குவம்-** 1. சுவை குறையாமை, consistency. மாவையும், சர்க்கரையையும், சரியான பக்குவத்தில் சேர். Mix flour and sugar in the right consistency. 2. பருவம், seaon. இது செடிகள் பூக்கும் பக்குவம். Now it is the blooming season for plants. 3. முதிர்ச்சி, maturity. எதையும் அவர் பக்குவமாகச் செய்வார். He will do everything with a sense of maturity.

**பக்தன்-** 1. பக்தி உள்ளவன், devotee. முருக பக்தன். He is a devotee of Lord Muruga. 2. பின்பற்றுபவன், follower. அவன் காந்தி பக்தன். He is a follower of Gandhi.

**பக்தி-** 1. இறைப்பற்று, devotion. கடவுள் பக்தி மிக இன்றியமையாதது. Devotion to Gŏd is essential. 2. அன்பு, love. நாம் எல்லாம் நாட்டின் மீது பக்தி கொள்ள வேண்டும். We must have a love for our country. பக்திமான், devotee. பக்தை, female devotee.

**பகட்டு-** ஆடம்பரம், show. அவன் எப்பொழுதும் பகட்டு உடை அணிபவன். He always wears showy dress.

**பகடி-** 1. கேலி, mocking. அது ஓர் இலேசான கேலி, It is a mild mocking. 2. ஈட்டுத் தொகை, compensation amount. கடையைக் காலி செய்ய

ரூ 10,000 பகடி கொடுத்தேன். I gave Rs 10,000 by way of compensation.

**பகடைக்காய்-** 1. உருட்டும் ஆட்டக் காய், dice. பகடை ஆடுவோம். Let us play dice. 2.என்னைப் பகடைக் காய் ஆக்காதீர். Don't make me a scape goat.

**பகர்-** கூறு, tell. நீ பகர விரும்புவது என்ன? What do you want to tell me?

**பகரம்-** பதில், pledge, pawn. பகரமாக நீ என்ன தருகிறாய்? What do you offer me by way of pledge? பகர வளைவு, square bracket.

**பகல்-** சூரியன் இருக்கும் நேரம், day. பகல் வேலை, day work.

**பகல் கனவு-** நிறைவேறா எண்ணம், day dream. வீணாகப் பகற்கனவு காணாதே. Don't lose yourself in day dreams.

**பகல் கொள்ளை-** பலருக்கு தெரியும் முறையில் அளவுக்குமேல் பணம் பெறுதல், daylight robbery. Is Rs. 5000 the rent for this little flat? It is daylight robbery.

**பகல் வேடம்-** வெளிவேடம், out ward show. எல்லாம் பகல் வேடம், All mere outward show.

**பகலவன்-** சூரியன், sun. சூரியன் பௌதிகம், solar physics.

**பகவான்-** 1. கடவுள், God. பகவான் தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும். God only should save us.

**பகிர்-** 1. பிரித்துக் கொடு, share, divide. Share this cake among yourselves. 2. பரிமாறிக்கொள், share. என் அனுபவத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். I want to share my experience with you. பகிர்வு, sharing, distribution.

**பகிரங்கம்-** வெளிப்படை, open. பகிரங்க விசாரணை, open enquiry. பகிரங்கக் கடிதம், open letter.

**பகிஷ்கரி-** புறக்கணி, boycott. உலகமயமாக்கலால் வரும் பொருள்களைப் பகிஷ்கரிப்போம். Let us boycott the products of globalisation. பகிஷ்காரம், boycott.

**பகீரதப் பிரயத்தனம்-** இமாலய முயற்சி, herculean task. எல்லாப் பாடங்களிலும் நிறைய மதிப்பெண்கள் பெறுவது என்பது பகீரதப் பிரயத்தனம் ஆகும். It is really a Herculean task to score high marks in all subjects.

**பகு-** பங்கிடு, share. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. Share food and serve all. This is the essence of all books (T. 322)

**பகுத்தறி-** காரணகாரிய முறைப்படி தெரிந்து கொள். மனிதன் பகுத்தறிபவன். Man has the ability to reason. பகுத்தறிவு, reasoning.

**பகுதி-** பிரிவு, part. ஒரு தாவரத்திற்குப் பல பகுதிகள் உண்டு. A plant has many parts. 2. கீழ்வாய் எண், denominator. 3/4 என்பதில் 4. பகுதி. In 3/4, 4 is the denominator.

**பகுதி நேர-** சில மணி நேரம், part time. பகுதிநேர ஆசிரியர், part time teacher.

**பகுப்பு-** வகைப்பாடு, classification, analysis. தாவரங்களின் பகுப்பு, classification of plants. பருமனறி பகுப்பு, volumetric analysis. பண்பறி பகுப்பு, qualitative analysis.

**பகுபதம்-** பகுதி விகுதி எனப் பிரிக்கக் கூடியது, divisible word.

**பகை-** 1. *விரோதம்,* enmity. *பகை பகையையே உண்டாக்கும்.* Enmity breeds enmity. 2. *எதிரி,* enemy. The Mongoose is an enemy to snake. 3. *பகைவன்,* enemy. He is my arch enemy.

**பங்கம்-** 1. *கேடு,* harm. *அமைதிக்கு எந்தவிதமான பங்கமும் விளை விக்காதே.* Don't do harm to the peace process. 2. *களங்கம்,* blemish. *அது என் பெயருக்குக் களங்கம்.* It is a blemish to my name.

**பங்களிப்பு-** *தொண்டு,* contribution. *சமுதாய உயர்வுக்கு உன் பங்களிப்பு என்ன?* What is your contribution to the social uplift? *பங்களிப்பு செய்பவர், பங்காளி,* contributor.

**பங்காதாயம்-** *முதலீட்டுக்குரிய ஆதாயம்,* dividend. *இந்த ஆண்டு எங்களுக்கு 10% பங்காதாயம்.* This year we got 10% dividend.

**பங்காளி-** 1. *தயாதி,* agnate. 2. *கூட்டாளி,* partner. 3. *பங்காளிச் சண்டை,* the agnate quarrel.

**பங்கிடு-** *பகிர்ந்துகொடு,* share. *உணவைப் பங்கிட்டுக் கொள்வோம்.* Let us share food. *பங்கீடு,* allotment, ration.

**பங்கு-** *பங்காக உள்ள பகுதி,* share. *உன் பங்கு என்ன?* What is your share? What is your role?

**பங்கு கொள்-** 1. *கலந்து கொள்,* take part. *நான் நிகழ்ச்சியில் கலந்து கொள்வேன்.* I shall take part in the function. 2. *உன் இன்பதுன்பங்களில் நான் பங்கு கொள்வேன்.* I shall share your joys and sorrows.

**பங்குத் தந்தை-** *கிறித்தவ சமயத்தில் ஆயரால் அமர்த்தப்பட்ட குரு,* parish priest. *பங்குத் தந்தை அருள்சாமி,* Parish Priest Arulsamy.

**பங்குபோடு-** *பங்கைப்பிரி,* divide. *சகோதரர்கள் சொத்தினைத் தங்களுக்குள் பிரித்துக் கொண்டனர்.* The brothers divided the property among themselves.

**பங்குனி-** *தமிழில் கடைசி மாதம்,* pankuni (mid March to mid April), the last Tamil month.

**பங்கேற்பாளர்-** *பங்கு கொள்பவர்,* participant. *பங்கேற்பாளர்கள் எத்தனை பேர்?* How many are the participants?

**பச்சடி-** *காய்கறிக் கலவை,* salad. carrot salad.

**பச்சரிசி-** *புழுங்க வைக்காத அரிசி,* raw rice. *நான் எப்பொழுதும் பச்சரிசி சாப்பிடுபவன்.* I always eat raw rice.

**பச்சாதாபம்-** *பரிவு,* sympathy. *பச்சாதாபம் ஒரு மனிதப் பண்பு,* Sympathy is a human quality.

**பச்சிலை-** *மூலிகை,* herbal leaves. *சித்த மருத்துவம், பச்சிலைகளை அதிகம் பயன்படுத்துகிறது,* Siddha medicine uses the herbal leaves more. *பச்சிலைத் தோட்டம்,* herbal leaves garden.

**பச்சிளங் குழந்தை-** *மிக இளங் குழந்தை,* infant.

**பச்சை-** 1. *பசுமை நிறம்,* green. *இலையின் நிறம் பச்சை.* The colour of the leaf is green. 2. *வேகவைக்காதது,* raw. *பச்சைக் காய்கறி,* raw vegetables. 3. *வெளிப்படை,* open-minded. *அவர் வெளிப்படையானவர்.* He is an open-minded person. 4. *தூய,* utter. *பச்சைப் பொய்,* utter lies.

**பச்சைக்கல்-** *1. மரகதம்,* emerald. *2. சுடாத செங்கல்,* unbaked brick.

**பச்சைக் கற்பூரம்-** *கற்பூர மணமுள்ள பொருள்,* medicated camphor.

**பச்சைக் குதிரை-** *சிறுவர் விளையாட்டு,* leap - frog. *சிறுவர்கள் பச்சைக் குதிரை விளையாடுகிறார்கள்.* Children play leap-frog.

**பச்சைக்கொடி காட்டு-** *ஒப்புதல் அளி,* give the green signal. *மாநில அரசின் வறட்சி நீக்குத் திட்டத்திற்கு மைய அரசு பச்சைக் கொடி காட்டி விட்டது.* The Centre gave the green signal to the State's drought-relief scheme.

**பச்சை குத்து-** *உடலில் பச்சை நிறத்தில் அழியாத அடையாளங்களைக் குத்திக் கொள்ளுதல்,* tattoo. *பச்சை குத்துதல் தொன்று தொட்டு வருவது.* Tattooing is a good old custom.

**பச்சைப் பயிறு-** *பாசிப்பயிறு,* green gram.

**பச்சைப் பாம்பு-** *நச்சற்ற பசுமை நிறமுள்ள பாம்பு,* whipsnake, green snake.

**பச்சை மிளகாய்-** *பசுமையாக உள்ள மிளகாய்,* green chilli.

**பச்சையம்-** *பச்சை நிறமுள்ள தாவரப் பொருள்,* chlorophyll. *மாப் பொருள் உருவாக்கப் பச்சையம் இன்றியமையாதது.* Chlorphyll is essential to make starch.

**பச்சோந்தி-** *1. தன் இடத்திற்குத் தகுந்தவாறு தோலின் நிறத்தை மாற்றிக் கொள்ளும் ஓணான் வகை விலங்கு,* chameleon. *2. நிலையான கொள்கை இல்லாதவன்,* opportunist. *அவன் ஒரு பச்சோந்தி.* He is an opportunist.

**பசப்பு-** *ஏமாறுமாறு பேசு,* entice. *அவன் உன்னைப் பசப்பிச் சம்மதிக்க வைப்பான்.* He will entice you in such a way as to get your approval. *பசப்பு,* enticing.

**பசலை-** *தலைவன் பிரிவால் தலைவியின் உடலில் தோன்றும் நிறம்,* pallor. *சாயலும் நாணும் அவர் கொண்டார் கைம்மாறா நோயும் பசலையும் தந்து.* He seized my beauty and modesty. He left pangs and pallor to me (T. 1183)

**பசலைக் கீரை-** *சத்துள்ள ஒரு கீரை,* lettuce.

**பசி-** *1. உணவு கொள்ளும் வேட்கை,* hunger. *எனக்குப் பசிக்கிறது.* I feel hungry. *2. மிகு நாட்டம்,* thirst. *அறிவுப்பசி,* thirst for knowledge.

**பசு-** *பெண்மாடு,* cow. *பசும்பால்,* cow's milk. *பசு பால் தரும்.* The cow gives milk.

**பசு-** *ஆன்மா,* soul.

**பசுந்தாள் உரம்-** *தழை உரம்,* green manure.

**பசுமை-** *1. பச்சை நிறம், செழிப்பு,* greenness, freshness. *2. பசுமை நினைவுகள்,* green memories. *3. பசுமைப்புரட்சி,* green revolution.

**பசை-** *1. ஒட்டும் பொருள்,* paste. *பணவசதி,* affluence.

**பஞ்சணை-** *பஞ்சுமெத்தை,* cotton mattress.

**பஞ்சப்படி-** *அகவிலைப்படி,* dearness allowance, DA. *பஞ்சப் படி விலைவாசி உயர்வுக்கேற்ப உயர்த்தப்படுவது.* Dearness allowance is increased according to the increase in prices.

**பஞ்சப் பாட்டு-** 'இல்லை' என்று *கூறல்,* lamenting over one's inability.

**பஞ்சபூதம்-** ஐம்பொருள், five elements. நிலம், நீர், காற்று, வானம், தீ ஆகிய ஐந்தும் பஞ்சபூதங்கள். The five elements are: earth, water, air, sky and fire. நம் உடல் பஞ்ச பூதங்களாலானது. Our body is made of five elements.

**பஞ்சம்-** 1. உணவு இல்லா நிலை, famine. கடும் பஞ்சம், acute famine. 2. பற்றாக்குறை, scarcity. தண்ணீர்ப் பஞ்சம், scarcity of water.

**பஞ்சலோகம்-** ஐம்பொன், alloy of five metals. இச்சிலை பஞ்சலோகத் தாலானது. This idol is made of an alloy of five metals.

**பஞ்சவர்ணக்கிளி-** பல வண்ணம் உள்ள கிளி, macaw.

**பஞ்சாங்கம்-** நாள் கோள் குறிப்பு கள், almanac.

**பஞ்சாட்சரம்-** 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்து மந்திரம், a mystic five letter word.

**பஞ்சாமிர்தம்-** ஐந்துபொருள் சேர்ந்த இனிப்பு, a mixture of five sweet substances.

**பஞ்சாயத்து-** ஊராட்சி, panchayat. பஞ்சாயத்து யூனியன், Panchayat Union.

**பஞ்சாலை-** பஞ்சை மூலப்பொரு ளாகக் கொண்டு துணி செய்யும் ஆலை, cotton mill.

**பஞ்சு-** இலேசான வெண்பொருள், cotton. பஞ்சுமிட்டாய், cotton candy.

**பஞ்சை-** 1. ஏழை, poor. 2. நோஞ்சான், emaciated person.

**பட்சத்தில்-** பொருட்டு, in the event of. அவன் வரும் பட்சத்தில், in the event of his coming.

**பட்டணம்-** நகரம், city, town. Madras city. பட்டணம் படி, Madras measure.

**பட்டத்தரசி-** பட்டத்திற்கு வரும் தகுதியுள்ள அரசனின் மனைவி, queen.

**பட்டத்து இளவரசன்-** பட்டத்திற் குரியவன், crown prince.

**பட்டத்து யானை-** அரச ஊர்வலத்தில் வரக்கூடிய யானை, royal elephant.

**பட்டதாரி-** பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர், graduate, degree holder.

**பட்டப் பகல்-** தெளிவான பகல் நேரம், broad daylight. பட்டப்பகல் கொள்ளை, daylight robbery.

**பட்டப் பெயர்-** 1. காரண அடிப் படையில் அமையும் பெயர், title honorific. பட்டம், degree. பட்டயம், diploma. 2. பதவி, office.

**பட்டம்-** காற்றாடி, kite.

**பட்டமளிப்பு விழா-** பட்டம் வழங்கப் படும் நிகழ்ச்சி, convocation. பட்ட மளிப்பு விழா உரை, convocation address.

**பட்டயம்-** வரலாற்றுச் செய்தி பொறிக்கப்பட்ட தகடு, copper plate.

**பட்டர்-** திருமாலுக்குப் பூசை செய் பவர், one who performs puja to Lord Vishnu.

**பட்டவர்த்தனமான-** வெளிப்படை யான, explicit. பட்ட வர்த்தனமான பதில், an explicit reply.

**பட்டறிவு-** அனுபவத்தால் பெறும் அறிவு, experience. பட்டறிவால் நாம் அறிவது அதிகம். We learn a lot by experience. பட்டறிவு மிக்கவர், an experienced man.

**பட்டறை-** 1. இரும்பு வேலை நடை பெறும் இடம், smithy shop. 2. எந்திரங்களைப் பழுது பார்க்கும்

இடம், workshop. அகராதி இயல் பட்டறை, workshop on dictionary. 3. நெல் சேமிப்புக் கூடு, hay structure for paddy storage.

**பட்டா-** உரிமையாளர் ஆவணம், patta, settlement record. பட்டா தாரர், patta-holder.

**பட்டாக்கத்தி-** பட்டையான வாள், broad sword.

**பட்டாசு-** வெடி, cracker.

**பட்டாணி-** பட்டாணிக் கடலை, fried peas. பட்டாணிச் செடி, pea plant.

**பட்டாபிஷேகம்-** முடிசூட்டு விழா, coronation.

**பட்டாம்பூச்சி-** வண்ணத்துப் பூச்சி, butterfly.

**பட்டாமணியம்-** கிராமக் கணக்கர், (formely) village accountant.

**பட்டாளம்-** 1. போர்ப்படை, army. 2. கூட்டம், army, an army of work-men.

**பட்டி-** 1. பட்டிக்காடு, hamlet, village. 2. கால்நடை அடைக்கப்படும் இடம். cattle pound. 3. மடிப்புத் தையல், hemming. 4. பட்டிக் காட்டான், rustic. 5. பட்டித் தொட்டி, every nook and corner.

**பட்டி பார்-** வண்ணம் பூசுவதற்கு முன் சுவரைச் சமமாக்கல், making the wall surface even, before painting.

**பட்டி மன்றம்-** ஒரு பொருளை விவா திக்கும் சபை, a forum discussing the pros and cons of a subject.

**பட்டியல்-** 1. பட்டி, list, bill. பட்டியல் எங்கே? Where is the list? 2. ஓரியல் பட்டியல், concurrent list.

**பட்டினி-** பசியால் வாடுதல், star vation. பட்டினிச் சாவு, starvation death.

**பட்டு-** 1. பட்டிழை, silk yarn. பட்டுப் புடவை, silk saree. 2. பட்டுப்புழு, pupa of silk-worm. 3. பட்டுப் பூச்சி, silk-worm.

**பட்டும் படாமலும்-** அரை குறையாக, half-hearted way. அவர் எதையும் பட்டும்படாமலும் செய்வதில்லை. He never does any thing in a half-hearted way.

**பட்டுவாடா-** ஒப்படைத்தல், disburse ment. சம்பளப் பட்டுவாடா, disbursement of salary. கடிதப் பட்டுவாடா, delivery of letters.

**பட்டை-** 1. மரப்பட்டை, bark. 2. விபூதிப்பட்டை, streak of ashes. 3. தோல்பட்டை, strip of leather. 4. பட்டைச் சாராயம், country arrack.

**பட்டைசாதம்-** உண்டைக்கட்டி, cup-measured cooked rice offered to deity and then distributed to devotees.

**பட்டை தீட்டு-** பட்டைவெட்டு, cut the facets, பட்டை தீட்டிய வைரம், cut diamond.

**பட்டொளி-** பட்டின் மினுமினுப்பு, sheen of silk.

**படகு-** நீரைக் கடக்க உதவும் ஓடம், boat. மீன்பிடி படகு, fishing boat.

**படச்சுருள்-** சுருட்டி வைக்கப்பட் டுள்ள புகைப்படம், film roll.

**படத்தொகுப்பு-** திரைப்படங்களைத் தொகுத்தல், film editing.

**படப்பிடிப்பு-** திரைப்படப் பதிவு, film shooting.

**படப்படப்பு-** 1. துடிப்பு, palpitation. 2. விரைவு, excitement, sense of hurry.

**படம்-** 1. உருவம், picture, photo. 2. திரைப்படம், film. 3. தேசப்படம்,

**பிரத்தியேகம்-** *சிறப்பு,* special; extraordinary. Wherever he goes, he is recieved with special respect.

**பிரதட்சிணம்-** *கோயிலில் இடமிருந்து வலமாகச் சுற்றி வருதல்;* going round from left to right as a mode of worship in a temple.

**பிரதம-** *1. தலைமைப் பொறுப்பில் உள்ள பிரதம அர்ச்சகர்* Chief priest. *2. சிறப்பு, பிரதம விருந்தினர்,* chief guest.

**பிரதமர்-** *பிரதம மந்திரி,* Prime Minister.

**பிரதாபம்-** *1. அருஞ்செயல்,* achievement, valorous deeds. *2. அளப்பு,* heroics. Stop your heroics.

**பிரதானம்-** *முதன்மை,* important, significant event, main.

**பிரதி-** *1. நகல்,* copy. *இருபது பிரதிகள் எடு.* Take twenty copies. *2. மாற்று,* substitute. *3. ஒவ்வொரு ஞாயிறு,* every Sunday.

**பிரதிக்ஞை-** *உறுதிமொழி,* resolve. vow, declaration.

**பிரதிகூலம்-** *நன்மை,* disadvantage. The disadvantages are many.

**பிரதிநிதி-** *பேராளர்,* representative, delegate. *பிரதிநிதித்துவம்,* representation.

**பிரதிபலன்-** *பதில் நன்மை,* help in return.

**பிரதிபலி-** *எதிரொளி,* reflect. *ஆடி ஒளியைப் பிரதிபலிக்கும்.* The mirror reflects light. *பிரதிபலிப்பு,* reflection, manifestation.

**பிரதிபிம்பம்-** *பிரதிபலிக்கப்பட்ட உருவம்,* mirror image.

**பிரதிமை-** *உருவச் சிலை,* image, figure.

**பிரதி உபகாரம்-** *கைமாறு,* benefit in return.

**பிரதிவாதம்-** *ஒரு வாதத்திற்கு எதிராக அமைவது.* counter argument, defence. *பிரதிவாதி,* defendant.

**பிரதிஷ்டை-** *நிறுவுதல்,* instalation of the deity in a temple.

**பிரதேசம்-** *1. நிலப்பகுதி,* region. *2. மாநிலம்,* state, province.

**பிரபஞ்சம்-** *பூமி, சூரியன், நட்சத்திரங்கள், விண்வெளி உள்ளிட்ட அண்டம்,* universe.

**பிரபந்தம்-** *ஒரு சிற்றிலக்கியம்,* minor literature.

**பிரவாகம்-** *வெள்ளம்,* flood. *உணர்ச்சிப் பிரவாகம்,* flood of emotion. *பிரவகி,* be in spate.

**பிரவேசம்-** *நுழைவு,* entry. *பிரவேசக் கட்டணம்,* entrance fee. *பிரவேசி,* enter.

**பிரளயம்-** *பேரழிவு, வெள்ளம்,* deluge.

**பிரஜா உரிமை-** *குடியுரிமை,* citizen ship. *பிரஜை,* artisan.

**பிரஸ்தாபம்-** *பேச்சு,* reference, mention, talk. *பிரஸ்தாபி,* talk, mention.

**பிராகிருதம்-** *சமஸ்கிருதத் தொடர்பு உள்ள பேச்சு மொழி,* dialect derived from Sanskrit.

**பிராட்டி-** *1. தேவி,* goddess. *2. மூதாட்டி,* venerable old lady.

**பிராணவாயு-** *உயிர்வளி, பிராணன்,* life.

**பிராணாயாமம்-** *யோக மூச்சுப் பயிற்சி,* breathing exercise in Yoga.

**பிராணி-** *விலங்கு,* animal.

**பிராது-** *முறையீடு,* suit.

**பிராந்தியம்-** *நிலப்பகுதி,* region. *பிராந்தியக் கட்சி,* regional party.

**பிராப்தம்-** *1. பேறு,* luck, good fortune. *2. விதி,* destiny.

**பிராயச்சித்தம்-** *கழுவாய்,* atonement.

**பிராயம்-** *1. வயது,* age. *2. பருவம், குழந்தைப் பருவம்,* childhood.

**பிரார்த்தனை-** *வழிபாடு,* prayer.

**பிரான்-** *தேவன்,* God.

**பிரி-** *1. விலக்கு,* separate. *கலவையைப் பிரி.* Separate the mixture. *2. பகு,* divide. Divide the property equally.

**பிரி-** *வைக்கோல் முறுக்கப்பட்டது,* twisted hay, wisp, strand. *பிரி மணை,* ring-shaped pad made of twisted hay.

**பிரியம்-** *1. அன்பு,* affection, dear. *பிரியமுள்ள அப்பாவுக்கு,* Dear father. *2. விருப்பம்,* liking. *இசைப் பிரியர்,* lover of music.

**பிரியாவிடை-** *வழியனுப்பு விழா,* farewell.

**பிரிவினை-** *பகுப்பு,* division, partition. *நாட்டுப் பிரிவினை,* division of country. *பிரிவினைச் சக்தி,* divisive force. *பிரிவினை வாதம்,* separatism, secessionism. *பிரிவினைவாதி,* separatist, secessionist.

**பிரிவு-** *1. பகுப்பு,* division. *தமிழில் இயல், இசை, நாடகம் என மூன்று பிரிவுகள் உள்ளன.* There are three divisions in Tamil, namely, Literature, music and drama. *2. பிரிந்திருத்தல்,* separation. *பிரிவுத் துன்பம்,* pangs of separation.

**பிரிவு உபசாரம்-** *பிரியாவிடை,* farewell.

**பிரீதி-** *மகிழ்ச்சி,* satisfaction. I do it for my own satisfaction.

**பிருகா-** *கமகம்,* voice modulation.

**பிரடை-** *வீணையில் கம்பிகளைத் திருப்பும் கட்டை,* turning key in Veena.

**பிரேதப் பரிசோதனை-** *பிண ஆய்வு,* autopsy, post-mortem.

**பிரேதம்-** *உயிரற்ற உடல்,* dead body, corpse. *பிரேதக் களை,* deadly pale face. *பிரேத விசாரணை,* inquest.

**பிரேமை-** *மோகம்,* love, passion. *இசைப் பிரேமை,* love for music.

**பிரேரணை-** *தீர்மானம்,* resolution. *கூட்டத்தில் நிறைவேற்றிய தீர்மானங்கள்,* resolutions passed at the meeting.

**பிரைகுத்து-** *பாலில் சில துளிகள் மோர் சேர்த்துத் தயிராக்கு,* add a few drops of buttermilk in order to make curds.

**பில்லி சூனியம்-** *தீமை செய்யும் மந்திர ஏவல்,* sorcery, witchcraft.

**பிழம்பு-** *திரட்சி,* ball, mass. *தீப் பிழம்பு,* ball of fire.

**பிழி-** *1. சாறு பிழி,* squeeze the sweet orange. *2. பிழிந்து வேலை வாங்கு,* extract work.

**பிழை-** *1. பிழைத்திரு,* survive. Many survived in the accident. *2. தவறு,* mistake. *3. பிழை திருத்தம்,* errata. *பிழைதிருத்துபவர்,* proof-reader.

**பிழைப்பு-** *வாழ்க்கை,* existence, subsistence.

**பிட்டுக் கொடு-** *துண்டாக்கிக் கொடு,* break and give.

**பிள்ளை -** *1. குழந்தை,* child. *2. மகன், மகள்,* son and daughter. *3. சிறுமி,* girl. *4. அணில்பிள்ளை,* squirrel. *5. பிள்ளைக் குட்டி,* children.

**பிள்ளைப் பூச்சி**- *ஒரு வகைப் பூச்சி,* gryllo talpa.

**பிள்ளைப் பேறு**- *குழந்தைகள் பெற்றெடுக்கும் நல்வாய்ப்பு,* blessed with children.

**பிள்ளை பிடிப்பவன்**- *குழந்தைகளைக் கடத்துபவன்,* kidnapper of children.

**பிள்ளையாண்டான்**- *இளைஞன்,* young chap.

**பிள்ளையார்**- *கணபதி,* Pillayar, the elephant-headed Hindu God. *பிள்ளையார் எறும்பு,* a kind of harmless black ants. *பிள்ளையார்ச் சுழி,* an auspicious mark, good beginning.

**பிள**- *1. பிளத்தல்,* split. *கட்டையைப் பிள.* Split wood. *2. முறி,* break, split. *கட்சி பிளவுண்டது.* The party split. *பிளவு,* break, split.

**பிளவை**- *புண்கட்டி,* carbuncle.

**பிளாச்சு**- *பிளக்கப்பட்ட மூங்கில் துண்டு,* split bamboo.

**பிளிறு**- *யானை ஓசையிடல்.* The elephant trumpets.

**பிற்காலம்**- *பிந்திய காலம்,* later period.

**பிற்சேர்க்கை**- *பின் இணைப்பு,* appendix, supplement, addendum.

**பிற்பகல்**- *நண்பகலுக்கு அடுத்த வேளை,* afternoon.

**பிற்பட்ட வகுப்பு**- backward class.

**பிற்படு**- *பிந்து,* lag behind, You are lagging behind.

**பிற்பாடு**- *1. பின்,* afterwards. Do it. afterwards. *2. பிற்காலம்,* later.

**பிற்போக்கு**- *முன்னேற்றத்தை விரும்பாமை,* reactionary.

**பிற**- *1. மற்ற,* other. *2. தோன்று,* appear. Life appeared on earth many thousand years ago. *3. தொடங்கு,*

**பிறகு**- *பின்னால்,* afterward.

**பிறந்தகம்**- *தாய்வீடு,* house of a woman's parents.

**பிறந்த நாள்**- *ஒருவர் தாயின் வயிற்றிலிருந்து வெளிப்பட்ட நாள்,* date of birth, birthday.

**பிறந்த மேனி**- *ஆடையின்றி இருத்தல்,* naked, nude.

**பிறப்பி**- *இயற்று,* promulgate. An ordinance was promulgated. *மின் பிறப்பி,* generator.

**பிறப்பிடம்**- *பிறந்த ஊர்,* place of birth. *பிறப்பு, பிறப்புரிமை,* birthright. Freedom is our birthright.

**பிறப்புறுப்பு**- *இனப்பெருக்க உறுப்பு,* genitals.

**பிறர்**- *ஏனையர்,* others. You need not worry about what others say.

**பிறவினை**- *பிறரைக் கொண்டு ஒரு செயல் நடப்பதைக் குறிக்கும் வினை,* causative verb.

**பிறழ்**- *பிறழ்தல், மூட்டு பிறழ்ந்தது.* deviate. dislocate. *பிறழ்ச்சி,* deviation, anomaly.

**பிறாண்டு**- *கீறு,* scratch. *பூனை பிறாண்டும்.* The cat will scratch.

**பிறைத் திங்கள்**- crescent moon. *பிறை,* phase. *பிறை வளைவு,* parenthesis.

**பின்**- *1. பின்புறம்,* back. *2. பின் பகுதி,* latter part. *3. பின்னால்,* backward.

**பின்குறிப்பு**- *1. பின்னால் எழுதப்படும் குறிப்பு,* post script. *2. கூடுதல் குறிப்பு,* additional notes.

**பின்தங்கு**- 1. be backward. 2. lay behind.

**பின்தொடர்-** *பின்னால் செல், பின் பற்று,* follow, go after.

**பின்பாட்டு-** *பின்னால் பாடுபவர்,* vocal accompaniment.

**பின்புத்தி-** *முன்னறிவு இல்லாமை,* lacking foresight.

**பின்புலம்-** *பின்னணி,* background.

**பின்புறம்-** *பின்பக்கம்,* backyard.

**பின்வரும்-** *அடுத்து வரும்,* following. The following is the text. *பின் வருமாறு,* follows.

**பின்வாங்கு-** *பின்னோக்கிச் செல்,* retreat. *படை பின்வாங்கியது.* The army retreated. *உன் வாக்குறுதி யிலிருந்து பின்வாங்காதே.* Don't go back on your word.

**பின்விளைவு-** *அடுத்து வரும் இயல்பு,* consequence, after effect. Beware of the consequences.

**பின்னங்கால்-** *பின்னுள்ள கால்,* hind limb.

**பின்னடை-** *பின்தங்கு,* lay behind. *பின்னடைவு,* set-back.

**பின்னணிப் பாடகர்-** *நாடகமேடை / திரைப்படத்தில் நடிப்போருக் காகப் பாடுபவர்,* playback singer.

**பின்னம்-** *முழு எண்ணில் ஒரு பகுதி,* fraction. 1/3 is a fraction.

**பின்னல்-** *1. சடை,* plaited hair. *2. நூற் பின்னல்,* knitting work. knit, weave.

**பின்னாளில்-** *பிற்காலத்தில்,* at a later date.

**பின்னிப்பிணை-** *ஒருங்கிணைத்து இருத்தல்,* intertwine.

**பின்னிரவு-** *நடு இரவுக்கு அடுத்த பொழுது,* past midnight.

**பின்னொட்டு-** *சொல்லின் பின்னால் சேர்க்கப்படும் விகுதி,* suffix. *(எ-டு) அவர்கள் - 'கள்' - பின்னொட்டு.*

**பின்னோக்கி-** *பின்னோக்கிய,* intro spect.

**பினாமி-** *ஒருவர் சொத்து இன்னொருவர் பெயரில் இருத்தல்,* binami, registration of property in some one else's name.

## பீ

**பீங்கான்-** *ஒருவகை வெள்ளை மண்ணால் செய்யப்பட்டுச் சுடப் பட்ட பொருள்,* porcelain.

**பீச்சாங்குழல்-** *நீரை வீசியடிக்கும் கருவி,* syringe.

**பீடபூமி-** *மேட்டு நிலம்,* plateau. *திபேத் பீடபூமி,* Tibet plateau.

**பீடம்-** *1. ஆடி, மேடை,* dais/ rostrum. *2. ஆட்சிபீடம்,* seat of power. *3. புலம்,* faculty. *4. பீடாதிபதி,* head of religious mutt.

**பீடி-** *1. வருந்துதல்,* be afflicted. *நோயால் பீடிக்கப்பட்டுள்ளார்.* He was afflicted with disease. *2. புகைக் கும் பொருள்,* beedi. *3. பீடிகை,* seat/ throne, preface.

**பீடு-** *1. பெருமை,* honour. *இப்பதவி உங்களுக்குப் பீடு சேர்க்கும்.* This office will bring honour to you. *2. பீடு நடை,* majestic gait.

**பீடை-** *1. துன்பம், பீடை ஒழிந்தது.* Misery departed. *2. தீமை,* evil (planet)

**பீதாம்பரம்-** *மஞ்சள் நிறப் பட்டுத் துணி,* yellowish cloth used for holy purpose.

**பீதி-** *பயம்,* panic. *பகல் கொள்ளை அக்கிரமத்தில் பீதியை உருவாக் கியுள்ளது.* The day light robbery has

**பீப்பாய்**- *கொள்கலம்,* barrel; a barrel of oil.

**பீர்க்கு**- *ஒரு காய்,* sponge gourd.

**பீரங்கி**- *ஒரு படைக்கலன்,* cannon, gun.

**பீராய்**- *சேகரி,* gather bit by bit. I gathered Rs. 20.

**பீளை**- *கண் ஓர அழுக்கு,* the dirt collecting in the eye corner.

**பீறிடு**- *1. பீச்சு,* get out. *நீர் பீறிடு கிறது.* Water gets out. *2. விரைவுடன் வெளிப்படுதல்,* burst out. Laughter burst out.

**பீனிசம்**- *மண்டை அழற்சி,* sinusitis.

## பு

**புக்கை**- *ஒருவகைச் சிற்றுண்டி,* rice cake with sour taste.

**புகட்டு**- *1. அறிவுறுத்து, பாடம் புகட்டு,* teach a lesson.

**புகல்**- *சொல்,* tell. What do you want to tell me?

**புகலிடம்**- *1. தஞ்சம் அடையுமிடம்,* asylum, The foreign scientist was granted asylum. *2. சரணாலயம்,* sanctuary. *பறவைகள் புகலிடம்,* bird sanctuary, Vedenthangal.

**புகழ்**- *1. புகழப்படுதல்,* fame, glory. *நற்புகழ் ஈட்டு.* Earn a good fame. *2. புகழ்ந்து கூறு,* praise. The President praised the scientist very much.

**புகார்**- *குறை,* complaint. *புகார் கூறு.* Lodge your complaint.

**புகு**- *நுழை,* enter. Air easily enters the room.

**புகுத்து**- *1. திணி,* impose. Impose a language. *2. அறிமுகப்படுத்து,* introduce. The new syllabus will be introduced from next year.

**புகுமுகவகுப்பு**- *கல்லூரி முன் படிப்பு,* pre-university course. The pre-university course has now become the higher secondary course.

**புகை**- *1. புகைத்தல்,* smoke. *புகை பிடிக்காதே,* Don't smoke. *2. நறுமணப் புகை,* incense. *3. புகைக்கூண்டு,* Chimney.

**புகைச்சல்**- *1. புகைஎழல்,* Smoke circulation. *2. எரிச்சல்,* throat irritation. *3. கசப்பு,* ill-feeling, hatred. *4. புகை பிடி,* Smoke (cigar).

**புகைப்படக் கருவி**- *ஒளிப்படம் எடுக்கும் கருவி,* Camera. *புகைப் படக்காரர்,* Cameraman, photographer. *புகைப்படச் சுருள்,* film roll. *புகைப்படத்தாள்,* film paper. *புகைப் படம்,* photo.

**புகைபோடு**- *புகை ஊது,* fumigate. *புகைவண்டி,* train.

**புகையிலை**- *வெற்றிலைப் பாக்குடன் சேர்த்து மெல்லும் சருகு,* tobacco. Cigar is made from tobacco.

**புகைவண்டி**- *தொடர்வண்டி,* train. *புகைவண்டி நிலையம்,* railway station.

**புங்கமரம்**- *ஒரு வகை மரம்,* Indian beech.

**புசி**- *உண்,* eat. *பசியாறப் புசி.* Eat to lessen your hunger. *வாழ்வதற்குப் புசி; புசிப்பதற்கு வாழாதே.* Eat to live but don't live to eat.

**புஞ்சை**- *புன்செய், மழையை நம்பி இருக்கும் நிலம்,* dry land. *புஞ்சைப் பயிர்,* dry crop.

**புட்டி**- *குப்பி,* bottle, flask. *புட்டிப் பால்,* powdered milk in a bottle to feed a baby.

**புடம்போடு**- *தீயில் உருக்கு,* Cupel. cupel the used gold chain. *புடம் போடுதல்,* Cupellation. *புடம் போட்ட தங்கம்,* Cupelled gold.

**புடல்**- *புடலங்காய்,* snake-gourd.

**புடவை**- *பெண்கள் அணியும் நீள் துணி,* saree. *பட்டுப் புடவை,* silk saree.

**புடை**- *1. வீங்கு,* swell. *புடைப்பு, 2. தூற்று,* swelling. *அரிசியைப் புடை,* winnow the rice.

**புடைசூழ**- *பின்தொடர்,* follow by. The chief physician was followed by his students.

**புடைப்புச் சித்திரம்**- *மேடான பகுதிகள் வெளியே தெரியுமாறு உள்ள ஓவியம்,* relief figure.

**புண்**- *காயம்,* wound. *1. தீயினால் சுட்ட புண்,* the wound caused by fire. (T. 129) *2. புண் அது.* It is a wound. (T. 257) *3. முகத்து இரண்டு புண் உடையர் கல்லாதவர்.* The ignorant have two wounds on their faces. (T. 393) *4. அஃது இன்றேல் புண் என்று உணரப்படும்.* If eyes lack mercy they will be regarded as wounds or sores.(T. 575) *5. விழுப் புண் படாத நாள் எல்லாம்.* The day without battle wounds. (T. 776).

**புண்ணியம்**- *1. நல்வினை,* virtue, good deed. *எப்பொழுதும் புண்ணியம் செய்.* Do always good deeds *2. வாழ்த்து,* blessing. I am going on well with your blessings. *3. தூயது,* holy, holy hand. *4. புண்ணியவதி,* blessed lady. *5. புண்ணியவான்,* blessed man.

**புண்படு**- *காயப்படுத்து,* wound, hurt. *பிறர் மனத்தைப் புண்படுத்தாதே.* Don't wound the feelings of others.

**புணர்**- *1. உடலுறவு கொள்,* have sex. *2. சொல் இயைபு,* Conjugate. *3. புணர்ச்சி,* Sexual intercourse, Conjugation.

**புத்தகப்புழு**- *நூல்கள் படிப்பதில் மிகுந்த விருப்பமுடையவர்,* book worm.

**புத்தகம்**- *நூல்,* book. *அஃது ஓர் அறிவு நூல்.* It is a book of knowledge.

**புத்தம்**- *பௌத்தம்,* Buddhism.

**புத்தம் புதிய**- *மிகவும் புதிய,* brand-new. *புத்தம் புதிய ஆடை,* grand-new dress. *புத்தாண்டு,* new clothes. *புத்தாண்டு,* New year.

**புத்தி**- *1. அறிவு,* sense, intellect. *உனக்குப் புத்தி கெட்டு விட்டதா?* Have you lost your sense? *2. மனப்போக்கு,* mentality. *உன் புத்தி சரியில்லை.* your mentality is not good. *3. புத்திசாலி,* intelligent person. *4. புத்திசாலித்தனம்,* intelligence. *5. புத்திமதி,* advice. *புத்திமதி கூறு,* Offer advice. *6. புத்திமான்,* learned man, wise man. *புத்திமான் பலவான்.* The wise are always mighty.

**புத்திரன்**- *மகன்,* son. *புத்திர பாக்கியம்,* blessed with children. *புத்திரி, மகள்,* daughter.

**புத்திலக்கியம்**- *புதிய கருத்துள்ள இலக்கியம்,* neo - literature.

**புத்துணர்ச்சி**- *புதிய மன எழுச்சி,* fresh feeling.

**புத்துயிர்**- *புதிய மலர்ச்சி,* rebirth, revival. *பண்டைய வழக்கங்*

களுக்குப் புத்துயிர், the revival of good old customs.

**புதர்**- அடர்ந்து வளர்ந்த தாவரத் தொகுதி, bush. கொல்லை புல்லும் புதருமாக உள்ளது. The field is full of bush.

**புதல்வன்**- மகன், son.

**புதல்வி**- மகள், daughter.

**புதன்**- 1. ஒரு கோள், Mercury. 2. புதன் கிழமை, Wednesday.

**புதிது**- புதியது, new. அது எனக்கு முற்றிலும் புதிது. It is quite new to me.

**புதிய ஆகமம்**- புதிய ஏற்பாடு, New Testament.

**புதிர்**- புரியாத ஒன்று, riddle. இயற்கை பல புதிர்களைக் கொண்டது. Nature has many riddles to solve.

**புதினம்**- நெடுங்கதை, நாவல், fiction.

**புதினா**- புதினாக் கீரை, mint.

**புதுப்பி**- சீரமை, renovate. கோயில் புதுப்பிக்கப்படுகிறது. The temple is being renovated.

**புதுமனை புகுவிழா**- கிரகப் பிரவேசம், house - warming ceremony.

**புதுமுகம்**- முதன்முதலில் அறிமுகப் படுத்தப்படுபவர், new face. அப் புதுமுகம் யார்? Who is that new face?

**புதுமை**- புதிய தன்மை, novelty. அதில் ஒன்றும் புதுமை இல்லை. There is no novelty in it whatsoever.

**புதுயுகம்**- புதிய காலம், new age.

**புதை**- 1. அடக்கம் செய், bury. சடலம் புதைக்கப்பட்டது. The corpse was buried. புதைத்தல், burial. 2. பதுக்கி வை, bury your treasure. 3. புதை குழி, grave, burial pit. 4. புதை சேறு, quagmire. 5. புதை பொருள், archaeological objects. 6. புதை மணல், quicksand. 7. புதையல், treasure. புதையல் தீவு, treasure island.

**புயம்**- கை, upper limb.

**புயல்**- புயல் காற்று, storm. புயல் கடுமையாக உள்ளது. The storm is severe.

**புரட்சி**- பெரும் மாற்றத்தை உண்டாக்கும் நிகழ்ச்சி. revolution. தொழிற் புரட்சி, industiral revolution. பசுமைப் புரட்சி, green revolution.

**புரட்டன்**- உண்மையை மாற்றி ஏமாற்றுபவன், cheat, fraud.

**புரட்டாசி**- தமிழ் மாதங்களில் ஆறாவது, sixth Tamil month. (mid September to mid October).

**புரட்டு**- 1. உருட்டு, roll. கல்லைப் புரட்டு. Roll the stone. 2. பக்கத்தைப் புரட்டு, turn the pages. 3. பொய், distortion of truth.

**புரதம்**- சத்துப் பொருள்களில் ஒன்றான உடல் வளர்ச்சிப் பொருள், protein. Protein is called the body builder.

**புரவலர்**- காப்பாற்றும் தன்மை உள்ளவர், patron. கலைப் புரவலர், patron of arts.

**புரவி**- குதிரை, horse. புரவியாட்டம், stilt horse dance.

**புரள்**- உருள், roll. தரையில் புரள். Roll on the ground.

**புரளி**- இல்லாததைக் கூறுதல், rumour. புரளி விரைவாகப் பரவும். Rumour spreads fast.

**புராணம்**- பழங்கதை, myth, purana. பெரிய புராணம், The great purana. புராணிகர், narrator of purana.

**புராதனம்-** *பழமை,* antiquity, good old. *புராதனக் கோயில்,* good old temple.

**புரி-** *1. அறி,* Understand. *உனக்கு அது புரிகிறதா?* Do you understand it? *2. பணி புரிதல்.* He serves as a teacher. *3. வைக்கோல் புரி,* strand of straw.

**புருவம்-** *இமைக்கு மேலுள்ள பகுதி,* eyebrow.

**புருஷலட்சணம்-** *ஆணியல்பு,* manly characteristics. *புருஷன்,* husband.

**புருஷார்த்தம்-** *உறுதிப் பொருள்.* Objects of pursuit. *திருக்குறளின் உறுதிப்பொருள்கள் மூன்று: அறம், பொருள், இன்பம்.* The objects of pursuit in Thirukkural are three: Virtue, Wealth and Love.

**புரையேறு-** *உணவுப்பொருள் மூச்சுக் குழலினுள் புகுந்து அடைத்துக் கொள்ளுதல்,* to be suffocated by food passing into the wind pipe.

**புரையோடு-** *சீழ்ப்பிடித்தல்.* get septic. *புரையோடிய புண்,* septic wound.

**புரோகிதம்-** *சமய ஒழுங்குப்படி சடங்குகளைச் செய்தல்,* performing religious rites. *புரோகிதர்,* prohit. performer of religious rites.

**புல்-** *ஒரு சிறுதாவரம்,* grass. *புல் நிலம்,* grassy land.

**புல்லன்-** *இழிந்த அறிவுடையவன்,* mean fellow. *அற்பன்,*

**புல்லரி-** *மயிர்க் கூச்செறிதல்,* be thrilled. *அந்த இனிய இசையைக் கேட்டதும் நான் புல்லரித்துப் போனேன்.* I was thrilled to hear the sweet music. *புல்லரிப்பு,* thrilling. *புல்லரிக்கும் படம்,* thriller.

**புல்லாங் குழல்-** *இனிய ஓசை எழுப்பும் குழல்,* flute. *பகவான் கிருஷ்ணனின் புல்லாங்குழல்,* Lord Krishna's flute.

**புல்லி-** *மலரின் வெளிப்பகுதி யிலுள்ள அழகிய இதழ்,* sepal.

**புல்லி வட்டம்-** *பூவின் முதல் சுருள்,* calyx. The calyx is the first whirl of the flower.

**புல்லுருவி-** *ஒட்டுண்ணி,* a parasitic plant.

**புல்வெளி-** *புல் அடர்ந்த இடம்,* pasture.

**புலப்படு-** *1. தெரிதல்,* be visible. *நுண்ணுயிரி கண்ணுக்குப் புலப் படாதது.* The micro organism is not visible to the eye. *புலப்படுத்து,* make something known. reveal.

**புலம்-** *1. பிரிவு,* faculty. *மொழிப் புலம்,* language. *2. நிலம், வட புலம்,* the North. *3. பரப்பு,* field. *காந்தப் புலம்,* magnetic field.

**புலம்பு-** *அழு,* lament. *மனைவி, கணவன் இறந்ததற்காகப் புலம்பி னாள்.* The wife lamented the death of her husband. *புலம்பல்,* lamentation, mourning.

**புலமை-** *அறிவுத் தேர்ச்சி,* scholarship, knowledge. *அவருக்குத் தமிழில் நல்ல புலமை உள்ளது.* He has a remarkable knowledge of Tamil. *புலவர்,* a title, poet, scholar. He is a Tamil scholar; *புலவன்,* poet.

**புலர்-** *விடி,* dawn. *பொழுது புலர்ந்தது. புலரி,* The day dawned.

**புலவி-** *ஊடல்,* sulking.

**புலவு-** *1. இறைச்சி,* flesh, meat. *2. ஒருவகைச் சிறப்புணவு,* a special dish either vegetarian or non-vegetarian.

**புலன்-** *ஐம்புலன்கள்,* five senses. *புலன்கள் ஐந்து: பார்த்தல்,*

கேட்டல், முகர்தல், சுவைத்தல், தொடுதல். The senses are five: seeing, hearing, smelling, tasting and touching. புலன் உறுப்பு, sense organs. புலன் உறுப்பு கொண்ட ஐம்பொறிகள் : கண், காது, மூக்கு, வாய், மெய். The sense organs are five: eye, ear, nose, mouth and body (skin)

**புலன் விசாரணை-** புலனாய்வு, investigation. புலன் விசாரி, investigate.

**புலனாகு-** புலப்படு, be evident. It is evident that you have done the wrong.

**புலால்-** இறைச்சி, meat, flesh.

**புலி-** 1. பூனை இனக் காட்டு விலங்கு, tiger. புலி சீற்றமுள்ள விலங்கு. The tiger is a ferocious animal. 2. துறைத் தேர்ச்சியுள்ளவர், genius, expert. அவர் இலக்கணத்தில் புலி. He is a genius in grammar.

**புலி ஆட்டம்-** புலி வேடம் போட்டு ஆடுதல். tiger - dance, a folk dance.

**புவனம்-** உலகம், world. புராணங் களில் கூறப்பட்டுள்ள புவனங்கள் பல. There are many worlds mentioned in the Puranas.

**புவி-** பூமி, earth. புவி உயிர்கள், lives on earth. புவி அறிவியல், earth science. புவியியல், geography. புவி இயற்பியல், geophysics. புவி யமைப்பியல், geology. புவி இயலார், geographer.

**புவி ஈர்ப்பு விசை-** பொருள்களைப் புவி தன்னை நோக்கி இழுக்கும் ஆற்றல், gravitational force. புவி ஈர்ப்பு, gravity.

**புழக்கடை-** வீட்டின் பின்வாயில், backyard.

**புழக்கம்-** புழக்கத்தில் இருத்தல். circulation. தற்பொழுது பல கள்ள நோட்டுகள் புழக்கத்தில் உள்ளன. Now many counterfeit notes are in circulation. 2. ஆள்நடமாட்டம், habitation. ஆள்நடமாட்டம் பாலை வனங்களில் அரிது. Human habitation is rare in deserts. 3. புழங்கு, be in circulation.

**புழு-** 1. புழுத்தல், be worry. கத்தரிக் காய் புழுத்துள்ளது. The brinjal is wormy. 2. புழு, worm. தட்டைப் புழு, flat worm. கொக்கிப் புழு, hook worm. நாடாப்புழு, tape worm.

**புழுக்கம்-** காற்றோட்டம் குறைந்து வியர்வை உண்டாகும் நிலை, sultry. இன்று புழுக்கம் அதிகம் உள்ளது. Today it is more sultry. புழுங்கு, being sultry.

**புழுக்கு-** வேக வை, boil. நெல்லைப் புழுக்கு. Boil the paddy.

**புழுக்கை-** விலங்குகளின் கழிவு, droppings of animals like sheep, rat.

**புழுங்கல்-** அவித்த நெல், parboiled paddy. புழுங்கல் அரிசி, parboiled rice.

**புழுதி-** 1. மண் துகள், dust. 2. தூள் இருக்குமாறு உழுத உலர் நிலம், dry ploughed soil. புழுதி உழு, plough the dry soil.

**புழுங்கல் சாகுபடி-** புன்செய் நிலச் சாகுபடி, dry farming.

**புழுவெட்டு-** புழு அரித்த, worm-eaten. (brinjal)

**புழை-** துளை, hole. மலப்புழை, anus.

**புள்-** பறவை, bird.

**புள்ளி-** *1. வட்டச் சிறுகுறி,* point, dot. *முற்றுப் புள்ளி,* fullstop. *அரைப் புள்ளி,* semicolon. *முக்கால் புள்ளி,* colon dash. *காற் புள்ளி,* comma. *2. ஆட்டப் புள்ளிகள்,* game points. They scored 10 points. *ஒரு குறிப்பிடத்தக்க ஆள்,* big wig. *அவர் பெரும்புள்ளி.* He is a big wig. *4. மதிப்பீடு,* estimate. *நான் போட்ட புள்ளி தவறாது.* My estimate never fails.

**புள்ளிமான்-** *உடலில் புள்ளிகள் உடைய மான்,* spotted deer.

**புள்ளியியல்-** *தகவல்களை எண்களால் குறித்துக் கணக்கிடும் அறிவியல் துறை,* statistics. *புள்ளி விவரம்,* statistics.

**புளகாங்கிதம்-** *மெய் சிலிர்ப்பு.* elation, ecstasy. *நான் புளகாங்கிதம் அடைகிறேன்.* I feel elated.

**புளி-** *1. புளித்தல்,* taste sour. *மாங்காய் புளிக்கும்* The mango is sour to taste. *2. சலிப்பு,* boredom. *இந்தப் பாட்டைக் கேட்டுப் புளித்து விட்டது.* The song bores me. *3. புளி,* tamarind. *4. புளிக் காய்ச்சல்,* spice concentrate of tamarind. *5. புளிச் சோறு,* tamarind rice. *6.புளிப்பு,* sourness. *7. புளி மூட்டை,* a sac of tamarind. (fruit) *8. புளிய மரம்,* tamarind tree.

**புளுகன்-** *பொய்யன்,* liar. *அவன் அண்டப் புளுகன்.* He is a notorious liar. *புளுகு,* lie. *அப்பட்டமான பொய்,* a blatant lie.

**புற்றீசல்-** *பெருமளவில் புறப்படும் ஈசல்,* swarm of moths.

**புற்று-** *1. கறையான் புற்று,* anthill. *புற்று மண்,* soft earth. *2. புற்று நோய்,* cancer.

**புறக்கணி-** *அலட்சியப்படுத்து,* ignore boycott. *தேவையல்லாதவற்றை அறவே புறக்கணி.* Ignore totally unwanted things. *புறக்கணிப்பு,* boycott.

**புறங்கூறு-** *கோள் சொல்,* tell tales. *கோள் சொல்லுதல் ஒரு தீய பண்பு.* Telling tales is a bad quality.

**புறங்கை-** *உள்ளங்கை மேல் பகுதி,* back of the palm.

**புறணி-** *வெளிப்பகுதி,* cortex. *சிறுநீரகப் புறணி,* cortex of the kidney.

**புறநகர்-** *நகர எல்லையைத் தாண்டியுள்ள பகுதி,* suburb. *புறநகர்ப் பேருந்துகள்,* suburban buses. *புறநோயாளி, மருத்துவ மனையில் தங்காமல் மருத்துவம் பெறுபவர்,* out-patient.

**புறப்படு-** *1. கிளம்பு,* start. *உடன் கிளம்பு.* start immediately. *2. புறப்பாடு, இரயில்கள் புறப்பாடு,* departure of trains. *3. சாமி புறப்பாடு,* ceremonial starting of the deity in procession.

**புறம்-** *1. வெளி,* external. *புற உறுப்புகள்,* external limbs. *2. பக்கம்,* side. *வடபுறம்,* northern side. *3. ஒரு புறம்,* on the one hand. *4. பண்டைய தமிழ் இலக்கியத்தில் வீரத்தைப் பற்றிய பாடல்கள் தொகுப்பு,* poetry of valour.

**புறம்பாக-** *மாறாக,* contrary. *அது உண்மைக்குப் புறம்பாக உள்ளது.* It is quite contrary to truth.

**புறம் பேசு-** *கோள் சொல்,* backbite.

**புறம்போக்கு-** *அரசு நிலம்,* poramboke lands.

**புறமுதுகிடு-** *புற முதுகு காட்டு,* run away from the battle-field, fled. *தோற்ற வீரர்கள் புறமுதுகு காட்டினர்.* The defeated soldiers ran away from the battle-field.

**புறவயம்-** *வெளிப்புறத்தன்மை,* objectively. *புறவயத்தேர்வு,* objective test.

**புறவழிச் சாலை-** *ஊரின் வெளிப்புறமாகச் செல்லும் பாதை,* by-pass road.

**புறவாசல்-** *பின்பக்க வாசல்,* back yard.

**புறா-** *விரைந்து பறக்கும் ஒரு பறவை,* pigeon, dove. *புறாக்கூடு,* pigeon hole.

**புன்சிரிப்பு-** *புன்னகை,* smile.

**புன்னை-** *ஒரு வகை மரம்,* mast wood.

**புனர்பாகம்-** *கஞ்சி,* well-cooked gruel.

**புனர்பூசம்-** *27 நட்சத்திரங்களுள் ஏழாவது.* the seventh of the 27 stars.

**புனர்வாழ்வு-** *மறு வாழ்வு,* rehabilitation.

**புனரமை-** *சீரமை,* renovate. 2. *மறு வாழ்வு அளி,* rehabilitate. *அகதிகள் மறுவாழ்வு அளிக்கப்பட்டனர்.* The refugees were rehabilitated.

**புனல்-** *நீர்,* water. *புதுப்புனல்,* fresh water.

**புனல் காடு-** *மலைப்பாங்குப் பயிரிடும் முறை,* slash and burn method of farming in the hilly tracts.

**புனல் மின்நிலையம்-** *நீரின் மூலம் மின்சாரம் தயாரிக்கும் இடம்,* hydro electric power station.

**புனிதம்-** *தூய்மை,* holiness. *குடும்பம் என்பது ஒரு புனித அமைப்பு.* The family is a sacred institution. *புனித வெள்ளி,* Good Friday.

**புனுகு-** *ஒரு நறுமணப் பொருள்,* civet cat's secretion. *புனுகுப் பூனை,* civet cat.

**புனை-** *1. புதிதாக உருவாக்கு,* invent. *மின்பல்பினை எடிசன் உருவாக்கினார்.* Edison invented the electric bulb. *2. அணி,* wear. *புத்தாடை புனை,* wear new clothes. *3. கவிதை புனை,* compose poetry. *4. புனை கதை,* fiction. *5. புனை சுருட்டு,* concocted news, fabrication. *6. புனைந்துரை,* poetic embellish ment. *7. புனை பெயர்,* pen-name, pseudonym.

## பூ

**பூ-** *1. மலர்,* flower, blossom. *2. மரம் பூத்துள்ளது.* The tree has blosso med. *3. கண் பூத்துவிட்டது.* Eyes have become dim. *4. ரொட்டியில் பூஞ்சணம் பூத்துள்ளது.* Fungus has appeared on the bread. *5. கண்ணின் வெண்புள்ளி,* white spot. *6. மத்தாப்புப் பொறி,* spark of a sparkler.

**பூக்குழி-** *தீ மிதிக்கும் குழி,* fire walking pit.

**பூகம்பம்-** *நிலநடுக்கம்,* earth quake. *ஓர் இலேசான பூகம்பம் நேற்று ஏற்பட்டது.* A mild earthquate occurred yesterday.

**பூகோளம்-** *புவி இயல்,* geography.

**பூங்கா-** *பூஞ்செடிகளும் மரங்களும் உள்ள இடம்,* park. *உயிரியல் பூங்கா,* geological park.

**பூங்காவனம்**- *பூந்தோட்டம்,* flower garden.

**பூச்சாண்டி**- *பயம் காட்டு,* scare. *பேய்க் கதைகள் சொல்லிப் பாட்டி குழந்தைகளுக்குப் பூச்சாண்டி காட்டினார்.* The grand mother scared the children by telling ghost stories.

**பூச்சி**- *பூச்சி இனம்,* insect. *பூச்சி உண்ணி,* insectivore. *பூச்சிக் கொல்லி,* insecticide. *பூச்சி பொட்டு,* pest.

**பூச்சு**- *பூசுதல்,* coating. *முதல் பூச்சு,* first coating.

**பூச்சூட்டு**- *பூவைத்து அழகுபடுத்து,* adorned with flowers.

**பூச்செண்டு**- *மலர்க்கொத்து,* bouquet.

**பூசணம்**- *பூஞ்சணம்,* mould.

**பூசணி**- *பறங்கி போன்ற வெள்ளைக் காய்,* white pumpkin.

**பூசம்**- *27 நட்சத்திரங்களில் எட்டாவது,* eighth of the 27 stars.

**பூசல்**- *தகராறு,* conflict. *தந்தை மகனுக்கிடையே ஒரு பூசல் இருந்தது.* There was a conflict between father and son.

**பூசனை**- *பூசித்தல்,* worship. *பூசி,* worship, pray.

**பூசாரி**- *1. சிறு தெய்வங்களுக்குப் பூசை செய்பவர்,* village priest. *2. பேய் ஓட்டுபவர்,* exorcist.

**பூசிமெழுகு**- *ஒன்றை மறைக்க முயற்சி செய், patch up thing. பூசி மெழுகாதே.* Don't patch up things.

**பூசு**- *தடவு, சந்தனம் பூசு.* smear sandal paste.

**பூசை**- *1. பூஜை,* worship. *2. அடி,* beating. *நல்ல அடி,* severe beating.

**பூஞ்சை**- *நோஞ்சை, சிறிய வலிமை யற்ற,* puny, fragile, fellow.

**பூஞ்சோலை**- *மலர்த்தோட்டம்,* flower garden.

**பூட்டங்கயிறு**- *பூட்டுங்கயிறு,* neck-rope of the bullock tied to the yoke.

**பூட்டு**- *1. மிதிவண்டியைப் பூட்டு,* lock the cycle. *2. சேர்,* Assemble the parts of a machine. *3. அணி,* adorn. *4. பூட்டும் கருவி,* lock. *பூட்டும் சாவியும்,* lock and key. *5. சிட்டம்,* hank.

**பூட்டூசி**- *ஊக்கு,* safety pin.

**பூடகம்**- *மறைவான தன்மை,* concealment. He lived in concealment.

**பூண்**- *1. அணி,* wear. Wear costly clothes. *2. நாரதர் வேடம் பூண்,* play the role of Naradha. *3. சபதம் பூண்,* Undertake a vow. *4. நட்பு பூண்,* We made friends with each other. *5. வளையம்,* metal ring.

**பூண்டு**- *1. நெடியுள்ள தாளிதப் பொருள்,* garlic. *2. வெங்காயம் போன்ற தாவரம்,* bulbous plant. Onion is a bulb. *புல்பூண்டு,* herb.

**பூண்டோடு**- *அடியோடு,* totally. *பூண்டோடு அழி,* destroy totally.

**பூணூல்**- *சில இன ஆண்கள் மார்பின் குறுக்காக அணியும் நூல்,* sacred thread.

**பூதக்கண்ணாடி**- *உருப்பெருக்கும் கண்ணாடி வில்லை,* magnifying glass.

**பூதநாடி**- *ஒரு வகை நாடி,* a kind of pulse.

**பூதம்**- *மந்திர ஆற்றல் படைத்த பெரிய உருவம்,* demon, monster. *2. பஞ்ச பூதம்,* five elements. *3. பூதவுடல்,* mortal body.

**பூதாகாரம்-** *மிக மிகப் பெரிது,* monstrous form. *வேலை இல்லாத் திண்டாட்டம் பூதாகாரமாக உருவெடுத்துள்ளது.* The problem of unemployment has assumed a monstrous proportion.

**பூதானம்-** *நிலநன்கொடை,* land gift. *வினோபாவின் பூதான இயக்கம்,* Vinoba's Bhoodan movement.

**பூந்தி-** *ஓர் இனிப்புத் தின்பண்டம்,* a kind of sweet.

**பூந்தொட்டி-** *மலர்ச்செடி வளர்க்கப் படும் தொட்டி,* flowerpot.

**பூப்பந்து-** *1. ஒரு வகைப் பந்து,* badminton ball. *2. பூப்பந்து விளையாட்டு,* badminton ball game.

**பூப்பள-** *பூக்குந் தாவரங்கள்,* flower ing plants.

**பூப்பு-** *மகளிர் வீட்டு விலக்கு,* menses. *பூப்பு நீராட்டு விழா,* puberty ceremony.

**பூப்பெய்து-** *திருமண வயதினை எட்டு,* attain puberty.

**பூபாளம்-** *காலையில் பாடப்படும் ஒரு வகைப் பண்,* a kind of morning raga.

**பூம்பூம் மாடு-** *ஆம், இல்லை என்று தலையாட்டும் மாடு,* decorated bull trained to nod.

**பூமத்தாப்பு-** *கொளுத்தப்பட்டால் பூக்களைப் போல் தீப்பொறி களைச் சொரியும் தீக்குச்சி,* flower sparkler.

**பூமத்திய ரேகை-** *நிலநடுக்கோடு,* equator.

**பூமாதேவி-** *பெண் தெய்வமான பூமிதேவி,* Goddess of the earth.

**பூமி-** *புவி,* the earth. *உயிர்கள் வாழும் ஒரே கோள் பூமி.* The only planet where living things exist is the earth.

**பூர்ணம்-** *நிறைவு,* perfection.

**பூர்த்தி செய்-** *1. நிறைவு செய்,* fill in. Fill in the blanks with right answers. *2. நிறைவேற்று,* fulfil. My desire is fulfilled.

**பூர்வ-** *1. முந்திய,* former. *பூர்வ ஜென்மம்,* former birth. *2. பழங்கால,* ancient. *பழங்குடிகள்,* tribals.

**பூர்வஜென்ம வாசனை-** *பழம்வினைத் தொடர்பு,* experience of previous birth in the present one. *பூர்வ ஜென்மம்,* previous birth.

**பூர்வாங்கம்-** *தொடக்கம்,* preliminary. *பூர்வாங்க வேலை,* preliminary work.

**பூர்வீகம்-** *1. ஒருவர் முதல் பிறப் பிடம்,* one's ancestral place of birth. *2. வழிவழி வருவது,* hereditary.

**பூரட்டாதி-** *27 நட்சத்திரங்களில் 25 ஆவது.* 25th star of the 27 stars.

**பூரணகும்பம்-** *மாவிலை முதலியவை உள்ள நீர்நிறைந்த புனித குடம்,* water pot with mango leaves as an auspicious object. *பூரணகும்ப மரியாதை,* poornakumba honours.

**பூரணம்-** *கொழுக்கட்டையின் உள்ளே வைக்கப்படும் இனிப்பு,* the sweet in the dumpling.

**பூரம்-** *27 நட்சத்திரங்களில் 11ஆவது.* Eleventh of the 27 stars.

**பூரா-** *முழுதும்,* whole. *இரவு பூராவும்,* for the whole night.

**பூராடம்-** *27 நட்சத்திரங்களில் 20 ஆவது,* twentieth of the 27 stars.

**பூரான்-** *ஒரு வகை ஊரும் பூச்சி,* centipede.

**பூரி-** *மகிழ்ச்சி அடை,* be happy. *நான் உன்னைப் பார்க்க மிக*

மகிழ்ச்சி அடைகிறேன். I am really happy to see you. 2. உடல் பூரித்தல், body becoming bulky. 3. பூரிப்பு, joy, happiness.

**பூரி-** கோதுமை/மைதா மாவினால் செய்யப்படும் உணவு, poori.

**பூரிதக் கரைசல்-** மேலும் கரை பொருள் கரைய இயலாத கரைசல், saturated solution.

**பூலோகம்-** பூமி, earth. பூலோகவாசி, inhabitants of the earth.

**பூவரசு-** பயனுள்ள ஒரு வகை மரம், portia tree.

**பூவன்பழம்-** ஒரு வகை வாழைப் பழம், poovan plantain fruit.

**பூவாழை-** கல்வாழை, Indian chot.

**பூவாளி-** செடிகளுக்கு நீர் ஊற்றும் வாளி, watering can.

**பூவேலை-** பூ வைத்துச் செய்யப் பட்ட வேலை, embroidery.

**பூவையர்-** நங்கையர், charming beauties.

**பூனை-** வீட்டில் வளர்க்கும் செல்ல விலங்கு, cat. பூனைக் குடும்பம், cat family. பூனைத் தூக்கம், cat nap. பூனை விசுவாசம், cat like gratitude.

**பூஜ்யம்-** 1. சுழி, zero. 2. பலன் இல்லாமை, nil result.

**பூஜை-** வழிபாடு, worship, puja. பூஜை போடு, offer puja. பூமி பூஜை, earth worship.

**பெட்டகம்-** 1. இரும்புப் பெட்டி, iron safe. 2. அறிவுப் பெட்டகம், store house of knowledge.

**பெட்டி-** பொருள் வைத்துக் கொள்ளும் அமைப்பு, box, case, trunk. 2. கூண்டு, wagon, carriage (rail), பெட்டிக் கடை, petty shop. பெட்டிச் செய்தி, box news.

**பெட்டி போடு-** சலவையாளர் சூடான இரும்புப் பெட்டியால் துவைத்த துணிகளின் சுருக்கம் நீக்கல், iron. சட்டையைப் பெட்டிப் போட்டு வாங்கிவா. Get the shirt ironed.

**பெட்டி வண்டி-** கூண்டுவண்டி, closed bullock cart.

**பெட்டை-** பெண், female. பெட்டைக் கோழி, hen.

**பெண்-** 1. பெண்மையுள்ளவள், female. 2. மகள், daughter. எனக்கு ஒரே ஒரு பெண். I have only one daughter. பெண் அழைப்பு, Bridal Reception. பெண்குறி, female genital organ. பெண்கேள், ask for bridal alliance. பெண்கொடு, Give one's daughter in marriage. பெண்டாட்டி, wife.

**பெண்டிர்-** மகளிர், woman.

**பெண்ணுரிமை-** பெண்ணுக்கென்று அமைந்த உரிமை, woman's rights. பெண் உரிமைச் சங்கம், Woman's Rights Association.

**பெண்ணெடு-** பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளல், Marry a bride.

**பெண்பால்-** (இலக்) பாலினத்தில் பெண் வகை. (எ-டு) அவள், feminine gender.

**பெண்பாவம்-** the sin against woman.

**பெண்பிள்ளை-** பெண், woman. நீ பெண்பிள்ளையிடம் என்ன வம்பு செய்கிறாய்? What mischief are you doing with a woman? பெண்மை, feminine. பெண்வயிற்றுப் பேத்தி, grand daughter by one's daughter. பெண்வயிற்றுப் பேரன், grand son by one's daughter.

**பெண் விடுதலை-** *பெண் சுதந்திரம்,* Woman's liberation.

**பெண்வீட்டார்-** *பெண் வீட்டு உறவினர்,* bride's relations.

**பெய்-** *1. பெய்தல்,* rain. *இன்று மழை பெய்யும்.* Today it will rain. *2. சோற்றில் நெய் பெய்.* Pour some ghee on rice.

**பெயர்-** *விழு,* fall off, come off. *ஒரு கல் மோதிரத்திலிருந்து பெயர்ந்து விட்டது.* A stone fell off from the ring. *2. இடம் பெயர்,* migrate. *வேலை தேடி மக்கள் இடம்பெயர்கின்றனர்.* People migrate in search of jobs. *3. நீக்கு,* remove. *கல்லைப் பெயர்,* remove the stone. *4. ஆட் பெயர்,* person's name. *5. புகழ்,* fame, name. *நல்ல பெயர்.* good name. *6. பெயர்ச் சொல்,* noun.

**பெயர்ச்சி-** *இடம்பெயர்தல்,* movement. change of place, displacement. *(சோதி) சனிப் பெயர்ச்சி,* movement of the planet Saturn.

**பெயர்த்து எழுது-** *பிரதி எடு,* copy. *கையெழுத்துப் பிரதியைப் பெயர்த்து எழுது.* Copy the manuscript.

**பெயர்ப் பலகை-** *பெயர் எழுதிய பலகை,* name board.

**பெயர்பெற்ற-** *புகழ்பெற்ற,* well-known. *அவர் பெயர்பெற்றவர்,* He is a well-known person.

**பெயர் வை-** *பெயரிடு,* name, christen. *நான் என் மகனுக்குச் செல்வன் என்று பெயர் வைத்து உள்ளேன்.* I have christened my son, Selvan.

**பெயரடை-** *(இலக்) பெயர் உரிச் சொல்,* adjective.

**பெயரளவில்-** *பேருக்கு,* for name sake. *நான் பெயரளவில்தான் முதலாளி.* I am the master for name sake only.

**பெயரெடு-** *நல்ல பெயர் வாங்கு,* Earn a good name.

**பெரிதாக்கு-** *உருவத்தை விரிவாக்கு,* enlarge, magnify. *பெரிதாக்கப்பட்ட படம்,* enlarged diagram. *எனக்கு ஒரு பெரிய வீடு உண்டு.* I have a big house.

**பெரிதுபடுத்து-** *பெரிய அளவில் உரு எடுக்குமாறு செய்.* Make something a big issue. *அதைப் பெரிதுபடுத் தாதே.* Don't make it a big issue.

**பெரிதும்-** *மிகவும்,* greatly. *நம்மால் பெரிதும் மதிக்கப்படும்,* well respected by all.

**பெரிய-** *1. அளவில் அதிகமான,* arge. *2. பெரிய அதிகாரி,* senior or higher official. *பெரிய கவிஞர்,* great poet.

**பெரிய ஆள்-** *புத்திசாலி,* clever fellow. You are really a clever fellow.

**பெரிய தலை-** *செல்வாக்குள்ளவர்,* influential person.

**பெரியப்பா-** *தந்தையின் அண்ணன்,* father's elder brother.

**பெரிய புள்ளி-** *செல்வாக்குள்ளவர்,* big shot.

**பெரியம்மா-** *பெரியப்பா மனைவி,* wife of father's elder brother.

**பெரியம்மை-** *வைசூரி,* small pox.

**பெரியமனது பண்ணு-** *கருணை காட்டு,* be large hearted. *பெரிய மனம்,* large heartedness. *பெரிய மனிதர்,* respectable man.

**பெரியமுள்-** *கடிகாரத்தில் நிமிட முள்,* minute hand.

**பெரியமேளம்**- barrel-shaped two headed drum.

**பெரியவர்**- *1. மூத்தவர்,* old man. *2. மதிக்கத்தக்கவர்,* respectable man.

**பெரிய வெள்ளிக்கிழமை**- *புனித வெள்ளி,* Good Friday.

**பெரியோர்**- *முதிர்ந்தோர்,* the old and the wise.

**பெரு**- *1. பருமனான,* be bulk. Now you are rather bulky. *2. மிகுதல்,* increase. *ஊழல் நாளுக்குநாள் பெருத்துக் கொண்டு வருகிறது.* Corruption is increasing day by day. *ஒ. பெருமகிழ்ச்சி,* great pleasure.

**பெருக்கம்**- *1. மிகுதி,* growth. *மக்கள் பெருக்கம்,* growth of population. *பெருக்கத்து வேண்டும் பணிதல்.* Be humble in prosperity. (T. 963)

**பெருக்கல்**- *1. பெருக்கிக் கணக்கிடுதல்,* multiplication. 4x4=16. *பெருக்கு,* multiply. *வருமானத்தைப் பெருக்கு,* Increase your income. *2. வெள்ளப் பெருக்கு,* floods. *3. பெருக்கெடு,* flood. *ஆறு பெருக்கெடுத்துள்ளது.* The river has flooded.

**பெருங்காயம்**- *ஒரு தாளிதப் பொருள்,* asafoetida.

**பெருங்குடல்**- *உணவு வழியின் இறுதிப்பகுதி,* large intestine.

**பெருச்சாளி**- *1. ஒரு பாலூட்டி,* bandicoot. *2. ஊழல் பெருச்சாளி,* a notorious corrupt person.

**பெருத்த**- *அதிக,* great. *பெருத்த சேதம்,* great damage.

**பெருந்தகை**- *மதிப்பு கருதி வழங்கும் சொல்.* honoured, dignitary. *பேராசிரியப் பெருந்தகை,* Honoured professor.

**பெருந்தன்மை**- *தாராளமனம்,* magnanimity. *உங்கள் பெருந்தன்மை உள்ளபடியே பெரிது.* Your magnanimity is really great.

**பெருநகர்**- *மாநகர்,* metropolis. *பெருநகரப் பேருந்துப் பணி.* metropolitan bus service.

**பெருநாள்**- *பெரிய விழாநாள், பொங்கல் பெருநாள்,* the great pongal festival.

**பெருநோய்**- *தொழுநோய்,* leprosy.

**பெரும்**- *1. அதிகமான,* great, large. *பெருங்கூட்டம்,* large crowd. *பெரும் வரவேற்பு,* great welcome. *2. கடுமையான,* severe. *பெரும் நெருக்கடி,* severe crisis. *3. பெரும் பேறு,* rare opportunity.

**பெரும்பாலான**- *பெருமளவு உள்ள,* the majority, a large number. *பெரும்பாலான மக்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழ் வாழ்கிறார்கள்.* A large number of people live below the poverty line.

**பெரும்பாலும்**- *அநேகமாக,* mostly. *இச்சொல் பெரும்பாலும் தவறாகப் பயன்படுத்தப்படுகிறது.* This word is mostly used in the wrong sense. *அவர் பெரும்பாலும் வரலாம்.* Most probably he may come.

**பெரும்பாலோர்**- *எண்ணிக்கையில் அதிக அளவு உள்ளவர்கள்,* majority. *மக்களில் பெரும்பான்மையோர் ஏழைகளே.* The majority of the people are poor.

**பெரும்பான்மை**- *தேவையான எண்ணிக்கை,* the majority. *ஆட்சி அமைக்க எங்களுக்குப் போதிய பெரும்பான்மை உள்ளது.* We have comfortable majority to form the

government. அறுதிப் பெரும்பான்மை, absolute majority.

**பெரும்போக்கு-** பெருந்தன்மை, magnanimity.

**பெருமக்கள்-** மதிப்பிற்குரியவர்கள், honoured people. அறிஞர் பெருமக்கள், honoured intellectuals.

**பெருமளவில்-** கணிசமாக, considerable. பெருமளவில் எங்களுக்கு மக்கள் ஆதரவு உள்ளது. We have the people's support considerably.

**பெருமாட்டி-** சீமாட்டி, Lady.

**பெருமாள்-** திருமால், Lord Vishnu. பெருமாள் கோயில் மாடு, the fat bull of Vishnu temple.

**பெருமான்-** கடவுள், Lord, God. முருகப் பெருமான், Lord Muruga.

**பெருமானார்-** முகமது நபி, Mohammed, the prophet.

**பெருமிதம்-** பெருமகிழ்ச்சி, sense of pride. உங்களை வரவேற்பதில் நான் பெருமிதம் கொள்கிறேன். I take pride in welcoming you.

**பெருமூச்சு-** நீண்டமூச்சு, long sigh.

**பெருமை-** பெருமித உணர்வு, greatness. பணியுமாம் என்றும் பெருமை. The great are always humble. (T. 978)

**பெருவழக்கு-** பெரும்பான்மை வழக்கு, largely prevailing custom or usage. எங்கள் ஊரில் இச்சொல் பெருவழக்காக உள்ளது. In our village, this term is largely in usage.

**பெருவாரி-** பெரும்பான்மை, a large number of. பெருவாரியான மக்கள் வாக்களிக்கவில்லை. A large number of people have abstained from voting.

**பெருவாழ்வு-** 1. பெரிய வாழ்வு. prosperous life. 2. பேரின்ப வாழ்வு, life of eternal bliss. மரணமிலாப் பெருவாழ்வு. a life of eternal bliss.

**பெருவிரல்-** கட்டைவிரல், thumb.

**பெருவெளி-** பரந்த வெளி, space, Heaven.

**பெற்றோர்-** தாய் தந்தையர், parents. பெற்றோர் ஆசிரியர் கழகம், Parent Teacher Association, (PTA).

**பெறு-** 1. குழந்தை பெறு, bear. அவள் இரு குழந்தைகள் பெற்றாள், She bore two children. 2. அடை, get. நாம் சுதந்திரம் அறவழியால் பெற்றோம். We got freedom by virtuous path. 3. பெற்றுக்கொள், என் கடிதம் உனக்குக் கிடைத்ததா? Have you received my letter? 4. மதிப்பு, be worth. உன்வீடு 10 இலட்சம் ரூபாய் பெறும். Your house is worth Rs 10 lakhs.

**பெறுமதி-** பெறுமானம், worth, value. உன் வீட்டின் பெறுமதி என்ன? What is the worth of your house?

## பே

**பேச்சாளர்-** 1. மேடையில் சொற்பொழிவு செய்பவர், speaker. orator. அவர் நல்ல பேச்சாளர். He is a good orator. பேச்சு, speech, talk. 2. அறிவுரை, advice. என் பேச்சைக் கேள். Please listen to my advice. 3. திட்டு, scolding. மேலாளரிடம் பேச்சு வாங்கினேன். I got a scolding from the manager.

**பேச்சுக்கு-** 1. உள்நோக்கம் எதுவுமின்றி, without any inner motive. ஒப்புக்கு, for the sake of formality.

**பேச்சுத் துணை-** பேசுவதற்கு ஒருவர், one to keep company. Now I have none to keep company.

**பேச்சுமூச்சு-** *உயிர்த்துடிப்பு,* consciousness. He has lost consciousness.

**பேச்சுவழக்கு-** *மக்கள் பேசும் மொழியில் வழங்குதல்,* spoken language usage.

**பேச்சுவாக்கில்-** *பேச்சின் இடையில்,* In the course of a conversation.

**பேச்சுவார்த்தை-** *நேருக்குநேர் பேசுதல்,* talk, dialogue, negotiation.

**பேசரி-** *ஒருவகை மூக்குத்தி,* a kind of nose stud.

**பேசாமடந்தை-** *அமைதியாக இருக்கும் பெண்,* silent woman.

**பேசு-** *1. கூறுதல்,* speak. *குழந்தை மழலைமொழி பேசுகிறது.* The baby babbles. *2. உரையாற்று,* talk. Today I want to talk about democracy. *3. திட்டு,* scold. The master scolded the servant.

**பேட்டி-** *நேர்காணல்,* interview. *பேட்டி காண்,* have an interview. Today I have an interview with the Chief Minister at 5 pm.

**பேட்டு-** *வடிவமைப்பு,* pattern or design.

**பேட்டை-** *1. வாழ்பகுதி,* area or localilty. *2. தொழிற்பேட்டை,* industrial estate. (Guindy)

**பேடி-** *1. அலி,* eunuch. *2. கோழை,* coward.

**பேடு-** *பெண்பறவை,* female bird. *இது பேடா சேவலா?* Is it hen or cock.

**பேணி-** *ஒருவகை இனிப்பு,* a kind of sweet.

**பேணு-** *பராமரி,* maintain. *நல்லுறவுகளை எப்பொழுதும் பேணு.* Maintain good relations always.

**பேத்தி-** *மகன் அல்லது மகளின் பெண்,* grand-daughter.

**பேத்து-** *பிதற்று,* talk nonsense. You are talking nonsense.

**பேதம்-** *1. வேறுபாடு,* difference. *சாதிபேதம்,* caste difference. *2. இசையில் குலைவு,* discordant note.

**பேதமை-** *மடமை,* folly. *பிறன் பொருளாள் பெட்டொழுகும் பேதைமை.* The folly of desiring a woman who is the property of another man.(T. 141) *பேதையார்,* fools.

**பேதலி-** *குழப்பம் அடை,* get confused, be confounded. I got confused on seeing the murder.

**பேதி-** *வயிற்றுப் போக்கு,* diarrhoea. *பேதிமருந்து,* medicine to arrest diarrhoea.

**பேதை-** *சிந்தித்துச் செயல்படாதவா,* ignorant.

**பேந்தப்பேந்த-** *குழப்பமடைந்து பார்த்தல்,* look confused. Why do you look confused?

**பேய்-** *1. பிசாசு,* ghost, evil spirit. *2. பேய்மழை,* terrible rain.

**பேயன்-** *1. ஒருவகை வாழை,* a kind of plantain. *2. கிறுக்கன்,* lunatic. *3. பேயச்சி,* lunatic woman.

**பேயாட்டம்-** *தேவையில்லாத ஆர்ப்பாட்டம். பேயோட்டி,* in a frenzy. Why are you in a great frenzy? *பேயோட்டு,* exorcise.

**பேர்-** *ஆள்,* person. *எத்தனை பேர்?* How many persons?

**பேர்-** *பெரும்,* great. *பேரழகி,* great beauty.

**பேரக்குழந்தை-** *மகன் அல்லது மகளின் குழந்தை,* grand child.

**பேரண்டம்-** *விண்ணகம்,* Universe.

**பேரணி-** *பெரிய ஊர்வலம்,* rally. The workers conducted a massive rally.

**பேரம்-** *ஒரு பொருளின் விலையைக் குறைத்துக் கேட்டல்,* bargain hard.

**பேரரசன்-** *மன்னர் மன்னன்,* emperor. *பேரரசு,* empire.

**பேரவை-** *1. சட்டமன்றம்,* legislative assembly. *2. குறிப்பிட்ட அமைப்பு,* forum.

**பேரறிவு-** *நிறைந்த அறிவு.* absolute knowledge.

**பேரன்-** *மகன் அல்லது மகளின் மகன்,* grandson.

**பேராசிரியர்-** *கல்லூரியில்/பல்கலைக் கழகத்தில் உயர்பதவியிலுள்ள ஆசிரியர்,* professor. *விலங்கியல் பேராசிரியர்,* professor of zoology. *பேராசிரியை,* woman professor.

**பேராசை-** *அளவுகடந்த ஆசை,* avarice. *பேராசை பெருநட்டம்.* Avarice will end in a great loss.

**பேராயம்-** *பேராயரின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதி,* arch diocese. *பேராயர்,* archbishop.

**பேராளர்-** *பிரதிநிதி,* representative, delegate.

**பேரிக்காய்-** *உண்ணும் ஒருவகைக் காய்,* a variety of pear.

**பேரிகை-** *முரசு,* a kind of kettle drum.

**பேரில்-** *பெயரில்,* in the name of. *கடவுளின் பேரில் கேட்கின்றேன்,* I ask in the name of God.

**பேரின்பம்-** *ஆன்மீக இன்பம்,* supreme bliss.

**பேரீச்சம்பழம்-** *ஒருவகை உலர் பழம்,* dates.

**பேருந்து-** *பொதுமக்கள் ஊர்தி,* bus.

**பேரூராட்சி-** town panchayat.

**பேரேடு-** *பதிவுகள் குறிக்கப்படும் பெரிய புத்தகம், பதிவுகளைப் பேரேட்டில் பதி.* Post the entries in the ledger.

**பேலா-** *கிண்ணம்,* cup. *சந்தனப் பேலா,* cup for sandle paste.

**பேழை-** *வேலைப்பாடுள்ள பெட்டி,* casket. The purse was presented in a casket.

**பேறு-** *கிடைப்பதற்கு அரியது.* fortune. *2. பிரசவம்,* delivery. *3. பேறுகாலம்,* confinement period.

**பேன்-** *ஓர் ஒட்டுண்ணி,* louse. *பேன் பார்,* delouse, remove louse.

**பேனா-** *எழுதுகோல்,* pen. The pen is mighiter than the sword. *பேனாக் கத்தி,* pen-knife. *பேனா நண்பர்,* pen-friend.

## பை

**பை-** *1. கொள்கலம்,* bag. *2. சட்டைப் பை,* pocket. *3. வயிற்றுப்பை,* pouch.

**பைங்கிளி-** *பச்சைக் கிளி,* green parrot.

**பைசல்-** *1. தீர்வு,* disposal. *பல வழக்குகள் பைசல் ஆகாமல் உள்ளன.* There are many cases pending disposal. *2. கடன் அடை,* clear the debts. *பைசாசம், பிசாசு,* devil.

**பைத்தியம்-** *பித்து,* lunacy, lunatic. *அவன் ஒரு பைத்தியம்.* He is a lunatic.

**பைய-** *மெதுவாக,* slowly. *பையச் செய்.* Do it slowly.

**பையன்-** *1. சிறுவன்,* boy. *2. மகன்,* son. *3. இளைஞன்,* youth.

**பைராகி-** *வடநாட்டுத் துறவி,* north-Indian ascetic.

## பொ

**பொத்தல் செய்-** *துளை செய்,* make a hole.

**பொக்கிஷம்-** *கருவூலம்,* treasure.

**பொக்கைவாய்-** *பல்லற்ற வாய்,* toothless mouth.

**பொங்கல்-** *1. அரிசியும் பச்சைப் பருப்பும் சேர்த்து வேகவைத்துச் செய்யப்படும் ஒருவகை உணவு,* a kind of food made of rice & greengram. *2. பொங்கல் விழா,* Pongal Festival.

**பொங்கு-** *1. பொங்குதல்,* boil. *பால் பொங்குகிறது.* The milk boils. *2. உணர்ச்சி பொங்குதல்,* out burst of emotions. *3. சமை,* cook. *சோறு பொங்கு.* cook rice.

**பொச்சரிப்பு-** *பொறாமை,* jealousy.

**பொசுக்கு-** *1. கருகச் செய்,* burn to ashes. *தாளைப் பொசுக்கு.* Burn the paper to ashes. *2. வாட்டுதல்,* scorn. *பொசுக்கும் வெயில்,* scorching sun.

**பொட்டணம்-** *ஒரு பொருளைத் தாளில் சுற்றிக் கட்டுதல்,* packet. *உணவுப் பொட்டலம்,* food packet.

**பொட்டல்-** *மைதானம்,* barren land.

**பொட்டு-** *1. திலகம்,* round mark. tilak. *2. பொட்டுநீர்,* drop of water. *3. நெற்றிப்பொட்டு,* temple. *4. பருப்பு,* broken bits of grains.

**பொட்டுக் கடலை-** half-broken bengal gram.

**பொட்டை-** *குருடு,* blind. *நீ குருடா?* Are you blind?

**பொட்டை நெட்டுரு-** *குருட்டுப் பாடம்,* rote learning.

**பொடியாக்கு-** *1. தூளாக்கு,* powder, pulverise. *2. மூக்குப்பொடி,* snuff. *3. காப்பிப்பொடி,* coffee powder. *4. பொடி மட்டை,* snuff strip.

**பொடிசு-** *1. சிறுதுண்டு,* tiny bits. *2. குழந்தை,* child.

**பொடியன்-** *சிறுவன்,* boy.

**பொடிவைத்துப் பேசு-** *குத்தலாகப் பேசு.* talk cunningly.

**பொடுகு-** *மண்டையோட்டின் மேல் உருவாகும் உயிரற்ற தோலின் சிறு வெண்ணிறத்தூள்,* dandruff.

**பொத்தல்-** *துளை,* hole, opening. *தோலில் பொத்தல் போடு.* Make a hole in the leather.

**பொத்தான்-** *குமிழ் மாட்டி,* button.

**பொத்து-** *வாய்பொத்து,* close your mouth.

**பொதிந்திருத்தல்-** *1. நிறைந்திருத்தல்,* fule of meaning. *பொருள் பொதிந்த கவிதை,* meaningful poetry. *2. மூட்டை,* bundle, load.

**பொது-** *1. எல்லோருக்கும் உரியது.* common. *பொதுக்கிணறு,* common well. *2. பொதுவிதி,* general rule. *3. பொது மருத்துவமனை,* general hospital. *4. பொது நூலகம்,* public library. *5. பொது அறிவு,* general knowledge. *6. பொது ஊழியர்,* public servant. *7. பொதுக்கணக்குக் குழு,* Public Accounts Committee (PAC). *8. பொதுக் கூட்டம்,* public meeting. *9. பொதுச் செயலர்,* general secretary. *10. பொதுத் தேர்தல்,* general election. *11. பொதுத் தேர்வு,* public examination. *12. பொது நலம்,* common good. *13. பொதுப் பணித்துறை,* Public Works Department. *14. (இலக்) பொதுப் பெயர்,* common name.

**பொதுப்படையாக**- *பொதுவாக,* in general.

**பொதுமக்கள்**- *ஒரு நாட்டு மக்கள்.* general public.

**பொதுமன்னிப்பு**- *ஒட்டுமொத்த மன்னிப்பு,* amnesty.

**பொதுமை**- *பொது என்னும் நிலை.* Universality.

**பொது வாக்கெடுப்பு**- *பொதுமக்கள் கருத்தறியும் வாக்கெடுப்பு,* referendum.

**பொதுவாக**- *பெரும்பாலும்,* generally. *இந்நேரத்தில் பொதுவாக, மின் தொடர் வண்டிகளில் கூட்டம் அதிகமிருக்கும்.* Generally the electric trains will be crowded at this time.

**பொதுவுடைமை**- *மக்களின் சார்பாக அரசாங்கம் உற்பத்தி வழிகளைப் பொதுவான உடைமையாக்கிக் கொண்டு அவற்றைக் கட்டுப் படுத்தி வைத்திருக்கும் ஒருவகை சமூகப் பொருளாதார அமைப்பு,* Communism.

**பொந்து**- *துளை,* hole in a tree. *ஆந்தை மரப்பொந்தில் வாழும்.* The owl lives in a tree hole.

**பொம்மலாட்டம்**- *பாவைக்கூத்து,* puppet show. *பொம்மை,* doll. *பொம்மை ஆட்சி,* puppet regime.

**பொய்**- *1. மழை பெய்யாமல் இருத்தல்.* fail. *பருவமழை பொய்த்து விட்டது.* The monsoon has failed. *2. நிறைவேறாமை,* fail. *என் சொல் பொய்த்து விட்டது,* My word has failed. *3. உண்மை அல்லாதது,* lie. *அவன் பொய் சொல்லுகிறான்.* He is telling a lie. *பொய்சாட்சி, பொய்ப்பி.*

**பொய்க்கால்**- *மரத்தால் செய்யப் பட்ட கால்,* stilt. *பொய்க்கால் குதிரை,* stilt-horse. *பொய்க்கால் குதிரை ஆட்டம்,* stilt horse dance. *பொய்மை,* falsehood. *பொய்யான.*

**பொய்கை**- *நீர்நிலை,* pond.

**பொய்யாமை**- *பொய் சொல்லாமை,* truth. *பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று.* If you speak truth you need not practice any other virtue. (T. 297)

**பொரி**- *1. எண்ணெயிட்டு வறுத்து எடு,* fry. *உருளைக்கிழங்கைப் பொரி.* Frythe potatoes. *2. பொரிந்து தள்ளு,* be extremely angry. He was extremely angry. *3. குஞ்சுபொரி,* hatch. *பெட்டை குஞ்சு பொரித்தது.* The hen has hatched out. *4. சோளப் பொரி,* popcorn. *5. பொரிகடலை,* fried chick-pea. *6. பொரியல்,* fried vegetables.

**பொருக்கு**- *1. சேற்றுப் பொருக்கு,* mud crust. *2. புண் பொருக்கு,* scab. *3. சோற்றுப் பொருக்கு,* dried food particles.

**பொருக்குவிதை**- *நல்ல விதை,* improved seed.

**பொருட்காட்சி**- *கண்காட்சி,* exhibition, fair.

**பொருட்டு**- *கருதத் தக்கது,* concern. *தோல்வி அவருக்கு ஒரு பொருட்டு அன்று.* Failure is not at all a concern for him.

**பொருட்டு**- *காரணமாக,* because of, for the sake of. *உன் பொருட்டு நான் இதைச் செய்கிறேன்.* I do this job for your sake.

**பொருட்படுத்து**- *கருத்தில்கொள்.* consider. *அதை நீ முக்கியம் என்று கருதத் தேவை இல்லை.* You need not consider it important.

**பொருட்பெயர்**- பொருள்களின் பெயர், names of things.

**பொருண்மை**- 1. அர்த்தம், meaning. பாடலின் பொருண்மை, the meaning of the song. 2. பருப் பொருள் தன்மை, material. பொருண்மை உலகம், material world. 3. நிறை, mass. பொருண்மை மாறாதது. Mass is constant.

**பொருண்மை இயல்**- மொழிப் பொருளை விளக்கும் துறை, semantics.

**பொருத்தம்**- 1. இசைந்தது, aptness. கட்டுரைத் தலைப்பு பொருத்தமாக உள்ளது. The article has an apt title. 2. ஒத்திருத்தல், matching.

**பொருத்தனை**- இறைவனிடம் வேண்டுதல், appeal to god. ஆண்டவரே எங்களைக் காத் தருளும். O God, save us. Let us make this appeal.

**பொருத்து**- 1. இணை, fit. fix. மின்கம்மியர் விசிறியைப் பொருத் தினார். The electrician has fixed the fan. நுண்ணிய கருவிகள் பொருத்தப் பட்ட விமானம், an airplane fitted with sophisticated weapons. 2. பதியன் செய், transplant. மாற்றி தயம் பொருத்தப்பட்டது. The heart was transplanted.

**பொருந்திய**- பலம் கொண்ட, having strength. அவர் வன்மை பொருந்திய சர்வாதிகாரி. He is a mighty dictator.

**பொருமல்**- 1. வயிற்றினுள் ஏற்படும் நலக்குறைவினால் தோன்றும் உறுமல் ஒலி, rumbling in the stomach. 2. எரிச்சல், irritation. 3. பொருமு, rumble, fret. நீ பொருமத் தேவை இல்லை. You need not fret.

**பொருள்**- 1. பருப்பொருள், concrete object. கல் ஒரு பருப்பொருள். Stone is a concrete object. 2. செல்வம், wealth. அவருக்கு நிறையச் சொத்து உண்டு. He has abundant wealth. அர்த்தம், meaning. இச்சொல்லின் பொருள் என்ன? What is the meaning of this word. 4. நுவல்பொருள், subject matter. 5. பொருள்படு, mean. What do you mean by it?

**பொருள்முதல்வாதம்**- உலகாயதம், materialism. பொருள் முதல்வாதி, materialist.

**பொருளடக்கம்**- 1. உள்ளடக்கம், contents. 2. அடக்கம், contents.

**பொருளாகுபெயர்**- ஒருவகை ஆகுபெயர், a kind of metonymy.

**பொருளாதாரம்**- 1. பொருளியல், Economics, economy. 2. பொருள் வசதி, financial position.

**பொருளாளர்**- ஓர் அமைப்பின் நிதிப் பொறுப்பை ஏற்பவர், treasurer.

**பொல்லாங்கு**- தீமை, harm, evil. பொல்லாங்கு செய்யாதே. Don't harm. பொல்லாத்தனம், wickedness.

**பொல்லாத**- 1. தீமை தரும், bad, wicked. பொல்லாத பேர்வழி, a wicked fellow. 2. கடுமையான, பொல்லாத கோபம், extreme anger. 3. என்ன பொல்லாத வேலை? Is it so important?

**பொல்லாப்பு**- வெறுப்பு. hatred. பிறர் பொல்லாப்பைத் தேடிக் கொள் ளாதே. Don't incur the hatred of others.

**பொலி**- 1. விளங்கு, flourished, be blessed with. செல்வம் பொழி

யட்டும், Let prosperity flourish. 2. களத்தில் குவித்து வைக்கப் பட்டிருக்கும் நெல், paddy heap. 3. பொலிவு, lustre. கதையில் பொலிவு உள்ளது. There is a lustre in the story.

**பொலிகடா-** பொலிகாளை, இனப் பெருக்கத்திற்கு உதவும் காளை, stud bull. பொலிகுதிரை, stallion.

**பொழி-** 1. பொழிதல், shower, pour down. மழை கனமாகப் பொழி கிறது. The rain pours down heavily. 2. அன்பைப் பொழி, shower your love. 3. பொழிப்புரை, paraphrase. பொழில்- பூங்கா, garden, park.

**பொழிவு-** 1. பெய்தல், pouring. 2. பேச்சு, speech.

**பொழுது-** 1. நேரம், time. பொழுது போக்காதே. Don't while away the time. 2. காலைப்பொழுது, morning time. 3. மாலைப்பொழுது, evening time. 4. வேளை, occasion. 5. பொழுதுபோக்கு, recreation, hobby. உன் பொழுதுபோக்கு என்ன? What is your hobby?

**பொளி-** கல்லைக் கொத்து, chiselling. ஆட்டுக்கல்லைக் கொத்து. Chisel the grinding stone.

**பொற்காலம்-** சிறப்புப் பொருந்திய காலம், golden age. தமிழ் வரலாற் றில் சங்ககாலம் பொற்காலமாகும். The sangam period is the golden age in the history of Tamil.

**பொற்கொல்லர்-** பொன்வேலை செய்பவர், goldsmith.

**பொறாமை-** மனப்புழுக்கம், jealousy, envy. பொறாமை ஒரு தீய குணம். Jealousy is a bad quality.

**பொறி-** 1. வெட்டு, inscribe, engrave. எழுத்துகளைப் பொறி, engrave letters. பொறித்தல், inscribing. 2. தீப்பொறி, fire spark. 3. மின் பொறி, electric spark. 4. எலிப் பொறி, mouse trap. 5. எந்திரம், machine, engine. 6. பொறியாளர், engineer.

**பொறிகலங்கு-** தன்நிலை குழம்புதல், dazed. I was greatly dazed to hear the death news.

**பொறியியல்-** எந்திரம், கட்டடம் முதலியவை பற்றி ஆராயும்துறை, engineering. எந்திரப் பொறியியல், mechanical engineering. வேதிப் பொறியியல், chemical engineering. பொதுப் பொறியியல், civil engineering. கணிப்பொறியியல், computer engineering.

**பொறு-** 1. தாங்கு, bear, endure. வலியைப் பொறுத்துக் கொள், Endure the pain. 2. பொறுத்துக் கொள், please bear with me. 3. காத்திரு, wait. Please, wait for a few minutes. 4. பொறுத்தல், endurance, tolerance. 5. பொறுத்தார், enduring people.

**பொறுக்கி எடு-** தேர்வு செய், பொறுக்கு, select, choose. நல்ல ஆட்களைப் பொறுக்கி எடு. Select good workers. பொறுக்குத் தேர்வு, selection examination.

**பொறுத்த-** சார்ந்த, concerned. என்னைப் பொறுத்தமட்டில், as far I am concerned.

**பொறுத்து-** சார்ந்து, depending on. வானிலையைப் பொறுத்து மழை பெய்யும். It will rain depending on the weather.

**பொறுப்பாசிரியர்-** *ஒரு பத்திரிகையின் பொறுப்பினை வகிக்கும் ஆசிரியர்,* managing editor. *பொறுப்பாளர்,* organiser. *பொறுப்பாளி,* one who owns responsibility.

**பொறுப்பு-** *1. பொறுப்பை மேற்கொள்ளல்,* responsibility, duty. *உன் பொறுப்பு என்ன?* What is your responsibility? *2. இருப்பு, பொறுப்பு,* assets and liabilities.

**பொறுமை-** *பொறுத்துக் கொள்ளும் தன்மை,* patience, tolerance. *பொறுமை கடலினும் பெரிது.* Patience is greater than the sea.

**பொறுத்தல்-** *1. பொறுமை கொள்ளல், மன்னித்தல்,* having patience. *பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை மறத்தல் அதனினும் நன்று.* Always bear with patience the limitless harm done by others. Forgetting that is even better. (T. 152). *2. பொறுத்தார்,* one who bears. *பொறுத்தார் பூமி ஆள்வார்.* One who bears will rule the world.

**பொறை-** *பொறுத்துக் கொள்ளும் குணம்.* tolerance. *வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை.* To bear with fools is the strength of strength. (T. 153)

**பொன்-** *தங்கம்,* gold. *பொன் ஒரு விலை உயர்ந்த உலோகம்.* The gold is a precious metal.

**பொன்மொழி-** *கருத்து நிறைந்த வாக்கியம்,* saying, aphorism.

**பொன்வண்டு-** *ஒருவகை வண்டு,* a kind of beetle, golden beetle.

**பொன்விழா-** *ஐம்பது ஆண்டு நிறைவு விழா,* golden jubilee.

**பொன்னாங்கண்ணி-** *ஒருவகைக் கீரை,* a kind of greens.

**பொன்னாடை-** *பலர் முன்னிலையில் மதிப்புக்காக ஒருவருக்குப் போர்த்தப் படும் போர்வை,* shawl. *முக்கிய விருந்தினருக்கு ஒரு பொன்னாடை போர்த்தப்பட்டது.* A shawl was presented to the chief guest.

**பொன்னான-** *அரிய,* golden. *பொன்னான வாய்ப்பு,* golden opportunity.

**பொன்னிறம்-** *தங்கம் போன்ற நிறம்,* golden colour.

**பொன்னுக்குவீங்கி-** *ஒருவகை அம்மை,* mumps.

## போ

**போ-** *1. செல்,* go. *நான் கடைக்குப் போகிறேன்.* I go to the shop. *2. இழ,* lose. *வேலை போயிற்று.* I lost my job. *3. நிறுத்து,* shut off. *மின் வழங்கலை நிறுத்து.* Shut off the electric supply. *4. போக்கடி,* lose.

**போக்கிடம்-** *புகலிடம்,* shelter. *எனக்குப் போக்கிடம் அலுவலகம் தான்.* My shelter is the office only.

**போக்கிரி-** *1. காலி,* rowdy. *அவன் பேட்டைப் போக்கிரி.* He is the rowdy of the locality. *2. குறும்புக் குழந்தை,* mischievous child.

**போக்கு-** *1. நீக்கு,* remove, redress. *மக்களின் குறைகளைப் போக்கு.* Redress the grievances of the people. *2. இயக்கம்,* course. *ஆற்றின் போக்கு மாறி விட்டது.* The course of the river has changed. *3. நடத்தை,* conduct. *உன் போக்கு சரியில்லை.* Your conduct is not proper. *4. தற்காலப் போக்கு,* modern trend. *5. சாக்குபோக்கு,* excuse.

**போக்குக்காட்டு-** *பாவனை செய்,* pretend. *அவர் வீட்டுக்குப் போவதாகப் போக்குக் காட்டினார்.* He pretended as if he were going home.

**போக்குவரத்து-** *1. வண்டிகள் போதலும் வருதலும்,* traffic. *ஒருவழிப் போக்குவரத்து,* one way traffic. *2. வண்டிவசதி,* transport. *தற்காலத்தில் போக்குவரவு வசதிகள் பெருகியுள்ளன.* In modern days, transport facilities have increased. *3. போக்குவரத்துச் செலவு,* to and fro expenses. *4. கடிதப் போக்குவரத்து,* letter correspondence.

**போக-** *நீங்கலாக,* excluding. *செலவழிந்தது போக இருப்பு இதுவே.* This is the balance amount excluding expenses.

**போகட்டும்-** *கிடக்கட்டும்,* Leave it, come to the matter.

**போகப்போக-** *நாளாவட்டத்தில்,* in course of time. *போகப்போக எல்லாம் சரியாகிவிடும்.* In course of time, everything will be alright.

**போகம்-** *1. விளைச்சல்,* crop. *முதல் போகம்,* first crop. *இரண்டாம் போகம்,* second crop. *2. நுகர்ச்சி,* enjoyment. *3. புணர்ச்சி,* sexual union.

**போகி-** *1. பொங்கல் பண்டிகைக்கு முந்தைய நாள் இந்திரனைப் போற்றும் பண்டிகை,* the day previous to pongal. *2. நுகர்பவன்,* one who enjoys, Epicurean.

**போட்டாபோட்டி-** *கடும்போட்டி,* keen competition.

**போட்டி-** *1. பந்தயம்,* match, competition, contest. *பேச்சுப் போட்டி,* elocution competition. *விளையாட்டுப் போட்டிகள்,* sports competitions. *2. போட்டித் தொடர்,* series of matches. *3. போட்டியிடு,* compete. *போட்டி மனப்பான்மை,* competitive spirit. *4. போட்டியாளர்,* competitor.

**போடு-** *தவறவிடு,* drop. *பேனாவைக் கீழே போட்டேன்.* I dropped my pen on the floor. *2. குண்டு போடு,* drop bombs. *3. குட்டி போடு,* bring forth young ones. *4. வெளியிடு,* publish. *உன் ஆய்வேட்டை நூலாகப் போடு.* Publish your thesis. *5. சோறு போடு,* Serve food.

**போண்டா-** *ஓர் உருண்டை வடிவக் காரத் தின்பண்டம்,* bonda a ball-like snack.

**போணி-** *முதல் விற்பனை,* first sale.

**போத்தல்-** *புட்டி,* bottle. *ஜாடி,* jar.

**போதாக்குறை-** *பற்றாக்குறை,* shortage.

**போதகர்-** *1. கல்வி கற்பிப்பவர்,* teacher. *2. மதபோதகர்,* preacher.

**போதம்-** *அறிவு,* knowledge. *சிவஞானபோதம்,* Sivagnana Bodam - knowledge about Lord Siva, the great philosophic work in Tamil written by Meikander.

**போதனாமொழி-** *பயிற்றுமொழி,* medium of instruction. *உயர்படிப்பில் போதனாமொழி ஆங்கிலமே.* In higher studies, the medium of instruction is English only.

**போதனை-** *1. கற்பித்தல்,* instruction. *தற்காலப் போதனைமுறைகள்,* modern methods of teaching.

**போதாத காலம்-** *கெட்ட காலம்,* bad time. It is my bad time that I incur loss after loss.

**போதி-** *கற்பி,* teach, instruct. *அறிஞர்கள் போதித்த நெறிகள்,* the principles taught by the wise.

**போதிமரம்-** *அரசமரம்,* pipal tree. It is said that Lord Buddha attained liberation under a pipal tree.

**போதிய-** *வேண்டிய,* required, adequate. *போதிய இருப்பு உள்ளது.* We have required stock.

**போதிலும்-** *இருந்தபோதிலும்,* although, in spite of. *பணம் இருந்த போதிலும் அவருக்குக் கொடுக்க மனமில்லை.* Though he is rich, he had no mind to give.

**போதை-** *மயக்கநிலை,* intoxication. *போதைப் பொருள்,* narcotic drug.

**போய்ச்சேர்-** *1. அடை,* reach. *அவன் புகைவண்டி நிலையத்திற்கு உரிய நேரத்தில் போய்ச் சேர்ந்தான்.* He reached the station in time. *2. இறந்தார்,* died. He passed away.

**போய்விட்டுவா-** *சென்றுவா,* bid good bye. They bid good bye to each other.

**போர்-** *1. சண்டை,* war. *போர்தொடு,* wage a war. *2. வைக்கோல்போர்,* hay stack.

**போர்த்து-** *1. மூடிக்கொள்,* cover. *கம்பளியால் போர்த்திக் கொள்.* Cover youself with a woollen blanket. *பொன்னாடை போர்த்து,* Present a shawl.

**போர் நிறுத்தம்-** *சண்டையைத் தற்காலிகமாக நிறுத்துதல்,* cease fire. *போர் நிறுத்த உடன்பாடு,* ceasefire agreement.

**போரடி-** *அறுத்தப் பயிர்த்தாள் களைத் தரையில் அடித்தல்,* thresh paddy.

**போராட்டம்-** எதிர்ப்புத் தெரிவித்தல், stuggle, agitation. *சுதந்திரப் போராட்டம்,* freedom struggle. *வாழ்க்கைப் போராட்டம்,* struggle for life. *போராடு, போரிடு,* struggle.

**போராளி-** *ஆயுதம் ஏந்திப் போராடுபவர்,* militant.

**போல்-** *போல,* like. *குழந்தை தாயைப் போல் உள்ளது.* The child is like her mother.

**போலி-** *போல இருப்பது,* duplicate, counterfeit, imitation, fake. *போலி ஆவணம்,* false document.

**போளி-** *ஒரு இனிப்பு,* a round flat sweet.

**போற்று-** *1. புகழ்,* praise. *கடவுளைப் போற்றுவோம்.* Let us praise God. *2. போற்றிவளர்,* preserve. *பண்டைக் கலைகளைப் போற்றி வளர்.*

**போன்ற-** *போல,* like, such. *மகாத்மா காந்தி போன்ற மாமனிதர்கள்,* Great people like Mahathma Gandhi.

**போன-** *1. கடந்த,* last. *போன மாதம்,* last month. *2. போன வகுப்பு,* last class.

**போனால் போகிறது-** *பெரிதாகக் கருதாதே.* Don't take it seriously.

## பௌ

**பௌத்தம்-** *புத்த சமயம்,* Buddhism.

**பௌத்திரம்-** *மூல நோய்,* piles.

**பௌத்திரன்-** *மகன்வழிப் பேரன்,* grand son.

**பௌத்திரி-** *மகன்வழிப் பேத்தி,* grand daughter.

**பௌதிக-** *இயற்பியல்,* physical. *பௌதிக மாற்றம்,* physical change. *பௌதிகம்,* physics.

**பௌர்ணமி-** *முழுநிலவு,* full moon.

## ம

**மக்கட்பேறு-** *குழந்தைச் செல்வம்,* the wealth of children. *நன்கலம் நன் மக்கள்பேறு.* Good children are good ornaments. (T. 60)

**மக்கல்-** *கெட்டுப் போனது,* anything spoiled. *மக்கல் வைக்கோல்,* spoiled hay.

**மக்கள்-** *1. ஒரு நாட்டில் வாழ் பவர்கள்,* people. *2. குழந்தைகள்,* children. *மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்.* Children's touch delights the body. (T. 65)

**மக்கள்தொகை-** *மக்கள் எண்ணிக்கை,* population. *மக்கள் தொகை கணக் கெடுப்பு,* census. *மக்கள் தொகைப் பெருக்கம்,* population explosion.

**மக்கள் தொடர்பு அலுவலர்-** *பொது மக்களுடன் தொடர்பு கொள்ளும் அலுவலர்,* Public Relations Officer, (PRO). *மக்கள் தொடர்புச் சாதனங்கள்,* mass media.

**மக்களவை-** *நாடாளுமன்றக் கீழவை,* lower house of parliament, Lok Sabha.

**மக்களாட்சி-** *ஜனநாயகம்,* democracy.

**மக்காச் சோளம்-** *ஒரு வகைச் சோளம்,* maize.

**மக்கு-** *1. அழுகு,* decay. *இலைகள் மக்குகின்றன.* The leaves are decaying. *2. முட்டாள்,* dullard, dull head. *3. அடைக்கும் பொருள்,* putty.

**மகசூல்-** *விளைச்சல்,* produce; yield. *இந்த ஆண்டு நல்ல மகசூல்.* This year, the produce is good.

**மகத்தான-** *பெரிய,* great. *மகத்தான வெற்றி,* great victory. *மகத்துவம்,* greatness. *இக்கோயில் மகத்துவம் குறிப்பிடத்தக்கது.* The greatness of this temple is remarkable.

**மகப்பேறு-** *மக்களைப் பெற்றெடுத்தல்,* giving birth to children. *மகப்பேற்று மருத்துவர்,* maternity doctor. *மகப் பேற்று மருத்துவமனை,* maternity hospital.

**மகம்-** *27 நட்சத்திரங்களில் 10 ஆவது,* the tenth of the twenty seven stars.

**மகமை-** *சமூக இன மேம்பாட்டு வளர்ச்சி நிதி,* savings for the improvement of a community.

**மகரந்தம்-** *மகரந்தத்தூள்,* pollen grain.

**மகரம்-** *(சோதி) மீன இராசி,* capricon.

**மகராசன்-** *செல்வ நலமும் பிறநலங் களும் உள்ளவன்,* wealthy and blessed man.

**மகராசி-** *செல்வநலமுடன் பிற நலங்களும் உள்ளவள்,* wealthy and blessed lady.

**மகரிஷி-** *பெருமுனிவர்,* great saint.

**மகவு-** *குழந்தை,* infant, child.

**மகள்-** *பெண் குழந்தை,* daughter.

**மகளிர்-** *பெண்கள்,* women. *மகளிர் கல்லூரி,* women's college.

**மகன்-** *ஆண் குழந்தை,* son.

**மகஜர்-** *மனு,* petition. *மகஜர் அளி,* submit a petition.

**மகா-** *பெரும்,* great. *மகாவீரன்,* great warrior. *மகாயுத்தம்,* great war.

**மகா சன்னிதானம்-** *மடத்தின் பெருந் தலைவர்,* the chief of an abbey.

**மகாத்மியம்-** *பெருமை,* greatness.

**மகாநாடு-** *பெரிய கூட்டம்,* con ference. *மாநில மகாநாடு,* state

conference. மாவட்ட மகாநாடு, district conference.

**மகாராணி-** மன்னரின் பட்டத்து மனைவி, queen.

**மகாராஜா-** மன்னர் மன்னன், emperor.

**மகால்-** 1. அரண்மனை, palace. 2. நிலையம், institution. சரசுவதி மகால் நூலகம்.

**மகாவித்துவான்-** பெரும்புலவர், great scholar. Meenakshisundaram Pillai was a great Tamil scholar.

**மகானுபாவன்-** பெருமைக்குரிவர், exalted person.

**மகிமை-** 1. ஆற்றல், power. அம்பாள் மகிமை, the power of Goddess Ambal. 2. தாக்கம், impact.

**மகிழ்-** மகிழ்ச்சி கொள், rejoice, feel very happy. நான் உன்னைக் காண்பதில் மிக்க மகிழ்கிறேன். I am really happy to meet you. மகிழ்ச்சி, pleasure, joy, pride. It is a pleasure for me to release your book. மகிழ்வி, make one happy.

**மகிழமரம்-** நறுமணப்பூவுள்ள ஒரு மரம், ape - flower tree.

**மகுடம்-** மணி முடி, crown, the symbol of royal authority.

**மகுடி-** பாம்பாட்டியின் ஊதுக்குவி, snake - charmer's pipe.

**மகேசன்-** கடவுள், God. மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு. The verdict of people is the verdict of God.

**மகோதரம்-** பெருவயிறு, ascites.

**மகோன்னதம்-** மிகவும் சிறப்புள்ள, grand and great. மாநாடு மகோன்னதமாக நடைபெற்றது. The conference was held on a grand scale.

**மங்கல்-** பளபளப்பு குறைந்தது, being dim. மங்கல் ஒளி, dim light.

**மங்கல நாண்-** தாலி, sacred cord.

**மங்கலம்-** நன்மை, excellence. மங்கலம் என்ப மனைமாட்சி. The virtue of domestic life is the excellence of the wife.(T. 60)

**மங்களம் பாடு-** ஓர் இசை நிகழ்ச்சியில் கடைசியாக அனைவரையும் வாழ்த்தும் பாடலைப் பாடு. Sing the last song in a concert to bless all.

**மங்கு-** மங்கிப் போதல், fade. நிறம் மங்குகிறது. The colour fades.

**மங்கை-** பெண், woman, charming beauty.

**மச்சம்-** 1. கறுப்புப் புள்ளி, mole, a mark of identification. 2. மீன், fish.

**மச்சான்-** மச்சினன், மனைவியின் சகோதரன், wife's brother or sister's husband.

**மச்சினி-** அத்தை மகள், daughter of one's paternal aunt.

**மச்சு-** மாடி, upper floor.

**மசக்கை-** கர்ப்பிணிகளுக்கு வரும் காலைநோய், morning sickness of pregnant women.

**மசகு எண்ணெய்-** உராய்வைக் குறைக்கப் பயன்படும் எண்ணெய்க் கலவை, oil mixed with burnt straw. மசகு, grease.

**மசாலா-** உணவுக்குச் சுவையூட்டப் பயன்படும் நறுமணப் பொருள்களின் கலவை, mixed condiments and spices, curry stuff.

**மசி-** 1. மசியச் செய், mash. பழத்தை மசி, mash the fruit. 2. இணங்கு, yield. He will not yield to your request.

**மசியல்-** உருளைக்கிழங்கு மசியல், mashed potato.

**மசோதா-** *சட்ட முன்வடிவு,* bill. The bill will be presented tomorrow in the Assembly.

**மஞ்சம்-** *கட்டில்,* couch, bed.

**மஞ்சரி-** *1. பூங்கொத்து,* flower cluster. *2. திரட்டு,* collection.

**மஞ்சள்-** *1. மஞ்சள் நிறம்,* yellow colour. *2. ஒரு கிழங்கு,* turmeric. *மஞ்சள் தூள்,* turmeric powder. *மஞ்சள் அட்டை,* yellow card given as a warning to foot ball players.

**மஞ்சள் கயிறு-** *தாலிக் கயிறு,* yellow cord.

**மஞ்சள் கரு-** *முட்டையிலுள்ள மஞ்சள் பகுதி,* yolk.

**மஞ்சள் காமாலை-** *கல்லீரல் கோளாறினால் ஏற்படும் நோய்,* jaundice.

**மஞ்சள் பத்திரிகை-** *வாசகர்களைக் கவர பரபரப்பான (அ) அதிர்ச்சி ஊட்டும் செய்திகளை வெளியிடும் பத்திரிகை,* the yellow press.

**மஞ்சு-** *1. மேகம்,* white cloud. *2. மூடுபனி,* fog.

**மஞ்சுவிரட்டு-** *ஜல்லிக்கட்டு, காளை அடக்கும் போட்டி,* bullfight.

**மட்டப்பலகை-** *சமநிலை பார்க்கும் கருவி,* mason's level.

**மட்டம்-** *1. ஒரே அளவாக இருத்தல்,* level. *நீர்மட்டம்,* water level. *2. சமதளம்,* plane. *3. அடிமட்டம்,* lower stratum. *4. மோசம்,* bad substandard. *மட்டமான உணவு,* bad food.

**மட்டம் தட்டு-** *குறைவாகப்பேசு,* belittle. Don't belittle anyone.

**மட்டம்போடு-** *வாராது இருத்தல்,* absent. *அவன் பள்ளிக்கு இரண்டு நாட்கள் மட்டம் போட்டான்.* He deliberately absented himself from school.

**மட்டற்ற-** *அளவிலா,* very much. I am very much pleased to see you.

**மட்டில்-** *இயன்றவரை,* as far as possible. As far as possible, I will try to come.

**மட்டு-** *சற்றுக் குறைவு,* a little, less than the normal. Your height is a little less than the normal.

**மட்டுப்படு-** *குறைதல்,* subside. *காய்ச்சல் மட்டுப்பட்டுள்ளது.* The fever abated.

**மட்டுப்படுத்து-** *அடக்கு,* control. *கோபத்தை மட்டுப்படுத்து,* control your anger.

**மட்டும்-** *1. மாத்திரம்,* only, alone. *நாங்கள் இம்மசோதாவை ஆதரிக்கிறோம்.* We lend our support to this bill.

**மட்டு மரியாதை-** *உரிய மரியாதை,* due respect.

**மட்டை-** *1. தென்னை மட்டை,* coconut midrib, branch. *2. பனை மட்டை,* palmyra branch. *தேங்காய் மட்டை,* hush of coconut. *3. மட்டைப் பந்து,* cricket ball. *4. அடிக்கும் கருவி,* bat, stick.

**மட்பாண்டம்-** *மண்ணில் செய்த பாத்திரம்,* earthenware.

**மடக்கு-** *1. காலை மடக்கு,* bend your knees. *2. உன் கத்தியை மடக்கு,* fold your knife. *3. அடக்கு,* corner. The thief was cornered at last. *4. மடக்கு நாற்காலி,* folding chair. *5. ஒரு மடக்கில் குடி.* He emptied the glass at one draught. *6. (இலக்) சொல் மடக்கு,* repetition of word with a different meaning.

**மடங்கு-** *1. தடவை,* multiple. *2. மடிதல்,* get folded.

**மடச்சாம்பிராணி-** *முழுமுட்டாள்,* absolute fool. *மடத்தனம்,* foolishness.

**மடந்தை-** *பெண்,* woman.

**மடப்பள்ளி-** *கோயில் சமையல் அறை,* temple kitchen.

**மடம்-** *1. துறவிகள் வாழும் விடுதி,* abbey. *2. அறியாமை,* ignorance.

**மடமை-** *அறியாமை,* folly. *மனித மடமை,* folly of man.

**மடல்-** *1. கடிதம்,* letter. *2. தட்டைப் பகுதி,* flat surface. *3. காதுமடல்,* outer ear. *4. விபூதி மடல்,* sacred ash container.

**மடாதிபதி-** *மடத்துத் தலைவர்,* head of an abbey. *மடாலயம்,* abbey.

**மடி-** *1. இற,* die. *போரில் பலர் இறந்தனர்.* Many died in war. *2. மடங்கி இருத்தல்,* fold. *தாளை மடி,* fold the pater. *இருமடி,* two fold. *மும்மடி,* three fold. *3. மடியில் உட்கார்,* sit on the lap. *4. பசுமடி,* cow's udder. *5. தூய்மை,* ceremonial purity.

**மடிப்பிச்சை-** *1. இடுப்புத் துணியை ஏந்திப் பிச்சை பெறும் சடங்கு,* ritual of receiving alms in the waist cloth. *2. இரந்துபெறு,* receive something as if by begging.

**மடிப்பு-** *1. மடிந்த நிலை,* crease. Iron a crease in your trousers. *மடிப்பு விழாத் துணி,* crease resistant cloth. *2. தோல் மடிப்பு,* round crease on old man's eyes. *3. அலை மடிப்பு,* wavy line.

**மடு-** *1. நீர் சுரக்கும் இடம்,* water hole. *2. பெரும்பள்ளம்,* deep gorge. *3. குழி,* pit. *4. மடிக்காம்பு,* nipple of udder.

**மடை-** *1. நீரோடும் வழி,* narrow channel. *2. மதகுப் பலகை,* slice gate. *3. கடை மடைப்பகுதி,* tail end area.

**மடைமாற்று-** *1. வழியை மாற்று,* change the course of the channel. *2. நல்வழிப்படுத்து,* sublimate. *மடை மாற்றல்,* sublimation. (e.g.) education

**மடையன்-** *முட்டாள்,* fool.

**மண்-** *1. துகள் தொகுதி,* soil, earth. *வளமான மண்,* fertile soil. *2. நாடு,* soil, land. *மண்ணின் மைந்தன்,* son of the soil. *களிமண்,* clay. *மணல்,* sand. *தோட்டமண்,* loom. *கரிசல் மண்,* black soil.

**மண்டபப் படி-** *உற்சவ மூர்த்தியை மண்டபத்தில் எழுந்தருளச் செய்தல்,* the ceremony of receiving the deity in the hall. *2. மண்டகப் படிச் செலவு,* special ritual expenses. Who bears the special ritual expenses today?

**மண்டபம்-** *கோயில் மண்டபம்,* temple hall.

**மண்டலச் சார்பற்ற நாடு-** *அணி சாரா நாடு,* non-aligned country.

**மண்டலம்-** *1. 40 நாள்,* a period of forty days. *மண்டல பூசை,* worship for forty days. *2. ஆட்சிப் பிரிவு,* division. *மண்டல மேலாளர்,* divisional manager. *3. தொகுதி,* nervous system, root system.

**மண்டி-** *1. கலங்கல்,* sediment. *2. மொத்த வியாபாரம் செய்யப் படும் இடம்,* wholesale shop.

**மண்டிபோடு-** *மண்டியிடு,* kneel down. *மண்டி போட்டுத் தொழு,* kneel down to pray.

**மண்டு-** *1. மண்டிக் கிடத்தல்,* be luxiriant, abound in. *தோட்டத்தில் களை மண்டிக் கிடக்கிறது.* The garden abounds in weeds. *2. இருள் கப்பி இருத்தல்,* plunge in darkness. *மின்சாரம் இல்லாதால் நகரம் இருளில் மண்டிக் கிடந்தது.* The city plunged in darkness as there was no electricity. *3. முட்டாள்,* fool, dunce.

**மண்டை-** *மண்டைப் பகுதி,* skull. *மண்டைக் கர்வம்,* haughtiness, arrogance.

**மண்டையிடி-** *தலைவலி,* head ache.

**மண்டையை உடைத்துக்கொள்-** *சிக்கலைத் தீர்க்க அலட்டிக்கொள்,* worry to solve a problem.

**மண்டையைப் போடு-** *மரணமடை,* die. He died suddenly.

**மண்டையோடு-** *தலை ஓடு,* skull.

**மண்டை வெல்லம்-** *கோள வடிவ வெல்லம்,* jaggery in spherical shape.

**மண்ணாங்கட்டி-** *1. மண்தொகுதி,* clod. *மண்ணாங்கட்டி மழையில் கரைந்தது.* The clod dissolved in rain water. *2. சலிப்பைக் காட்டும் தொடர்,* expression of boredom.

**மண்ணியல்-** *புவியமைப்பு இயல்,* geology.

**மண்ணீரல்-** *ஒரு சுரப்பி,* spleen.

**மண்ணுளிப் பாம்பு-** *ஒரு வகைப் பாம்பு,* sand - boa.

**மண்ணெண்ணெய்-** *பெட்ரோலியத்தை வடித்துப் பகுத்தலில் கிடைக்கும் ஒருவித எண்ணெய்,* kerosene.

**மண்ணைக் கவ்வு-** *தோல்வி அடை,* face defeat. *அவர் தேர்தலில் மண்ணைக் கவ்வினார்.* He faced defeat in the election.

**மண்ணைப் போடு-** *ஏமாறச் செய்,* dis appoint. *என் ஆசையில் மண்ணைப் போடாதே.* Don't disappoint my ambition.

**மண்புழு-** *நிலப்புழு,* earthworm.

**மண்வாரி-** *மண்ணை வாரும் எந்திரம்.* earth mover.

**மண்விழு-** *நிறைவேறாது இருத்தல்.* not fulfil. *என் ஆசையில் மண் விழுந்தது.* My desire is not fulfilled.

**மண்வெட்டி-** *மண்ணைக் கொத்துங் கருவி,* spade.

**மண-** *1. மணம் வீசுதல்,* be fragrant. *பூ மணம் வீசுகிறது.* The flower is fragrant. *2. திருமணம் செய்து கொள்,* marry. *நான் என் அத்தை மகளை மணந்துகொண்டேன்.* I married my aunt's daughter.

**மணத்தக்காளி-** *ஒரு காய்,* black night shade.

**மணம்-** *1. வாசனை,* fragrance, smell. *2. திருமணம்,* marriage, wedding.

**மணமக்கள்-** *திருமணம் செய்து கொண்ட இணை,* married couple.

**மணமகள்-** *மணப்பெண்,* bride.

**மணமகன்-** *மாப்பிள்ளை,* bride groom.

**மணமேடை-** *மணமக்கள் அமரும் மேடை,* marriage platform, dais.

**மணல்-** *கடற்கரையில் காணப்படும் மண் துகள்,* sand.

**மணல்வாரி-** *தட்டம்மை,* measles.

**மணவறை-** *மணமேடை,* wedding chamber.

**மணவாட்டி-** *மனைவி,* wife.

**மணவாளன்-** *கணவன்,* husband.

**மணவிலக்கு-** *மணமுறிவு,* divorce.

**மணி-** *1. ஒலிக்கும் கருவி,* bell. *மின்மணி,* electric bell. *அழைப்பு மணி,* call bell. *2. 60 நிமிடங்கள் கொண்ட நேரம்.* an hour. *3. கல்,* stone, gem. *ஒன்பது மணிகள்,* nine gems. *ஒப்பிலா மணி,* pearless gem. *4. நெல் மணி,* grain. *5. சிறப்பு,* excellence. *மணியான பேச்சு,* excellent speech.

**மணிக்கட்டு-** *உள்ளங்கைக்கும் மேற் கைக்கும் இடையிலுள்ள பகுதி,* wrist. *மணிக்கட்டு எலும்புகள்,* carpal bones.

**மணிக்கூண்டு-** *கடிகாரம் பொறுத்தப் பட்ட கோபுரம்,* clock tower.

**மணிச்சத்து-** *தாவரச்சத்து,* phosphate.

**மணிப்பிரவாளம்-** *தமிழும் சமஸ் கிருதமும் கலந்த உரை நடை,* A prose style with a mixture of Tamil and Sanskrit.

**மணிப்புறா-** *சிறிய புறா,* spotted dove.

**மணிமேடை-** *மணிக்கூண்டு,* clock tower.

**மணியக்காரர், மணியம்-** village officer.

**மணிலாக் கொட்டை-** *நிலக்கடலை,* ground nut.

**மணி விழா-** *அறுபது ஆண்டு நிறைவு விழா,* sixtieth birth day.

**மணை-** *1. மர இருக்கை,* wooden seat. *2. அடிப் பகுதி,* wooden base.

**மத்தகம்-** *யானை நெற்றி,* elephant's forehead.

**மத்தளம்-** *மிருதங்கம்,* mathala, a two sided percussion musical instrument. *மத்தளம் முழங்க,* mathala sounded.

**மத்தாப்பு-** *ஒரு வகைப்பட்டாசு,* sparkler. *கம்பி மத்தாப்பு,* wire sparkler.

**மத்தி-** *நடு,* mid-centre. *மத்தியில்,* at the centre.

**மத்திமம்-** *நடுத்தரம்,* fair. *மத்திம உயரம்,* fair height.

**மத்திய-** *மைய,* central. *மத்திய அரசு,* central government. *மத்தியப் பகுதி,* central part.

**மத்தியஸ்தம்-** *நடுவர் தீர்ப்பு,* arbitration, mediator. *மத்தியஸ்தர்,* mediator.

**மத்தியானம்-** *நண்பகல்,* midday, noon.

**மத்து-** *உணவுப் பொருள்களை கடையும் குச்சி,* churning stick.

**மதகு-** *நீர் செல்லும் வழி,* sluice.

**மதநீர்-** *யானை மதநீர்,* secretion of elephant during rutting.

**மதம்-** *1. சமயம்,* religion. *2. யானையின் வெறி,* rut.

**மதலை-** *குழந்தை,* child.

**மதி-** *1. மதித்தல், இவ்வட்டாரத்தில் அவர் அதிகமாக மதிக்கப்படுபவர்.* He is highly regarded in this region. *2. அறிவு,* intellect. *விதியை மதியால் வெல்லலாம்,* Intellect will win over destiny. *3. நிலவு,* moon.

**மதிப்பிடு-** *1. மதிப்பைக் காண்,* estimate. *வெள்ளச் சேதத்தை மதிப்பிடு,* estimate the flood damage. *2. கருது,* view. *3. மதிப்பீடு,* estimate, valuation.

**மதிப்பு-** *1. பெறுமானம்,* worth. *இவ்வீட்டின் மதிப்பு இரண்டு லட்சம்.* The worth of this house is Rs. 2 lakhs. *2. உயர்வாகக் கருதுதல்,* respect, regard. *நாம் காந்தியடிகளிடம் அதிக மதிப்பு வைத்துள்ளோம்.* We have a high regard for Mahatma Gandhi.

**மதிப்புரை-** ஒரு நூலின் குறை நிறைகள், review. நல்ல மதிப்புரை, a good review.

**மதிப்பூதியம்-** பணிக்காக அளிக்கப் பட்டும் சிறப்பு ஊதியம், honorarium.

**மதிப்பெண்-** தேர்வுகளில் பெறும் புள்ளிகள், marks, score.

**மதியம்-** நண்பகல், noon, midday. மதிய உணவு, noon meal. மதிய உணவுத் திட்டம், noon meal scheme.

**மதியூகம்-** அறிவு, sagacity.

**மதில்-** சுற்றுச்சுவர், compound well.

**மதினி-** அண்ணி, wife of one's elder brother.

**மது-** 1. போதை ஊட்டும் பொருள், liquor. 2. தேன், honey. 3. மதுபானம், alcoholic drink.

**மதுரம்-** இனிமை, sweet.

**மதுவிலக்கு-** மது அருந்துவதற்குத் தடை, prohibition.

**மந்தணம்-** மறைவாக வைக்கப் படுவது, confidential.

**மந்தம்-** 1. விரைவின்மை, slackness. உற்பத்தியில் மந்தம், slackness in production. 2. சுறுசுறுப்பின்மை, dullness. விற்பனை மந்தம், The sales are dull. 3. காது கேட்கும் திறனில் குறை, slighty deaf. He is slighty deaf.

**மந்தமாருதம்-** தென்றல், gentle breeze.

**மந்தி-** பெண்குரங்கு, female monkey.

**மந்திரக்கோல்-** மாயவித்தை செய்ய உதவும் குச்சி, magic wand.

**மந்திரம்-** 1. புனிதச் சொல், sacred word, mantra. 2. கவரும் சொல், charm, incantation. 3. மந்திரவித்தை, magical feats. 4. மந்திரவாதி, magician.

**மந்திர ஆலோசனை-** அரசன் தன் நம்பிக்கைக்குரியவர்களிடம் நடத்தும் ஆய்வு. king's deliberation with his confidants.

**மந்திரி-** அமைச்சர், minister.

**மந்திரி சபை-** மந்திரிகள் கூட்டம், cabinet.

**மந்தை-** கால்நடைத் தொகுதி, flock herd. ஆட்டுமந்தை, a flock of sheep. மந்தைவெளி, pasture ground.

**மப்பு-** 1. மேகமூட்டம், cloud. வானம் மப்பாக உள்ளது. The sky is cloudy. 2. மந்தம், lack of appetite.

**மமதை-** இறுமாப்பு, arrogance. உன் மமதை உன்னை அழிக்கும், 'Your arrogance will ruin you.

**மயக்கம்-** 1. மயக்கநிலை, swoon, giddines. அவர் மயக்கம் போட்டு வீழ்ந்தார். He fell into a swoon. 2. போதை, மயக்கம், intoxication.

**மயக்கமருந்து-** ஒருவரது உணர்வுகளை அகற்றி மயக்கமடையச் செய்யும் மருந்து, anaesthetic.

**மயக்கு-** கவர்ந்திழு, attract, charm. அவள் அழகு அனைவரையும் மயக்கியது. Her beauty charmed all. மயங்கு, get attracted. He got attracted by her beauty.

**மயானம்-** இடுகாடு, crematorium. மயான வைராக்கியம், a week resolve made at the cremation ground.

**மயிர்-** முடி, hair. மயிர்க்கால், roof of the hair. மயிர்க் கூச்செறி, thrill, get. goose-flesh. மயிர்மாணிக்கம், cypress vine.

**மயிரிழையில்-** மயிரிழையில் உயிர் தப்பினார். He escaped by a hair's breadth.

**மயில்**- ஒருவகை அழகான பறவை, peafowl. ஆண்மயில், peacock. பெண்மயில், peahen.

**மயில்துத்தம்**- நீலநிறத் தாமிர சல்பேட்டு, copper sulphate. மயில் துத்தம் ஒரு பூச்சிக் கொல்லி. Copper Sulphate is an insecticide.

**மயிலாட்டம்**- மயில் உருவம் கட்டி நடனம் ஆடுவது, peacock dance.

**மயிலை**- சாம்பல் நிறம், ash colour, grey colour. மயிலைக்காளை, the grey coloured ox.

**மர்ம**- புதிர் நிறைந்த, suspense-packed. மர்ம நாவல், suspense-packed novel.

**மர்ம உறுப்பு**- ஆண்பெண் இனப் பெருக்க உறுப்பு, male, female genitals.

**மர்மம்**- புதிரானது, mystery. அவர் இறப்பிலுள்ள மர்மம் என்ன? What is the mystery behind his death?

**மர**- மரத்துப் போதல், become numb.

**மரக்கலன்**- மரக் கப்பல், wooden ship.

**மரக்கறி**- சைவ உணவு, vegetarian food. மரக்கறி உண்பவர், vegetarian. மரக்கறி உண்ணும் கொள்கை, vegetarianism.

**மரகதம்**- பச்சை நிறக்கல், emerald.

**மரங்கொத்தி**- மரங்கொத்தும் பறவை, wood pecker.

**மரச்சீனிக் கிழங்கு**- மரவள்ளிக் கிழங்கு, capilca.

**மரணம்**- சாவு, death. மரண அடி, fatal blow. மரண தண்டனை, death sentence. மரணப் படுக்கை, death bed. மரண வாக்குமூலம், death statement.

**மரநாய்**- மரத்தில் வாழும் பூனை போன்ற விலங்கு, toddy - cat.

**மரப்பாச்சி**- மரப்பொம்மை, wooden doll.

**மரபியல்**- 1. சொல் வழக்காறு பற்றிக் கூறுவது, study of conventional words. 2. மரபுவழி பற்றி ஆராயுந் துறை, genetics. மரபியலார், geneticist.

**மரபு**- வழிவழி வருவது, convention, heredity.

**மரபுத் தொடர்**- (இலக்) மரபுவழி அமையும் தொடர், idiom. (எ.டு) அவன் கம்பி நீட்டினான், He absconded.

**மரம்**- 1. மரவூட்டம் உள்ளது, tree. 2. கட்டை, wood, timber. மரவாடி, timber depot.

**மரமண்டை**- அறிவற்றவன், block head.

**மரவள்ளிக்கிழங்கு**- குச்சிக்கிழங்கு, tapioca.

**மரவுரி**- ஆடையாகப் பயன்பட்ட மரப்பட்டை, bark used as cloth by sages. மரவேலை, wood work.

**மராமத்து**- பழுது பார்க்கும் வேலை, maintenance work.

**மரி**- இற, die. இயேசுபிரான் சிலுவையில் மரித்தார். Lord Jesus died at the cross.

**மரிக்கொழுந்து**- வாசனை இலைகள் கொண்ட செடி, a plant with fragrant leaves.

**மரியன்னை**- இயேசுவின் அன்னையான மேரி, Mary.

**மரியாதை**- 1. மதிப்பு, respect. பெரியவர்களுக்கு மரியாதை கொடு. Give respect to elders. 2. மதிப்பின் அடையாளம், token of respect.

**மரியாதைப் பன்மை**- உயர்வு கருதி ஒருவருக்கு வழங்கும் சொல்,

honorific plural. *(எ-டு) அவர் வந்தார்.*

**மரியாள்-** *மரியன்னை,* Mary, mother of Lord Jesus.

**மரு-** *1. பாலுண்ணி, 2. களங்கம்,* blemish.

**மருகன்-** *மருமகன்,* son-in-law.

**மருங்கு-** *பக்கம்,* side. *சாலையின் இருமருங்கும் மரங்கள்,* trees on both sides of the road.

**மருட்சி-** *மிரளல்,* fright. *மானின் மருட்சி,* the fright of the deer. *மருட்சிப் பார்வை,* frightened look. *மருட்டு,* frighten.

**மருத்துவச்சி-** *மகப்பேறு பார்க்கும் பெண்,* midwife.

**மருத்துவம்-** *1. மருத்துவக்கலை,* medicine. *2. சிகிச்சை,* treatment. *மருத்துவமனை,* hospital. *பொது மருத்துவமனை,* general hospital. *தனியார் மருத்துவமனை,* clinic. *மருத்துவர்,* doctor, physician.

**மருதம்-** *வயலும் வயல் சார்ந்த இடமும்,* agricultural tract or land one of the five-fold divisions of land in Tamil Literature.

**மருதாணி-** *ஒரு வகைச் செடி,* henna.

**மருந்தகம்-** *மருந்து கொடுக்குமிடம்,* dispensary.

**மருந்தாளுநர்-** *மருந்து செய்யும் கலை அறிந்தவர்,* pharmacist.

**மருந்தியல்-** *மருந்துகள் பற்றி ஆராயும் துறை,* pharmocology.

**மருந்து-** *1. நோய் தீர்க்கும் பொருள்,* medicine, drug. *2. பூச்சி மருந்து,* insecticide.

**மருந்துக் கடை-** *மருந்து விற்குமிடம்,* medical shop, pharmacy.

**மருந்துக்கு கூட-** *சிறிதளவு கூட,* even a little. *மருந்துக்குக் கூட மழை பெய்யவில்லை.* It does not rain even a little.

**மருந்து வை-** *வசியம் செய்யும் மருந்து வைத்தல்,* mix a potion in food to charm a person.

**மருமகள்-** *மகனின் மனைவி,* daughter-in-law, niece.

**மருமகன்-** *மகளின் கணவன்,* son-in-law.

**மருவு-** *மாற்றமடை,* get transformed.

**மருள்-** *1. மிரளு,* get frightened. *2. தடித்த இலை,* a thick medicinal leaf.

**மரூஉ-** *மாற்றம் அடைந்து வழங்கும் சொல்,* word modification in the form of contraction.

**மரை-** *1. நூல் போன்று செல்லும் பதிவு,* thread. *2. திருகாணி,* screw.

**மரைக்கார்-** *முகமதியப் பள்ளிவாசல் ஆட்சி உறுப்பினர்,* trustee.

**மல்கு-** *ததும்பு,* well up. *கண்களில் நீர் மல்கிற்று.* Eyes welled up with tears.

**மல்யுத்தம்-** *ஆயுதமின்றி வெறும் கைகளால் போடப்படும் ஒரு வகைக் குத்துச் சண்டை,* wrestling. *மல்லன்,* wrestler. *மாமல்லன்,* great wrestler.

**மல்லாந்திரு-** *வானத்தைப் பார்த்துக் கொண்டு தரையில் படுத்துக் கொண்டிரு,* He was lying supine.

**மல்லாடு-** *கஷ்டப்படு,* struggle. *தற்காலத்தில் வாழ்க்கை நடத்த மல்லாடவே வேண்டியுள்ளது.* At present, we have to struggle hard in life.

**மல்லாந்து-** *மல்லாந்து இருக்கும்படி செய்,* be on one's back. *குழந்தையை*

*மல்லாத்திப் படுக்க வை.* Let the child be on its back.

**மல்லி-** 1. *மல்லிகை,* jasmine. 2. *கொத்துமல்லி,* coriander.

**மல்லுக்கட்டு-** 1. *மற்போர்செய்,* wrestle. 2. *தகராறு செய்,* quarrel.

**மலச்சிக்கல்-** *மலம் இயல்பாக வெளி வராத நிலை,* constipation. *நீண்ட கால மலச்சிக்கல்,* chronic constipation. *மலமிளக்கி,* laxative.

**மலடன்-** *பிள்ளை பேறு இல்லாதவன்,* sterile man.

**மலடி-** *பிள்ளைப்பேறு இல்லாதவள்,* sterile woman.

**மலடு-** *மகப்பேறு இல்லாநிலை,* sterility.

**மலம்-** 1. *குடலிலிருந்து வெளியாகும் கழிவு,* faeces. 2. *பாசம்,* bond.

**மலர்-** 1. *பூ,* flower, blossom. *மலர் பறி,* pluck the flowers. *காதல் மலர்ந்தது.* Love blossomed. 2. *நினைவு வெளியீடு,* souvenir. *ஆண்டு மலர்,* annual number.

**மலர்க்காட்சி-** *பூக்கண்காட்சி,* flower show. Ooty flower show.

**மலர் வளையம்-** *இலைகளும் மலர்களும் கொண்ட வளையம்,* wreath. *மலர் வளையம் வை,* place a wreath.

**மலவாய்-** *ஆசனவாய்,* anus.

**மலி-** 1. *மலிந்திருத்தல்,* be a burden. Now the mangoes are a burden. 2. *மிகுதல்,* be rampant. *இனவெறி மலிந்துள்ளது.* Racist mania is rampant. 3. *விலைகுறைதல்,* be cheap. Now tomatoes are very cheap.

**மலிவான-** *மட்டமான,* mean. *மலிவான குற்றச்சாட்டுகள்,* mean charges.

**மலிவு-** *விலைகுறைவு,* cheap. *மலிவுப் பதிப்பு,* cheap edition, low priced edition.

**மலை-** 1. *பாறை நிறைந்த பகுதி,* mountain. 2. *திகை,* be astonished. I was really astonished to hear your singing. *மலைப்பு,* astonishment.

**மலைச்சாரல்-** *மலைச் சரிவு,* mountain slope.

**மலைப்பழம்-** *ஒருவகை வாழைப் பழம்,* hill plaintain fruit.

**மலைப்பாம்பு-** *மலைப்பகுதியில் உள்ள பாம்பு,* python.

**மலைமலையாக-** *அதிக அளவில்,* in great heaps. *தீபாவளிக்குத் துணிகள் மலைமலையாகக் குவிந்துள்ளன.* Clothes are in great heaps for Deepavali.

**மலையாளம்-** *கேரளத்தில் பேசும் மொழி,* Malayalam.

**மலைச்சாதி-** *மலைப்பகுதியில் வாழ்பவர்,* hill tribe.

**மவுசு-** *மதிப்பு,* value, demand. Old family pictures have always a value of their own.

**மழமழப்பு-** *வழவழப்பு,* being smooth. *மழித்தமுகம் மழமழப்பாக உள்ளது.* The shaved face is smooth.

**மழலை-** 1. *குழந்தை மொழி,* babbling talk. 2. *குழந்தை,* child. 3. *மழலையர் பள்ளி,* nursery school.

**மழி-** *சிரை,* shave. *மழித்தல்,* shaving.

**மழு-** *ஒரு வெட்டும் ஆயுதம்,* axe.

**மழுக்கு-** *மொட்டையாக்கு,* make blunt. *மழுங்கல்,* bluntness. *மழுங்கு,* become blunt. The knife is blunt.

**மழுப்பு-** *சரியான பதில் கூறாமை,* dodge, evade. *ஏன் மழுப்புகிறாய்?* Why do you dodge?

**மழை-** *மேகத்திலிருந்து விழும் நீர்,* rain. *மழைநீர்,* rain water. *மழைநீர்ச் சேகரிப்பு,* rain water harvesting. *மழைமானி,* rain-gauge.

**மளிகை-** *பல சரக்கு,* grocery. *மளிகைக் கடை,* grocery shop.

**மற்ற-** *பிற தொழிலாளர்கள்,* other workers.

**மற்றும்-** *1. மேலும்,* yet. *மற்றும் ஒரு நற்செய்தி,* yet another good news. *2. மணி மற்றும் பல நண்பர்கள்,* Mani and other friends. *3. பேராசிரியர் மற்றும் பொறுப்பு முதல்வர்.* Professor and Principal in-Charge.

**மற்றொரு-** *வேறொரு,* another.

**மற-** *நினைவிலிருந்து நீக்கு,* forget. *கசப்பான எண்ணங்களை மற.* Forget bitter thoughts. *மறதி,* forgetting.

**மறம்-** *வீரம்,* bravery, valour. *தமிழிலக்கியத்தில் புறநானூறு வீரம் பற்றிப் பேசுகிறது,* In Tamil literature, Purananuru speaks of valour.

**மறி-** *தடு,* prevent, block. *வழியை மறிக்காதே.* Don't block the passage. *மறியல்,* picketing.

**மறு-** *1. மறுத்துக் கூறு,* deny. No one can deny that poverty should be abolished in the country. *2. இல்லை என்று கூறு.* The manager refused to grant me leave of absence.

**மறு-** *1. மறு ஆய்வு,* reconsideration. *2. மறு பதிப்பு,* next edition. *3. மறுகரை,* opposite bank. *4. மறுசாவி,* alternative key.

**மறுதலி-** *மறுத்து ஒதுக்கு,* turn down. He carried down my request.

**மறுப்பாளர்-** *மறுப்பவர்,* one who denies. *கடவுள் மறுப்பாளர்,* atheist. *மறுப்பு,* denial, protest.

**மறுபடி-** *மீண்டும்,* again. *மறுபடியும் அதைச்செய்,* Do it again.

**மறுபிறவி-** *அடுத்த பிறப்பு,* rebirth. All religions have faith in rebirth.

**மறுபேச்சு-** *பேசாமல்,* arguing. *மறுபேச்சு பேசாமல் அதைச் செய்,* Do it without arguing.

**மறுமணம்-** *மீண்டும் மணம் செய்தல்,* re marriage. *விதவை மறுமணம்,* widow remarriage.

**மறுமலர்ச்சி-** *புத்தெழுச்சி,* renaissance. *இலக்கிய மறுமலர்ச்சி,* literary renaissance. *மறுமலர்ச்சி எழுத்தாளர்,* renaissance writer.

**மறுமை-** *1. மறுபிறவி,* rebirth. Let us be friends in rebirth also. *2. மேலுலக வாழ்வு,* life after death, life in heaven.

**மறுமொழி-** *பதில்,* reply. What is your reply to the accusation?

**மறுவாழ்வு-** *1. புனர்வாழ்வு,* rehabilitation. *2. புதுவாழ்வு,* new life.

**மறுவீடு அழைத்தல்-** *முதல் தடவையாக மணமக்களை மாப்பிள்ளை வீட்டுக்கு அல்லது பெண் வீட்டுக்கு அழைத்தல்,* inviting the married couple for the first time either to the bride's house or bridegroms's house after marriage.

**மறை-** *1. ஒளித்து வை,* hide, conceal. *உண்மையை மறைக்காதே.* Don't hide the truth. *2. தடையாக இரு.* block.The pillar blocked the view perfectly. *3. வேதம்,* the veda. *4. மறைந்தார்,* died.

**மறைத்திரு-** *அருட்திரு,* revered. Rev. Father Arulsamy.

**மறைப்பு-** *தடுப்பு,* screen, partition.

**மறைமுகம்-** *வெளிப்படை அல்லாதது,* indirect. *அமைச்சரை எதிர்க்*

கட்சியினர் மறைமுகமாகத் தாக்கினர். The opposition attacked the minister indirectly. *மறைமுகவரி,* indirect tax.

**மறைவிடம்-** *மறைந்திருக்கும் இடம்,* hide-out. Forest is the hide-out for the militants. *மறைவு,* hiding, death. *அவர் மறைவு ஈடு செய்ய முடியாதது.* His death is a great irreparable loss.

**மன்மதன்-** *காமன்,* cupid. *மன்மத லீலை,* cupid's deeds.

**மன்றம்-** *1. பலர் கூடும் ஓர் அமைப்பு,* forum. *வாசகர் மன்றம்,* readers' forum. *2. மண்டபம்,* hall.

**மன்றாடு-** *இறைஞ்சு,* appeal, pray, request. Pray God. Appeal for justice.

**மன்னன்-** *அரசன்,* king, monarch. *மன்னர் மன்னன்,* emperor. *மன்னராட்சி,* monarchy.

**மன்னி-** *பொறுத்தருள்,* forget, pardon. *மறப்போம், மன்னிப்போம்.* Forget and forgive. *மன்னிப்பு,* forgive, pardon.

**மனக்கணக்கு-** *மனத்தில் போட்டு விடை காணும் கணக்கு,* mental sum, arithmetic.

**மனக்கோட்டை-** *உள்ளத்தில் உருவாகும் கற்பனை,* castle in the air. *மனக் கோட்டை கட்டாதே,* Don't build castles in the air.

**மனங்கொள்-** *கருத்தில் கொள்,* consider. *தீர்வுக்குச் சிக்கல்களின் எல்லா நிலைகளையும் மனங்கொள்,* Consider all aspects of the problem for solution.

**மனசாட்சி-** *மனச்சான்று,* conscience. *உனக்கு மனசாட்சி இல்லையா?* Don't you have conscience?

**மனத்தாங்கல்-** *வருத்தம்,* misunderstanding. *மனத்தாங்கல் எங்களைப் பிரித்தது.* Misunderstanding separated us.

**மனதறிய-** *தெரிந்த,* knowingly. I do no harm to anybody knowingly.

**மனநலம்-** *உளநலம்,* mental health. *மனநல மருத்துவமனை,* mental hospital, asylum. *மனநிலை,* state of mind. *மனநோய்,* mental illness.

**மனப்பாடம்-** *நெட்டுருச் செய்தல்,* getting by heart. He has got by heart all the Thirukkural verses.

**மனப்பால் குடி-** *வீணாக நம்புதல்,* be under an illusion. *எளிதில் பணக்காரனாகி விடலாம் என மனப்பால் குடிக்காதே.* Don't be under the illusion that you can become rich easily.

**மனப்பான்மை-** *நோக்கு,* attitude, outlook. *அறிவியல் மனப்பான்மை,* scientific attitude.

**மனப்பிராந்தி-** *இல்லாத பொருள் இருப்பதாகத் தோன்றும் மனக் காட்சி,* hallucination.

**மனப்பூர்வமாக-** *உளமாற,* whole heartedly. I believe you whole heartedly.

**மனம்-** *1. உள்ளம்,* mind. *மனம் என்பது மூளையின் ஒரு செயல்பாடு.* Mind is a function of the brain. *2. விருப்பம்,* mind. I have no mind to do it.

**மனம் திரும்பு-** *திருந்து,* have a change of heart.

**மனம்திறந்து-** *மனம்விட்டு,* openly. *மனந்திறந்து பேசு,* talk openly.

**மனம்போனபடி-** *எவ்வகைக் கட்டுப்பாடும் இல்லாமல்,* without restraint. *மனம் போனபடி எதையும் செய்யாதே.* Don't do anything without restraint.

**மனம் வை-** *விரும்பு,* If there is a will, there is a way.

**மனமகிழ் மன்றம்-** *பொழுது போக்கும் கழகம்,* recreation club.

**மனமாற்றம்-** *உளமாற்றம்,* change of heart. *தற்பொழுது வேண்டியது மனமாற்றமே.* What is needed now is the change of heart.

**மனமுடை-** *மனம் நொந்துபோ,* lose heart. Don't lose your heart.

**மனமுவந்து-** *விரும்பி,* willingly. *நான் இந்த அகராதியை மனமுவந்து தொகுக்கிறேன்.* I willingly compile this dictionary.

**மனவசியம்-** *ஒருவரது மனத்தை மற்றவர் கட்டுப்படுத்தல்,* hypnosis.

**மனவேற்றுமை-** *கருத்து வேற்றுமை,* difference of opinion. We have no difference of opinion on any matter.

**மனிதச் சங்கிலி-** *எதிர்ப்புத் தெரிவிக்கவோ, ஆதரிக்கவோ, மனிதர்கள் கைகோத்து வரிசையாக நிற்றல்,* human chain.

**மனிதத்தன்மை-** *மனிதம், மனிதனுக்குரிய இயற்கையான நற்குணங்கள்,* humanity. *மனிதநேயம்,* humanism.

**மனிதன்-** *ஆள்,* man. *மனிதர்,* human beings.

**மனிதாபிமானம்-** *மனித அன்பு,* humanitarianism. *மனிதாபிமான அடிப்படையில்,* on humanitarian grounds. *மனிதாபிமானி,* humanitarian.

**மனு-** *விண்ணப்பம்,* application. *மனுச்செய்,* apply, petition. *மனுதாரர்,* applicant, petitioner.

**மனை-** *1. வீடுகட்டும் நிலம்,* plot site. *2. வீடு,* house. *மனைபூசை,* earth worship.

**மனையாள்-** *மனைவி,* wife. *மனையியல்,* Home Science.

**மனோகரம்-** *இன்பம்,* pleasure, delight. *மனோகரமான மாலைப் பொழுது,* delightful evening.

**மனோதத்துவம்-** *உளவியல்,* Psychology.

**மனோதர்மம்-** *கற்பனை வலம்,* powerful, imagination.

**மனோபாவம்-** *மனப்பான்மை,* attitude.

## மா

**மா-** *1. மாமரம்,* mango tree. *2. விலங்கு,* animal. *3. மாவு,* flour, powder. *4. பெரிய,* great. *மாபாதகம்,* great sin. *5. மாக்கடல்,* ocean. *6. மாக் கோலம்,* flour design.

**மாக்கல்-** *சாம்பல் நிற மாவுக்கல்,* ash coloured soft stone.

**மாகாண சபை-** *மாநிலங்கள் அவை,* provincial council. *மாகாணம்,* province, state.

**மாங்கல்யம்-** *தாலி,* sacred thread.

**மாங்காய்-** *பழுக்காத மாம்பழம்,* mango.

**மாச்சரியம்-** *பகைமை,* animosity hatred. *அரசியல் மாச்சரியம்,* political animosity.

**மாசி-** *11 ஆவது தமிழ் மாதம்,* 11th Tamil month, Masi (mid February to mid March)

**மாசிக்காய்-** *ஒரு வகைக்காய்,* galls. (medicine)

**மாசு-** *1. தூசு,* dirt, pollution, impurity. *2. களங்கம்,* blemish. You have cast a blemish on my name.

**மாசுமறுவற்ற-** *1. தூய,* pure. Pure gold. *2. களங்கமற்ற,* spotless, a spotless man.

**மாட்சி-** *பெருமை, கீர்த்தி,* glory, honour. Honourable President.

**மாட்டல்-** *தொங்கல், பெண்கள் காதில் அணியும் நகை,* hook-like gold ear stud.

**மாட்டு-** *1. தொங்கவிடு,* hang. *படத்தைச் சுவரில் மாட்டு.* Hang the picture on the wall. *2. சிக்கு,* get stuck. *உணவுத் துணுக்கு பற்க ளிடையில் மாட்டிக் கொண்டது.* A particle of food stuck between the teeth. *3. பிடிபடு,* catch red-handed. The thief was caught red-handed. *4. சிக்கவிடாதே,* get involved. Don't get me involved in the tangle.

**மாட்டுக்கொட்டில்-** *தொழுவம், மாடுகள் கட்டப்படும் இடம்,* cattle - shed.

**மாட்டுப்பெண்-** *மருமகள்,* dauahter-in-law.

**மாட்டுவண்டி-** *மாடுகள் பூட்டப் பட்ட வண்டி,* bullock-cart.

**மாடக்குழி-** *மாடம்,* recess, alcore.

**மாடம்-** *மாடிவீடு,* storeyed house.

**மாடி-** *மேல்தளம்,* upper storey, upstairs. *அவர் மாடியில் உள்ளார்,* He is upstairs.

**மாடு-** *காளை,* bullock, ox.

**மாண்பு-** *சிறப்பு,* excellence, honour, dignity. *அவர் மாண்புமிக்கவர்.* He is a man of excellence. *மாண்புமிகு,* honourable. Hon. Minister.

**மாணவன்-** *ஒரு கல்வி நிலையத்தில் பயிலும் ஆண்,* pupil, student.

**மாணவி-** *ஒரு கல்வி நிலையத்தில் பயிலும் பெண்,* girl student.

**மாணிக்கம்-** *விலை உயர்ந்த சிவப்புக் கல்,* ruby.

**மாத்திரத்தில்-** *உடன்,* at once, when. *நீ கேட்ட மாத்திரத்தில், நான் உனக்கு பணம் கொடுத்தேன்.* I gave you money at once on your request.

**மாத்திரம்-** *மட்டும்,* only. *வயது வந்த வருக்கு மாத்திரம்,* For adults only.

**மாத்திரை-** *மருந்து,* pill, tablet.

**மாதம்-** *ஒரு வருடத்தில் 12-இல் ஒரு பிரிவான கால அளவு,* month. *மாதாந்திரச் செலவு,* monthly expenses.

**மாதர்-** *பெண்கள்,* women. *மாதர் சங்கம்,* Women's Association.

**மாதவிடாய்-** *வீட்டுவிலக்கு,* menses.

**மாதா-** *அன்னை,* mother. *மேரி மாதா,* Mother Mary. *மாதாகோயில்,* Church.

**மாதிரி-** *1. ஒன்றைப் போலச் செய்யப் பட்டது,* model. *மாதிரிப் பள்ளி,* model school.

**மாது-** *பெண்,* woman.

**மாதுளை-** *ஒரு கனி,* pomegranate.

**மாந்தம்-** *குழந்தைகளுக்குச் செரிக்காத தன்மை,* indigestion in children.

**மாந்தர்-** *1. மக்கள், மனிதர்,* human beings. *2. நாடக மாந்தர்,* characters.

**மாந்திரீகம்-** *மந்திர வித்தை,* sorcery. *மாந்திரீகன்,* sorcerer.

**மாநகரம்-** *பெருநகரம்,* metropolis. *மாநகரப் பேருந்து,* metropolitan. *மாநகராட்சி,* corporation. *மாநாடு,* conference. *உச்சி மாநாடு,* summit conference.

**மாநிலங்கள் அவை-** *நாடாளுமன்ற மேலவை,* upper house. Rajya sabha.

**மாநிலம்-** *மாகாணம்,* state, province.

**மாநிறம்-** *கருஞ்சிவப்பு,* brown.

**மாப்பிள்ளை-** *1. மணமகன்,* bride groom. *2. மருமகன்,* son-in-law.

3. மாப்பிள்ளை அழைப்பு, taking out the bridegroom in a procession before marriage. bridegroom's processional ceremoney. 4. மாப் பிள்ளை மாடு, stud bull.

**மாம்பழம்**- மாங்கனி, mango fruit. மாமரம், mango tree.

**மாமன்னன்**- பேரரசன், emperor, monarch.

**மாமனார்**- கணவன் அல்லது மனைவி யின் தந்தை, father-in-law. மாமா, uncle. மாமி, aunt.

**மாமாங்கம்**- 12 ஆண்டுகள் கொண்ட கால அளவு, a period of twelve years, mamangam.

**மாமிசப் பட்சிணி**- விலங்குகளை சாப்பிடும் பிராணி, carnivore. புலி ஒரு மாமிசப் பட்சிணி. The tiger is a carnivore. மாமிசம், meat, flesh, muscle.

**மாமியார்**- மாமி, mother-in-law. மாமியார் வீடு, jail, prison.

**மாமூல்**- 1. இயல்பு, normalcy. மாமூல் வாழ்க்கை திரும்பியது, normalcy restored. 2. கையூட்டு, bribe.

**மாய்**- இற, die. மாய்ந்தவர் பலர், many died. 2. மறை, disappear. மாய்ந்து மாய்ந்து, with great effort. மாய்மாலம், pretence, deceit.

**மாயம்**- 1. பொய்த் தோற்றம், illusion. கானல் நீர் ஒரு மாயம். The mirage is an illusion. 2. கவர்ச்சி, charm.

**மாயமான்**- இல்லாதபொருள், an object of illusion.

**மாயவித்தை**- மந்திரத்தால் செய்யப் படும் ஒரு வேடிக்கைச் செயல், magic.

**மாயாவாதம்**- மாயை என்னும் கொள்கை. theory of illusion.

**மாயாவி**- மாய ஆற்றல் படைத்தவன், a man of mighty magical power.

**மாயை**- பொய்யானது, illusion. வாழ்க்கை என்பது ஒரு மாயை. Life is an illusion.

**மார்க்கம்**- 1. வழி, path, way. சன் மார்க்கம், path of virtue. 2. தடம், route. நீண்ட மார்க்கம், long route.

**மார்க்சியம்**- காரல் மார்க்ஸ் சொன்ன கொள்கை, Marxism.

**மார்கழி**- 9 ஆவது தமிழ் மாதம், 9th Tamil month (mid December to mid January).

**மார்தட்டு**- பெருமிதம் கொள், boast of. வீணாக மார் தட்டாதே. Don't boast of yourself unecessarily.

**மார்பகம்**- முலை, breast. மார்பு, chest. மார்பு வலி, chest pain.

**மாரடி**- 1. பெண்கள் மார்பில் கைகளால் அடித்து அழுதல், beat one's breast to mourn. 2. மிகத் துன்புறுதல், be forced to do. I am rather forced to use this old bicycle.

**மாரடிப் பாட்டு**- ஒப்பாரி, dirge.

**மாரடைப்பு**- இதயத்தாக்கு, heart attack, heart failure.

**மாராப்பு**- பெண்கள் மார்பை மறைக்கும் சேலையின் பகுதி, portion of a saree concealing the breasts of women.

**மாரி**- 1. மழை, rain. 2. மாரிக்காலம், winter. வசைமாரி, tirade.

**மாருதி**- 1. சூறாவளி, whirlwind. சூறாவளி சுற்றுப்பயணம், whirlwind tour. 2. அனுமான், Hanuman, the monkey devotee of Lord Rama.

**மாலுமி**- கப்பல் ஓட்டி, sailor, seaman.

**மாலை**- 1. மாலைப்பொழுது, evening. 2. பூமாலை, garland. 3. பாமாலை, garland of poetry.

4. புகழ்மாலை, eulogy. மாலை சூட்டு, garland.

**மாலைக்கண்-** மாலைநேரத்தில் பார்வைக் குறைவு, night blindness.

**மாலைமாற்று-** *1.* மணமகனும் மணமகளும் தங்கள் மாலைகளை மாற்றிக் கொள்ளுதல், ceremony of exchanging garlands by the bride and the bridegroom.

**மாலையிடு-** திருமணம் செய்து கொள், marry. மாலையிட்ட மங்கை, wife.

**மாவட்ட ஆட்சியா-** மாவட்ட ஆட்சித் தலைவர், District Collector. மாவட்டம், district.

**மாவடு-** மாம்பிஞ்சு, tender mango.

**மாவாட்டு-** மாவு அறை, grind rice to a paste.

**மாவிளக்கு-** மாவால் செய்யப்பட்டுக் கடவுளுக்குப் படைக்கப்படும் விளக்கு, lamp made of flour as an offering to god. பிசைந்த மாவு, flour of cereals. மாச்சத்து, carbohydrate, starch.

**மாவுத்தன்-** யானைப்பாகன், mahout.

**மாள்-** மாய், die. மாளாத்துயர், endless grief.

**மாளிகை-** பெரும் இல்லம், palace, mansion.

**மாற்றம்-** மாறுதல், change. உலகில் பெரும் மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. Great changes are taking place in the world.

**மாற்றல்-** இடப் பெயர்வு, transfer.

**மாற்றாந்தாய்-** சிறியதாய், step mother. மாற்றாந்தாய் மனப்பான்மை, Cinderella attitude.

**மாற்றான்-** *1.* பகைவன், foe. *2.* அண்டைவீட்டான், neighbour.

**மாற்று-** *1.* மாறுதல் செய், ஆடையை மாற்று, change the dress, *2.* பணியிடத்தை மாற்று, transfer. பல அலுவலர்கள் மாற்றப்பட்டனர். Many officers were transferred. *3.* சொத்தை மாற்று, transfer the property.

**மாற்று-** *1.* பதில், substitute. கடின உழைப்புக்கு மாற்று ஏதுமில்லை. There is no substitute for hard work. *2.* தூய்மை, purity. தங்கத்தின் மாற்று, purity of gold.

**மாறாக-** எதிராக, on the contrary. நான் உனக்கு உதவ விரும்புகிறேன். மாறாக நீ எனக்கு உதவ மறுக்கிறாய். I want to help you. On the contrary, you refuse to help me. எல்லாம் நாம் நினைத்ததற்கு மாறாக நடக்கிறது. All things take place quite contrary to our expectations.

**மாறிமாறி-** அடுத்தது, alternative, in succession. நேர்முக வர்ணனை தமிழிலும் ஆங்கிலத்திலும் மாறி மாறி நடைபெறுகிறது. The running commentary takes place both in English and Tamil alternatively.

**மாறு-** *1.* மாறுதல் செய், change. Adapt yourself to new conditions. *2.* நிலைமாறுதல், Heat changes water into steam. *3.* வண்டி மாறு, change trains. *4.* உண்மைக்கு மாறு, contrary to truth. *5.* மாறுதல், change.

**மாறுகண்-** ஓரக்கண், squint.

**மாறுகால் மாறுகை வாங்கு-** ஒரு பக்கத்துக் காலையும், மறுபக்கத்துக் கையையும் வெட்டுதல், To cut off a leg and a hand on the opposite sides of a person's body as a punishment.

மாறுபடு- வேறுபடு, differ. நிறங்கள் மாறுபடுகின்றன. colours differ. மாறுபாடு, difference.

மாறுவேடப் போட்டி- வேறுவேடம் போட்டு நடித்தல், fancy dress competition.

மான்- ஒரு வகைக் காட்டு விலங்கு, deer, antelope.

மான்மியம்- மகிமை, glory, fame.

மானசீகம்- மனத்தில் மட்டும் இருப்பது, What is in mind?

மானத்தை வாங்கு- மதிப்பை இழ, bring disgrace. என் மானத்தை வாங்காதே, Don't bring disgrace to my reputation.

மானநட்டம்- மான இழப்பு, defamation. மானநட்ட வழக்கு, defamation suit.

மானபங்கம்- மானக்குலைவு, dis grace, dishonour. It is a disgrace to me. மானம், honour, modesty. மானஸ்தன், honest man.

மானாவாரி- 1. மழையை நம்பி வளரும் பயிர். dry crops. 2. மேட்டு நிலப்பகுதி, upland.

மானி- தன்மானம் மிக்கவர், person of honour.

மானிடம்- மனிதத் தன்மை, humanity. மானிடவியல், anthropology. மானிடன், human being.

மானியம்- தள்ளுபடித் தொகை, subsidy. 2. உதவித் தொகை, grant. அரசுமானியம், government grant. 3. நிவந்தம், endowment.

மானுடத்துவம்- மனிதநேயம், huma nism. மானுடன், man, human.

மாஜி- முன்னாள், மாஜி தலைவர், former leader.

# மி

மிக்க- மிகுந்த, very much. I am very much pleased to take part in this function.

மிக- 1. மிகவும், exactly. மிகச் சரி, exactly right. 2. அதிகம், great. மிகப்பெரிய பொறுப்பு, great responsibility.

மிக- 1. அதிகமாதல், be more. There is more flood in the river. 2. மிகாமல், exceed. 10 வரிகளுக்கு மிகாமல் விடை எழுதுக. Answer without exceeding ten lines.

மிகுதி- அதிகம், large number. There are a large number of poor people living in this locality.

மிகுந்த- அதிக அளவிலான, extreme, extreme anger.

மிகுமின் கடத்தி- அதிகமான மின்சாரத்தைக் கடத்தும் கருவி, super conductor.

மிகை- அளவுக்குமேல் அதிகம், exaggeration. It is not an exagge ration to say that he is a good speaker.

மிச்சப்படுத்து- மீதிப்படுத்து, save. எரிபொருளை மிச்சப்படுத்து. save fuel.

மிச்சம்- மீதி, remainder, balance. What is the balance?

மிஞ்சிப்போனால்- அதிகமாகிப் போனால், at the most, about. It may be at the most 1 km.

மிஞ்சு- 1. மீதி இருப்பது, remain. எவ்வளவு மிஞ்சுகிறது? How much remains? 2. விஞ்சு, சிவாஜி கணேசன் நடிப்பில் எல்லாரையும் விஞ்சியவர். Sivaji Ganesan excelled all in acting.

**மிட்டாதாரர்-** *நிலச் சொந்தக்காரர்,* Mirasdar, landlord.

**மிட்டாய்-** *இனிப்பு,* confectionery. *மிட்டாய்க்கடை,* sweet stall.

**மிடறு-** *1. கண்டம்,* larynx, throat. *2. மடக்கு,* gulp. a gulp of cold milk.

**மிடா-** *பெரிய பானை,* large earthen pot.

**மிடுக்கு-** *கம்பீரம்,* majestic appearance like a doctor.

**மித்திரன்-** *நண்பன்,* friend.

**மித-** *மிதத்தல்,* float. Cork floats on water. *மிதத்தல்,* floatation. *மிதத்தல் விதிகள்,* laws of floatation.

**மிதப்பு-** *மமதை,* arrogance.

**மிதம்-** *நடுநிலை,* mild. *மித வானிலை,* mild weather.

**மிதமிஞ்சு-** *அதிகமாதல்,* exceed. The driver exceeded the speed limit.

**மிதவாதம்-** *மிதமான கொள்கை,* moderation. *மிதவாதி,* moderate.

**மிதவை-** *மிதக்கும் பொருள்,* float, buoy

**மிதி-** *1. காலால் அழுத்து,* tread on. *அவன் என் கால் விரலை மிதித்தான்.* He treaded on my toe. *2. மிதி வண்டியை இயக்கு,* pedal the cycle. *3. நொறுக்கு,* The elephant stamped on the coconut.

**மிதியடி-** *1. கால் துடைக்கும் பாய்,* doormat. *2. செருப்பு,* footwear

**மிதிவண்டி-** *மிதித்துச் செல்லும் இரண்டுச் சக்கர வண்டி,* bicycle.

**மிதுனம்-** *மிதுன இராசி (சோதி),* Gemini (astro).

**மிரட்சி-** *பயம்,* fright.

**மிரட்டல்-** *பயமுறுத்தல்,* threat. *மிரட்டு,* threaten. Don't threaten me for silly things.

**மிருகக்காட்சிசாலை-** *காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள விலங்குகள் உள்ள இடம்,* zoo.

**மிருகசீருடம்-** *27 நட்சத்திரங்களில் ஐந்தாவது.* the fifth of the twenty seven stars.

**மிருகம்-** *விலங்கு,* animal, beast.

**மிருதங்கம்-** *மத்தளம்,* mirudangam, a percussion instrument.

**மிருது-** *மென்மை,* soft. *மிருதுவான தோல்,* soft leather.

**மிளகாய்-** *மிளகாய் வற்றல்,* dried chilli. *மிளகாய்ப் பொடி,* chilli powder.

**மிளகு-** *ஒரு காரப்பொருள்,* pepper.

**மிளறு-** *இளங்கொம்பு,* twig. *புளிய மிளறு,* tamarind twig.

**மிளிர்-** *1. மின்னு,* glitter. *மின்னுவதெல்லாம் பொன்னல்ல.* All that glitters is not gold. *2. பளிச்சிட,* sparkle. His face sparkled with smile.

**மின்கலம்-** *மின்சாரம் உண்டு பண்ணும் கலம்,* cell. *மின்கல அடுக்கு,* battery. *பக்கஅடுக்கு,* battery in parallel. *தொடர் அடுக்கு,* battery in series.

**மின் காந்தம்-** *மின்சாரம் பாயும் பொழுது மட்டும் காந்தமாக மாறும் தேனிரும்புத் துண்டு.* electro magnet. *மின்காந்தம் பல மின் கருவிகளில் பயன்படுகிறது.* Electromagnet is used in many electrical appliances.

**மின்சாரம்-** *மின்னணுக்களின் ஓட்டம்,* electricity. *ஒரு திசை மின்னோட்டம்,* direct current. *இரு திசை மின்னோட்டம்,* alternative current.

**மின்சார ரயில்-** *மனசாரததால் இயங்கும் தொடர்வண்டி,* electric train.

**மின்தடங்கல்**- *மின்னோட்டம் தடைபடுதல்,* power failure.
**மின்தடை**- *மின்சாரம் உண்டாக்கும் தடை,* electric resistance.
**மின்தொகுப்பு**- *பல இடங்களில் தயாராகும் மின்சாரத்தை ஓரிடத்தில் தொகுத்துச் சமமாக வழங்கும் மின் அமைப்பு,* electrical grid. *தென்னிந்திய மின் தொகுப்பு,* southern grid.
**மின்மயமாக்கு**- *மின்சாரத்தால் இயங்குமாறு அமைத்தல்,* electrify. *மின்மயமாக்கல்,* electrification. *மின்மாற்றி,* transformer. *ஏற்ற மின் மாற்றி,* step-up transformer. *இறக்க மின்மாற்றி,* step-down transformer.
**மின்மினிப்பூச்சி**- *இரவில் ஒளிவிட்டுப் பறக்கும் பூச்சி,* glow - worm.
**மின்முலாம்**- *மின்முறையில் ஓர் உலோகத்தின் பொடியை மற்றொரு உலோகத்தின் மீது படிய வைத்தல்,* electroplating.
**மின்விசிறி**- *மின்சாரத்தால் இயங்கும் விசிறி,* electric fan.
**மின்விளக்கு**- *மின்சாரத்தால் எரியும் விளக்கு,* electric light.
**மின்வெட்டு**- *மின்சாரம் குறைவாக இருக்கும் காலத்தில் குறிப்பிட்ட நேரத்தில் நிறுத்தல்,* power-cut.
**மின்னணு** - *ஓர் அடிப்படைத்துகள்,* electron. *மின்னணுவியல்,* electronics.
**மின்னல்**- *மேகங்களுக்கு இடையே ஏற்படும் மின்னோட்ட விளைவாகத் தோன்றும் பளிச்சொளி,* lightning.
**மின்னியல்**- *மின் உற்பத்தி பற்றி ஆராயுந்துறை,* electricity.
**மின்னு**- *ஒளிவிடு,* shine. The moon shines well. *மினுக்கு,* show.
**மின்னோட்டம்**- *மின்னணுக்களின் ஓட்டம்,* electric current.

## மீ

**மீசை**- *மேல் உதட்டு மயிர்,* moustache. Whiskers. (cockroach) *மீசை முறுக்கு,* twist one's moustache as a challenge to a fight.
**மீட்சி**- *மீட்டல்,* redemption, recovery.
**மீட்டு**- *1. சுதி சேர்,* tune. Tune the instrument. *2. மீட்சி,* redemption.
**மீட்பு**- *1. காப்பாற்றுதல்,* rescue, rescue operations. *2. கைப்பற்று,* confiscate.
**மீண்டும்**- *மறுபடியும்,* again. *நான் மீண்டும் வருகிறேன்.* I shall come again.
**மீதம்**- *மிச்சம், மீதி,* remainder. *மீதம் எவ்வளவு?* What is the remainder?
**மீதான**- *1. மேல் உள்ள,* against. *என் மீதான வழக்கு,* the case against me. *2. குறித்த,* concerning, the question concerning security.
**மீது**- *மேல்,* against, the charge against me.
**மீள்**- *1. திரும்பு,* return. *இன்றுதான் நான் மருத்துவமனையிலிருந்து மீண்டேன்.* I returned from hospital today. *2. மீண்டும் பெறு,* recover. The idol was recovered.
**மீறல்**- *மீறுதல்,* violation. *மனித உரிமை மீறல்கள்,* violation of human rights. *மீறு,* violate. Don't violate laws.
**மீன்**- *1. நீர்வாழ் உயிர்;* fish. *2. விண்மீன்,* star. *மீன் காட்சியகம்,* aquarium.
**மீன் கொத்தி**- *மீனைக் கொத்தித் தின்னும் பறவை,* kingfisher.

**மீனம்-** ஒரு சோதிட இராசி, pisces (astrology).

**மீனவன்-** மீன்களைப் பிடித்து விற்று வாழ்பவன், செம்படவன், fisherman.

## மு

**முக்காடு-** தலையை மறைத்துக் கொள்ளும் துண்டு, head covering cloth. இராமலிங்க அடிகள் எப்பொழுதும் தலையில் ஒரு முக்காடு போட்டுக் கொண்டிருந்தார். St. Ramalingar always wore a head covering cloth.

**முக்கால்-** நான்கில் மூன்று பகுதி, three fourth. முக்கால் புள்ளி, colon.

**முக்காலி-** மூன்று கால்களைக் கொண்டது, tripod.

**முக்காலும்-** பெரும்பாலும், mostly. முக்காலும் அவன் வரலாம். Mostly he may come.

**முக்கி முனகி-** குறைப்பட்டுக் கொண்டு, grumbling.

**முக்கியத்துவம்-** சிறப்பு, importance. வரலாற்று முக்கியத்துவம், historical importance. முக்கியம், important. முக்கியக் கேள்வி, important question. முக்கியமாக, mainly. I came mainly to see you. முக்கியஸ்தர், a man of importance.

**முக்கு-** 1. கஷ்டப்படுதல், strain. He strained himself to lift the table. 2. அமுக்கு, dip. குவளையை நீரில் முக்கு. Dip the tumbler in water. 3. முனை, தெருமுக்கு, corner of the street.

**முக்குளி-** மூழ்குதல், dive.

**முக்கோணம்-** மூன்று கோணங்கள் கொண்ட பரப்பு, triangle. முக்கோணம் வரை, Draw a triangle.

**முக்தி-** கடவுள் அருள் பெற்ற நிலை, eternal bliss. அவர் முக்தி அடைந்தார். He attained eternal bliss.

**முக-** அளந்துகொடு, measure by volume. Measure one gallon of water. முகத்தல் அளவை, measure of quantity.

**முகடு-** உச்சி, peak. மலை முகடு, mountain peak.

**முகத்தான்-** பொருட்டு, for the sake of. அவளுக்கு உதவும் முகத்தான் நான் அதைச் செய்தேன். I did it for the sake of helping her.

**முகத்திரை-** 1. முக மறைப்பு, veil. Muslim ladies wear a veil. 2. உண்மையை மறைப்பது, mask. Don't mask your fear.

**முகத்துவாரம்-** கழிமுகம், estuary.

**முகப்படாம்-** யானையின் நெற்றித் துணி , ornamental cloth to cover the forehead on an elephant.

**முகப்பு-** முன்பகுதி, front part, portion. முகப்பு உயர்வு வேலை, face-lifting.

**முகப்பூச்சு-** முகத்தில் பூசும் பொருள், cosmetic, face powder.

**முகபாவம்-** உணர்ச்சியை முகத்தில் காட்டல், facial expression.

**முகம்-** 1. தலையில் கண்கள், காதுகள், மூக்கு, வாய் ஆகியவை அமைந்துள்ள முன்பகுதி, face. மனித முகம், human face. யானை முகம், elephant face. 2. இயல்பு, nature. 3. முகம் கொடுத்துப்பேசு, talk pleasantly. 4. முகம் சுளி, grimace. வெறுப்பால் முகம் சுளித்தான். He grimaced with hatred. 5. முகம் செத்துப்போ, feel disgraced.

**முகமதியர்-** முஸ்லிம், Muslim.

**முகமன்**- 1. முகப்புகழ்ச்சி, flattery. 2. நலம் கேட்டல், greetings.

**முகமூடி**- முகத்தை மூடும் துணி mask. அவன் ஒரு முகமூடி அணிந்தான். He wore a mask.

**முகர்**- 1. நறுமணம் நுகர், smell. I could smell something burning. The flowers smell sweet. 2. அள, measure.

**முகராசி**- நற்பேறு, fortune, luck. முகராசிக் கடை, lucky shop.

**முகவர்**- ஒரு தொகையைத் தன் பங்காகப் பெற்றுக் கொண்டு ஒரு செயலைச் செய்பவர், agent.

**முகவரி**- விலாசம், address. உன் முகவரி என்ன? What is your address?

**முகவாய்**- முகத்தின் கீழ்த்தளப்பகுதி, chin.

**முகவுரை**- முன்னுரை, preface.

**முகவெட்டு**- முகத்தோற்றம், facial features.

**முகாந்திரம்**- காரணம், basis, cause.

**முகாம்**- பாசறை, camp.

**முகிழ்**- தோன்று, appear. நிலா வானில் மெல்ல முகிழ்த்தது. The moon appeared gently in the sky.

**முகூர்த்தம்**- நல்ல வேளை, auspi cious hour.

**முகை**- அரும்பு, bud.

**முங்கு**- அமிழ்த்து, dip. நீரில் முங்கு, dip in water.

**முச்சந்தி**- மூன்று தெருக்கள் சேருமிடம், junction of three streets.

**முசுக்கட்டை**- கம்பளிப்பூச்சி, caterpillar. முசுக்கட்டைச் செடி, mulberry.

**முசுடு**- சிடுமூஞ்சி, short temper, short tempered person.

**முட்ட**- நிறைந்த, full of.

**முட்டாள்**- மடையன், fool.

**முட்டி**- முழங்கால் சில்லு, knee cap. முட்டிக்கால், knee. முட்டிக்கொள், dash against. I dashed against the wall.

**முட்டிப்போடு**- மண்டிபோடு, kneel down. The boy was made to kneel down for not doing home work.

**முட்டிமோது**- அலைமோது, surge. கூட்டம் முட்டி மோதியது. The crowd surged into the stadium. முட்டிமோதும் கூட்டம், surging crowd.

**முட்டு**- 1. நான் சுவரில் முட்டிக் கொண்டேன், I dashed against the wall. 2. மாடு என்னை முட்டிற்று. The bullock charged at me. 3. கோபம் முட்டிக் கொண்டு வந்தது, Anger surged up. 4. முட்டு, props, support. முட்டுக் கொடு, give support.

**முட்டுக்கட்டை**- 1. தாங்கும் கட்டை, blocking wood. 2. தடை, dead lock.

**முட்டுச்சந்து**- ஒரு வழிச் சந்து, blind alley.

**முட்டுப்பாடு**- 1. தட்டுப்பாடு, shortage. 2. தடை, hindrance.

**முட்டை**- 1. பறவை முட்டை, bird's egg. 2. சினை முட்டை, ovum. 3. சுழி, zero. 4. சிறுகரண்டி அளவு, measure of a teaspoon. 5. வறட்டி, dried cowdung cake.

**முட்டைக்கோஸ்**- ஓர் இலைக்கறி, cabbage.

**முடக்கம்**- 1. பணி முடக்கம், stoppage of work. 2. சம்பளமுடக்கம், wage freeze.

**முடக்குவாதம்**- பக்கவாதம், paralysis.

**முடம்**- முடவன், நொண்டி, lame.

**முடி**- 1. மயிர், hair. சுருட்டை முடி, curly hair. 2. மணி முடி, crown.

3. முடிச்சு, knot. 4. முடிசூட்டு விழா, coronation. 5. முடி திருத்தகம், hair dressing saloon. 6. விழா இனிது முடிந்தது. The function came to a pleasant conclusion. 7. எனக்கு 30 வயது முடிந்தது. I completed thirty years of age. 8. என் உடம்புக்கு முடியவில்லை. I am sick. 9. உன் கூந்தலை முடி. Wear your hair in a bun. 10. உன் தலையில் பூ முடி. Adorn your hair with flowers. 11. உன் பேச்சை முடி. Conclude your speech.

**முடிவு-** முடிவு, conclusion, conviction. அது என் முடிவு. It is my conclusion/ conviction.

**முடியரசு-** அரசர் ஆட்சி, monarchy.

**முடியைப் பிய்த்துக்கொள்-** அலட்டிக் கொள், harass one's brains.

**முடிவு-** 1. தேர்வு முடிவு, examination result. 2. முடிதல், end. There is no end to it. 3. இறுதி முடிவு, final conclusion. 4. நீதி மன்ற முடிவு, verdict, judgement.

**முடிவு கட்டு-** 1. தீர்மானி, take a decision. 2. முடிவு செய், put an end to.

**முடிவுரை-** முடிக்கும் பேச்சு, concluding address or speech.

**முடிவெட்டு-** தலைமுடியைத் திருத்து, have a haircut.

**முடுக்கிவிடு-** விரைவுபடுத்து, gear up. பிரச்சாரத்தை முடுக்கி விடு. Gear up the propaganda.

**முடுக்கு-** 1. விரைவுபடுத்து, speed up, accelerate. Accelerate the process. 2. திருகு, screw, Screw the stud. 3. சந்து, lane, corner. 4. முடுக்கம், acceleration. 5. எதிர் முடுக்கம், deceleration.

**முடை-** 1. பின்னு. கூடை முடை, Weave a basket. 2. நெருக்கடி, financial strain. 3. முடை நாற்றம், foul smell, stink.

**முடையிருப்பு-** கூடுதல் இருப்பு, reserve of food grains, buffer stock.

**முண்டம்-** 1. தலையும் கால்களும் இல்லாத உடல், trunk. 2. ஆடை யில்லாத உடல், naked body. The child stood naked.

**முண்டா-** மேற்கை, upper arm with biceps.

**முண்டாசு-** தலையைச்சுற்றிக் கட்டும் துணி, turban. முண்டாசுப் புலவன் பாரதி, The turbaned poet, Bharathi.

**முண்டி-** 1. முடி திருத்துபவர், hair-dresser, a person with a clean-shaven head. 2. கல்லுளிமங்கன், hard-hearted fellow.

**முண்டா பனியன்-** முண்டா தெரியும் படியான பனியன், sleeveless vest.

**முண்டியடி-** நெருக்கியடித்துக் கொண்டு செல், push against. பேருந்தில் பயணிகள் முண்டி யடித்துக் கொண்டு ஏறினர். The passenger pushed against one another to get into the bus.

**முண்டு-** 1. சண்டை செய்ய முனை, have a fighting tendency. 2. கணு, nodule. வேர்முண்டு, root nodule.

**முணுமுணு -** 1. முணுமுணுத்தல், murmur. நீ ஏன் முணுமுணுக் கிறாய்? Why do you murmur? 2. ஓது, recite. Recite mantra. 3. முணுமுணுப்பு, murmuring.

**முத்தடுப்பு ஊசி-** மூன்று நோய்த் தடுப்பு ஊசி, triple antigen injection.

**முத்தமிழ்-** *மூவகைத் தமிழ்: இயல், இசை, நாடகம்,* three fold divisions of Tamil: Literature, Music and Drama.

**முத்தாய்ப்பு-** *சிறப்பான முடிவு,* crowning climax. *தலைவர் உரை மாநாட்டுக்கு முத்தாய்ப்பாக இருந்தது.* The president's address was the crowning climax of the conference.

**முத்திரை-** *1. இலச்சினை,* seal, emblem. *2. குறியீடு,* mark. *முத்திரை இடு,* stamp the mark. *3. முத்திரைத் தாள்,* stamp paper.

**முத்து-** *1. முத்துச்சிப்பியினுள் வளரும் பளபளப்பான, சிறிய உருண்டை வடிவப் பொருள்* pearl. *முத்துமாலை,* garland of pearls. *2. அருமை,* excellent. *முத்தான பேச்சு,* an excellent speech. *3. பருப்பு,* kernel.

**முத்துக்குளி-** *முத்து எடுக்கக் கடலுக்கு அடியில் செல்லுதல், முத்துக் குளித்தல்,* pearl fishing. *முத்துச் சாரம்,* pearl essence.

**முதல்-** *1. மூலதனம்.* Capital, investment. *தொழில் செய்ய முதல் தேவை.* Capital is necessary to do business. *2. அசல்,* principal. *3. முதலாவதாக இருப்பது,* first. *அவன் எல்லாப் பாடங்களிலும் முதல் மதிப்பெண்கள் பெற்றுள்ளான்.* He has secured first marks in all subjects. *4. முதல்......வரை.* from second line to fourth line.

**முதல் தகவல் அறிக்கை-** *காவல் துறையினர் குற்றவாளிகள் பற்றி அளிப்பது,* First Investigation Report, (FIR).

**முதல் நூல்-** *ஓர் எழுத்தாளர் தன் சொந்தக் கற்பனைக் கொண்டு எழுதும் புத்தகம்,* original work. Thirukkural is an original work.

**முதல் மந்திரி-** *முதலமைச்சர்,* Chief Minister, (CM).

**முதலாளி-** *ஒரு தொழிலுக்கு முதல் போட்டு நடத்துபவர்,* master, owner, plantation owner. *முதலாளித்துவம்,* capitalism.

**முதலான-** *முதலிய,* such as. *புகையிலை, எந்திரங்கள், தாள் முதலான பொருள்கள் மீது வரி விதிக்கப் பட்டுள்ளது.* Tax has been levied on articles such as tobacco, machinery, and paper.

**முதலிரவு-** *முதன் முதலில் திருமணமான மணமகனும் மணமகளும் உடலுறவு கொள்ளும் இரவு.* nuptial night.

**முதலில்-** *தொடக்கமாக,* at first. *முதலில் செய்யவேண்டியது என்ன?* What shall we do at first?

**முதலீடு-** *முதல் இடுதல்,* investment, capital.

**முதலுதவி-** *காயம் முதலியவை ஏற்படும்பொழுது செய்ய வேண்டிய உதவி,* first aid. *முதலுதவிப்பெட்டி,* first aid box.

**முதலை-** *ஊர்வன வகுப்பு விலங்கு,* crocodile. *முதலைக் கண்ணீர்,* crocodile tears.

**முதற்கண்-** *முதலில்,* at first.

**முதற்கொண்டு-** *தொடர்ச்சியாக,* from...onwards. *இச்சட்டம் இன்று முதல் நடைமுறைக்கு வருகிறது.* This act comes into force from today onwards.

**முதற்பொருள்-** *இறைவன்,* God.

**முதன்முதலில்-** *முதல் தடவை,* for the first time. *இப்பொழுதுதான் நான் சென்னைக்கு முதன் முதலாக வந்துள்ளேன்.* Now only I have come to Chennai for the first time.

**முதன்மை-** *1. முன்னுரிமை,* primary importance. *2. மாவட்ட அளவில் தலைமை,* chief at the district level. *முதன்மைக் கல்வி அலுவலர்,* Chief Educational Officer.(CEO) *முதன்மை அலுவலர்,* chief officer.

**முதன்மை வினை-** *(இலக்) முக்கிய வினைச்சொல்,* main verb.

**முதிய-** *1. வயதான,* old. *முதியவர்,* old man. *2. பட்டறிவுள்ள,* experienced. *மூத்த எழுத்தாளர்,* experienced (senior) writer.

**முதியோர்-** *வயதில் மூத்தவர்,* senior citizen, old people, the aged. *முதியோர் இல்லம்.* Home for the aged. *முதியோர் கல்வி,* adult education.

**முதிர்-** *பழு,* become ripe. The mangoes have become ripe. *முதிர்ச்சி,* maturity, experience.

**முதுகலை-** *இளங்கலைக்கு அடுத்த உயர் பட்டப்படிப்பு,* Master of Arts. (M.A).

**முதுகில் குத்து-** *வஞ்சகம் செய்,* stab in the back. He stabbed me in the back.

**முதுகு-** *1. உடலின் பின்புறம்,* back. *2. நாற்காலி முதுகு,* back of the chair. *3. புத்தக முதுகு,* back of the book.

**முதுகுத்தண்டு-** *தண்டுவடம்,* spinal cord. *முதுகெலும்பு,* back bone, spine.

**முதுநிலை-** *1. மூத்தநிலை,* senior. *முதுநிலை மேலாளர்.* senior manager. *2. முதுகலைப் பட்டம் பெற்றவர்,* postgraduate. *முதுநிலை ஆசிரியர்,* postgraduate teacher.

**முதுபெரும்-** *பழம்பெரும்,* good old. *முதுபெரும் எழுத்தாளர்,* good old (senior most) writer.

**முதுமக்கள் தாழி-** *இறந்தவரை அடக்கம் செய்யும் கலம்,* urn.

**முதுமை-** *மூப்பு,* old age.

**முதுமொழி-** *பழமொழி,* proverb.

**முந்தாநாள்-** *நேற்றைக்கு முன்னாள்,* day before yesterday.

**முந்தானை-** *புடவையின் முன் முனை,* front end of a saree.

**முந்தி-** *1. முன்னால்,* earlier. *2. விரைவாக,* fast. My wristwatch goes fast by ten minutes.

**முந்திய-** *முற்பட்ட,* previous. *முந்திய தலைமுறை,* previous generation.

**முந்திரி-** *முந்திரி மரம்,* cashewnut tree. *முந்திரிக் கொட்டை,* cashew nut. *முந்திரிப் பருப்பு,* cashewnut kernals. *முந்திரிப் பழம்,* cashewnut fruit.

**முந்து-** *முன்னதாகச் செல்,* overtake. *நாங்கள் எல்லாப் பேருந்துகளையும் முந்தினோம்,* We overtook all buses.

**முப்பட்டகம்-** *முப்பட்டைக் கண்ணாடி,* prism.

**முப்படை-** *இராணுவத்தின் மூன்று பிரிவுகள்: தரைப்படை, கப்பற் படை, விமானப்படை,* three divisions of the armed forces army, navy and air force.

**முப்பாட்டன்-** *தாத்தாவின் தந்தை, தாத்தாவின் தாத்தா,* great grand father, grandfather's grandfather's grand father.

**முப்புரிநூல்-** *பூணூல்.* sacred thread.

**மும்முரம்-** *தீவிரம்,* hectic. *மும்முரப் பிரசாரம்,* hectic propaganda.

**மும்முறை குதித்துத் தாண்டுதல்-** *மூன்று முறை குதித்து தாண்டுதல்,* triple jump.

**முயங்கு-** உடல் உறவு கொள்ளல், copulate.

**முயல்-** ஒரு பாலூட்டி விலங்கு, hare, rabbit.

**முயற்சி-** 1. முயல்வு, effort. முயற்சி திருவினையாக்கும். Effort brings fortune or wealth. 2. தடவை, attempt. திருடும் முயற்சி, the attempt to steal.

**முரசம்-** முரசு, drum.

**முரடன்-** முரட்டுத்தன்மை உள்ளவன், ruffian, rowdy.

**முரடு-** 1. கடினமுள்ளது, being rough. முரட்டுத்துணி, rough cloth. 2. மடமை, stupidity, folly.

**முரண்-** மாறுபட்டது, contradiction. நீ சொல்வதற்கு அது முரணானது. It is a contradiction to your statement. முரண் செய், contradict.

**முரண்டு-** அடம்பிடி, be obstinate, obstinacy.

**முரண்பாடு-** வேறுபாடு, contradiction. கருத்து வேறுபாடு, difference of opinion.

**முருகன்-** முருகக் கடவுள், Lord Muruga.

**முருகியல்-** அழகியல், aesthetics

**முருங்கை-** முருங்கை மரம், Muringa tree. முருங்கைக் காய், drum-stick.

**முல்லா-** முகமதியரின் தொழுகையை முன்னின்று நடத்துபவர், mulla, one who leads the prayer in a mosque.

**முல்லை-** நறுமணம் மிக்க ஒரு வகை மல்லிகைப் பூ, a kind of jasmine. தமிழ் இலக்கியம் கூறும் ஐந்து திணைகளில் ஒன்று, காடும் காடு சார்ந்த இடமும், forest region.

**முலாம்-** மேல் பூச்சு, electro plating, மின் முலாம், gilding.

**முலாம்பழம்-** பூசணி போன்ற பழம், musk-melon.

**முலை-** மார்பகம், breast.

**முழக்கம்-** உரக்கக் கூவுதல், slogan, roar. முழக்கு, roar, thunder forth.

**முழங்கால்-** தொடையும் கீழ்க் காலும் இணையும் பகுதி, knee. முழங்கால் சில், knee cap. முழங்கால் மூட்டு, knee joint. முழங்காலிடு, kneel down.

**முழங்கை-** மேற்கைக்கும், முன் கைக்கும் இடையிலுள்ள பகுதி, forearm.

**முழம்-** மனிதனின் கை நீண்டிருக்கும்பொழுது நடுவிரலின் நுனியிலிருந்து முழங்கை வரையிலான அளவு, cubit. முழம் போடு, measure with cubit.

**முழவு-** மத்தளம், mirudangam.

**முழு-** 1. முழுதும், all. whole, complete. மக்கள் முழுமனதான ஒத்துழைப்பு, whole hearted cooperation. 2. முழு அடைப்பு, total bandh.

**முழுக்காட்டு-** குளிப்பாட்டு, bathe. குழந்தையை முழுக்காட்டு, bathe the child. முழுக்கு, bathing. முழுக்குப் போடு, put an end. He put an end to his studies.

**முழுகு-** 1. அமிழ்தல், sink, drown. கப்பல் கடலில் மூழ்கியது. The ship sank to the bottom of the ocean. 2. குளி, bathe.

**முழு நீள-** முழு நீள வண்ணப் படம், full length colour picture.

**முழுநேர-** முழுநேர வேலை, full time work.

**முழுமனத்தோடு-** விருப்பத்துடன், whole heartedly. நான் எதையும்

முழுமனத்தோடு செய்வேன். I will do everything whole heartedly.

**முழுமுதல்**- இறைவன், God.

**முழுமூச்சாக**- முழுவீச்சுடன், in full swing. தேர்தல் வேலைகள் முழு மூச்சுடன் நடைபெறுகின்றன. Election work goes on in full swing.

**முழுமை**- 1. நிறைவு, perfection. 2. மொத்தம், totality.

**முழுவதற்கும்**- முழுமைக்கும், இவ் விதி நாடு முழுவதற்கும் பொருந்தும். This law applies to the whole country.

**முழுவீச்சில்**- தீவிரமாக, in full swing. தேர்தல் பிரசாரம் முழு வீச்சில் நடைபெறுகிறது. Election propa ganda goes on in full swing.

**முள்**- 1. தாவரத்தின் கூரிய பகுதி, thorn, spine. 2. முள்ளம் பன்றி முள், spine of porcupine. 3. தூண்டில் முள், fish-hook. 4. கடிகாரமுள், hand of a clock. 5. தராசுமுள், pointer of a balance.

**முள்கரண்டி**- முட்கள் உள்ள கரண்டி, fork. முள் வாங்கி, thorn pincer. முள் வேலி, barbed wire fencing, country fence made of bamboo thorn branches.

**முள்ளம்பன்றி**- உடல் முழுதும் முட்களைக் கொண்ட ஒரு காட்டு விலங்கு, porcupine.

**முள்ளெலும்பு**- முதுகெலும்பிலுள்ள ஒரு தனி எலும்பு, vertebra. நம் முதுகு எலும்பில் 33 முள் எலும்புகள் உள்ளன. Our back-bone consists of 33 vertebrae.

**முளை**- 1. முளைத்தல், germinate. விதைகள் முளைக்கும். Seeds germinate. 2. தோன்று, appear. 3. குழந்தைக்குப் பல் முளைக்கிறது. The child's teeth grow. 4. வளரும் பகுதி, sprout, shoot. முளையி லேயே கிள்ளி எறி, Nip in the bud. 5. ஆப்பு, peg.

**முளைக்கீரை**- ஒரு வகை உண்ணும் கீரை, amaranthes.

**முளைக்குச்சி**- சிறுகுச்சி, peg.

**முளை கட்டு**- விதையை நீரில் ஊற வைத்து முளை வரும்படி செய், make the seed sprout. முளைப் பாலிகை, sprouts. முளைத்தல், germination. முளைவிடு, germinate.

**முற்பகல்**- நண்பகலுக்கு முந்திய நேரம், forenoon.

**முற்பட்ட**- முந்திய, prior to. சங்க காலத்திற்கு முற்பட்ட காலம். period prior to the Sangam age.

**முற்பட்ட வகுப்பு**- முன்னேறிய வகுப்பு, forward community or class, (FC).

**முற்படு**- 1. முயலு, begin, attempt, try. நல்ல செயல்களைச் செய்ய முற்படு. Try to do good things. 2. காலத்தில் முந்தி இருத்தல், preceed in time.

**முற்பிறப்பு**- முற்பிறவி, previous birth.

**முற்போக்கு**- முன்னேற்றப் போக்கு, being progressive. முற்போக்குச் சிந்தனை, progressive thought.

**முற்றம்**- வீட்டின் திறந்த உள்பகுதி, courtyard.

**முற்றல்**- முதிர்ந்தது, being ripe. The brinjals are ripe.

**முற்றிலும்**- முழுவதும், entirely. என் அணுகுமுறை முற்றிலும் வேறு பட்டது. My approach is entirely different.

**முற்று**- 1. வயது முதிர்தல், become old. 2. அதிகமாகும் நிலை, be in

the advanced stage. Cancer is in an advanced stage. 3. சண்டை முற்றியது. The quarrel reached a critical stage. 4. முடிவு-கதை முற்றிற்று, story finished.

**முற்றுப்புள்ளி-** 1. வாக்கியத்தின் இறுதியில் இடப்படும் நிறுத்தக் குறியாகிய புள்ளி, full stop. 2. முடிவு. end. Put an end to your studies.

**முற்றுப்பெறு-** நிறைவுறு, complete. The enumeration work is completed.

**முற்றும்-** 1. எல்லாம், all. அவர் அனைத்தையும் துறந்தவர். He renounced all. 2. முடியும், end.

**முற்றுவினை-** வினைமுற்று, finite verb.

**முறம்-** தானியங்களைப் புடைக்கக் பயன்படும் கருவி, winnowing pan or sieve.

**முறி-** 1. துண்டாக்கு, உடைத்திடு, break. எலும்பு முறிந்தது. The bone broke. 2. அமைதிப் பேச்சு வார்த்தை முறிந்தது. The peace talks broke, (failed). 3. பால் முறிந்தது, The milk got spoiled. 4. இம்மருந்து விஷத்தை முறிக்கும். This medicine acts as an antidote to poison.

**முறியடி-** 1. தோல்வியடையச் செய், defeat, crush. பொய்ப்பிரச்சாரம் முறியடிக்கப்பட்டது. The false propaganda was crushed. 2. விரட்டியடி, drive away. எதிரிகள் முறியடிக்கப்பட்டனர். The enemies were driven away. 3. அவன் பழைய குறிப்பை முறியடித்தான், He broke off the old record.

**முறிவு-** 1. எலும்பு முறிவு, fracture. எளிய எலும்பு முறிவு, simple fracture. கூட்டு எலும்பு முறிவு, compound fracture. பச்சை எலும்பு முறிவு, green fracture. 2. பேச்சு வார்த்தை முறிவு, break-down of talks.

**முறுக்கு-** 1. திருகு, twist. கயிற்றை முறுக்கு, Twist the rope. 2. திருகாணியை முறுக்கு, Turn the screw. 3. முறுக்கப்பட்ட மீசை, Twisted moustache. 5. இளமை முறுக்கு, youthful liveliness. 6. ஒரு வகை காரத் தின்பண்டம், twisted snack. 7. முறுக்கு நூல், twisted yarn.

**முறுகல்-** நன்கு வறுக்கப்பட்ட தோசை, roasted dosai. முறுகு, get scorched.

**முறுவல்-** மென்சிரிப்பு, smile.

**முறை-** 1. முறைத்துப் பார், stare, glower. என்னை அவன் முறைத்துப் பார்த்தான். He stared at me. முறைப்பு, stare. 2. ஒழுங்கு, method, manner. 3. முதன்முறை, first time. 4. முறை வைத்துத் தண்ணீர்ப் பாய்ச்சல், turn system of watering. 5. உறவுமுறை, relationship.

**முறைகேடு-** ஒழுங்கில்லாமை, irregularity. கணக்கில் முறை கேடுகள், irregularities in accounts.

**முறைசார்-** பாடத்திட்டத்திற்கு உட்பட்ட, formal. முறைசார் கல்வி, formal education.

**முறைசாரா-** பாடத்திட்டம் சாரா, informal. முறை சாராக்கல்வி, informal education.

**முறைத்துக் கொள்-** பகைத்துக் கொள், make an enemy. அவன் எல்லோரையும் முறைத்துக் கொள்கிறான். He makes all his enemies.

**முறைப்படுத்து-** முறையாக்கு, systematise, organise. Systematised knowledge is science.

**முறைப்பணி-** *காலமுறைப்படி மாறி மாறிச் செய்யும் வேலை அமைப்பு,* turn duty.

**முறைப்பெண்-** *திருமணம் செய்து கொள்வதற்கு உரிமையுள்ள பெண்,* (e.g) aunt's daughter, *முறை மாப்பிள்ளை,* aunt's son.

**முறைமை-** *1. ஒழுங்குபடுத்தப் பட்டது,* system. *2. சடங்கு,* ritual.

**முறையிடு-** *குறை தீர்க்க வேண்டு,* appeal. Appeal to higher authorities for justice. *முறையீடு,* appeal, prayer.

**முறையே-** *கூறப்படும் முறையில் தனித்தனியே,* respectively. *நல்ல வரும் கெட்டவரும் முறையே தண்டிக்கப்படுகிறார்கள்.* The good and the bad are punished respectively.

**முன்-** *1. முன்னே,* in front of. *உனக்கு முன் நிற்பது யார்?* Who is standing in front of you? *2. முன்பக்கம்,* front side.

**முன்கூட்டியே-** *முன்னரே, முதலிலேயே,* early. You might have told me this matter early.

**முன்கோபம்-** *சட்டென வருங் கோபம்,* short-temper. *முன்கோபி,* short-tempered person.

**முன்தள்ளு-** *முன்னோக்கித் தள்ளு,* push forward. Push the cycle forward. *முன்தள்ளிய வயிறு,* projected belly. Pot belly.

**முன்நில்-** *ஒரு செயலைப் பொறுப் பெடுத்துச் செய்,* take the initiative.

**முன்நிறுத்து-** *முதன்மையாக்கு,* bring to the front, place before. We place before you the facts.

**முன்பணம்-** *1. முன் கூட்டியே தரும் தொகை,* advance, an advance of Rs. 100. *2. உறுதித் தொகை,* caution deposit.

**முன்பதிவு செய்-** *முன்னரே பதிவு செய்,* reserve, book in advance. Tickets are reserved here even before a month.

**முன்பின் தெரியாத-** *முன்பின் அறியாத,* unknown. an unknown place, person.

**முன்பின் யோசிக்காமல்-** *விளைவுகளை எண்ணிப் பார்க்காமல்,* without fore thought. You do many things without fore thought. *முன்யோசனை,* fore thought.

**முன்பு-** *முன்காலத்தில்,* previously. These things were previously exempted from tax.

**முன்மாதிரி-** *எடுத்துக்காட்டு,* model. Be a model to others.

**முன்மொழி-** *முன்மொழிந்துகூறு,* propose. *இத்தீர்மானத்தை நான் முன்மொழிகிறேன்.* I propose this resolution. *முன்மொழிபவர்,* proposer.

**முன்வா-** *உயர்நிலைக்கு வா, ஒரு செயலைச் செய்ய முதலில் வா,* come forward.

**முன்வை-** *கவனத்திற்கு கொண்டு வா,* place. I would like to place before this august assembly the following things.

**முன்வைப்புத் தொகை-** *முன் கட்ட வேண்டிய பணம்,* earnest money deposit.

**முன்னங்கால்-** *முன்னுள்ள கால்,* fore leg (animal)

**முன்னங்கை-** hand.

**முன்னணி-** *1. தேர்தல்வாக்கு எண்ணும் போது ஒருவர் முன்னிருக்கும்*

நிலை, leading. He is leading by 5000 votes. 2. முதன்மை நிலையில் இருத்தல், be in the forefront. 3. ஜனநாயக முன்னணி, democratic front.

**முன்னதாக-** முன்பே, early. Please come half an hour early.

**முன்னது-** முந்தியது, the former.

**முன்னர்-** முன்பு, before, ago. பல ஆண்டுகளுக்கு முன்னர், many years ago.

**முன்னறிவிப்பு-** 1. முன் கூட்டியே தெரிவித்தல், notice. 2. வானிலை முன்னறிவிப்பு, weather forecast.

**முன்னாள்-** முன்பு பணி செய்த, former. முன்னாள் அமைச்சர், former minister.

**முன்னிட்டு-** ஒன்றைக் காரணமாகக் கொண்டு, on account of. Tomorrow there will be no school on account of Deepavali.

**முன்னிலை-** 1. முதல் நிலை, leading. 2. இடத்தின் முன், in the presence of, in the presence of God.

**முன்னிலைப் படுத்து-** முதல் நிலையில் வை, bring one to the forefront.

**முன்னிலையில் -** ஒருவர்முன், in the presence of. The auction took place in the presence of officers.

**முன்னுக்குக் கொண்டு வா-**முன்னேற்று, bring up. குடும்பத்தை முன்னுக்குக் கொண்டுவா. Bring up the family.

**முன்னுக்கு வா-** முன்னேறு, come up in life.

**முன்னுரிமை-** முதல் உரிமை, priority, preference. Give priority to drought relief.

**முன்னுரை-** முகவுரை, preface. முன்னுரை எழுது, Write a preface.

**முன்னெச்சரிக்கை-** முன்னதாகச் செய்யப்படும் பாதுகாப்பு அறிவிப்பு, precaution.

**முன்னே-** முன்னால், ago, before. நான்கு நாட்களுக்கு முன், four days ago.

**முன்னேற்பாடு-**ஆயத்தப்பணி, preliminaries. Have you done all the preliminaries?

**முன்னேற்றம்-** 1. வளர்ச்சி, progress, betterment. வாழ்க்கையில் முன்னேற்றம், progress in life. 2. தேறிவருதல், improvement in health. 3. முன்னேற்று, improve. Improve the economic sector.

**முன்னேறு-** நன்னிலைக்கு வா, progress in life.

**முன்னொட்டு-** (இலக்) சொல்லுக்கு முன் சேர்க்கப்படும் சொல்/அசை, prefix.

**முன்னோக்கிய-** 1. வருங்காலத்தைப் பற்றி, forward - looking. முன்னோக்கிய பார்வை, farsight. 2. முன்னோக்கிய பல், projecting teeth.

**முன்னோட்டம்-** சோதனைக்காக செய்து பார்த்தல், trial run. preview of a picture.

**முன்னோடி-** 1. முதலில் செய்தவர், pioneer. 2. முன்னோடித் திட்டம், pilot scheme. 3. எடுத்துக் காட்டு, model. He is a model for writers.

**முன்னோர்-** முந்தைய தலைமுறையினர், forefathers, ancestors.

**முன்ஜாமீன்-** முன்கூட்டிப் பெறும் ஜாமீன், anticipatory jail.

**முனகல்-** வலியினால் வாயிலிருந்து வெளிப்படும் சிறு ஒலி, groaning. முனகு, groom.

**முனிவர்-** தவம் செய்பவர், sage, saint. We consider the sage equal to God, for his exemplary conduct.

**முனை-** *1. ஈடுபடு,* be engaged in. I am now engaged in teaching adults. *2. முயற்சி செய்,* try, attempt. I am attempting to collect the best short stories in Tamil.

**முனை-** *1. கூரிய பகுதி,* edge. sharp point. *2. இறுதிப்பகுதி,* end. *3. குமரி முனை,* Cape Comorin. *4. போர் முனை,* war front. *5. முனைப் பகுதிகள்,* polar regions. *தென் முனை,* South Pole. *வடமுனை,* North Pole. *6. மின்முனைகள்,* terminals.

**முனைஞர்-** *படைத்தலைவர்,* general.

**முனைப்பு-** *மும்முரம்,* concentrated effort.

**முனைமுகம்-** *போர்முனை,* war front.

**முனையம்-** *விமான நிலையத்தில் பயணிகள் வந்து இறங்கும்/புறப் படும் கட்டடம்,* terminal.

**முனையோர்-** *பகைவர்,* foes.

**முனைவர்-** *பல்கலைக் கழகத்தில் முதுநிலை ஆய்வுப்பட்டம் பெற் றவர்,* doctor. *முனைவர் பட்டம்,* Ph.D. Doctor of Philosophy degree.

**முனைவன்-** *1. கடவுள்,* God. *2. அறிஞன்,* wise.

**முனைவு-** *1. வெறுப்பு,* hatred. *2. முனைதல்,* effort.

## மூ

**மூக்கணாங் கயிறு-** *மூக்குக் கயிறு,* (nose rope) reins. *எதிர்க்கட்சி இல்லாத அரசு, மூக்கணாங்கயிறு இல்லாத மாடு போன்றது.* A government without opposition is like a bullock without reins.

**மூக்கறு-** *மூக்கறுபடுதல்,* cut off one's nose to spite one's face.

**மூக்கறுபடு-** *அவமானப்படு,* get disgraced. It got disgraced.

**மூக்கில் விரல் வை-** *வியப்படை,* be surprised. We are surprised to witness the feats.

**மூக்கு-** *1. முகர்வதற்குரிய உறுப்பு,* nose. *2. பறவையின் அலகு,* beak. *3. முகவை மூக்கு,* spout of the measuring flask.

**மூக்குக் கண்ணாடி-** *மூக்கின் மேல் அணியும் கண்ணாடி,* spectacles.

**மூக்குத்தி-** *மகளிர் மூக்கணி* , nose stud or screw.

**மூக்குப் பிடிக்க-** *வயிறு நிறைய,* full. *நாங்கள் மூக்குப் பிடிக்க சாப்பிட் டோம்.* We ate full.

**மூக்குப் பொடி-** *மூக்கில் உறிஞ்சும் பொடி,* snuff.

**மூக்கும் முழியுமாக-** *முக அழகுடன்,* with well marked facial features.

**மூக்கைத் துளை-** *மணம் மூக்கை அடைதல்,* excite the sense of smell.

**மூக்கை நுழை-** *தலையிடு,* poke one's nose. Don't poke your nose in the affairs of others.

**மூங்கில்-** *ஓங்கி வளரும் புல் வகையைச் சேர்ந்த ஒற்றை விதை யிலைத் தாவரம்,* bamboo. *மூங்கில் நாற்காலி,* bamboo chair.

**மூச்சடை-** *மூச்சுத் திணறு,* suffocate. *மூச்சுக்குழல்,* wind pipe, trachea.

**மூச்சு வாங்கு-** *மூச்சு இரைப்பு,* pant.

**மூச்சு விடு-** *சுவாசி, மூச்சு விடல்,* breathe. *தலைமை ஆசிரியரிடம் இது பற்றி மூச்சு விடாதே,* Don't tell the Headmaster about this.

**மூஞ்சி-** *முகம்,* face.

**மூஞ்சுறு-** *மூக்கு நீண்ட எலி போன்ற விலங்கு.* screw mouse.

**மூட்டம்-** மேகக் கூட்டம், mass of clouds.

**மூட்டு-** 1. தீ மூட்டு, make fire. 2. எனக்குக் கோபமூட்டாதே, Don't make me angry. 3. துண்டுகளைச் சேர், sew together joints. 4. எலும்பு மூட்டு, joint. அசையும் மூட்டு, movable joint. அசையா மூட்டு, immovable joint.

**மூட்டை-** 1. பெரிய சாக்குப் பை, sack, big bag. இரண்டு மூட்டை நெல், two bags of paddy. 2. துணி மூட்டை, cloth bundle.

**மூட்டைக்கட்டு-** 1. நிறுத்து, முடிவு close. I have closed my business. 2. வெளியேறு, quit, leave.

**மூட்டைப்பூச்சி-** இரத்தம் உறிஞ்சும் சிறுபூச்சி, bedbug.

**மூட்டை முடிச்சு-** ஒருவருக்குச் சொந்தமான பெட்டி, படுக்கை முதலான பொருள்கள், bag and baggage.

**மூட-** பகுத்தறிவுக்குப் பொருந்தாத, blind, irrational. மூடநம்பிக்கை, blind belief, superstition.

**மூடன்-** அறிவற்றவன், fool.

**மூடி-** 1. மூடியிருக்கும் பகுதி, lid. 2. செருகி, top, cap. (of pen)

**மூடிமறை-** வெளிப்படுத்தாதே, hide, conceal. Hide the truth.

**மூடு-** 1. சாத்து, shut, close. Shut the door. 2. கண்ணை மூடு, close your eyes. 3. விடுமுறைக்காக பள்ளி மூடப்பட்டது, The school was closed for holidays. 4. குழாயை மூடு, Close the tap.

**மூடுபனி-** அடர்பனி, fog.

**மூடுமந்திரம்-** புரியாத நிலை, veiled secrecy.

**மூடை-** மூட்டை, big bag, sack.

**மூத்த-** 1. முதிய, senior. மூத்த அதிகாரி, senior officer. 2. முதல், first. மூத்த மகன், first son. 3. வயதில் உயர்வான, elder. மூத்த மகன், 4. மூத்தாள், first wife.

**மூத்திரம்-** சிறுநீர், Urine.

**மூதறிஞர்-** அறிவு நிரம்பியவர், elder statesman.

**மூதாட்டி-** முதியவள், old woman.

**மூதாதையர்-** முன்னோர், ancestors.

**மூதுரை-** அறிவுரை, maxims, saying.

**மூதேவி-** தீமை உண்டாக்கும் தெய்வம், the goddess of misfortune said to be elder sister of Sridevi, the goddess of fortune or prosperity.

**மூப்பு-** 1. வயதான நிலை, old age. 2. பணி மூப்பு, seniority.

**மூர்க்கம்-** வெறித்தன்மை, brutality.

**மூர்ச்சை-** மயக்கம், swoon.

**மூர்த்தம்-** திருவுருவம், சிலை, idol. மூர்த்தி, God.

**மூலக்கூறு-** அணுக்களின் சேர்க்கை, molecule.

**மூலகம்-** தனிமம், element.

**மூலதனம்-** முதல், capital.

**மூலப்பொருள்-** கச்சாப் பொருள், raw material.

**மூலம்-** 1. மூல நோய், piles. 2. மூல நூல், original. 3. தோற்றம், origin. 4. மூல பாடம், original text. 5. 27 நட்சத்திரங்களில் பத்தொன்பதாவது, the nineteenth of the twenty seven stars. 6. வழி, by, through. மின்சாரம் கம்பி மூலம் செல்கிறது. Eletricity passes through wire.

**மூலவர்-** கோயிலில் புனிதமாக நிறுவப்பட்ட தெய்வம், consecrated deity. மூலஸ்தானம், sanctum sanctorum. மூலாதாரம், resources.

**மூலிகை-** *மருந்துச் சத்துள்ள இலை,* herbal leaf.

**மூலை-** *இரு பக்கங்கள் சேருமிடம்,* corner.

**மூலை மட்டம்-** *அளக்கும் ஒரு வகைக் கருவி,* set square.

**மூலை முடுக்கு-** *1. இண்டு இடுக்கு,* gaps. *2. எல்லா இடம்,* nook and corner.

**மூலை விட்டம்-** *குறுக்களவு,* diagonal.

**மூழ்கு-** *1. ஒரு திரவத்தினுள் செல்லல்,* sink. *படகு மூழ்குகிறது.* The boat sinks. *2. அமிழ்,* bury. *நான் துயரத்தில் மூழ்கினேன்.* I was buried in grief.

**மூள்-** *1. பற்று,* catch fire. *தீ மூண்டது.* It caught fire. *2. போர் மூண்டது,* War broke out. *3. ஐயம் மூண்டது,* A doubt arose.

**மூளி-** *1. வெறுமை,* bareness. being without ornaments. *2. குறைபாடு,* defect. defect in the idol.

**மூளை-** *நரம்பு மண்டலத்தைக் கட்டுப்படுத்தும் தலைமை உறுப்பு. இது மண்டையோட்டினுள் காக்கப்படுவது,* brain. *பெருமூளை,* cerebrum, *சிறுமூளை,* cerebellum. *நடுமூளை,* midbrain. *மூளைக் காய்ச்சல்,* brain fever. *மூளைச் சலவை செய், அறிவை மயக்கு,* brainwash.

## மெ

**மெச்சு-** *பாராட்டு,* appreciate. *மெச்சுதல்,* appreciation.

**மெட்டி-** *திருமணமான இந்துப் பெண்கள் கால் விரல்களில் அணியும் வெள்ளி வளையம்,* silver ring worn on one or two toes next to the big toe by married Hindu women in India.

**மெட்டு-** *1. பாடல் இசை வடிவம்,* tune. *மெட்டுப் போடு,* set tune. *2. வீணை முதலான இசைக் கருவிகளில் தந்திகளுக்குக் கீழ் இருக்கும் உலோகத்துண்டு,* fret.

**மெத்த-** *மிக,* well. *மெத்தப் படித்தவர்,* well - read person.

**மெத்தனம்-** *கவனமின்மை,* slack ness, negligence. Avoid negligence.

**மெத்தை-** *1. ஒரு வகைப் படுக்கை,* mattress. *2. மாடி,* first floor. *மெத்தை வீடு,* storeyed house.

**மெதுமை-** *மென்மை,* softness. *பட்டின் மெதுமை,* softness of silk.

**மெதுவாக-** *1. அவசரமின்றி, மெல்ல,* slowly, go slowly. *2. பின்பு,* later. *அதைப் பின்பு செய்.* Do it later.

**மெய்-** *1. உண்மை,* truth. *2. உடல்,* body. *3. (இலக்) மெய்யெழுத்து, (எ.டு) க், ங்,* consonant. *4. தோல்,* skin.

**மெய்க்காப்பாளர்-** *மெய்க்காவலர்,* bodyguard.

**மெய்க்கீர்த்தி-** *அரசனைப் புகழ்ந்து கல்லில் கவிதை வடிவில் பொறித்த செய்தி,* verse inscription on stone.

**மெய்ஞானம்-** *உண்மையறிவு,* true knowledge, wisdom.

**மெய்ப்பாடு-** *உள்ளத்து உணர்ச்சி வெளிப்பாடு,* emotional bodily gestures.

**மெய்ப்பி-** *உண்மை எனக்காட்டு,* prove. *நீ குற்றமற்றவன் என மெய்ப்பி.* Prove that you are not guilty.

**மெய்ப்பொருள்**- *உண்மைப்பொருள்,* truth. *மெய்ப்பொருள் காண்பதறிவு,* To find out truth in everything is knowledge.

**மெய்ம்மற**- *தன் உணர்வின்றி இரு,* absorb totally. He was totally absorbed in the work.

**மெய்மை**- *உண்மை,* truth.

**மெய்யறிவு**- *உண்மையறிவு,* wisdom.

**மெய்யாகவே**- *உண்மையாகவே,* truly. *நான் மெய்யாகவே கூறுகிறேன்.* I say truly.

**மெருகு**- *பளபளப்பு,* polish. Polish is very bright.

**மெல்**- *மென்று தின்,* chew. Chew the food well for digestion.

**மெல்ல**- *1. மெதுவாக,* softly. *மெல்லப் பேசு,* speak softly. *2. மென்மையாக,* gently. *மெல்லத் தட்டு,* strike gently.

**மெல்லிசை**- *எளிய இனிய இசை, திரைப்படப் பாடல்,* light music.

**மெல்லிய**- *1. ஒல்லியான,* slender, thin. *மெல்லிய கம்பி,* thin wire. *2. மெதுவான,* softt. soft voice.

**மெல்லினம்**- *(இலக்) மெல்லின எழுத்து, (எ.டு) ங், ஞ், ண், ந், ம், ன்,* nasal consonants.

**மெலி**- *இளைத்தல்,* become thin. You have become thin. *மெலிது,* being soft.

**மெழுகு**- *1. கழுவு,* clean, wash. *2. உருகக்கூடிய பொருள்,* wax. *வெண்மெழுகு,* paraffin wax. *தேன் மெழுகு,* bees wax. *3. மெழுகு வர்த்தி,* candle. *4. மெழுகுவர்த்தித் திறன்,* candle power.

**மென்மை**- *மென்மையான தன்மை,* softness, tenderness.

## மே

**மேகச்சூடு**- *மேக வெட்டை,* gonorrhea.

**மேக நோய்**- *ஆண்குறிப் பால்வினை நோய்.* syphilis.

**மேகம்**- *முகில்,* cloud. *வெண்மேகம்,* white cloud. *கருமேகம்,* black cloud.

**மேசை**- *மேடை,* table.

**மேட்டுக்குடி**- *உயர்வகுப்பினர்,* upper class.

**மேடிடு**- *உயரமாதல்,* silt up.

**மேடு**- *திட்டு, தரையில் உயர்ந்த பகுதி,* raised ground. *வாழ்க்கையில் மேடு பள்ளங்கள்,* ups and downs in life.

**மேடை**- *1. மேடை அமைப்பு,* plat form, dais.

**மேடையேறு**- *1. அரங்கில் நாடகம் நடி,* Stage a play. *2. மேடையில் அமர்,* be on the stage.

**மேதகு**- *மேன்மைக்குரிய,* Excellency.

**மேதாவி**- *அறிவு மிக்கவர்,* genius. *மேதா விலாசம்,* profound knowledge.

**மே தினம்**- *மே மாதத்தின் முதல் நாள், உலகத் தொழிலாளர் தினம்,* May Day.

**மேம்படு**- *உயர்ந்திடுமாறு செய்,* uplift, better. Uplift the poor. *மேம்பாடு,* betterment. uplift.

**மேம்பாலம்**- *வண்டிகள் மேலாகச் செல்ல அமைந்துள்ள பாலம்,* flyover. Anna flyover, overbridge.

**மேம்போக்கு**- *மேலோட்டம்,* super ficiality.

**மேய்**- *1. புல் சாப்பிடு,* graze, cattle graze. *2. மேலோட்டம் விடு,* browse. *3. மேய்ச்சல்,* grazing. *4. மேய்ச்சல் நிலம்,* pasture.

**மேல்-** *1.* மேற்கு, west. *2.* உடம்பு, body. *3.* மேம்பட்டது, better. *4.* மேலே, above. The sky is above. *5.* மேல் எல்லை, upper limit. *6.* அதற்குமேல், more than.

**மேல் துண்டு-** தோளில் போட்டுக் கொள்ளும் சிறிய துண்டு, upper towel.

**மேல்நாடு-** மேற்குப்புறம் அமைந்துள்ள அயல்நாடு, Westen country.

**மேல்நிலைப்பள்ளி-** 11, 12 வகுப்புகள் உள்ள பள்ளி, Higher Secondary School.

**மேல்படிப்பு-** உயர்படிப்பு, higher studies.

**மேல்பூச்சு-** *1.* மேல் தடவுவது, outer coating,plastering. *2.* வெளித் தோற்றம், outward appearance.

**மேல் பேச்சு-** எதிர்த்துப் பேசுதல், counter argument.

**மேல் முறையீடு-** உயர் அதிகாரிக்கு முறையீடு செய்தல், appeal.

**மேல் வட்டி-** கூடுதல் வட்டி, additional or higher interest.

**மேல்வரி-** வரிக்கு மேல் வரி, surcharge.

**மேல்வரும்படி-** *1.* சம்பளம் தவிர்த்து வரும் தொகை, additional income. *2.* லஞ்சம், bribe.

**மேலதிகாரி-** மேல் மட்ட அலுவலர், higher authority.

**மேலவை-** நாடாளுமன்றத்தின்/ சட்டமன்றத்தின் மேல் சபை, Upper house, Rajya Sabha/ Legislative Council.

**மேலாக்கு-** மார்பகத்தை மறைக்கும் சேலையின் பகுதி, part of the saree covering the breasts.

**மேலாக-** *1.* மேலெழுந்தவாரியாக, on the surface. *2.* அதிகம், more than. ஈராண்டுகளுக்கு மேல், more than two years.

**மேலாடை-** வெளியாடை, outer garment.

**மேலாண்மை-** உயர் மட்ட நிர்வாகம் செய்தல், management. நீர் மேலாண்மை, water management.

**மேலாதிக்கம்-** உயர் கட்டுப்பாடு, dominance, domination.

**மேலாளர்-** உயர்மட்ட நிர்வாகம் செய்பவர், manager. முதுநிலை மேலாளர், senior manager.

**மேலான-** உயர்வான, excellent. மேலான கருத்து, excellent idea.

**மேலிடம்-** உயர் மட்டம், high command.

**மேலிடு-** பொங்கு, bubble out. உணர்ச்சி மேலிட்டது. Emotions bubbled out.

**மேலும்-** தவிர, moreover. I know the thief. Moreover I also know his residence.

**மேலுரம்-** பயிர் நட்டபின் போடும் உரம், top dressing.

**மேலெழுந்தவாரியாக-**மேலோட்டமாக, superficially.

**மேலே-** *1.* உயரே, up. *2.* பிறகு மேலே என்ன நடந்தது? What happened afterwards?

**மேலைக்காற்று-** மேற்கிலிருந்து வீசும் காற்று, westerly wind.

**மேலோங்கு-** உயர்வாக மற்றவற்றைக் கட்டுப்படுத்தும் நிலையில் இருத்தல், prevail, be dominant.

**மேவு-** *1.* பரவுதல், spread. Sand is spread everywhere.

**மேளக்காரர்-** தவில் வாசிப்பவர், tavil vidwan. மேளதாளத்துடன், fan fare (an elaborate welcome) The

President was welcomed with a fanfare. மேளம், tavil, drum.

**மேற்கண்ட-** மேற்குறித்த, the above mentioned.

**மேற்கத்திய-** மேற்கிலுள்ள, western.

**மேற்கு-** சூரியன் மறையும் திசை, west.

**மேற்கூரை-** மேல்தளம், ceiling.

**மேற்கொண்டு-** தொடர்ந்து, further. மேற்கொண்டு நாம் செய்ய வேண்டியது என்ன? What have we to do further?

**மேற்கொள்-** மேற்கொள்ள வேண்டியது என்ன? What to do further? 2. உண்ணா நோன்பு மேற் கொள், Observe fast.

**மேற்கோள்-** எடுத்துக்காட்டு, reference. Many references are quoted.

**மேற்படாத-** அதிகமில்லாத, not exceeding, more than.

**மேற்படிப்பு-** உயர்படிப்பு, higher studies.

**மேற்பரப்பு-** மேற்பகுதி, surface. மேற்பரப்பு இழுவிசை, surface tension.

**மேற்பார்வை-** கண்காணித்தல், supervision. மேற்பார்வையாளர், supervisor.

**மேன்மேலும்-** தொடர்ந்து அதிகமாக, more and more.

**மேன்மை-** உயர்வு, excellence, dignity. Wish you all excellence.

**மேனாமினுக்கி-** பகட்டுப்பெண், a showy woman.

**மேனி-** 1. உடம்பு, body. 2. சராசரி விளைச்சல், average yield. 3. வீதம், per. ஆளுக்குப் பத்து ரூபாய் கொடு. Give ten rupees per head.

## மை

**மை-** 1. கண்ணுக்கு இடப்படும் கரிய அழகுப் பொருள், பசை, Collyrium for the eye. 2. எழுதும் திரவம், ink. நீல மை, blue ink. சிவப்பு மை, red ink. கறுப்பு மை, black ink. அச்சு மை, printing ink. மைக் கூடு, ink bottle.

**மைத்துனன்-** மனைவியின் சகோதரன், brother-in-law.

**மைத்துனி-** மனைவியின் சகோதரி, sister-in-law.

**மைதா-** மைதா மாவு, maize flour.

**மைதானம்-** திடல், ground, play-ground.

**மைதுனம்-** உடல் உறவு, sexual union.

**மைந்தன்-** மகன், son.

**மைபோடு-** மந்திர மை தடவிக் காணாமல் போன பொருளைக் கண்டுபிடி, employ magic ink to find out the lost objects.

**மைய அரசு-** மத்திய அரசு, Central Government.

**மையம்-** 1. நடுப்புள்ளி, centre. 2. மையக்கருத்து, nucleus, central idea. 3. தேர்வு மையம், examination centre.

**மையம் கொள்-** ஓரிடத்தில் நிலை கொண்டிருத்தல், be centre. The storm is centred eastward about 200 km. from Chennai.

**மையல்-** காதல் மயக்கம், intoxicated with love.

**மைல்கல்-** 1.தூரம் குறிக்கும் எல்லைக் கல், milestone. 2. குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, பெனிசிலின் கண்டு பிடிப்பு மருத்துவ வரலாற்றில் ஒரு மைல் கல். The discovery of penicillin

is a milestone in the history of medicine.

**மைனா-** ஒரு வகைப்பறவை, mynah.

## மொ

**மொக்கு-** *அரும்பு,* bud.

**மொக்கை-** *மொண்ணை,* being blunt.

**மொகலாயர்-** *முகமதிய இனத்தவர்,* the Moguls.

**மொச்சை-** *அவரை இனச் செடி,* a kind of bean.

**மொட்டை-** *1. தலை மயிர் முழுதும் நீக்கப்பட்ட நிலை,* tonsure. *திருப்பதி மொட்டை,* Tirupathi tonsure. *2. வழுக்கை,* baldness. *3. மொட்டைக் கடிதம்,* anonymous letter.

**மொட்டைமாடி-** *கூரை இல்லாத மேல்தளம்,* the flat roof of a building, the open floor of a storeyed house.

**மொட்டையடி-** *1. தலைமயிரை நீக்கு,* have a tonsure. *2. பணம்பறி,* fleece. The local shops are really fleecing the holiday makers of their money.

**மொத்தத்தில்-** *எல்லாவற்றையும் சேர்த்துப் பார்க்குமிடத்து,* on the whole. *மொத்தத்தில் ஆதாயமே.* On the whole, it is all profit.

**மொத்தம்-** *1. முடிவாகக் கிடைப்பது,* total, gross. *2. முழுமை,* the whole. *3. மொத்த வியாபாரி,* whole sale trader. *4. பருமன்,* thick, big.

**மொத்து-** *1. பலமாக அடி,* beat severely. *2. அடி,* blow.

**மொந்தன் பழம்-** ஒரு வகைப் பெரிய வாழைப்பழம், mondan plantain fruit.

**மொந்தை-** *கலயம்,* mud flask. *ஒரு மொந்தைக்கள்,* a flask of toddy.

**மொய்-** *1. கூட்டமாகச் சேர்தல்,* swarm. *தேனீக்கள் மொய்க்கின்றன.* Bees swarm. The reporters swarmed round the minister. *2. திருமண அன்பளிப்புப் பணம்,* wedding gifts - cash and kind. *3. மொய் எழுது,* record the wedding gifts - cash and kind.

**மொரமொரப்பு-** *1. நொறுங்கக் கூடியது,* being crisp. *2. மொடமொடப்பு,* stiffness.

**மொழி-** *1. கூறு, என்ன மொழிகிறாய்?* What do you say? *2. பேசும் மொழி,* language, tongue. *தாய் மொழி,* mother tongue. *3. மொழிச் சிக்கல்,* language problem.

**மொழி பெயர்-** ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்குப் மாற்றி எழுதுதல், translate. *கீழ்க் குறித்த தமிழ் கவிதையை ஆங்கிலத்தில் மொழி பெயர்.* Translate the following Tamil poem into English. *மொழி பெயர்ப்பாளர்,* translator. *மொழி பெயர்ப்பு,* translation.

**மொழிமாற்றம்-** ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மாற்றுதல், dubbing. It is a dubbed picture.

**மொழியாக்கம்-** *ஒரு மொழியில் உள்ள கருத்தை மற்றொரு மொழியில் எழுதுதல்,* transcreation. *மொழியாக்கம் செய்,* transcreate. Transcreation is more flexible than translation.

**மொழியியல்-** *மொழியை ஆராயுந் துறை,* linguistics. *மொழியியலார்,* linguist.

**மொள்-** *முகந்து எடு, நீரை முகந்து எடு,* Scoop out water.

## மோ

**மோகம்-** *பாலுணர்வு உந்தல்,* lust. *ஆசை அறுபது நாள். மோகம்*

முப்பது நாள். Desire exists for sixty days and lust for thirty days.

**மோகனம்-** *1. ஓர் இனிய பண்,* a sweet tune, mohanam. *மோகனம் பாடு,* Sing mohanam. *2. கவர்ச்சி,* charming. *மோகனப் புன்னகை,* charming smile.

**மோகினிப்பிசாசு-** *மயக்கும் பெண் பேய்,* an enticing female ghost.

**மோசடி-** *ஏமாற்றல்,* fraud, cheating. It is a fraud. *மோசம்,* bad, worst. *மோசம் செய்,* cheat. *மோசம் போ,* be cheated.

**மோட்சதீபம்-** *ஆன்ம ஒளி விளக்கு,* the light of bliss. *மோட்சம்;* the bliss.

**மோட்டா-** *தடித்த, மோட்டாத் துணி,* rough cloth.

**மோட்டுவளை-** *கூரையின் உச்சிப் பகுதி,* raft of the inner roof.

**மோடா-** *உரல் போன்ற இருக்கை,* hour glass like seat.

**மோடி வித்தை-** *மந்திரவித்தை,* a sort of black magic.

**மோடு-** *முகடு,* raft of the inner roof.

**மோதகம்-** *கொழுக்கட்டை,* dumpling.

**மோதல்-** *1. தகராறு,* confrontation. *மோதல் அரசியல்,* confrontation politics. *2. சண்டை,* clash. There was a clash between two groups of college students.

**மோதிரம்-** *விரலில் நகையாக அணியும் வளையம்,* ring. *மோதிர விரல்,* ring finger.

**மோது-** *1. இடி,* hit, dash. I dashed against the wall. *2. சண்டையிடு,* clash. confront.

**மோப்பம்-** *முகர்வுணர்வு,* scent. *மோப்பம் பிடி,.* scent, snuff.

**மோர்-** *நீர் சேர்த்துக் கடைந்த தயிர்,* buttermilk. *மோர்க்குழம்பு,* soup made of buttermilk.

**மோர்சிங்-** *உதடுகளுக்கிடையில் வைத்து வாசிக்கும் இசைக்கருவி,* Jew's harp. mogar singh.

**மோர் மிளகாய்-** *மோரில் ஊற வைத்து உலர்த்தப்பட்ட பச்சை மிளகாய்,* green chillies soaked in buttermilk and dried.

**மோனம்-** *மௌன நிலை,* state of perfect silence.

**மோனை-** *ஓர் அணி நயம், சொற்களின் முதல் எழுத்து ஒன்றி வருதல். (எ.டு)* **கந்தன் கருணை.** alliteration (e.g) Silent Stars.

## மௌ

**மௌடிகம்-** *அறியாமை,* ignorance.

**மௌல்வி-** *இஸ்லாமிய மார்க்க அறிஞர்,* moulvi, a scholar in Islam.

**மௌனம்-** *பேசாதநிலை,* state of silence. *மௌனம் சம்மதத்திற்கு அறிகுறி,* Silence means acceptance. *மௌனம் சாதி,* be silent. *மௌன விரதம்,* silent fasting. *மௌனி,* be silent, one who observes silent fasting, one who is a silent spectator.

## ய

**யச்ஞம்-** *வேள்வி,* sacrifice.

**யத்தனம்-** *முயற்சி,* effort. *யத்தனி,* try.

## யா

**யாக்கை-** *உடல்,* body.

**யாகசாலை-** *யாகம் செய்யும் சாலை,* sacrificial hall. *யாகம்,* sacrifice.

**யாசகம்-** *பிச்சை,* begging. *யாசி,* beg.

**யாத்திரிகன்-** *பயணி,* pilgrim, traveller. *யாத்திரை,* travel, pilgrimage.

**யாது-** *எது,* what.
**யாதொரு-** *எந்த ஒரு.* any.
**யாப்பிலக்கணம்-** *(இலக்) செய்யுள் எழுத வரையறை.* Prosody *இதன் பிரிவுகள்: எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை.*
**யாம்-** *நாம்,* we.
**யாமம்-** *இரவு,* night. *நடு யாமம்,* midnight.
**யார்-** who. *யார் எவர்,* who's who.
**யாரோ-** *எவரோ,* someone.
**யாவர், யாவும்-** all.
**யாவை-** *எவை,* which, what.
**யாழ்-** *வீணை போன்ற பண்டைத் தமிழிசை நரம்புக் கருவி,* harp.
**யாளி-** *சிங்கமுகமும் யானைத் துதிக்கையும் தந்தமும் கொண்ட புராண விலங்கு.* yali, a mythical animal.
**யான்-** *நான்,* I
**யானை-** *ஆனை, தும்பிக்கையுடன் கூடிய காட்டு மிருகம். தரை வாழ் விலங்குகளில் பெரியது.* elephant. *யானைக்கால்,* elephantiasis. *யானைச்சொறி,* psoriasis.

## யு

**யுக்தி-** *தந்திரம்,* trick.
**யுகம்-** *ஊழி,* aeon, period.
**யுத்தம்-** *போர்,* war.
**யுவதி-** *இளம் பெண்,* young woman.
**யுவன்-** *வாலிபன்,* youth.

## யோ

**யோக்கியதை-** *தகுதி,* qualification. *யோக்கியம்,* integrity.
**யோகம்-** *1. தியானம்,* meditation. *2. யோகாசனம்,* yoga. *யோகி,* ascetic.
**யோசனை-** *சிந்தனை, ஆலோசனை,* suggestion, advice. *என் யோசனையைப் பின்பற்று,* Follow my advice.
**யோசி-** *சிந்தி,* think.
**யோனி-** *பெண் இனப்பெருக்க உறுப்பு,* female genital organ.

## யௌ

**யௌவனம்-** *இளமை,* bloom of youth.

## வ

**வக்கணை-** *1. நன்றாக இருத்தல்,* tasty. *உணவு வக்கணையாய் உள்ளது.* The food is tasty. *2. திறன்,* skill. Being educated, she speaks skilfully.
**வக்கரி-** *திரிதல்,* be perverse. You are rather perverse. *வக்கிரம்,* perversities.
**வக்காலத்து-** *வழக்குத் தொடுப்பவர் வக்கீலுக்குத் தரும் அதிகாரப் பத்திரம்,* vakkalat.
**வக்காலத்து வாங்கு-** *பரிந்து பேசு,* Don't advocate for him.
**வக்கீல்-** *வழக்குரைஞர்,* advocate.
**வக்கு-** *ஆற்றல், வக்கு இல்லை,* no means.
**வகி-** *1. பொறுப்பு வகி,* be in charge of. *2. தலைமை வகி,* preside over.
**வகிடு-** *தலைமுடியின் இரு பிரிவுக் கோடு,* parting of hair. *வகிர்,* part hair.
**வகு-** *1. திட்டம் வகு,* draw plan. *2. கணிதச் செயல்,* divide. *8ஐ 4 ஆல் வகு.* Divide 8 by 4.
**வகுப்பு-** *1. நிலை,* standard or class. VIII std. *2. ஆங்கிலப் பாட வகுப்பு,* English class. *3. முதல் வகுப்புப்*

*பயணம்,* first class journey. 4. *நடுத்தர வகுப்பு,* middle class. 5. *சாதி,* caste. *வேறு வகுப்பு,* other caste.

**வகுப்பு வாதம்-** *பிரிவினைப் போக்கு,* communalism.

**வகை-** 1. *பிரிவு,* class, kind. 2. *வழி,* method, way, manner. 3. *வகைப் பாடு,* classification.

**வகைசெய்-** *வழிவகு,* device a method. provide the means for.

**வகையறா-** *தொடர்புள்ள ஏனையவை,* and others. *வயலின், மிருதங்கம் வகையறாக்கள்,* violin, miruthangam and others.

**வகையாக-** *வசமாக தப்ப முடியாதபடி,* inescapably.

**வங்கி-** *பண வரவு செலவு உள்ள இடம்,* bank. *குருதி வங்கி,* blood bank. *வங்கிக் கணக்கு,* bank account. *வங்கியியல்,* banking.

**வசதி-** *வாய்ப்பு,* means, amenity, facility; comfort. *வங்கி வசதி,* bank facility. *எல்லா வசதிகளும் உண்டு.* All facilities are available.

**வசந்தகாலம்-** *இளவேனில்,* spring season.

**வசந்தம்-** *மகிழ்ச்சியுள்ள காலம்,* joy in life.

**வசப்படு-** *ஆளாகு, உணர்ச்சி வயப் படாதே.* Don't get excited.

**வசப்படுத்து-** *தன்கீழ் கொண்டு வருதல்,* bring under one's control. The district administration is under the control of the collector.

**வசம்-** *இருப்பு,* under one's custody. *குழந்தை தாயின் வசம் உள்ளது.* The child is under the custody of her mother.

**வசம்பு-** *ஒரு மருந்துப்பொருள்,* a medicinal plant.

**வசவு-** *திட்டு,* scolding. I got a scolding from the teacher for late coming.

**வசனம்-** *உரைநடை,* prose. *உரையாடல்,* dialogue. *விவிலிய வசனம்,* Biblical passage. *வசனகர்த்தா, உரையாடல் எழுதுபவர்,* script writer.

**வசி-** *வாழ்,* live. *நீ எங்கு வசிக்கிறாய்?* Where do you live? *வசிப்பிடம்,* residence.

**வசியம்-** *தன் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வருதல்,* charm.

**வசீகரம்-** *கவர்ச்சி,* attraction. *வசீகரி,* attract.

**வசூல்-** *வசூல்தொகை,* collection. Collection of taxes. *வசூலி,* collect.

**வசை-** *திட்டு,* abuse. *வசைமாரி,* tirade. *வசைபாடு,* abuse.

**வஞ்சகம்-** *ஏமாற்றுதல்,* deceit. All know his deceit.

**வஞ்சப்புகழ்ச்சி-** *புகழ்வதுபோல் இகழ்வது,* irony.

**வஞ்சம்-** *வஞ்சகம்,* revenge. *வஞ்சம் தீர்,* take revenge. *வஞ்சி,* betray.

**வட்டம்-** *வட்டக் கோடு,* circle. *வட்டம் வரை.* Draw a circle. 2. *வாசகர் வட்டம்,* readers' circle. 3. *தாலூகா,* taluk. 4. *பிரிவு,* ward.

**வட்டமிடு-** *வட்டமிட்டுப் பறத்தல்,* hover. *பருந்து வட்டமிடுகிறது.* The kite hovers about in the sky.

**வட்டாட்சியர்-** *தாசில்தார்,* tahsildar.

**வட்டாரம்-** 1. *பிரதேசம்,* region. *வட்டார அலுவலகம்,* regional office. *வட்டாரப் புவியியல்,* regional geography. 2. *அரசு வட்டாரங்கள்,* government sources. 3. *வட்டார மொழி,* regional language. 4. *வட்டார வழக்கு,* dialect.

**வட்டி-** *அசலுக்குத் தரப்படும் கூடுதல் தொகை,* interest. *தனி வட்டி,* simple interest. *கூட்டு வட்டி,* compound interest.

**வட்டில்-** *தட்டு,* plate.

**வட்டெழுத்து-** *வட்டமாக உள்ள எழுத்து,* circular script.

**வட்டை-** *சக்கர ஆரக்கால்களை இணைக்கும் பகுதி,* curved disc of wood.

**வடக்கிரு-** *வடக்குத் திசை இருந்து உண்ணாமல் உயிரிழ,* fast until death facing north.

**வடக்கு-** வடக்குத்திசை, north.

**வடகம்-** ஒரு வகை மாவற்றல்,

**வடகிழக்குப் பருவக் காற்று-** *வடகிழக்குத் திசையிலிருந்து வீசும் பருவக்காற்று,* north east monsoon.

**வடநாடு-** *வடக்கே இருக்கும் நாடு,* the Northern country.

**வடம்-** *1. கனத்த கயிறு,* thick twisted rope. *2. கழுத்துச் சங்கிலியின் ஒரு சரடு,* the stiring of a gold chain.

**வடமொழி-** *சமஸ்கிருதம்,* Sanskrit.

**வடி-** *வழிதல்,* trickle. Tears trickle down. *2. நீர் வடிதல்,* The rain water is not drained. *3. வீக்கம் வடிதல்,* swelling subsided. *4. கஞ்சிவடி,* strain the cooked rice water. *5. வடிகட்டி,* strainer, filter. *6. வடிகட்டிய நீர்,* distilled water. *7. வடிகட்டு,* filter, strain. *8. வடிகால்,* drainage. *9. வடிதட்டு,* strainer plate.

**வடிவ கணிதம்-** *கணிதத்தில் ஒரு பிரிவு,* geometry.

**வடிவம்-** *உருவம்,* shape, form. *வடிவம்,* design. *வடிவமைப்பு,* design.

**வடு-** *ஆறிய காயம்,* scar.

**வண்டல்-** *வளமான மண்,* silt, sediment.

**வண்டவாளம்-** *மறைவாக உள்ள செயல்கள்,* concealed secrets. All know fully well your concealed secrets.

**வண்டி-** *1. ஊர்தி,* vehicle. *மாட்டு வண்டி,* bullock cart. *2. குதிரை வண்டி,* horse drawn cart. *3. பேருந்து,* bus. *4. வண்டிச்சத்தம்,* cart fare. *5. வண்டிப் பேட்டை,* cart stand.

**வண்டு-** *சிறு பூச்சி வகை,* beetle.

**வண்ணத்துப் பூச்சி-** *பட்டாம் பூச்சி,* butterfly.

**வண்ணம்-** *1. நிறம்,* colour. *2. பூச்சு,* paint. *3. இருக்கும் நிலை,* posture. *கிடந்த வண்ணம்,* lying posture. *நின்றவண்ணம்,* standing posture. *4. வண்ணத் தொலைக்காட்சி,* colour TV.

**வண்ணார்-** *துணி வெளுப்பவர்,* washerman. *வண்ணாத்தி,* washer-woman.

**வணக்கம்-** *இரு கை கூப்பி மரியாதை தெரிவித்தல்,* salute, good morning, good evening. *இறை வணக்கம்,* prayer.

**வணங்காமுடி-** *பிறருக்கு அடங்காத வன்,* rough type of fellow.

**வணங்கு-** *1. தொழு,* pray. Pray God for prosperity. *2. வரவேற்புக் கூறு,* greet, invite.

**வணிகம்-** *தொழில்,* business. *வணிக நோக்கு,* commercial motive. *வணிகர்,* trader. *வணிகவியல்,* commerce.

**வத்திப் பெட்டி-** *தீப்பெட்டி,* match box.

**வத்திவை-** *சண்டைமூட்டு,* create misunderstanding.

**வதக்கு**- வதக்கி எடு, stew. Stew the brinjal. வதக்குதல், stewing.

**வதங்கு**- வாடு, wither. Leaves withered.

**வதந்தி**- இல்லாததைக் கூறல், rumour.

**வதம்**- அழிக்கும் செயல், destruction of evil. இராவணன் வதம், destruction of Ravana.

**வதனம்**- முகம், face. வதனமே சந்திர பிம்பம். Face is like the moon.

**வதுவை**- திருமணம், marriage.

**வதை**- 1. துன்புறுத்து, inflict, torment. 2. கொல், kill. பசு வதை, killing cows.

**வந்தனம்**- வணக்கம், salute.

**வந்தேறி**- இடையில் வந்து குடியேறியவர், newcomer, immigrant.

**வஞ்சம்**- பரம்பரை, dynasty. சூர்ய வம்சம், Surya dynasty.

**வம்பள**- வேண்டாததைப் பேசு, gossip. They are gossiping unnecessarily. வம்பன், michief-maker. வம்பு, michief, trouble. வம்புச்சண்டை, quarrel. வம்புதும்பு, unnecessary interference

**வயது**- ஒருவர் பிறந்த ஆண்டிலிருந்து நடப்பு ஆண்டுவரை கணக்கிடப்படும் ஆண்டுகள், age. நடுத்தர வயது, middle age. வயதாகு, aged.

**வயதுவந்தோர்**- 18 வயதுக்கு மேற்பட்டவர், adult. வயது வந்தோர் வாக்குரிமை, adult franchise.

**வயல்**- பயிரிடப்படும் நிலம், culti vated field.

**வயிற்றலடி**- பிழைப்பைக் கெடு, deprive one of livelihood.

**வயிற்றுக்கடுப்பு**- வலியோடுக் கூடிய வயிற்றுப் போக்கு, dysentery.

**வயிற்றுப்பிழைப்பு**- அன்றாட உணவிற்குரிய உழைப்பு, livelihood, subsistence.

**வயிற்றுப்போக்கு**- அடிக்கடி நீர்த்த நிலையில் மலம் செல்லுதல், diarrhoea.

**வயிற்றுவலி**- வயிற்றுநோவு, stomach-ache.

**வயிற்றெரிச்சல்**- 1. மனக்கொதிப்பு, frustration. 2. பொறாமை, envy.

**வயிற்றைக்கலக்கு**- அச்சமுறச் செய், terrify horribly.

**வயிறு**- மார்புக்கு கீழே உள்ள பகுதி, belly.

**வயிறுமுட்ட**- வயிறு நிறைய, bellyful.

**வயிறுவளர்**- பிழைப்பு நடத்து, earn one's lilvelihood.

**வயோதிகம்**- முதுமை, old age.

**வர்க்கப் போராட்டம்**- ஆளும் வகுப்பு, உழைக்கும் வகுப்பு ஆகிய இரண்டிற்கிடையே நடைபெறும் போராட்டம், class struggle. வர்க்கம், class. நடுத்தர வர்க்கம், middle class. ஆளும் வர்க்கம், ruling class. மனித வர்க்கம், human race. வர்க்கம், square of a number. வர்க்கமூலம், square root.

**வர்ணம்**- 1. வண்ணம், colour. 2. சாதி, caste. 3. இசைப்பாடலில் ஒரு வகை, a kind of musical composition.

**வர்ணனை**- விவரித்தல், description, commentary. நேர்முக வர்ணனை, running commentary. வர்ணி, describe.

**வர்த்தக சம்மேளனம்**- வணிக முன்னேற்றக் கழகம், Chamber of commerce. வர்த்தகம், trade, commerce. வர்த்தகர், trader, merchant.

**வர்மம்**- 1. உடலில் உயிர்நிலைப் பகுதிகள், vital parts. வர்மக்கலை,

science dealing with nerves and vital parts.

**வரகு-** *ஒரு வகை தானியம்,* common millet.

**வரத்து-** *வந்துசேர்தல்,* supplies of goods, inflow of water.

**வரதட்சணை-** *பெண்வீட்டார் மணமகனுக்குத் தரும் அன்பளிப்பு,* dowry.

**வரப்பிரசாதம்-** *நற்பேறு.* gift of god.

**வரப்பு-** *வயலைச் சிறுசிறு பகுதி களாகப் பிரிக்கும் தடுப்பு,* bund, ridge.

**வரம்-** *ஒருவர் விருப்பம் நிறைவேற வழங்கப்படுவது,* boon. King Dasaratha granted three boons to Kaikeye.

**வரம்பு-** *எல்லை வரையறை.* limit, ceiling. *வயதுவரம்பு,* age limit. *உச்சவரம்பு,* land ceiling.

**வரலாறு-** *சரித்திரம்,* history. *பண்டைய வரலாறு,* ancient history. *இடைக்கால வரலாறு,* medieval history. *இக்கால வரலாறு,* modern history. *வாழ்க்கை வரலாறு,* biography. *தன் வாழ்க்கை வரலாறு,* autobiography. *வரலாறு காணாக் கூட்டம்,* Unprecedented crowd.

**வரவர-** *காலம் செல்லச் செல்ல,* of late. Of late your activities are not good.

**வரவழை-** *1. வருமாறு,* invite. All are invited to the function. *2. பெறு,* elicit. Elicit the truth. *3. துணிச்சலை வரவழை,* muster courage.

**வரவினம்-** *வரவேண்டிய தொகை,* receipts, income.

**வரவு-** *வரும் தொகை,* credit receipt. *வரவுசெலவு,* receipts and expendi ture. *வரவு செலவு அறிக்கை,* budget report. *வரவுச் செலவுத் திட்டம்,* budget.

**வரவு வை-** *வரவு வகையில் கணக்கில் எழுது,* credit.

**வரவேற்பு-** *வரவேற்றல்,* welcome. *வரவேற்புரை,* welcome address. *வரவேற்பு அறை,* drawing room. *வரவேற்புக் குழு,* reception committee. *வரவேற்பு மடல்,* welcome address.

**வரன்-** *திருமணம் செய்து கொள்ளும் இளைஞன்,* bridegroom. *வரன்முறை,* limit, regularization.

**வராகம்-** *பன்றி,* boar, pig.

**வரி-** *1. கோடு,* line. *2. அரசுக்குச் செலுத்தும் பணம்,* tax. *வருமான வரி,* income tax. *நிலவரி,* land tax. *வரி ஏய்ப்பு,* tax evasion.

**வரிக்குதிரை-** *உடலில் கோடுகள் நிறைந்த குதிரையின விலங்கு,* zebra.

**வரிசை-** *1. அடுத்து அடுத்து இருப்பது,* line, row. Boys stood in line for prayer. *2. தொடர்,* series. Oratorical series. *3. சீர்வரிசை,* bridal gift. *4. வரிசைக் கிரமம்,* in order.

**வரிவடிவம்-** *எழுத்து வடிவம்,* script.

**வரி விலக்கு-** *வரி செலுத்த வேண்டியதிலிருந்து நீக்குதல்,* tax exemption. *வரிவிளம்பரம்,* classified advertisement.

**வருகை தரு பேராசிரியர்-** *குறிப்பிட்ட காலம் ஒரு கல்வி நிறுவனத்தில் பணியாற்றும் பேராசிரியர்,* visiting professor.

**வருகை தா-** *வருதல்,* pay a visit. The collector paid a visit to the village.

**வருகைப் பதிவு-** *வருதலைப் பதிவு செய்தல்,* marking attendance. *வருகைப் பதிவேடு,* attendance.

**வருங்காலம்-** *எதிர்காலம்,* future. *என் வருங்காலம்,* my future. *வருங்கால வைப்பு நிதி,* provident fund.

**வருடப்பிறப்பு-** *ஆண்டுப்பிறப்பு,* New year day. *வருடம்,* year. *வருடாந்திர,* annual. *வருடாந்திரத் தணிக்கை,* annual inspection.

**வருடு-** *தடவு,* stroke gently.

**வருணன்-** *மழைத் தெய்வம்,* varuna, the god of rain.

**வருத்தம்-** *1. துன்பம்,* sorrow. *2. மனத்தாங்கல்,* grievance. *வருத்து,* make one feel sorry, strain oneself. *3. வருந்து,* feel sorry.

**வரும்-** *இனிவரும்,* forth coming, coming. *வரும் ஆண்டு,* the forth coming year.

**வரும்படி-** *வருமானம்,* income.

**வருமானம்-** *வருவாய்,* revenue. *வருமான வரி,* income tax. *வருமான வரித்துறை,* income tax department.

**வருமொழி-** *ஒரு தொடரில் முதலில் இருக்கும் சொல்லுடன் சேர வரும் இரண்டாம் சொல் (எ-டு) வலிவு + ஊட்டு = வலுவூட்டு. 'வலிவு' நிலைமொழி, 'ஊட்டு' வருமொழி,* second word in a phrase.

**வருவி-** *வரவழை,* invite.

**வரை-** *1. இழு,* draw. *படம்வரை,* Draw a diagram. *2. எழுது,* write. *கடிதம் எழுது.* write a letter. *3. நீ வரும் வரை,* until you come. *4. வரைவு,* draft. *கேட்பு வரைவோலை,* demand draft.

**வரைபடம்-** *வரையும் படம்,* map, plan, graph.

**வரைமுறை-** *வரன்முறை,* limit. *வரையறு,* define. Define the term density. *வரைவிலக்கணம்,* definition.

**வரைவாளர்-** *வரைபடம் வரைபவர்,* draftsman. *முதுநிலை வரைவாளர்,* senior draftsman.

**வல்ல-** *ஆற்றலவாய்ந்த,* powerful. *எல்லாம் வல்ல இறைவன்,* all-powerful God. *வல்லமை,* might, power.

**வல்லரசு-** *பேரரசு,* super power.

**வல்லவன்-** *வலியவன்,* adept.

**வல்லாரை-** *ஒரு மூலிகை,* Indian penny wort.

**வல்லினம்-** *வல்லின எழுத்து, (எ.டு) க், ச், ட், த், ப், ற்,* hard consonant.

**வல்லுநர்-** *நிபுணர்,* expert. *வல்லநர் குழு,* expert committee.

**வல்லூறு-** *கழுகை விடச் சிறிய பறவை,* falcon.

**வலக்கரம்-** *வலக்கை,* right hand.

**வலஞ்சுழி-** *இடம் இருந்து வலம் செல்லுதல்,* clockwise.

**வலசை-** *பறவைகள் இடம் பெயர்தல்,* migration.

**வலதுசாரி-** *முற்போக்கு குறைந்தவர்,* rightist.

**வலம்-** *வலது,* right side. *வலம் வருதல்,* orbit, come round the temple.

**வலம்புரிச் சங்கு-** *வலப்புறச் சுழியுள்ள சங்கு,* conch with clockwise whorls.

**வலயம்-** *வட்டம்,* circle.

**வலி-** *1. நோவு,* ache, pain. *தலைவலி,* head ache. *2. தள்ளு,* row. *படகை இழு,* row the boat. *3. வலிமை,* strength, might.

**வலிந்து-** *வலிய,* forcibly.

**வலிப்பு-** *இழுப்பு,* fits.

**வலிமை-** *வலு,* strength, might.

**வலியுறுத்து-** *வற்புறுத்து,* emphasise. I want to emphasise this point strongly.

**வலிவூட்டு-** *வலியுறுத்து,* strengthen.
**வலு-** *1. வலுத்தல்,* become heavy. *2. வலிமை,* strength. *3. வலுக் கட்டாயமாக,* forcibly, against one's will.
**வலுச்சண்டை-** *வலிய இழுக்கும் சண்டை,* wanton quarrel or fight.
**வலுப்படுத்து-** *வலுவூட்டு,* strengthen. *வலுப்பெறு,* get strengthened.
**வலை-** *பிராணிகளைப் பிடிக்க நூலால் (அ) வலிமையான இழை யால் பின்னப்பட்ட அமைப்பு,* net. *மீன் பிடிக்கும் வலை,* fishing net.
**வலையகம்-** *இணையதளம்,* website.
**வலைவிரி-** *வலைவீசு, சிக்கச்செய்,* trap. It is cruel to trap birds.
**வழக்கம்-** *நடைமுறை,* custom. It is the custom of the Hindus to cremate the dead body.
**வழக்கறிஞர்-** *நீதி மன்றத்தில் கட்சிக் காரருக்காக வாதாடும் சட்ட வல்லுநர்,* advocate, lawyer.
**வழக்காடு-** *வாதாடு,* argue, debate. plead. The lawyer argues for me in the court. Debate the subject. *வழக்காடுமன்றம்,* debating forum.
**வழக்காறு-** *1. வழங்கி வருவது,* custom. *2. சொல் வழக்கு,* usage.
**வழக்கு-** *1. நீதிமன்றத்திற்கு கொண்டு செல்லப்படும் சிக்கல்,* suit, case. *கொலைவழக்கு,* murder case. *சொத்துபத்து வழக்கு,* civil case. *2. தகராறு,* dispute. *3. வழக்கில் இருப்பது,* Usage.
**வழங்கு-** *1. வழக்கத்தில் இருப்பது,* be in use. In what sene is this word used? *2. குறிப்பிடு,* call. India is otherwise called Bharat. *3. கொடு,* distribute. Distribute sweets to children. *4. அளி,* present. We proudly present this dance performance. This programme is sponsored by Paari and co.
**வழி-** *1. ஒரு பாத்திரத்திலிருந்து திரவம் வெளியே வருதல்,* over flow. Water overflows from the tub. *2. முகம் வழி,* shave. *3. வியர்வைத் துளிகளை வழி,* Wipe out the drops of sweat. *4. பாதை,* way. He is on the way. *உட்செல்லும் வழி,* way in. *வெளிச்செல்லும் வழி,* way out.
**வழி அலகு-** *அடிப்படை அலகி லிருந்து வருவது,* derived unit.
**வழிக்குக் கொண்டுவா-** *இணங்கு மாறு செய்,* bring one into line. You will have to bring him into line.
**வழிக்கு வா-** *இணங்கு,* conform. Conform to the normal social conventions.
**வழிகாட்டி-** *1. கோயில் வழிகாட்டி,* temple guide. *2. அவர் என் வழி காட்டி,* He is my friend, philosopher and guide. *3. வழிகாட்டு,* be a guide.
**வழிகாட்டி மரம்-** *ஒரு ஊருக்குச் செல்லும் திசை, ஊரின் தூரம் ஆகியவை எழுதப்பட்ட பலகை.* signpost.
**வழிகோலு-** *வழிவகு,* pave the way. The measures taken will pave the way for good relations.
**வழிச்செலவு-** *பயணச் செலவு,* travelling expenses.
**வழித்தோன்றல்-** *ஒருவரது பரம்பரை யில் தோன்றிய மகன், பேரன் முதலானோர்.* descendant.
**வழிதவறு-** *1. பாதையைத் தவறவிடு.* lose the way. He lost the way. *2. ஒழுக்கம் தவறி நட,* go astray. In spite of my repeated advice, he went astray.

**வழிநடத்து-** *முன்னின்று செய்,* lead, guide. Our leader will guide us properly.

**வழிப்பறி-** *சாலையில் செல்பவர் களிடம் அடிக்கப்படும் கொள்ளை,* highway robbery. In this region highway robbery is common.

**வழிப்போக்கன்-** *நடந்து செல்லும் பயணி,* traveller.

**வழிபடு-** *தொழு,* pray. Pray God. *வழிபாடு,* prayer.

**வழிமுறை-** *செய்முறை,* procedure, method.

**வழிமொழி-** *ஆதரி,* second. I second this resolution.

**வழியனுப்பு-** *பிரியா விடைகொடு,* bid farewell. We bid farewell to our parting friends.

**வழியாக-** *மூலம்,* through. Wind flows through the window.

**வழிவகை-** *நடைமுறை,* ways and means. What are the ways and means to carry out this scheme?

**வழிவழியாக-** *பரம்பரையாக, வாழையடி வாழையாக,* from generation to generation.

**வழிவிடு-** *விலகு,* move, Please move a little.

**வழு-** *குற்றம்,* error.

**வழுக்கு-** *நழுவு,* slip. My feet slipped on the smooth surface. *வழுக்கு மரம்,* smooth pole.

**வழுக்கை-** *தலையில் மயிர் இல்லாது மழமழப்பாக இருத்தல்,* baldness. *வழுக்கைத் தலை,* baldhead. *2. இளம் தேங்காயின் உள்ளீடு,* soft kernel of tender coconut.

**வழுவழுப்பு-** *1. வழுக்குமாறு இருத்தல்,* smoothness. *2. பளபளப்பு,* shining.

**வழுவு-** *தவறு,* miss.

**வள்ளம்-** *தோணி,* boat.

**வள்ளல்-** *தாராளமாக நன்கொடை வழங்குபவர்,* philanthropist. Tamil king paari was a great philanthropist.

**வள்ளுவம்-** *திருவள்ளுவர் திருக்குறளில் கூறியுள்ள தத்துவம்,* Valluvarism.

**வளப்பம்-** *வளம்,* fertility. *வளப்பம் மிகுந்த நாடு,* land of fertility.

**வளம்-** *இயற்கை வளம்,* resources.

**வளர்-** *வளர்தல்,* grow. Plants grow well in rich soil. *வளர்ச்சி,* growth. *வளர்ப்பு,* rearing. *வளர்ப்பு மகன்,* foster son.

**வளர்பிறை-** *நிலா வளரும் நிலை,* waxing moon.

**வளர்முக நாடு-** *பொருளாதாரத்தில் மேம்பட்டு வரும் நாடு,* developing country.

**வளாகம்-** *அலுவலக அல்லது கடைகள் உள்ள கட்டிடத் தொகுதி,* complex. *பள்ளி வளாகம்,* school complex. *வளாகத்திட்டம்,* campus programme.

**வளி-** *காற்று,* air, gas. Oxygen is a gas. *வளிமண்டலம்,* atmosphere.

**வளை-** *1. மடங்குமாறு செய்,* bind, curve. Bend the rod. *2. சுற்றிவளை,* encircle. The police encircled the thief. *3. துளை,* hole. *எலிவளை,* rat hole.

**வளைகாப்பு-** *கர்ப்பிணிக்கு வளையல் அணிவிக்கும் விழா,* a ceremony in which a pregnant lady is adorned with bangles.

**வளைகுடா-** *விரிகுடாவை விடச் சிறிய கடல் பகுதி,* gulf.

**வளைத்துப்போடு-** *தன்வயப்படுத்து,* win over. You can win over him easily.

**வளையம்-** 1. சாவி வளையம், key ring. 2. காது வளையம், ear-ring, 3. கருத்தடைக் கருவி, loop.

**வளையல்-** மகளிர் கையில் அணியும் வளையம், bangle. தங்க வளையல், golden bangle.

**வளைவு-** 1. வளைந்த பகுதி, arch, bend, curve. ஆபத்தான வளைவு, dangerous bend. வளைவு அமை, put up arch.

**வற்று-** 1. காய்ந்து இல்லாமல் போதல், dry up. ஆறு வற்றிப் போயிற்று. The river dried up. 2. உடல் மெலிதல், become thin.

**வறட்சி-** 1. வறண்ட நிலை, drought. வறட்சி நிவாரணம், drought relief. 2. நாவறட்சி, dryness in the tongue due to thirst.

**வறட்டு-** 1. வீண், meaningless, meaningless obstinacy. 2. வறட்டு நடை, a lifeles style.

**வறிய-** ஏழ்மையுற்ற, poor. வறியோர், the poor. வறுமை, poverty. வறுமைக் கோடு, poverty line.

**வறுவல்-** வறுக்கப்பட்ட சிறு துண்டுகள், chips.

**வன்செயல்-** அமைதி நிலையைக் கெடுக்கும் நடவடிக்கைகள், violence.

**வன்மம்-** தீராப்பகை உணர்வு, malice.

**வன்மை-** 1. வலிமை, strength. 2. வன்மையான எதிர்ப்பு, stiff opposition. 3. வன்மையான தண்டனை, severe punishment. 4. நாவன்மை, oratorical excellence.

**வனதேவதை-** காட்டில் வாழும் சிறு தெய்வம், fairy.

**வனப்பு-** அழகு, beauty, grace.

**வனம்-** காடு, forest, jungle. வன விலங்குகள், wild animals. வனாந்தரம், desolate place.

**வனிதை-** அழகி, damsel.

**வனை-** செய், make. மட்பாண்டங்களை வனை, Make earthern wares. வனைதொழில், making earthern articles. வனைவோர், potters.

## வா

**வா-** வா இங்கு, come here.

**வாக்களி-** வாக்குப் போடு, vote. For whom are you going to vote? வாக்காளர், voter.

**வாக்கியம்-** ஒரு முழுமையான பொருள் தரும் சொற்களின் தொகுப்பு, sentence. தனி வாக்கியம், simple sentence. கலவை வாக்கியம், complex sentence. கூட்டு வாக்கியம், compound sentence. வாக்கிய அமைப்பு, sentence construction.

**வாக்கில்-** சற்றேறக்குறைய, about. He may come at about 4 o' clock.

**வாக்கு-** 1. சொல், word. வாக்கு தவறாதவர். He is a man of words. He will always keep his word. 2. சொல்லுகை, utterance. தெய்வ வாக்கு, divine utterance, oracle. 3. வாக்குச்சீட்டு, vote, ballot paper. 4. வாக்குச் சாவடி, polling booth. 5. வாக்குப் பதிவு, voting. 6. வாக்குரிமை, franchise, voting right.

**வாக்குமூலம்-** சட்ட பூர்வமாகப் பதிவு செய்வதற்கு ஒருவர் கூறும் அறிக்கை, formal statement.

**வாக்குவாதம்-** வாதிடும் பேச்சு, discussion, debate. வாக்குவாதம்

காரசாரமாக இருந்தது. The discussion, was too much heated.

**வாக்குறுதி-** வாக்கு தவறாமை, promise. Don't believe election promises.

**வாக்கெடுப்பு-** *1. தேர்தலில் முடிவு அறிய வாக்குகளை எண்ணுதல். 2. பொதுக் கருத்தறிய வாக்கு எடுத்தல்,* referendum. *2. விவாத வாக்கெடுப்பு,* voting to end a debate.

**வாகடம்-** *செய்யுள் வடிவ மருத்துவ நூல்,* medical treatise in verse. *மாட்டு வாகடம்,* medical treatise in verse on the diseases of cattle.

**வாகனம்-** *ஊர்தி,* vehicle. *வாகன வரி,* vehicle tax. *சிவன் வாகனம் எருது,* The ox is the vehicle of Lord Siva.

**வாகு-** *உடல் அமைப்பு,* physical features.

**வாகை-** *வாகை மரம்,* sirissa tree.

**வாங்கு-** *1. வாங்குதல்,* buy. I bought many things in the shop. *2. பெறு,* get. *அவன் ஆங்கிலத்தில் முதல் மதிப்பெண் வாங்கியுள்ளான்.* He has got first mark in English. *3. வசவு வாங்கு,* receive scolding.

**வாசக சாலை-** *படிப்பகம்,* reading room.

**வாசகம்-** *1. செய்தி,* message. *2. பாடப்பகுதி,* text. *3. வாசகன், வாசகர்,* reader.

**வாசம்-** *1. தங்குதல்,* residing, living. *2. மணம்,* smell.

**வாசல்-** *வாயில், நுழைவு வழி,* gate, entrance. *கீழ் வாசல்,* east gate. *வாசல்படி,* step on the doorway.

**வாசனை-** *மணம்,* smell, fragrance. *வாசனைத் திரவியம்,* perfume.

**வாசஸ்தலம்-** *வாழிடம்,* living place. *கோடை வாசஸ்தலம்,* Summer resort.

**வாசி-** *1. படி,* read. Read the lesson. *2. வாசித்தல்,* reading. *3. நகரவாசி,* city dweller. *4. அளவு, முக்கால் வாசி,* three fourths.

**வாசிப்பு-** *1. படித்தல்,* reading. *2. செய்தி வாசிப்பவர்,* news reader. *3. வயலின் இசை,* play on violin.

**வாஞ்சை-** *அன்பு,* affection. *சகோதர வாஞ்சை,* brotherly affection.

**வாட்டசாட்டம்-** *நன்கு அமைந்தது,* well-built figure.

**வாட்டம்-** *1. களை இழப்பு,* a look of weariness. *2. வருத்தம்,* sorrow. *3. சரியான நிலை,* right position. Place the ladder in the right position.

**வாட்டு-** *சுடு,* grill, heat gently. *மீன் வாட்டு,* Grill the fish.

**வாடகை-** *1. குடிக்கூலி,* house rent. *2. வாடகைக்கு,* for hire.

**வாடல்-** *உதிர்தல்,* withered stuff.

**வாடாமல்லிகை-** *வாடாத மல்லிகைப் பூவகை,* Bachelor's buttons.

**வாடி-** *1. மரத்துண்டுகள் விற்பனை நிலையம்,* timber depot. *2. குடிசை,* hut. *3. வாடிக்கை,* practice, custom. *4. வாடிக்கை யாளர்,* customer.

**வாடு-** *1. வதங்கு,* fade, wither. Flowers withered. *2. முகம் வாடிற்று,* Face faded. *3. பசியால் வாடு,* Suffer from hunger.

**வாடை-** *1. குளிர் காற்று,* chill wind. *2. தீ நாற்றம்,* bad odour.

**வாண்டு-** *குறும்புக் குழந்தை,* mischievous child.

**வாணம்-** *புஸ்வாணம்,* fireworks, *வாணவேடிக்கை,* display of fire works.

**வாணலி-** இரும்புச் சட்டி, frying pan.
**வாத்தியம்-** இசைக் கருவி, musical instrument.
**வாத்தியார்-** 1. ஆசிரியர், teacher. கணக்கு வாத்தியார், maths teacher. 2. குரு, He is my guru.
**வாத்து-** ஒரு வகை நீந்தும் பறவை, duck.
**வாதம்-** 1. தர்க்கம், argument, logic. 2. கொள்கை, policy. பிற்போக்கு வாதம், reactionary policy. 3. பக்க வாதம், paralysis. 4. வாயு, gas.
**வாதனை-** தொல்லை, trouble, worry.
**வாதாடு-** ஒரு பொருளை ஆதரித்துப் பேசல், argue.
**வாதி-** வாதிடுபவர், plaintiff.
**வாதுமை-** வாதுமைக் கொட்டை, almond.
**வாதை-** துன்பம், affliction, suffering.
**வாந்தி-** வாயில் எடுத்தல், vomiting. வாந்திபேதி, cholera. வாந்தியெடு, vomit.
**வாபஸ் பெறு-** திரும்பப் பெறு, withdraw. I withdraw my resignation.
**வாய்ந்த-** 1. பட்டறிவுள்ள, experienced. experienced doctor. 2. வாய், mouth. வாயளவு, mouthful. 3. குவளை வாய், mouth of the vessel.
**வாய்க்கரிசி-** பிணத்தின் வாயில் இடும் அரிசி, funeral rice put into the mouth of a dead body.
**வாய்க்கால்-** சிறிய கால்வாய், channel.
**வாய்க்கு வந்தபடி -** முறையில்லாமல். நீ வாய்க்கு வந்தபடி பேசுகிறாய். You are talking nonsense.
**வாய்க்கொழுப்பு-** திமிர்ப் பேச்சு, arrogant speech.
**வாய்கிழிய-** உரக்க, loudly. அவன் வாய் கிழியப் பேசினான். He talked loudly.
**வாய்த்துடுக்கு-** எல்லை மீறிய பேச்சு, impertinent talk.
**வாய்தா-** 1. நீதிமன்ற வழக்கு விசாரணையைத் தள்ளி வைத்தல், adjournment of hearing in a court of law. 2. தள்ளிப்போடுதல், postponement.
**வாய்ப் பந்தல்-** ஆடம்பரச் சொல், empty rhetoric.
**வாய்ப்பாட்டு-** வாயால் பாடும் பாட்டு, vocal music.
**வாய்ப்பு-** 1. சந்தர்ப்பம், chance, opportunity. You have lost the chance. 2. சாத்தியம், scope. There is scope for improvement.
**வாய்ப்பூட்டு-** பேசக் கட்டுப்பாடு, curb. Don't curb the press.
**வாய்பாடு-** 1. கூட்டல், பெருக்கல் முதலியவற்றின் அட்டவணை, tables. 2. கணக்கு வாய்பாடு, mathematical formula.
**வாய் முகூர்த்தம்-** நல் வினையை ஏற்படுத்தும் தற்செயலான பேச்சு, casual utterance with good result.
**வாய்மொழி-** 1. வாய்ச்சொல், oral word or instruction. 2. வாய்மொழி இலக்கியம், oral literature. 3. உண்மை வாக்கு, maxims. வள்ளுவர் வாய் மொழி, maxims of Thiruvalluvar in Tamil Literature.
**வாய்மை-** உண்மை, truth. வாய்மையே வெல்லும். Truth will triumph.
**வாய்மொழித் தேர்வு-** நேராகக் கேள்வி கேட்கப்படும் சோதனை, oral examination, viva voce.
**வாய்விட்டு-** 1. உரக்க, loudly. வாய் விட்டுப்படி, Read loudly. 2. மனம் திறந்து பேசு, Speak openly. வாய்விட்டுச் சொல். Talk openly.

**வாயடைத்து-** *பேச்சு மூச்சற்று,* stunned.

**வாயாடி-** *அதிக அளவு பேசுபவர்,* talkative person. *வாயாடாதே!,* Don't talk too much.

**வாயில்லாப் பூச்சி-** *எதிர்த்துப் பேசாதவர்,* innocent person.

**வாயில்லா ஜீவன்-** *ஆடுமாடு முதலியவை,* dumb creature.

**வாயிலாக-** *மூலமாக,* through. Send it through a messenger.

**வாயு-** *1. வளி,* gas, air. *2. வாயு மண்டலம்,* atmosphere.

**வாயும் வயிறுமாக-** *கருவுற்று இருத்தல்,* be pregnant.

**வாயைக் கட்டு-** *உணவு உண்பதில் கட்டுப்பாடாக இரு.* Be restricted in your food.

**வாயைப் பிள-** *1. வாயைத் திற,* gape at. *2. சாதல்,* die. *கிழவர் வாயைப் பிளந்தார்.* The old man died.

**வார்-** *1. வார்ப்படம்,* mould. Types are moulded. *2. ஊற்று,* pour. *3. பட்டை,* strap, belt.

**வார்த்தை-** *சொல்,* word, advice. *வார்த்தை ஜாலம்,* word jugglery.

**வார்ப்படம்-** *வார்ப்பு,* mould. *வார்ப்பிரும்பு,* cast iron.

**வாரம்-** *1. கிழமை,* week. *வாராந்திர இதழ்,* weekly. *2. வாரச் சாகுபடி,* varam cultivation.

**வாரி-** *1. வெளி நீட்டிக்கொண்டிருக்கும் கூரைப்பகுதி,* projecting part of a thatched roof, eaves.

**வாரிசு-** *ஒருவரது மறைவுக்குப் பின் சொத்து உரிமையுள்ளவர்,* heir. *அரசியல் வாரிசு,* political heir.

**வாரியம்-** *தன்னாட்சி அமைப்பு,* board. *மின்வாரியம்,* electricity board.

**வாரு-** *1. எடு, தூர்வாரு,* take away the silt. *2. குப்பையை வாரு,* Remove the rubbish. *நெல்லை வாரிக் குவி,* gather the paddy in a heap. *4. உன் தலையை வாரு,* comb your hair. *5. காலை வாரு,* pull the legs.

**வாரை-** *கோயில் ஊர்வலப் பல்லக்கினைத் தூக்கும் பெருங் கோல்,* thick pole for carrying procession deity in a temple.

**வால்-** *1. ஒரு விலங்கின் ஆசன வாய்க்குப் பின் வெளிப்புறமாக நீண்டிருக்கும் பகுதி,* tail. *பொதுவாக பாலூட்டிகளுக்கு வால்கள் இருக்கும்,* Generally mammals have tails. *2. பட்டத்தின் வால்,* tail of a kite. *3. குறும்புக் குழந்தை,* mis chievous child. *4. வால் நட்சத்திரம்,* comet. *5. வால்பேரி,* pear. *6. வால் மிளகு,* cubeb. *7. வாலாட்டு,* make michief.

**வாலிபன்-** *இளைஞன்,* youth. *வாலிபம்,* youthhood.

**வாலை-** *வாலை வடிக்கும் கருவி,* still retort. *வாலை வடித்தல்,* distillation. *வாலை வடிநீர்,* distilled water.

**வாலைக் குமரி-** *இளம்பெண்,* charming girl.

**வாவி-** *1. குட்டை,* pond. *2. உப்பங்கழி,* lagoon.

**வாழ்-** *வாழ்தல்,* live. Live a meaningful life. *வாழ்க்கை,* life. *வாழ்க்கை வரலாறு,* biography. *வாழ்க்கைக் குறிப்பு,* memoirs. *வாழ்க்கைச் செலவு,* cost of living.

**வாழ்க்கைத் துணை-** *மனைவி,* life partner, wife. *வாழ்க்கைப் படு,* get maried. I got married to my aunt's son.

**வாழ்க-** *நீண்ட காலம் வாழ வேண்டும் எனும் வாழ்த்தொலி,* Long live the leader.

**வாழ்த்து-** *வாழ்த்துதல்,* congratulations, greetings, blessings.

**வாழ்நாள்-** *வாழும் காலம்,* life time.

**வாழ்வு-** *1. வாழ்க்கை,* life. *2. வாழ்வு தாழ்வு,* ups and downs.

**வாழாவெட்டி-** *கணவனைப் பிரிந்து வாழ்பவள்,* wife separated from her husband.

**வாழை-** *வாழைமரம்,* plantain. *வாழைப்பழம்,* plantain fruit. *வாழைக்காய்,* green banana. *வாழைத்தண்டு,* stem of the plantain. *வாழைப்பூ,* banana flower.

**வாள்-** *1. நீண்டகத்தி,* sword. *2. அறுக்கும் கருவி,* saw.

**வாளா இரு-** *செயல்படாமல் இரு,* be a silent spectator.

**வாளி-** *நீர் மொள்ளும் கலம்,* bucket.

**வாளை-** *ஒரு வகை மீன்,* scabbard-fish.

**வான்-** *வானம்,* sky, heaven. *நீல வான்,* blue sky.

**வான்கோழி-** *ஒருவகைப்பறவை,* turkey.

**வானநூல்-** *வானவியல்,* astronomy.

**வானம்-** *விண்,* sky.

**வானம்பாடி-** *இனிய குரலில் பாடும் பறவை,* skylark.

**வானம் பார்த்த பூமி-** *மழையை நம்பி இருக்கும் நிலம்,* dry or barren land.

**வானரம்-** *குரங்கு,* monkey.

**வானவலவியல்-** *வானப்பறத்தலியல்,* aeronautics. *வானவலவர்,* pilot.

**வானவில்-** *வானில் தோன்றும் ஏழு நிறங்களை கொண்ட வில் போன்ற வளைவு,* rainbow.

**வானவூர்தி-** *விமானம்,* airplane.

**வானவெளி-** *விண்வெளி,* space.

**வானவெளி வலவியல்-** *வானவெளியில் வலம் வருதல் பற்றிய அறிவியல்,* astronautics, cosmonautics. *வானவெளி வலவர்,* cosmonaut, astronaut. *வானவெளிப் பயணம்,* space travel. *வானவெளி வரலாறு,* space history. *வானவெளி ஆராய்ச்சி,* space research. *வானவெளிக் கப்பல்,* spaceship. *வானவெளிக்கலம்,* spacecraft. *வானவெளித் துருவி,* space probe. *வானவெளி நிலையம்,* space station. *வானவெளி ஓடம்,* space shuttle.

**வானிலை-** *தட்பவெப்பநிலை,* weather. *வானிலை முன்னறிப்பு,* weather forecast. *வானிலை இயல்,* meteorology.

**வானொலி-** *1. மின்காந்த அலைவழி ஒலிபரப்பு,* radio. *2. வான்குரல்,* voice from heaven.

**வாஸ்தவம்-** *உண்மை,* truth.

**வாஸ்து-** *மனை தெய்வம்,* tutelary deity of the house site. *வாஸ்து சாஸ்திரம்,* science of house-building.

## வி

**விக்கல்-** *கேவல் ஒலி,* hiccup. *விக்கு,* hiccup. *விக்கித்து நின்றான்.* He stood stunned. *விக்கிவிக்கி அழுதான்.* He wept with hiccup like sobs.

**விக்கிரகம்-** *சிலை,* idol. *மூல விக்கிரகம்,* presiding deity.

**விக்கினம்-** *இடையூறு,* obstacte.

**விகடகவி-** தன் பேச்சாலும் செயலாலும் சிரிப்பூட்டுபவர், jester. விகடம், jesting.

**விகற்பம்-** வேறுபாடு, perversity.

**விகாரம்-** 1. அழகின்மை, ugliness, 2. திரிபு, distortions. மன மாறுபாடுகள், mental distortions. 3. புத்த ஆலயம், Buddhist monastery. 4. தமிழ் இலக்கணத்தில் ஒரு சொல்லின் எழுத்துக்கள் மாறுதல், change of letters.

**விகிதம்-** 1. வீதம், rate. வட்டிவிகிதம், rate of interest. 2. தகவு, ratio 100 : 2 என்னும் வீதம். The ratio of 2 per hundred or 100 : 2.

**விகுதி-** சொல்லின் இறுதி உறுப்பு, suffix, termination.

**விசனம்-** வருத்தம், sorrow. விசனி, sorrow, grieve.

**விசாகம்-** 27 நட்சத்திரங்களில் 16-ஆவது, the sixteenth of the twenty seven stars.

**விசாரணை-** 1. விசாரித்தல், inquiry, investigation. 2. சாட்சி விசாரணை, trial. விசாரி, enquire.

**விசாரம்-** 1. ஆராய்ச்சி, enquiry. தத்துவ விசாரம், philosophical enquiry. கவலை, anxiety, worry.

**விசாலம்-** அகண்டது, broad. விசாலமான தெருக்கள், broad streets.

**விசித்திரம்-** 1. விநோதம், strange. It is quite strange. 2. வேடிக்கையான, peculiar.

**விசிப்பலகை-** 1. ஊஞ்சல் பலகை, plank used as a swing. 2. உட்காரும், இருக்கை, bench.

**விசிறி-** 1. காற்று பரவ வேகமாகச் சுற்றும் கருவி, fan. 2. ரசிகர், admirer, fan. 3. மின்விசிறி, electric fan. 4. கூரை விசிறி, ceiling fan. 5. அங்கவஸ்திரம், upper garment folded like a fan. 6. விசிறி வாழை, traveller's palm. 7. விசிறு, fan. 8. விசிறி எறி. Throw away.

**விசும்பு-** வானம், sky.

**விசுவரூபம்-** உலகம் அனைத்தையும் நிறைக்கும் உருவம், cosmic form. 2. சமாளிக்க முடியாத நிலை. gigantic proportion.

**விசுவாசப் பிரமாணம்-** பற்றுறுதி மொழி, oath of office. விசுவாசம், loyalty. விசுவாசி, firm believer. Have faith in God.

**விசேஷ-** சிறப்பு. விசேஷப் பேருந்துகள், special buses.

**விசேஷம்-** குறிப்பிடத்தகுந்தது, of special interest. 2. நிகழ்ச்சி, function.

**விசை-** 1. ஆற்றல், force. 2. குதிரை விசை (துப்பாக்கியில் ஒரு பகுதி), trigger of a gun. 3. விசைத்தறி, power loom. 4. விசைத்தெளிப்பான், power sprayer. 5. விசைப்படகு, motor boat.

**விஞ்சு-** சிறந்திரு, excel. He excels all in singing light music.

**விஞ்ஞானம்-** அறிவியல், science. விஞ்ஞானி, scientist.

**விட்டம்-** 1. குறுக்குச் சட்டம், cross beam. 2. குறுக்களவு, diameter.

**விட்டில்-** ஒரு வகைப்பூச்சி, moth.

**விட்டுவிட்டு-** ஒரு நாளுக்கு அடுத்த நாள், alternative day.

**விட்டுக்கொடு-** இணங்கிப்போ, accommodate, give and take.

**விட்டுச்செல்-** தனக்குப்பின் ஒன்றை இருக்குமாறு செய்தல், leave behind. He left behind him a lot of wealth. விட்டுத் தள்ளு, leave it. விட்டுப் பிடி, allow one to go on one's way.

**விட்டெறி**- *வீசி எறி,* threw away. *அவர் பிச்சைக்காரர்களுக்கு நாணயங்களைத் தூக்கி எறிந்தார்.* He threw away coins to beggars.

**விட்டை**- *கழுதை மலம்,* dung of donkey.

**விட்டொழி**- *கைவிடு,* give up. Give up all your bad habits.

**விட**- *காட்டிலும்.* than. *மணி தன் சகோதரனை விட புத்திசாலி.* Mani is cleverer than his brother.

**விடம்**- *விஷம், நஞ்சு,* poison. *விஷம் வை,* poison.

**விடலை**- *கட்டுக்கடங்காத வாலிபன்.* adoloscent boy.

**விடலைத் தேங்காய்**- *கோயிலில் ஒரு கடவுளின் முன் தரையில் வீசி உடைக்கப்படும் தேங்காய்,* coconut smashed on the floor in front of an idol in a temple.

**விடாக்கண்டன்**- *பிடிவாதமுள்ளவன்,* an obstinate person. *விடாப்பிடியாக,* without yielding to pressure.

**விடாமுயற்சி**- *தொடர்முயற்சி,* constant effort.

**விடாய்**- *தாகம்,* thirst.

**விடி**- *1. பொழுது விடிந்தது.* The day dawned. *2. அப்பழி என் தலையில் விடிந்தது.* The blame fell on me.

**விடியல்**- *இரவு முடிந்து காலைப் பொழுது தொடங்கும் நேரம்,* dawn. *விடியற்காலை,* early morning.

**விடிவிளக்கு**- *இரவு விளக்கு,* night lamp.

**விடிவுகாலம்**- *நல்ல காலம்,* opportune time.

**விடிவெள்ளி**- *வெள்ளி என்னும் கிரகம்,* morning star, Venus.

**விடு**- *1. நீங்கு,* leave. He left the house. *2. மழை நின்றது.* The rain stopped. *3. கொட்டாவி விடு,* yawn. *4. வண்டியை விடு,* drive the car.

**விடுகதை**- *புதிர்க் கதை,* riddle.

**விடுதலை**- *விடுபடுதல்,* release, freedom, liberation.

**விடுதி**- *உணவு விடுதி,* hostel, hotel.

**விடுப்பு**- *பணிக்கு வராமலிருப்பதற்குரிய அனுமதி,* leave of absence. *தற்செயல் விடுப்பு,* casual leave. *ஈட்டிய விடுப்பு,* earned leave. *மருத்துவ விடுப்பு,* medical leave. *விடுமுறை,* holiday.

**விடுபடு**- *1. விலகு,* come off. The poster came off the wall. *2. தனித்திரு,* Free yourself from all problems. *3. விடுபடல்,* be left out. Certain details are left out in this report.

**விடுவி**- *1. விடுவித்தல்,* release. The hostages were released from the terrorists. *2. புதிரை விடுவி.* Solve the riddle. *விடுவிடு என்று உன் காரியத்தைச் செய்.* Do your work quickly.

**விடை**- *பதில்,* answer, reply. What is your answer to this question? *வினாவிடை முறை,* question and answer method.

**விடைகொடு**- *வழியனுப்பு,* bid farewell.

**விடைத்தாள்**- *பதில் எழுதும் தாள்,* answer sheet, scripts.

**விண்**- *வான்,* sky. *விண்கல்,* meteorite. *விண்கொள்ளி,* meteor. *விண்வெளிக்கலம்,* spacecraft. *விண்வெளி,* space.

**விண்ணப்பம்**- *மனு,* application. *விண்ணப்பி,* apply, petition.

**விண்மீன்-** நட்சத்திரம், star.

**வித்தகன்-** தேர்ச்சி பெற்றவர். proficient man.

**வித்தாரம்-** தந்திரம், sophistry.

**வித்தியாசம்-** வேறுபாடு, difference. வேறுபடும் தொகை, difference amount. வித்தியாசமாக, differently.

**வித்தியாலாயம்-** கல்விக்கூடம், school.

**வித்து-** விதை, seed. எண்ணெய் வித்துகள், oil seeds.

**வித்துவான்-** புலவர், scholar.

**வித்தை-** 1. வியப்புச் செயல், feat. 2. திறன், skill.

**விதண்டாவாதம்-** வீண்வாதம், idle argument.

**விதம்-** 1. வகை, kind, sort. 2. முறை, manner.

**விதவை-** கணவனை இழந்த பெண், widow.

**விதானம்-** மேலே கூறைபோல் கட்டப்பட்டுள்ள துணி அலங் காரம், canopy.

**விதி-** 1. ஊழ், fate, destiny. 2. சட்டம், law. 3. வரிவிதி, levy tax 4. தண்டனை விதி, impose punishment. 5. ஏற் படுத்து, prescribe rules and regu lations. 6. உறுதி செய்யப்படுதல், be ordained. I have been ordained to be a poor man. 7. விதிமுறை, prescribed rule. 8. விதிவிலக்கு, exception to the rule.

**விதூஷகன்-** கோமாளி, clown.

**விதேசி-** அயல் நாட்டவர், foreigner.

**விதை-** 1. வித்து, seed. 2. விரை, testicle. 3. விதைப்பு செய், Sow seeds.

**விந்து-** ஆண் உயிரணுவுள்ள நீர்மம், semen. விந்தணு, sperm.

**விந்தை-** வியப்பு, wonder. விஞ்ஞான விந்தைகள், wonders of science.

**விநாயகர்-** கணபதி, Lord Vinayaka.

**விநியோகம்-** வழங்கல், distribution, விநியோகஸ்தர், distributor. விநியோகி, distribute.

**விபச்சாரம்-** பரத்தமை, prostitution. விபச்சாரி, prostitute.

**விபத்து-** எதிர்பார வகையில் நடைபெறுவது, accident. ரயில் விபத்து, railway accident.

**விபரம்-** ஒரு பொருளைப் பற்றிய குறிப்புகள், particulars. விபரங்கள் தருக. Furnish particulars.

**விபரீதம்-** 1. அச்சம் தரும் விளைவு, Untoward accident. 2. விபரீத ஆசை, strange desire.

**விபூதி-** திருநீறு, sacred ash.

**விம்மல்-** கேவல் ஒலி, sob. விம்மு, sob.

**விமர்சகன்-** நிறைகுறைகளை ஆராய் பவன், critic. விமர்சனம், criticism. விமர்சி, criticise.

**விமரிசை-** சிறப்பு, in a grand manner. The marriage was solemnised in a grand manner.

**விமானத் தளம்-** ஆகாய விமானங்கள் இறங்கி/புறப்பட்டுச் செல்லும் நிலையம், airport. விமானப் படை, airforce. விமானப் பணிப்பெண், air hostess. விமானம், airplane. விமானம் தாங்கிக் கப்பல், aircraft carrier. விமானி, pilot.

**விமோசனம்-** தீர்வுக்கு வழி, salvation.

**வியக்கச் செய்-** ஆச்சரியம் அடையச் செய், wonder at, astonish at. வியத்தகு மனிதர், wonderful man. வியப்பு, wonder.

**வியர்த்தல்-** *வியர்வை ஏற்படுதல்,* persipiration, sweat.

**வியர்க்குரு-** *வேர்க்குரு, வெயில் காலத்தில் உடலில் தோன்றும் சிறு கொப்புளங்கள்,* prickly heat.

**வியாக்கியானம்-** *விளக்க உரை,* explanatory commentary.

**வியாகூலம்-** *கவலை,* anxiety.

**வியாசம்-** *கட்டுரை,* article, essay.

**வியாதி-** *நோய்,* disease. *வியாதியஸ்தர்,* patient, diseased person.

**வியாபகம்-** *எங்கும் நிறைந்திருக்கும்,* omnipresent. *சர்வ வியாபி,* be present everywhere.

**வியாபாரம்-** *வணிகம்,* trade, business. *வியாபாரி,* trader, merchant.

**வியாழன்-** *1. வியாழக்கிழமை,* Thursday. *2. வியாழன் கிரகம்,* Jupiter.

**வியாஜ்யம்-** *வழக்கு,* litigation.

**வியூகம்-** *தாக்குவதற்குரிய அணி வகுப்பு,* battle array.

**விரக்தி-** *துறவு, வெறுப்பு,* dislike.

**விரட்டு-** *1. துரத்து,* drive away. *2. விரைவுபடுத்து,* chase. *3. அச்சுறுத்து,* frighten.

**விரதம்-** *1. நோன்பு,* religious vow.

**விரயம்-** *செலவு,* expenditure, waste. *கால விரயம்,* waste of time.

**விரல்-** finger. *கால்விரல்,* toe. *விரல் அகலமுள்ள அளவு,* finger's breadth. *விரற்குறி,* an Index.

**விரி-** *விரித்தல்,* spread out, unfold, expand. *குடையை விரி.* Unfold the umbrella. *விரியன்பாம்பு,* viper, a poisonous snake. *பொதிக் குதிரையின் சேணம்,* pack - saddle.

**விரிகுடா-** *அரைவட்டத்தில் நிலம் சூழ்ந்திருக்கும் கடல் பகுதி, வங்காள விரிகுடா,* Bay of Bengal.

**விரிசல்-** *பிளவு,* split, crack. *இந்தச் சுவரில் விரிசல் உள்ளது.* There is a crack on this wall.

**விரிப்பு-** *விரிக்கும் துணி, தரை விரிப்பு ,* carpet.

**விரிவுரை-** *விரிவான உரை,* elaborate commentary.

**விரிவுரையாளர்-** *கல்லூரி ஆசிரியர்,* lecturer.

**விருச்சிகம்-** *தேள்,* scorpion. *இராசி (சோதிடம்),* Scorpion of Zodiac (Astrology).

**விருட்சம்-** *மரம்,* tree.

**விருத்தம்-** *ஒரு கவிதை வடிவம்,* a kind of verse.

**விருத்தி-** *பெருக்கம்,* growth, pros perity. *இனவிருத்தி,* the procreation of children.

**விருது-** *பட்டம்,* title. *வெற்றிச் சின்னம்,* badge of victory, trophy.

**விருந்தினர்-** *விருந்தாளி,* guest. *விருந்தினர் விடுதி,* guest house.

**விருந்து-** *சிறப்பான உணவு,* banquet. *சிறப்பான விருந்து,* A feast, an elaborate and sumptuous dinner. *புதியராய் வருபவரை உணவளித்து போற்றுதல்.* To treat a guest in a nice way.

**விருப்பப் பாடம்-** *விரும்பித் தேர்ந்து எடுக்கும் பாடம்,* optional subject.

**விருப்பம்-** *ஆசை,* wish, desire. *சொத்துக்களை என் குழந்தைகளுக்கு அளிக்க நான் விரும்புகிறேன்.* I wish to leave my property to my children. *அவா,* like. *நீ நீச்சலடிக்க விரும்புகிறாயா?* Would you to swim?

**விரை-** வேகமாகச் செல், to go swiftly, hasten. நறுமணம், fragrance. அண்டபீசம், testicle. விதை, seed of plants.

**விரோதம்-** பகை, hatred, enmity. விரோதி, enemy. மாறுபாடு, diversity, contradiction, opposition.

**வில்-** அம்பு வீசும் கருவி, bow. வில்வண்டி, spring cart. வானவில், rain bow.

**வில்லாள்-** வில் பயன்படுத்தும் கலையில் வல்லவன், champion archer, skilful bow man. அருச்சுனன் ஒரு சிறந்த வில்லாளி. Arjunan is a champion archer.

**வில்லை-** அடையாளத்துக்காக அணியப்படும் சிறு வில்லை, badge.

**வில்வம்-** வில்வமரம், ஒரு மரவகை, a sacred tree. (Crateva Religiosa)

**விலக்கு-** நீக்கு, reject. சிறப்பு விதி, rule of exception. exempt, விலக்களி,

**விலகு-** நீங்கு, step aside. நான் கடந்து செல்வதற்கு அவன் விலகி இடமளித்தான். He stepped aside to let me pass. விரும்பி ஓய்வு பெறு, voluntarily retire.

**விலங்கியல்-** விலங்குகளை ஆராயும் உயிரியல் துறை, Zoology. விலங்கியல் பூங்கா, Zoo. விலங்கியலார், Zoologist.

**விலங்கு-** இடம் பெயர்ந்தும், பிற உயிர்களைச் சார்ந்தும் வாழும் உயிரினம், animal. புலி ஒரு விலங்கு. Tiger is an animal. கை, கால்களில் மாட்டப்படும் சங்கிலி, fetter. அவன் விலங்கிடப்பட்டான். He was fettered.

**விலா-** ஒரு மிருக உடலின் பக்கப் பகுதி, side of an animal.

**விலாங்கு-** ஒரு மீன் வகை, eel.

**விலாசம்-** முகவரி, address. அகலம், spaciousness. கடிதம் பெற்றுக் கொள்பவருடைய பெயர், இருப்பிடம் பற்றிய குறிப்பு, super scription.

**விலாசினி-** பெண், woman. கெட்ட நடத்தையுள்ள பெண், lustful, wanton woman. விலைமகள், harlot.

**விலை-** ஒரு பொருளை வாங்குவதற்குக் கொடுக்கும் பணம், price. மதிப்பு, value.

**விலைவாசி-** பொருள்களின் விலை நிலவரம், rate of price (current price)

**விவகாரம்-** நீதிமன்ற வழக்கு, litigation. வாதம் செய்தல், disputation.

**விவசாயம்-** வேளாண்மை, agriculture. விவசாயி, farmer.

**விவரம்-** விபரம், detailed statement. வரலாற்றுக் குறிப்பு, Historical details.

**விவரி-** விளக்கக் கூறு, explain in brief.

**விவாகம்-** திருமணம், marriage. பால்ய விவாகம், child marriage. விவாக பந்தம், matrimonial tie.

**விவாகரத்து-** திருமண முறிவு, divorce.

**விவேகம்-** அறிவுக் கூர்மை, ingenuity. பகுத்தறிவு, discrimination.

**விவேகி-** பகுத்தறிவு உள்ளவன், clever person.

**விழல்-** நாணல் போன்ற ஒரு புல் வகை, a kind of grass. பயனில்லாமை, worthless. விழலுக்கு இறைத்த நீர். a worthless effort.

**விழா-** திருவிழா, festival. திருமணக் கொண்டாட்டம், festive occasion.

**விழி-** கண், eye, eyeball. கண் விழி, apple of the eye.

**விழித்திரை-** கண்ணின் மூன்றாவது திரை, retina. இதில் உருவம் விழும்.

**விழிப்பு-** எச்சரிக்கை, caution. எச்சரிகையாக இரு. Be cautious.

**விழு-** விழுதல், fall down.

**விழுக்காடு-** சதவிகிதம், percentage. வீதம், ratio. பங்கு, proportion.

**விழுங்கு-** உட்செலுத்து, gulf, swallow. கொல்லுதல், kill.

**விழுது-** கிளைகளில் இருந்து இறங்கும் வேர்த்தொகுதி, aerial root. ஆலமர விழுது. aerial root of the banyan tree. வெண்ணெய், butter. கொழுப்பு, fat.

**விழுப்புண்-** போரில் வென்ற பெருமிதக் காயம், wound of a warrior on his face or breast received in battle.

**விழுப்பொருள்-** மேலான பொருள், the highest object of things.

**விழுமம்-** சிறப்பு, excellence. சீர்மை, greatness. தூய்மை, purity.

**விழுங்கிய-** சிறந்த, prominent, excellent. திருக்குறள் ஒரு விழுமிய நூல். Thirukkural ia an excellent book.

**விளக்கம்-** விளக்கிக் கூறுதல், explanation. ஒளி விளக்கு, light.

**விளக்கு-** ஒளி தரும் கருவி, lamp. மின் விளக்கு, electric lamp.

**விளக்கெண்ணெய்-** ஆமணக்கு விதை எண்ணெய், castor oil.

**விளம்பரதாரர்-** விளம்பரம் வழங்கு பவர், sponsor.

**விளம்பரம்-** வணிக அறிவிப்பு, advertisement, publications. வணி கத்தைப் பெருக்க விளம்பரம் ஒரு சிறந்த கருவி. Advertisement is the key to increase trade.

**விளம்பு-** கூறு, declare. உண்மையை விளம்பு. Declare the truth.

**விளி-** அழை, call. அவன் பெயர் அன்பரசன். அன்பு என்று நாங்கள் அவனை விளிக்கிறோம். His name is Anbarasu, but we call him Anbu. இசைப்பாட்டு, song. (இலக்) எட்டாம் வேற்றுமை, vocative case.

**விளிம்பு-** ஓரம், edge. குடம் விளிம்பு வரை நிறைந்து உள்ளது. The pot is full to the brim.

**விளை-** உண்டாதல், விளைச்சல் produce. கரிசல் மண்ணில் பருத்தி நன்கு விளையும். Cotton grows well in black soil.

**விளை நிலம்-** பயிரிடக்கூடிய நிலம், agricultural land, field, farm.

**விளை பொருள்-** நிலத்தில் விளையும் பொருள் product. நெல் ஒரு விளைபொருள். Rice is an agri cultural product.

**விளையாட்டு-** ஆட்ட ஓட்டம், sports. வேடிக்கை, recreation. விளையாட்டுக் கொள்கை, sports policy. விளையாட்டு வீரர், sports man, athlete.

**விற்பன்னர்-** வல்லுநர், learned man, scholar.

**விற்பனை-** விற்பது, விற்றல், sale. இன்று நல்ல விற்பனை. Sale is excellent today. விற்பனை மேலாளர், sales manager. விற்பனையாளர், sales person or salesman.

**விறகு-** எரிக்கும் கட்டை (அ) எரியும் மர எரிபொருள், fire wood. விறகு வெட்டி, wood cutter.

**விறுவிறுப்பு-** சுறுசுறுப்பு, briskness. மிகு சினம், rage.

**வினவு-** விசாரித்தல், enquire. விசாரணை செய்தல், investigate. எதைப் பற்றி நீ வினவுகிறாய்? What is your enquiry?

**வினா-** கேள்வி, question. வினாக்க ளுக்கு ஏற்ற விடை தருக. Answer the questions appropriately.

**வினாத் தாள்-** கேள்வித்தாள், question paper.

**வினா விடை-** கேள்வியும், பதிலும், question and answer.

**வினை-** தொழில், work. (இலக்) வினைச் சொல், verb. முயற்சி, effort. அவள் பாடுகிறாள். இதில் பாடுகிறாள் வினைச்சொல். She sings, Here 'sings' is a verb.

**வினோதம்-** விசித்திரம், வியப்பைத் தோற்றுவிப்பது, strangeness.

**விஜயம்-** வரவு, வருகை தருதல், arrival, visit.

**விஷ்ணு-** திருமால், Vishnu, the preserver of the Universe.

**விஷப்பரிட்சை-** மிகவும் ஆபத்தான முயற்சி, risky venture or course of action.

**விஷம்-** நஞ்சு, poison.

**விஷயம்-** தகவல், information. செய்தி, news.

**விஷஜுரம்-** நுண் கிருமியால் ஏற்படும் ஒரு வகை காய்ச்சல், virus fever.

## வீ

**வீக்கம்-** 1. உடல் உறுப்பு வீங்குதல், swelling. பனிக்கட்டியால் ஒத்தடம் கொடுத்து வீக்கத்தைக் குறை. Reduce the swelling with ice pack. 2. புடைப்பு, bulge. அவன் கன்னங் களைப் புடைத்துக் காட்டினான். He bulged his cheeks. 3. பண வீக்கம், inflation. பங்குச் சந்தையில் பணவீக்கம் ஏற்பட்டுள்ளது. There is an inflation in the stock market.

**வீங்கு-** பருத்தல், be inflammed. அவன் கண்கள் பருத்திருந்தன. His eyes are inflammed. 2. மிகுதல், increase in size. அவன் உடல் மகிழ்ச்சியால் பருத்திருந்தது. His body has increased in size due to joy.

**வீச்சம்-** தீ நாற்றம், offensive smell. குப்பையிலிருந்து வீச்சம் வருகிறது. An offensive smell comes from the garbage.

**வீச்சு-** 1. வேகமாக எறிதல், throw. பந்து முழுவீச்சுடன் எறியப் பட்டது. The ball was thrown with full force. 2. விரைவாகச் செயல்படு, swing. திருடர்களைப் பிடிக்கும் முயற்சியில் காவல்துறை முழு வீச்சுடன் இறங்கியது. The police swung into action to catch the thieves. 3. ஆந்தை முதலியவற்றின் சத்தம், screeching sound. அவள் வலியால் 'வீச்' 'வீச்' சென்று கத்தினாள். She screeched out in pain.

**வீசம்-** 1/16 பங்காகிய மாகாணி, the fraction 1/16.

**வீசுதல்-** வேகமாக எறி, fling. அவன் கண்ணாடியின் மீது கல்லை வீசினான். He flung a stone at the mirror. 2. அசைதல், wave. புயல் வலிய அலைவீச்சினை உண்டாக் கியது. The storm whipped huge waves.

**வீசை-** 1. 1400 கிராம் நிறை கொண்ட நிறுத்தலளவை, a measure of weight roughly about 1400 gms. 2. உதட்டின் மேற்புறத்து மயிர், மீசை moustache.

**வீட்டார்-** ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், members of a family.

**வீட்டுக்காரர்-** வீட்டின் உரிமையாளர், house owner. கணவன், husband.

**வீட்டுக்காரி-** வீட்டின் உரிமையாளர், மனைவி, wife.

**வீட்டுதல்-** கொல்லுதல், kill. அழித்தல், destroy. தள்ளுதல், remove.

**வீட்டுநெறி-** மோட்சம் அடைய வழி, path to salvation.

**வீட்டுப் பாடம்-** மாணவர் வீட்டில் செய்யும் பாடப்பயிற்சி, Home work.

**வீடு-** மனை, residence. வீடுபேறு மோட்சம், ராசி, the house in the horoscope. (Astrology)

**வீண்-** பயனற்றது, uselessness. தேவையற்றது, waste.

**வீண் வம்பு-** அனாவசியமான தலையீடு, unnecessary interference. அவன் விஷயத்தில் அனாவசியமாகத் தலையிடாதே, Don't unnecessarily interfere in his matter.

**வீணன்-** உபயோகம் இல்லாதவன், useless fellow.

**வீணாக்கு-** பயனற்றதாக ஆக்குதல், fail to use, flitter away.

**வீணை-** விரல்களால் மீட்டப்படும் தென்னிந்திய நரம்பு இசைக்கருவி, a South Indian musical instrument with strings.

**வீதம்-** அளவு முறை, rate. வட்டி வீதம், rate of interest. விழுக்காடு, percentage. அரையாண்டுத் தேர்வில் உன் மதிப்பெண்களின் சதவீதம் என்ன? What is your percentage of marks in the Half yearly exam?

**வீதாசாரம்-** பங்கு, ratio. பங்குதாரர்களுக்கு இணையாக வீதாசாரத்தில் பங்கு பிரித்து வழங்கப்பட்டது. Share holders receive equal ratio of shares.

**வீதி நாடகம்-** மேடை, ஒப்பனை இன்றித் தெருவில் நடத்தப்படும் நாடகம், street play.

**வீம்பு-** பிடிவாதம், adament attitude, obstinacy. உன்னுடைய வீம்பு எனக்கு எரிச்சலூட்டுகிறது. Your obstinacy irritates me.

**வீம்புப் பேச்சு-** தற்புகழ்ச்சி, boasting speech.

**வீரக்கொடி-** வெற்றிக் கொடி, banner of victory.

**வீரட்டானம்-** சிவபிரானது வீரம் விளங்கிய இடம், sacred place where Lord Siva's heroism manifested. ஒரு கூத்து வகை.

**வீரன்-** வீரமுள்ளவன், brave hero.

**வீரம்-** பேராண்மை, heroism, bravery. அவன் சிங்கம் போல் வீரம் உடையவன். He is as brave as a lion.

**வீரலட்சுமி-** வீரத்திற்கு உரிய தெய்வம், the goddess of bravery.

**வீரவளை-** வீரர் அணியும் கை அணி , warrior's armlet.

**வீரன்-** படையில் பணிபுரிபவன், soldier, warrior. ஊர்தேவதை, a village deity. கூத்தாடி, dancer.

**வீராங்கனை-** வீரம் மிகுந்தவள், woman warrior. மறத்தி, sports woman.

**வீராதி வீரன்-** வீரர்களுள் சிறந்த வீரன், the bravest of the brave.

